உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்.

# மாயாவாத சைவ சண்டமாருதம்

## MAYAVADA SAIVA CHANDAMARUTAM.

இஃது
**"ஓர் இந்து"**
என்பவரால்
எழுதப்பட்டு,

சென்னை:
**மதராசுரிப்பன் அச்சியந்திரசாலையில்**
பதிப்பிக்கப்பட்டது.

1895ஸு
அக்டோபர்மீ
இதன்விலை ரூபா. 1.

# இதிலுள்ள விஷயங்கள்.


| இலக்கம் | விஷயம் | பக்கம் |
|---|---|---|
| | முதற் பாகம் | |
| 1 | பயனற்ற மனஸ்தாபம் | 4 |
| 2 | பெயரைக்காட்டாதெழுதுவது குற்றமன்றென்பது | 4 |
| 3 | தம் குற்றதைப் பிறர்பேரில் ஏற்றுவதென்பது | 7 |
| 4 | சண்டிமாட்டுத்தன்மை யென்பது | 8 |
| 5 | இவரே மாயாவாதியென்பது | 10 |
| 6 | அகம் பிரம வாதம் வேதசம்மதமென்பது | 14 |
| 7 | மாயையை முதற்காரணமாகச் சொல்லும் சைவமே மாயாவத மென்பது | 18 |
| 8 | சிவனை முதற்காரணமாகச் சொல்லுஞ் சைவர் மாயாவாதி யன்றென்பது | 19 |
| 9 | வைதிகத்தில் சைவம் அடங்குமென்பது | 20 |
| 10 | சிவஞானபோதம் அத்துவித சித்தாந்த மென்பது | 22 |
| 11 | தாயுமானவர் அத்துவிதத்தை அனுசரித்தே யுலகம் பொய் யென்றாரென்பது | 22 |
| 12 | சூதசங்கிதை அத்துவித சித்தாந்தமென்பதும் வேதத்தில் சிவனே பரத்துவ மென்பதும் | 25 |
| 13 | சூதசங்கிதை அத்துவித சித்தாந்தமென்பது | 28 |
| 14 | சிவசித்தாந்தத்தை நிறுத்த அத்துவிதிகளாலே தான் ஆகு மென்பது | 40 |
| 15 | இவர் சூதசங்கிதையை யிகழ்கின்றாரென்பது | 41 |
| 16 | அத்துவிதிகள் பிரமம் அல்லது சிவனையே பொருளாக மதித்தவர்களென்பது | 42 |
| 17 | பேதவாத கண்டனம் | 46 |
| 18 | "யாங்களே கடவுளென்றிடும் பாதகத்தவரு" மென்று தாயுமா னவர் கூறியது பௌத்த சித்தாந்திகளையே என்பது | 50 |
| 19 | வேதத்தின் நெறி நின்று சிவனை வழிபடுவர் வைதிக சைவரென்பது | 52 |
| 20 | முன்பின் விரோதம் | 52 |
| 21 | உலகு பொய் யென்னும் பக்ஷத்துக்கே கானனீர் உவமான மென்பது | 55 |
| 22 | உலகு அநிர்வசனீய மென்றே சாதிக்கப்படுகிற தென்பது | 59 |
| 23 | பிரம உருத்திராதியர் பொய்யன்று, அநிர்வசனீய மென்பது | 60 |
| 24 | வேத சாஸ்திர சம்மதம் நாமரூபமெல்லாம் பேய்த்தே ரென்பது | 63 |
| 25 | பரமோபகாரிகளான அத்வைதிகளைத் தூஷித்தல் நியாமன்றென்பது | 65 |

| | இரண்டாம் பாகம் | |
|---|---|---|
| 26 | தாயுமானவர் பாடலும் மடத்தாரும் | 66 |
| 27 | வீண்தூஷணைகளிற் பயனில்லை | 70 |
| 28 | பயந்து ஒளிதல் | 70 |
| 29 | தோல்வியடைந்தவர் தூஷிப்பது சகஜமென்பது | 78 |
| 30 | அத்வைதிகளே சிவனடியார்களும் சாதுக்களு மென்பது | 80 |
| 31 | விடை முன்னமே வந்திருக்கின்றது | 92 |
| 32 | ஒன்றென்பதுங் கற்பனை | 92 |
| 33 | பிரமத்துக்கு ஜீவன் போலியாய் வேறென்பது | 93 |
| 34 | பிரதிவாதியாரது துர்ப்பலம் | 95 |
| 35 | மகாவாக்கியம் | 97 |
| 36 | பிரமம் சத்துவம், ஜீவன் சத்துப் போலியுமென்பது | 104 |
| 37 | உவமானங்கூறியிருக்கின்ற தென்பது | 112 |
| 38 | பந்தமுத்தி | 112 |
| 39 | அகந்தை நீங்குவதற்கே அத்வைத சாஸ்திரங்கள் ஏற்பட்டன என்பது | 115 |
| 40 | உலகம் பொருளா? குணமா? தொழிலா? | 115 |
| 41 | சிவ சீவர்கள் அநாதி நித்திய மென்பதைப் பற்றியது | 119 |
| 42 | சிவனிடத்தில் ஜீவன் தோன்றி ஒடுங்குகின்ற தென்பது | 120 |
| | மூன்றாம் பாகம் | |
| 43 | தாயுமானவரது வணக்கம் | 122 |
| 44 | தாயுமானவரும், குருவும் | 123 |
| 45 | தாயுமானவர் பாடல்கள் அத்வைத மென்பது | 124 |
| 46 | உலகம் பொய் யென்பதற் குவமானம் | 130 |
| 47 | பொய்ப் பிரதி பிம்பங்கள் ஒன்றை யொன்று தண்டித்தல் | 139 |
| 48 | பிரமம் பரி பூரண மென்பதற்குத் தோல்வியடைந்த உபமான மும் ஆபாச உபமானமும் | 143 |
| 49 | சுக்கிரன் அத்துவித ஞானத்தையும் சிவபத்தியையும் உபதே சித்தது | 152 |
| 50 | கீதைகளெல்லாம் உபநிஷத்தின் பொருள் | 161 |
| 51 | சேதனாசேதங்கள் சிவனுக்கு எப்படித் தனுவானும்? | 167 |
| 52 | துவித சைவமே புன்சுட்டு வேதாந்தம் | 169 |
| 53 | துவித சைவமே பிரசந்ந பௌத்தம் | 169 |
| 54 | காரிய உத்திர மூர்த்தி | 176 |
| 55 | தாயுமானவர் அத்வைதியே யெனப் பின்னும் ஸ்தாபித்தல் | 178 |
| 56 | நனைத்த வஸ்திர திருஷ்டாந்தம் | 181 |
| 57 | இரும்புத் துண்டும் நெருப்புமான திருஷ்டாந்தம் | 182 |
| 58 | பிரமம் உருவம் அருவமாதல் | 182 |
| 59 | மாயை யுருவமாதல் யாங்ஙனம்? | 184 |

உ
சிவமயம்.

# மாயாவாத சைவ சண்டமாருதம்.

## முதற்பாகம்.

நாம் ப்ரம்மவித்யாவாயிலாக அடிக்கடி ஸ்ரீ சோமசுந்தரநாயகரை மாயாவாத விஷயமாகவும் ஸ்ரீசங்கராசாரியார் விஷயமாகவும் இன்னும் வேறுவிஷயமாகவும் மறுத்து வருகின்றோமென்பது யாவரும் அறிந்தவிஷயமே, அவைகளுக்கெல்லாம் பதில் கூறாது அவர் ஒளிந்திருக்கும் சங்கதியும், இனி இவ்விஷயத்தில் பிரவேசிப்ப தில்லையெனத் தந்திரமாய் முடிவுரை கூறிய சங்கதியும் யாவரும் பின்னும் நன்றாய் அறிந்த விஷயமே. பின்னர் அரக்கோணவாசி யென்றும் வீரபத்திரமூர்த்தி யென்றும் பெயர் தரித்த சோம. நாயகர்க்கு அபின்ன தோழர் ஒருவர், "பானுமூர்த்தி" யென்பவரோடு "நாகை நீலலோசனி" "விகடதூதன்" பத்திரிகைகளிற் சில பேசி வருகிறார். அது முற்றும் ஆபாசத்தினும் ஆபாசமாயிருப்பதால் அதை மறுத்து உண்மையைத் தாபிக்கவேண்டுவது நமது கடமை யாயிற்றென்பதாம்.

## பயனற்றமனஸ்தாபம்.

"சோமசுந்தரநாயகர் இந்துவுக்குத் தோற்று ஒளித்தார் எனப் பானுமூர்த்தி புகன்றதாக அரக்கோண வீரபத்திரமூர்த்தி மனஸ்தாபப்படுகிறார். ஏன் மனஸ்தாபப் படவேண்டும்? "உள்ளதைச் சொன்னால் உடம்பெல்லாம் நோம்" என்றாற்போல மனஸ்தாப முண்டாகிறது. போலும்! அவருக்குத் தோல்விவராமல் பாதுகாக்க இவர் வந்தாரே; அவைகளுக்கு ஏதேனுஞ் சமாதானஞ் சொன்னாரா? இல்லையே. இப் படிப்பட்டவர்க்கு வாயேன்? கையேன்? பதில்வந்த சங்கதிகளை யெல்லாம் வராதது போலப் பகடித்தனம் பண்ணி எழுதுகின்றாரே; வந்த பதிலுக்குமேல் பூர்வபக்ஷம் செய்து எழுதவில்லையே. ஆதலா லிவரது மனஸ்தாபம் பயனற்ற மனஸ்தாபமாம். அவர், வீணாகக்கோணல் வழியிற் புகுந்து பயனற்ற வீண் விஷயங்களில் தலை கொடுத்து அவமானப்படுகிறார். நேர்வழியிற் புகாமல் கோணல்வழியிற் புகுகின்ற மையான் அவரைத் திருப்புகிறது வெகு பிரயாசையாயிருக்கிறது, அவரது கோணல் வழியை யெடுத்துக்காட்டி அதை மறுத்து அவரது பேதைமையைப் பகிரங்கமா யெடுத்து விளக்குவாம்.

## பெயரைக் காட்டாதெழதுவது குற்றமன்றென்பது.

"ஓர் இந்து அநாமதேயராய்த் தனது பேர் காட்டாமல் ஒளிந்திருப்பது தெளிந் திடுவாராக" என்கிறார். இவருக்கு விஷயத்தில் புகுந்து வாதஞ்செய்து வெற்றி பெறவேண்டுமென்பது கருத்தல்ல. "நாம் ஏதோ சிலபேசிவிட்டோம்; பதிற்சொல்லி

விட்டோம்; மறுத்துவிட்டோம்" என விசாரணையற்ற பேதையரை மயக்கற்கே முன்; வருகிறாரென்பது ஷ விஷயத்தினாலேயே அறியலாம். "ஓர் இந்து" வாகிய நாம் நமது பேரைக் காட்டாமையினாலே ஒளிந்ததாகப் பத்திரிகை வழக்கபழக்கங்களை யறிந்தவர் சொல்வாரா? அப்படியானால் சுதேசமித்திரன், விகடதூதன், வெற்றிக் கொடியோன், தஞ்சை ஜனமித்திரன், திராவிடமந்திரி, ஞானபாஸ்கரன், கலாநிதி, சுகஜீவனி, சேலம் சுதேசாபிமானி, ப்ரம்மக்கியான போதனி, வித்தியாபாநு முதலிய தற்காலத் தமிழ்ப்பத்திரிகைகளிலும், தினவர்த்தமானி, யதார்த்தவசனி, சுதேசா பிமானி, ஐம்பதாமாண்டான், குடந்தைமித்திரன், சுகுணசுந்தரம், கோமாளி, பாண்டிய நேசன், தத்துவவிவேசினி, தத்துவபோதினி, கலாவர்த்தனி முதலிய முற்காலத் தமிழ்ப்பத்திரிகைகளிலும், மற்றத் தெலுங்கு முதலிய சுதேச பாஷா பத்திரிகைகளி லும், இங்கிலீஷ் முதலிய அன்னியதேச பாஷா பத்திரிகைகளிலும் கடிதக்காரர் தங்கள் பேரைக்காட்டாமல் எழுதுவது சகஜந்தானே. உலகிலுள்ள எத்தேசத்தாரும் எம்மதத்தாரும் எப்பாஷையாரும் எக்காலத்தாரும் பேரைக்காட்டாமல் எழுதுவதைப் பற்றிக் குற்றமாகச்சொல்லவில்லையே; அவர்களை யெல்லாம் திருடர்கள் போல் ஒளிந்ததாக எவரும் சொல்லவில்லையே; பத்திரிகைகளை நடத்தும் அதிபர்களும் குற்றமாகக் கொள்ளவில்லையே. திருடர்கள் போல் அவர்கள் ஒளிந்தவர்களானால் கவரன்மெண்டார் திருடர்களுக்குரிய தண்டனையை அவர்களுக்கும் சட்டத்தில் விதித்திருப்பார்களே, பத்திரிகைகளை வாசிப்போரும் இதைக் குற்றமாகக்கொள்ள வில்லையே. தங்களையின்னாரென வெளியில் காட்டிக்கொள்ள இஷ்டமில்லாதவர் களும் இருப்பார்கள். பெயரைக்காட்டிக்கொள்ளாமைக்குக் கற்ற அறிஞர் ஒப்புக் கொள்ளத்தக்க காரணம் பல இருக்கலாம். புகழை யிச்சிப்பவர்களு முண்டு; இச்சியாதவர்களு முண்டு. இப்படிப்பட்டவர்களெல்லாம் கள்ளர்கள் போல ஒளிந்தவர் களென்று பேசுவது புத்திமான்களுக் கழகாமா? இது படித்தவர் நகைத்தற்கிடமா யிருக்கிறதே யன்றி, நியாயமொன்றுமில்லையே. இப்படி எழுதிவிட்டால் அரக்கோ ணத்தார்க்குச் ஜயம் வந்துவிடுமா? நியாயம் ஜயமாமேயன்றி வீண் வார்த்தைகள் ஜெயமாமா? இவர் எந்தப்பத்திரிகையில் இந்த விஷயத்தைப்பற்றி எழுதினாரோ, அதே நாகை நீலலோசனிப்பத்திரிகையில் "நாரதன்" என்றும், "கடிதர்" என்றும், "நன்னாள் வேண்டுவோன்" என்றும், "சேற்றூர்வாசி" யென்றும், "சாமக்குளத்தான்" என்றும் பல கடிதக்காரர் தங்கள் பேரைக்காட்டாமல் எழுதியிருக்கிறார்களே. அவர்க ளெல்லாம் அநாமதேயர்களா? ஒளிந்தவர்களா? அப்படியானால்., அவர்கள் கள்ளர்க ளாகவேண்டுமே. கள்ளர்களாகிறபோது போலீசாரால் பிடியுண்டு சிக்ஷையும் அடைய வேண்டுமே. அவர்களையெல்லாம் கள்ளர்களென்று சொல்லிவிட்டுப் பின் அதனி மித்தம் இவர் கோர்ட்டில் சிக்ஷையடையாமல் தப்புவாரா? இவர் உலகிலுள்ள லட்சக் கணக்கான பத்திரிகைகளுக்குப் பெயரைக்காட்டாமல் எழுதும் லட்சக்கணக்கான நிரூபநேயர்களையெல்லாம் அநாமதேயதென்றும் (திருடர்களைப்போல்) ஒளிந்தார் களென்றும் சொல்ல வந்த இந்தப்புத்திசாலி, தமது பேரைக்காட்டாமல் அநாமதேய ராய் நின்று அரக்கோணவாசியெனக் கள்ளத்தனமாய் ஒளிந்ததேனோ? வீரபத்திரமூர்த்தியென மறைந்ததேனோ? எம்மையொளிந்தவர் என்ற இவர் மாத்திரம் ஒளியாமல் வெளிப்பட்டாரா? இது "அவன் கெட்டான் குடி.யன், எனக்கு இரண்டுமொந்தை கள்ளுவாரு" என்றும், "ஆத்துமஸ்துதி, பொருளாசை, பரநிந்தையற்ற எனக்கும் ஒரு பணம், அந்த முட்டாள் கழுதைக்கும் ஒரு பணமா?" என்றுங் கூறும் பழமொழிபோலல்லவா இருக்கினறது? "ஊருக்கெல்லாம்

புத்திசொல்லுமாம், காடிப்பானையில் விழுமாம் பல்லி" என்பது போல ஊருக்கெல்லாம் அதிலும் உலகிலுள்ள சகலபாஷாபத்திரிகைகளின் பல இலட்சக்கணக்கான கடிதக்காரர்களுக்கெல்லாம் புத்திசொல்லும் இந்த அரக்கோணவாசி, தாமாத்திரம் காடிப்பானையில் விழுவானேன்? சோம. நாய்க்கர் எழுதும் விஷயங்கட்கெல்லாம் தமது பேரைப்போடுகிறாரா? இல்லையே. தம்பெயரைக்காட்டாமல் இந்து என்றும், சேற்றூர்வாசியென்றும், சாமக்குளத்தான் என்றும் போடுவது குற்றமல்ல; நியாயந்தான். ஏனெனில் இந்துதேசத்தில்; வசிக்கும் காரணத்தால் இந்துவென்றும், சேற்றூரில் வசிப்பதால் சேற்றூர்வாசியேன்றும், சாமக்குளத்தில் வசிப்பதால் சாமக்குளத்தான் என்றும் போடுவதற்குக் காரணமிருக்கின்றது. தாம் ஒரு நூலியற்றி அதற்குத் தமது பேரைக்காட்டாமல் மறைத்துக் குறிப்புப்பெயருமின்றி, யதார்த்தமான வேறு ஒருவர் பேரைப்போடுவதும் அதிலும் ஜாதிவித்தியாசமும் பேதப்படும்படி வேறு பெயர் இடுவதும் நியாயமாமா? இது ஒளிதலல்லவா? அதிலு முண்மையானவொளிதல்லவா? அதிலும் மறுக்க முடியாத வொளிதலல்லவா? அதிலும் (தப்பமுடியாமையால்) அவரே சரியென் றொப்புக் கொள்ளத்தக்க வொளித லல்லவா? இந்த ஒளிதல் அரக்கோணத்தார் சொல்லுகிறபடி கள்ளத்தன மாகிறத ல்லவா? இப்படிப்பட்ட வொளிதல் சோம், நாய்க்கரிடத்திற் காட்சிப்பிரமாணத்தோடு வெட்டவெளியாயிருக்க, அந்தக்குற்றத்தை வெள்ளைச் சலவைத்துப்பட்டியால், மூடிவிட்டு, இவ்வாக்கோணவாசியாரெழுதும் பத்திரிகைகளிலும் இவர் எழுதாப் பத்திரிகைகளிலும் இதர பாஷா பத்திரிகைகளிலும் இதரதேச இதர கண்ட பத்திரிகைகளிலும் நெடுங்காலமாய் எழுதும் வழக்கப்படி, இந்து தேசத்தில் வசிக்குங் காரணத்தால் இந்து என எழுதிய எம்மை யொளிதலெனச்சொல்லித் தூற்றுவ தென்கொண்டோ? இவர் தமது பக்ஷங் குற்றமாக, அதிலும் பெருங்குற்றமாக அதைமுற்றும் மறைத்தார்; எமது பக்ஷம் குணமாக அதிலும் பெருங் குணமாக அவ்வளவையும் மறைத்து அதற்குப்பதிலாக அது எவ்வளவு குணமோ அவ்வளவை யுங் குற்றமாகப் பரிணாமப்படுத்தித் தூற்றினார்! என் செய்வார் பாவம்! பதில் சொல்வதற்கோ இடமில்லை! வயிறோ பக்பக் என்றெரிகிறது! கோபமோ மேகமண்டலத்தை அளாவுகிறது! தாம் புகுந்த மதமோ சுருதி யுக்தி அனுபவங் கட்கு மாறானது! அதைக்கொண்டு அத்வைதத்தை வெல்லப்பார்க்கிறார்! முக்கி முக்கிப் பார்க்கிறார்! எக்கியெக்கிப் பார்க்கிறார்! முடியவில்லை. எண்சாண் ஆழமுள்ள கிணற்றுக்கு ஒருசாண் கயிறு போதுமா? போதவில்லை யென்றும் எட்டவில்லை யென்றுஞ் சொல்ல வெட்கமாயிருக்கிறது! இனிச்செய்வதென்னை! இப்படித்தான் ஒன்றைக்கொடுத்து ஒன்பதை வாங்கிக்கொள்ளுகிறது. இப்படிப்பட்ட தோல்விக் காலத்து இதுவும் பேசுவார் இன்னும் அதிகமும் பேசுவார்!! ஒருசொல் சொன்னால் அதை வேறொருவர் வெல்லத்தகாததாய்ச் சொல்லவேண்டும். அதுதான் புத்திசாலித் தனம். வெல்லத்தக்க சொல்லைச் சொல்லிவிட்டுப் பின்பு ஆந்தைபோல் விழிப்பது புத்திசாலித்தனமல்ல. அதுபற்றியே நாயனாரும் சொல்வன்மையதி காரத்தில்,

"*சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொலச்சொல்லை*
*வெல்லுஞ்சொலின்மையறிந்து*"

எனத் திருவாய்மலர்ந்தருளினார். இதுமாத்திரமல்ல, இன்னும் பல விடங்களிற் சொல்வன்மையை யிழந்து சோர்வுபடுகின்றார். அவைகளெல்லாம் பின்னர் நன்கு வெளியாம்; ஆங்காங்குக் கண்டுதெளிக.

இவர் நம்மை முதலில் 'அநாமதேயராய்' எனப் பன்மையிலேடுத்து, 'தனது பேரைக்காட்டாமல்' எனப் பின் ஒருமையில் பேசினார். அவருக்கு எவ்வளவு கோபமிருந்தாலும் நாம் கூறும் விஷயத்தின்பேரில் அதை வைக்கலாமே யன்றி, அவ்விஷயத்தைப்பற்றிப் பேசும் எமது பேரில் வைப்பது நியாயமன்றே. இது கைதவ றென்று சொல்லவு மிடமில்லை. மற்றொரு இடத்திலும் இவ்வாறு பேசுகிறார். ஆதலால் இவர் எதிர் வாதியை யிகழவேண்டுமென்றே எழுதியதா மென்க.

## தம் குற்றத்தைப் பிறர் பேரில் ஏற்றுவதென்பது.

“இத்துவைத் தனது பந்துவாகப்பெற்று வாழுமிவர், அவரை யொரு முடக்குச் சந்திற் பதுங்கவைத்து அவரது மானத்தைக்காக்கத் தலைப்பட்டார் போலும்" என்று பேசுகிறார். இந்த வாக்கியத்தின் அக்கிரமத்தை யிதை வாசிப்போர்க்கு எச்சரிக்கை செய்வதன்றி, மற்றி யாது செய்யவல்லேம்! இப்படிப்பட்டவர்க்குப் புத்தியுண்டாம் பொருட்டே நாயனார்,

*“யாகாவா ராயினும் நாகாக்க காவாக்காற்*
*சோகாப்பர் சொல்லிழுக்குப்பட்டு"*

என்றார். அதையும் மறந்து அளவுக்கு மிஞ்சிச் சொல்லை விட்டால் நாயனார் யாது செய்வார்! இந்த வாக்கியத்தில் பானுமூர்த்தி யென்பவர் எம்மைப் பந்துவாகக் கொண்டது ஒரு குற்றம்; எம்மை முடக்குச்சந்திற் பதுங்கவைத்தது ஒரு குற்றம்; எமது மானத்தைப் பானுமூர்த்தி காக்கத் தலைப்பட்டது ஒரு குற்றம். ஆக விம்மூ குற்றங்களையும் சுமத்தினார். இப்படிக் குற்றஞ்சுமத்தின இந்த அரக் கோணவாசியார், தாம் இந்தக் குற்றத்தினின்றும் மீண்டனரா? ஆராயின், இல்லையென்பது உள்ளங்கை செல்லிக்கனியாம்.. எமது கட்சியிற் சேர்ந்தவராயிருப் பதால் பானுமூர்த்தியை எமது பந்து என்கிறார். அதுபோலச் சோம. நாய்க்கர் கட்சியைச் சேர்ந்தவராயிருப்பதால் அரக்கோணவாசி அவர்க்குப் பயந்து. சோம, நாய்க்கர் பேச்சைத் தாம் பேசுவதாலும் அவர் பேசாதிருத்தலாலும் அவரை முடக்குச் சந்திற் பதுங்க வைத்தவர்; அவர் கூறவேண்டிய பதிலை யிவர் கூறி அவர் மானத்தைக் காக்கவந்ததால் அவர் மானத்தைக்காக்க இவர் தலைப்பட்டவர் என்பதாம். பிறர்பேரில்கூறுங் குற்றத்துக்கு அரக்கோணத்தார் சற்றும் விலகினா ரில்லை. ‘அத்துமஸ்துதி, பொருளாசை, பரநிந்தையற்ற எனக்கும் ஒருபணம், அந்த முட்டாள் கழுதைக்கும்க்கும் ஒருபணமா' என்றதில் எனக்கும் என்பதில் ஆத்துமஸ் துதியும், ஒருபணம் என்பதில் பொருளாசையும், அந்த முட்டாள் கழுதைக்கும் என்பதில் பரநிந்தையும் விளங்க நின்றது போல, அரக்கோணத்தார் உள்ளக் குகையிலேயே நிறைந்திருக்கின்றன வென்பதே யுள்ளங்கை நெல்லிக்கனி யென்பது.

இனி ஷை மூன்று குற்றங்களு மிவரிடத்திலிருக்கின்றனவேயன்றி யெம்மிடத் திலில்லை யென்பதைத் தெள்ளத் தெளிய விளக்குதும்.

உலகிற்கு மாயையை முதற்காரணமாகக் கொள்ளும் துவித சைவரை மாயாவாதியென, ஞானாமிர்த பத்திராதியரை நோக்கிக்கூறி, பதில் விடுக்கும்படி பிரமவித்தியாகாவலர் கேட்டார். அதற்கு ஞானாமிர்தக்காரர் பதில் பேசாது மௌன முற்றனர். அவர்க்காகச் சோம. நாயகர் ஏதோசிலபேசினார். அதன் போலித்தனத்தை விளக்கியாம் காட்டினோம். பிறகு கொஞ்சம் விகடதூதனிற் றலையெடுத்தார். அதையும் மறுத்துவிட்டோம். பின் முடிவுரை கூறி மறைந்துவிட்டார். அதுவரையில் அவரை யோக்கியரென்றே சொல்லவேண்டும். இப்போது அவர்க்காக இவர் வந்தார். வந்தமையால் அவர்க்கிவர் பத்து வென்றே சொல்லவேண்டும். அவர் வெளியில் வராமல் இவர் வந்தமையால் அவரை முடக்குச்சந்திற் பதுங்கவைத்தவராக வேண் டும். அவர் தோல்விப்பட்டு அவமான மடைந்தமையாலும் அவர்க்காக விவர் வந்தமையாலும் அதிலும் அத்தோல்வியை நிவர்த்திக்க வந்தமையாலும் அவர் மானத்தைக்காக்க இவர் தலைப்பட்டவராம். இந்த மூன்று வித தோஷங்களும் நம்மிடத்தில் இல்லை; இருப்பது தோஷரகிதமே. ஏனெனில் முதலாவது நமக்குச் சோம. நாய்க்கர்; ம பதில் கூறவேண்டுவதேயன்றி, அவர்க்கு யாம் கூற வேண்டிய தொன்று மில்லை. அதிலும் அவர் கூறவேண்டியது மலையளவு. நாம் கூற வேண். டுவது அணுவுமில்லை. இரண்டாவது நாம் பதுங்கவேயில்லை. நமக்குப் பதிலெழுதும்படி சோம. நாய்க்கர் (அந்தந்த மதவாதிகளுக்குப்பேர் வருவது அவரவரது கடவுள் காரணமாகவென்று சொல்லி) இடையில் கொஞ்சமவேலை கொடுத்தார். அதனைத் தூரீகரணஞ் செய்துவிட்டோம். அரக்கோணவாசியார், பாநுமூர்த்தியாருடனே செய்யும் வாதத்தில் நாம் கவனிக்க வேண்டியவைக ளுளவாதலால் அதுபற்றி யிப்போது வந்தோம். இப்படிப்பட்ட எம்மைப் பதுங்கினதாகக்கூறுங் குற்றம் அவரசேயாம். மூன்றாவது நமக்கு அவமானம் வந்தாலன்றோ அதை நிவர்த்திக்கப் பாநுமூர்த்தி வரவேண்டும். அவமானம். வரவுமில்லை. அதை யொழிக்க வருவாருமில்லை.

## சண்டிமாட்டுத்தன்மையென்பது.

இதன்மேல் சண்டிமாட்டுத்தன்மையாக வொன்று பேசுகிறார். சண்டிமாடு எப்போதாயினும் திரும்பிக் குணப்படும். இவர்க்குள்ள சண்டிமாட்டுத்தன்மை யென்றும் நீங்காது. அந்தச் சண்டிமாட்டுத் தன்மையென்பதியாதெனின் "அவர் ஸ்ரீநிவாச சாஸ்திரியாரென்பது யாவரும் அறிவார்கள்" எனச் சொல்லியிருப்பது தான். இந்தச்சண்டி மாட்டுத்தன்மையான நோய், சோம. நாய்க்கருக்குப்பிடித்து ஐந்து வருஷங்களுக்கு மேலாயிற்று. நாமும் பிறரும் தக்க அவிழ்தங்கொடுத்தோம். எத்தனை முறையெப்படிப்பட்ட அவிழ்தங்கொடுத்தும் மேலும் மேலும் கிளர்ந்து கொண்டே வந்தது. கடைசியில் நந்தனஶு புரட்டாசிமீ 222 வெளியான ப்ரம்மவித்தையில் "சோமசுந்தர நாய்ககரது மாயாவாத மயக்கம்" என்றெழுதிய விஷயத்தில் தக்க அவிழ்தங்கொடுத்தோம். பிறகு அந்நோய் அவரிடங் கிளம்பாவிடினும் அது உண்மையில் தீர்ந்ததும் தீராததும் தெரியவில்லை, தீரவில்

லையென்றால் மறுபடியும் கொடுக்க நல்ல அவிழ்தம் வைத்துக்கொண்டிரு க்கிறோம். இது இவ்வாறிருக்க, இந்த அரக்கோணத்தார்க்கும் 1893ஹு ஜனவரிமீ 22 விகடதூதனில் அவ்வியாதியே பிடித்தது. அது கொஞ்சத்திற்றீராதென ஆலோசித்த தில் "நல்லமாட்டிற்கு ஒரு சூடு, நல்ல மனிதர்க்கு ஒரு சொல்லு" என்னுஞ் சிறந்த அவிழ்தம் புத்தியிற் றோன்றிற்று. அதுவே தக்க அவிழ்தமெனத் தந்தோம். அதிலும் தீராமல் அவ்வியாதி மீண்டும் முறைத்துக்கொண்டது. முன்பு அரக்கோண வாசி யென வொரு பேரோடு வந்தார்; இப்போது வீரபத்திரமூர்த்தி வாசி யென வுக்கிரப் பெயர் தாங்கிக்கிளம்பினார். அதனால் அந்த அவிழ்தம் தக்கவில்லை போலும்! யாது செய்வது! வைத்தியன் கடமை எத்தனை முறையானாலும் அவிழ்கத்துக்குப்பால் மாறாமல் கொடுத்தே தீரவேண்டும். இதுவரையில் வஞ்சகமாய்ப் பரிகாரஞ் செய்யவில்லை. வியாதி மேலுமேலுங் கிளம்பக் கிளம்ப அவிழ்தமும் அதற்குத் தக்கவாறு பலமாய்த்தான் கொடுத்து வருகிறோம். கடைசியில் கொடுத்த "நல்ல மாட்டிற்கு ஒருசூடு, நல்லமனிதர்க்கு ஒரு சொல்லு" என்னும் அவழ்தம் இலேசான தா? இந்த அவிழ்தம் அகஸ்தியர் தந்வந்திரி தேரையர் முதலிய பெரும் வைத்தியர் களாலும் செய்து முடிக்கத்தகாத தொன்றல்லவோ? இப்படிப்பட்ட அவிழ்தங் கொடுத்துந் தீராவிடில் யாது செய்யலாம்! ஷை வியாதி சாத்தியமோ? அசாத்தியமோ? தெரிய வில்லை. இன்னுஞ் சாத்திய மென்றே வைத்துப்பார்க்கலா மெனத் தோன்று கின்றது. ஆதலால் இன்னும் சற்றுப்பார்ப்போம்.

இவர் நம்மைப் பிரமவித்தியாபத்திராதிபரென்கிறார். நாம் அல்ல வென் கிறோம். மறுபடியும் நம்மை ப்ரம்மவித்தியா பத்திராதிபரென்கிறார். மறுபடியும் நாம் அல்ல வென்கிறோம். மறுபடியும் அவ்வாறு சொல்லுகிறார். மறுபடியும் அல்ல வென்கிறோம். இப்படி நம்மை மாத்திரஞ் சொல்லுகிறாரோ வெனின், இல்லை இல்லை. பிறரையும் தான் அவ்வாறுசொல்லுகிறார். இவ்விதப் பித்து ஏறித் தலை மண்டை கொண்டு விட்டதுபோல் தோன்றுகின்றது. இவர்க்கு நல்ல நித்திரை வருவதுங் கஷ்டமாயிருக்கும் யானை சிங்கசொப்பனங்கண்டு திடுக்கிடுக் என்று எழுந்திருப்பதுபோல இவரும் ப்ரம்மவித்தியா பத்திராதிபர் என்கிற சிங்கசொப்பனங் கண்டு திடுக்கிடுக் என எழுந்திருப்பார்.

இப்படிப்பட்ட சண்டிமாட்டுத்தன்மைக்கு ஏதோ வொரு காரணம் இருக்க வேண்டும். அந்த வொன்று தான் வெளிப்படவேண்டும். யானையின் முன்பாக நின்று எதிர்த்து அதனால் ஒருவன் கொல்லப்படினும் அது அவனுக்குப்புகழ். அதுபோலப் பிரபல வித்துவசிரோ மணியான ப்ரம்மவித்தியா பத்திராதிபரான யானைமுன் நின்று வாதப் போர் செய்து தோல்வி பெற்றேன் என்றால் அதுவே யானை முன்னி ன்று போர் செய்து கொல்லப்படுவதுபோலப் புகழ் என நினைத்து, அப்படிப்பட்ட பித்துப் பிடித்துப்போயிருக்கிறதாக்கும்! நாமோ ப்ரம்மவித்தியாபத்திராதிபரான யானை முன் முயல் போன்ற நிலைமையினைப் பெற்றிருக்கின்றோம். நம்மிடத்தில் தோல்வியடைந்தோமென்றால் முயல்முன் தோல்வியடைந்தது போலாம். முயல் முன்னின்று வென்றாலும் புகழ்ச்சியில்லை; இகழ்ச்சிதான். அது பற்றியே இந்து வாகிய நம்மை ப்ரம்மவித்தியா பத்திரா திபரென்கிறார். இந்துவாகிய நாம் வேறு யென்றும், ப்ரம்மவித்தியா பத்திராதிபர் வேறு என்றும் அநேகர் அறிவார்களான தாலும், சோம, நாய்க்கர் தோற்றார் தோற்றா ரெனத் தம்பட்டம் அடிக்கின்றார்களான

தாலும் இந்த அவமானம் பொறுக்கமாட்டாது பேசினதையே பேசிக்கொண்டும் எழுதினதையே எழுதிக்கொண்டும் தோற்றதையே ஜயம்போல் காட்டிக் கொண்டும் புதியஜனங்கள் மருளும்படி ஏமாற்றும் வித்தையில் இறங்குகிறார்.

'யாவரும் அறிவார்கள்' என்றுஞ் சொல்வதால் இதிலேதோ கொஞ்சம் பொடி யிருக்கிறது. நம்மை ஸ்ரீநிவாஸசாஸ்திரியார் எனச் சொல்வார் ஒருவருமில்லை. அங்ஙனமாகவும் அவ்வாறு சொல்வதற்குக் காரணம் இவருக்கு ஏதோ குட்டிச் சாத்தான் வந்து சொல்லியிருக்க வேண்டும். அந்தக்குட்டிச்சாத்தான் இந்துவென்பவர் ஸ்ரீநிவாசசாஸ்திரியாரெனப்புளுகினதுமன்றியாவரும் அறிவார்களென்றுஞ்சொல்லி விட்டது போலும்! இதனால் அந்தக்குட்டிச்சாத்தானுக்குச் சரியான பூசைபோடுகிற தில்லையென விளங்குகின்றது. காசுக்குப்பால்மாறாமல் காலாகாலத்திற் சரியான பூசைபோட்டிருந்தால் பொய்யை மெய்யாகவும் மெய்யைப் பொய்யாகவும் சொல்லி யிராது. யானைக்குத் தினந்தினம் சரியான தீனிபோட்டும் இரண்டொருநாள் போடாவிடில் அது அவனையே கொல்லும். அதுபோல் இவர் அதற்குநல்ல பூசைபோட்டு மிருப்பார். ஆனால் இடையில் தவறிப்போயிருக்கலாம். அதுபற்றியே அது நடுச்சபையில் அதிலும் கற்றவர் சபையில் மானங்கெட இழுத்து விட்டது. இனிமேலாயினும் அதற்குத் தவறாது நல்ல பூசைபோட்டுக் கேட்டால் அது உண்மை யைச் சொல்லிவிடும்; அத்துடனே முன்பு சொன்னது பொய்யென்றும் சொல்லி விடும். அதன் பிறகு இவர் வழிக்கு வருவார். வந்து நான் குட்டிச்சாத்தான் பேச்சை மெய் யென நம்பிச் சொல்லிவிட்டேன், மன்னிக்கவேண்டும்! என்றிரங்கி மன்னிப்புக் கேட்டுக்கொள்வார்.

ப்ரம்மவித்தியா பத்திராதிபர் நடைக்கும் எமது நடைக்கும் ஆனைக்கும் பூனைக்கும் போல் அவ்வளவு வித்தியாசமிருக்கிற தென் பதைக் கற்ற புத்திமான்க ளெல்லாரும் அறிந்திருக்க, இந்தப்புத்திமானுக்கு மாத்திரம் தெரியாமற் போனமை க்குக் காரணம் யாதோ, அதை ஷை புத்திமான்களே அறிந்துகொள்வார்கள்.

## இவரே மாயாவாதியென்பது.

பின் "ஏகான்மவாதமே மாயாவாதமென்று சோம. நாய்க்கர் கூறியதாகவும் அதைத் திருப்பிச் சைவமே மாயாவாதமென நாம் கூறியதாகவும் பாநுமூர்த்தி யெழுதியதாகச் சொல்லியது உன் தலை மேல் காக்கைமலமென்றால் அதை மாய்க் கவறியாது திருப்பி உன் தலைமேல் காக்கை மலம் என் றுளறு முன்மத்தன் செய்கையோடு தானே சேர்ந்ததறிக" என்று கூறினார். ஏகான்மவாதிகள் என்பது அத்துவிதிகள் மாத்திரமன்று சித்தாந்திகளும் என்ற பொருள் விளங்க, சித்தாந்தி களும் ஏகாத்துமவாதிகளே" என்ற வொருவிஷயம் நந்தனஞு தைமீ 7உ ப்ரம்மவித்தியாவில் சுருதிமுதலிய பிரமாணங்களோடு "வேதாந்தி" என்பவர் எழுதியிருக்கிறார். அதைத்தடுக்க எவரானுமாகாது. எவரும் தடுக்கவுமில்லை. அதனால் இவரது சித்தாந்தமும் ஏகாத்தும வாதமேயாக, அங்ஙனமல்லாதது போல் அதை வைத்து அத்துவிதிகளை யேகாத்துமவாதிகளெனக்கூறுவது இவர்க்குப் பெரிய தோர் அவமானமாம்! அன்றி இவரது மாயாவாதசைவமே மாயாவாத மெனச் சுருதி

யுக்தி அனுபவங்களுடன் சோம. நாய்க்கரை நந்தன஖ூ ஆடிமீ 10உ நந்தன஖ூ ஆவணிமீ 8உ ப்ரம்மவித்தியாவில் மறுத்ததற்கு, சோ. நாய்க்கர் : “அவரவர்மதத்திற் குப் பேர் வருவது அவரவர் கடவுள் காரணமாக" என்று 1892஖ூ செப்டம்பர்மீ 17உ விகடதூதனில் கூறிட, அங்ஙனமாயின் "பூதவாதி காலவாதி பூர்வ மீமாம்ஸவாதி சாங்கியவாதி முதலானவர்களுக்குப் பேர் வந்தது கடவுள் காரணமாகவா, அவர்கள் கடவுளே யில்லையென்கிறார்களே" யென நந்தன஖ூ புரட்டாசிமீ 22உ ப்ரம்மவித்தையில் அனேக நியாயங்களுடன் பேசி, மாயோபாதானரான சித்தாந்த துவித சைவரே மாயாவாதிகளெனவும் சிவோபாதானரான அத்துவிதசைவர் மாயாவாதிகளாகாரெனவும் வச்சிரத்தம்பமாய் நாட்டினோம். பின் சோ. நாயகர் அது விஷயமாகப் பேச நாவின்றி அடங்கிப்போனது மன்றி இனி இவ்விஷயத்திற் றலை யிடுவதில்லையெனத் தந்திரமாய் முடிவரையுங் கூறி யொளிந்துகொண்டார். இது அந்தரங்க சங்கதி யன்று. பகிரங்கமாய்ப் பத்திரிகைகளின் வாயிலாக எவரும் அறிவார்கள். இங்ஙனமாக அதற்கு மாறிப்பேசுவது கற்றார்க்கழகாமோ! நாம் பூர்வ பக்ஷம் பண்ணினதை மறுத்தெழுதாமலும் தாம் மாயாவாதியல்லரெனச் சுருதியுக்தி அனுபவங்களினால் தாபித்துக்கொள்ளாமலும் அக்கிரமமாய் அத்வைதிகளை மாயாவாதிகளென வெற்றுரை புகல்வது நியாயம் வழுவினர்க்கே யுரியதாம். இது விஷயமாகச் சுந்தரன் பட்டபாடு இவரறிந்திலரோ? ‘உன் தலைமேல் காக்கைமலம்' என யாரை யார் சொல்லவேண்டுவது? எவர் தலையில் காக்கைமல மில்லையோ அவர், காக்கைமல முள்ளவனாப்பார்த்து 'உன் தலையில் காக்கை மலம்' எனச் சொல்லவேண்டுவது நியாயம். காக்கை மலம் தலையிலுடையவன், அதிலும் முற்றுமுடையவன் அங்ஙனம் இறையும் உடையனல்லானை நோக்கி 'உன் தலையில் காக்கைமலம்' என்னலாமோ? உடையானொப்பவேண்டுமேயன்றி மற்றவன் ஒப்புவனோ? மற்றவன் தலையில் மலமில்லாமையினால் ஒப்புக் கொள்ளுகின்றானில்லை. உடையவன் மற்றவனை அங்ஙனங் கூறுவதும் நியாயமன்று; மற்றவன் உடையவனைக் கூறினால் அங்ஙனம் ஒப்பமாட்டேனென்று கூறுவதும் நியாயமன்று. இவரும் இவர் நண்பரான சோம. நாய்க்கரும் பிறரும் நியாயத்தாலும் சுருதி யுக்தி யனுபவங்களாலும் தங்கள் பக்ஷத்தை நாட்டிக்கொள்ளு கின்றார்க ளில்லை. வீன் தூஷணங்களாலும் வைதல் செய்வதனாலுமே நாட்டிக் கொள்ளப் பார்க்கின்றார்கள். மலத்தைப் பெறாதவன் பெற்றவனை நோக்கி 'உன் தலையில் காக்கை மலம்' எனச்சொல்வது போல “உலகிற்கு மாயை முதற்காரண மன்று, சிவனே முதற்காரண” மெனச்சொல்லும் அத்துவித சித்தாந்திகள், மாயையை முதற் காரணமாகச் சொல்லும் துவிதசித்தாந்திகளை மாயாவாதிகள் என்கிறார்கள். தலையில் மலத்தைப்பெற்றவன் பெறாதவனை நோக்கி உன் தலையிற் காக்கை மலம் எனப்பகர்வதுபோல் மாயாவாதிகளான துவித சித்தாந்திகள் மாயாரகிதரும் சிவவாதிகளுமான அத்வைதசித்தாந்திளை மாயாவாதிகள் என்கிறார்கள். பொருளைப்பெறாத தரித்திரன் பொருளுடையவனைப் பொறாமையால் இகழ்வது போல் துவிதசித்தாந்திகள் தாங்கள் மாயாவாதிகளாய்ப்போன வயிற்றெரிச்சலினால் அங்ஙன மல்லாதாரை அங்ஙனமுடையராக வைத்துத் தூஷிக்கின்றார்கள். அதைத் திருப்பி அத்துவிதிகள் சொன்னால் 'உன் தலையில் காக்கைமலம்' என ஈனச் சொல்லைச் சொல்லித் தூஷிக்கிறார்கள்.

அத்துவித மதத்தை மாயாவாதம் என்று எங்கள் முன்னோர்கள் கூறியவாறு எங்களது சைவசித்தாந்தத்தைப் பூர்வபக்ஷியினது முன்னோர்கள் மாயாவாதமென்று கூறியிருக்கிறார்களா? என்றொரு கேள்விகேட்கிறார். இந்தக்கேள்வி சோம. நாய்க்கர் கேட்டதற்கு நாமே பதில் சொல்லியிருக்கிறோம். மாயாவாத திமிரபாஸ்கரன் என்பவரும் சுந்தரன் என்பவர்க்குப் பலவித நியாயங்களோடு மாயாவாத விஷய மாய்ப்பேசித் துவிதசித்தாந்திகளே மாயாவாதிகளெனத் தாபித்திருக்கிறார். அவைகளை யெல்லாம் பூர்வபட்சஞ்செய்து மேல் தமது கட்சியைத் தாபித்துக் கொள்ளாமல் இவர் பெறும் அவமானத்தை யிவர் முன்னோர் தலையிலு மேற்றப் பார்க்கின் இவர் முன்னோர் பொறாமையினாலும் துவேஷத்தாலும் பகைமையினா லும் அத்துவிதிகளை மாயாவாதிகளென்று சொல்ல, சுய ஆராய்ச்சியும் சுய மதியு மில்லாமல் அவர்கள் சொன்னதை மெய்யென நம்பி இப்போதுள்ளவர்களுஞ் சொல் லுகிறார்கள், அவர்கள் அத்துவிதிகளை மாயாவாதிகளென்று சொன்னதற்குக் காரணம் என்ன? காரணத்தோடு சொன்னார்களா? பொறாமை முதலியவற்றால் சொன்னார்களா? காரணத்தோடு சொன்னார்களென்னில் அந்தக்காரணம் யாது? அதை யிதுவரையி லெவரும் எடுத்துக்காட்டினார்க ளில்லையே. பொறாமை முத லிய துர்க்குணத்தால் சொன்னார்களென்னில் அது வாதசபையில் தலைகாட்டா தழியும். அத்துவிதிகளை மாயாவாதிகளென்பதற்கு யாதொரு நியாயமுமில்லாமை யினாலும் இப்போதுள்ள சித்தாந்த சைவர்களும் அதற்குத் தக்க நியாயஞ் சொல்லாமல் ஆந்தை போல விழிக்கின்றமையாலும் இவர்களே மாயாவாதிக ளென்பதற்கு வேண்டிய நியாயங்கள் நாம் காட்டினமையாலும் இத்துவிதிகளே மாயாவாதிகளும் அத்வைதிகளே சிவவாதிகள் அல்லது பிரமவாதிகளுமாம்.

மோசஞ்செய்த குற்றத்திற்காகப் போலீசில் தண்டனை பெற்ற எ. என்னும் ஒருவகுப்பாரைப் பார்த்து "நீங்கள் மோசக்காரர்" என்று அங்ஙனம் மோசஞ்செய்யாத பி. என்னும் மற்றொரு வகுப்பார் சொன்னால், அது பொறாமல் எ. வகுப்பார், பி. வகுப்பாரை நோக்கி, நீங்கள் தான் மோசக்காரர்; நீங்கள் மோசக்காரரென நியாயங் காட்டி நாங்களாவது எங்கள் முன்னோராவது சொல்லாவிடினும் எங்கள் முன்னோர் வாளா வாயினாலேனும் உங்களைச் சொல்லியிருக்கிறார்கள். அவ்வாறு உங்கள் முன்னோர் எங்கள் மதஸ்தரைச் சொல்லியிருக்கிறார்களா? சொல்லாமையால் நீங்கள் தான் மோசக்காரர். நாங்கள் அல்லவென்றால் ஒப்பப்படுமா? மோசக்கார ரென்பதற்கு நியாயம் பலமேயன்றி நியாயமில்லா வாய்ச்சொல் பலமல்லவே. அதுபோல் இவர் முன்னோர் நியாயமில்லால் துவேஷத்தாலும் பொறாமையினா லும் பகைமையினாலும் அத்துவிதிகளை மாயாவாதிகளென்றார்கள். அவர்கள் அத்துவிதிகளுக்கு விரோதிகளானதால் அவர்கள் வார்த்தையைக் கேட்கப்படாது. விரோதிகள் வார்த்தையை அதிலும் வாதிகள் வார்த்தையைக்கேட்டுச் சரியென்று கொண்டு நியாய ஸ்தலத்தில் வாதிகள் பக்ஷம் தீர்ப்புக்கொடுக்கமாட்டார்கள். வாதிப் பிரதிவாதிகள் தங்கள் தங்கள் பக்ஷத்துக்குச் சார்பாய்ப் பேசுவார்களென்ற சங்கதி நியாயாதிபதிகளுக்குத் தெரியும். இருபக்ஷத்தார்க்கும் சம்பந்தமற்ற பிறர் சாக்ஷி யின்றி வாதிகள் பேச்சைக்கொண்டே தீர்மானங்கொடுக்கும் தேசத்தில் இச்சிந்தாந்த சைவர்கள் கொண்டுவரும் வழக்கு ஜெயிக்குமேயன்றி இவ்விடத்தில் ஜெயிக்க மாட்டாது. மேலும் இவர்கள் முன்னோர் வாக்கு வேதமா? ஸ்மிருதியா? புராணமா? இதிகாசமா? இப்படிப்பட்ட பதினான்கு வித்தை யொன்றிலும் சேத்திக்கொண்ட நவீன

சித்தாந்தங்களுக்குச் சார்பாகவும் எழுதிவைத்தில் சொல்லலாமோ? அப்படிப்பட்ட வேதசாஸ்திர விரோதிகள் சொன்னசொல் இவர் இனத்தார்க்குப் பிரமாணமா யிருப்பதைப்பற்றி நமக்கேதுமாட்சேப மில்லையேனும் அதை அத்துவிதிகளிடத்திற் பிரமாணமாகக் கொண்டுவந்து காண்பிப்பது மாத்திரந்தான் தப்பென்கிறோம்.

நிற்க, கிறிஸ்துமதந் துர்ப்பலமுள்ளதென்றும் அது உண்மையான மதமல்ல வென்றும் இந்து சமய பண்டித ருணர்ந்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட கிறிஸ்து சமயத்தார் இந்துக்களை அஞ்ஞானிகளென்று சொல்வதை நாம் அறிவோம். அவர் வீட்டிற்குச் சமயபத்தியுள்ள இந்துப்பிரபு ஒருவர் செல்லின் அவ்வீட்டுக் கிறிஸ்தவப் பணியாளர், தன் எஜமானிடஞ் சென்று "யாரோ ஒரு அஞ்ஞானி வந்திருக்கின்றனர்" எனச்சொல்லுகின்றனர். இவ்வாறு இந்துக்கள் அஞ்ஞானிகளெனவும் கிறிஸ்தவர்கள் ஞானிகளெனவுஞ் சொல்லப் பாதிரிகள் சில நூறுவருஷங்களாகச் சொல்லிப் பழக்கி வருவது பிரத்தியக்ஷம். இப்போது அவர்கள் மதத்திலுள்ள குற்றங்களைக்காட்டி ஞான மதமெனவும் ஆதலால் அதை அனுசரிப்பவர் அஞ்ஞானிக அது அஞ் ளெனவும் இந்து மதசித்தாந்தங்களின் குணத்தைக்காட்டி அது ஞான மதமெனவும் ஆதலால் அதை அனுசரிப்பவர் அஞ்ஞானிகளெனவும் சொன்னதாய் வைத்துக் கொள்வோம். இதைக் கிறிஸ்தவர் அங்கீகரிப்பார்களா? எங்கள் முன்னோர் உங்களை அஞ்ஞானிகளென்று சொன்னது போல் உங்கள் முன்னோர் எங்களை அஞ்ஞானிக ளென்று சொன்னார்களா? இல்லையே. ஆதலால் நீங்கள் தான் அஞ்ஞானிகள், நாங்கள் தான் ஞானிகள் என்றால் நாம் ஒப்புவோமா? மதத்தின் உண்மை விளங்க வேண்டுவது நியாயத்தாலேயன்றி வேறுவிதத்தாலல்ல. அப்படியே இவர்கள் முன்னோர் சொல் நியாயத்திற் கிணங்காமையினால் பயன்படாதென்க. கிறிஸ்தவர் சொல்லுகிறபடி இந்துக்கள் அஞ்ஞானிகளாகிறபோது அத்வைதவிரோதிகளான துவிதசித்தாந்திகள் சொல்லுகிறபடி அத்வைதிகள் மாயாவாதிகளாகலாம். கிறிஸ் தவர் சொல்லுகிறபடி இந்துக்கள் அஞ்ஞானிகளாகாதபோது, துவிதிகள் சொல்லு கிறபடி அத்துவிதிகள் மாயாவாதிகளாகார்கள். சொல்லைப் பொருளாகக் கொள்ளாமல் நியாயத்தையே பொருளாகக்கொள்வோமாயின் பூதத்தை முதற்காரண மாகக்கொள்ளுங் காரணத்தால் பூதவாதியும், காலத்தை முதற்காரணமாகக் கொள்ளுங் காரணத்தால் காலவாதியும், சூனியத்தை முதற்காரணமாகக்கொள்ளுங் காரணத்தால் சூனியவாதியும் ஆதல்போல, மாயையை முதற்காரணமாகக்கொள்ளு ங்காரணத்தால் துவித சைவசித்தாந்திகள் மாயாவாதிகளாகின்றார்கள். இந்த நியாய ப்பிரகாரம் சிவனை அல்லது பிரமத்தை முதற்காரணமாகக் கொள்ளுங்காரணத்தால் அத்துவிதிகள் சிவவாதிகள் அல்லது பிரமவாதிகளாகின்றார்கள். இவர் முன்னோர் மாயையை முதற் காரணமென்று கூறுங் கட்சியினின்று விலகியிருந்து அவர் கட்சியில் இவருஞ்சேர்ந்தால் இவர் முன்னோராவது இவராவது மாயாவாதியாக வேண்டுவ தின்று. அங்ஙன மின்மையின் இவரு மிவர் முன்னோரும் மாயாவாதி களாக யாதொரு ஆக்ஷேபமு மில்லை. இவர் முன்னோர் சொல் இவருக்குப் பிரமாணம்; நமக்குப் பிரமாணமன்று. ஏனெனில் அது வேதசாஸ்திரங்களுக்குச் சம்மதமா யிராமை மாத்திரமேயன்றி மாறாயிருப்பதாலும் அன்றி யுத்தி அனுபவங் கட்குப் பொருத்தமில்லாதிருப்பதாலு மென்க. இப்படிப்பட்ட அப்பிரமாண கிரந்தகர்த் தர் சொல்லை யொரு பொருளாகக்கொண்டு, அவர்கள், அத்துவிதிகளை மாயாவாதி கள் என்று சொல்லிவிட்டார்களென்றும், ஆதலால் அத்துவிதிகள் அவ்வாறு சம்மதி

க்கவேண்டுமென்றுஞ் சொல்வது “கிழக்கு மேற்கு அறிபார், வழக்குப் பேசப் புகுந்தார்” க்சினமாம் என்க. இவ்வாறு ஒவ்வொரு மதஸ்தரும் தங்களுக்குப் புறம்பான விரோத மதஸ்தர் இட்ட பேரை வைத்துக்கொள்ள வேண்டுமென்றால் எந்த மதஸ்தரும் பெருமையடையாமற்போவார்; சிறுமையே யடைவர். ஆதலால் விரோதிகள் சொல்வதை விட்டு யார் யார்க்கு எந்தெந்தப் பெயர் நியாயமோ, அதுஅதை அவரவர் தரிப்பதே நியாயமுங் கிரமமுமாம். இந்த நியாயப்பிரகாரமும் கிராமப்பிரகாரமும் மாயையை முதற்காரணமாகக்கொண்ட துவித சைவசித்தாந்திகள் மாயாவாதிக ளும், சிவன் அல்லது பிரமத்தை முதற்காரணமாகக்கொண்ட அத்துவிதிகள் சிவவாதிகள் அல்லது பிரமவாதிகளுமாம். இதனால் அவரவர்க்கு வேறு பேர் இருக்கப்படாதென நாம் கூறினாமில்லை; ஷை மாயாவாதிக ளல்லரெனச் சொல்வது மாத்திரங் கூடாதெனச் சொல்லுகின்றோம்.

## அகம் பிரமவாதம் வேதசம்மதமென்பது.

இதன் பேரில் செய்யும் இன்னொரு ஆக்ஷேபம்: "அகம் பிரமவாத மாகிய இம்மாயாவாதத்தைப் பிரசந்நபௌத்தமெனவுமன்றோ பூர்வ நூல்கள் கூறுகின்றன” என்பதாம். அகம் பிரமவாதத்தை மாயாவாதமென ஒரு நாலும் சொல்லவில்லை யென்பது திண்ணம். அகம் பிரமவாதமானது சுருதிமுதலிய பதினான்கு கலைகளுடைய சித்தாந்தமானதாலும், அது யுக்தி யனுபவங்கட்குப் பொருந்திய தொரு சத்தியவாதமானதாலும், அகம் பிரமவாதமல்லாத இவரது மதத்தை ஷை சுருதி முதலியன தும்சஞ் செய்கின்றமையாலும், இப்படிப்பட்ட அகம் பிரமவாத மாகிய பிரமாணங்களைக்கொண்டே ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகள் ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் ஸ்ரீசம்பந்த சுவாமிகள் முதலானோர் பௌத்தமதத்தை நிராகரணஞ் செய்திருக்கின்றமையாலும் "அகம் பிரமாஸ்மி" என்பது வேதாந்த மசாவாக்கியங் களின் இரண்டாவது வாக்கியமானதாலும், அகம் பிரமமென்றும் சிவோகமென்றும் கொண்டு பெரியோர்கள் பிரம அல்லது சிவபதத்தை யடைந்து முத்தியடைந்தார்க ளானதாலும், அகம் பிரமவாதத்தைப் பௌத்த நூலென எந்த வைதிக நூல்களும் சொல்லாமையாலும் இவரது பொய்வாக்கியத்தை நீரிலெழுத்தென விலக்குவதே நியாயமாம். பூர்வ நூல்களென்பது வேதாதி பதினான்கு கலைகளுக்கும் விரோதமாக இவரினத்தார் எழுதிய நூல்களாயிருக்கலாம். அதைத்தாள் பூர்வ நூல்களெனச் சொல்லுகின்றார் போலும்! அதனாலேதான் அதன் பேரைச் சொல்லாமல் வாளா பூர்வ நூல்களென்கிறார். அதன் பேரைச்சொன்னால் அப்பிரமாண நூல்களென வெளிப்பட்டுவிடும். அதுபற்றிப் பேரைச் சொல்லாமல் மறைக்கிறார். அந்த நூல்களை யிவர் வீட்டில் கட்டி வைத்துக்கொள்ளலாம். அது பொதுவான வாதசபையில் செல்லாக்காசு போல்வதாமென அறியக்கடவர். அகம் பிரமவாத மென்பது வைதிக சம்பந்தமாகவும் சகல வேதசாஸ்திர சம்மதமாகவுமிருக்க, அதைப் புறமதங்களிலொன்றான பௌத்தமதமென்று சொல்வதனால் இவரும் இவர் மதஸ்தரும் அவைதிக சம்பந்தமானவரும் சகல வேதசாஸ்திரங்களுக்குப் புறம்பான மதஸ்தரி லொருவகுப் பினருமென விளங்குகின்றது. அகம் பிரமவாதம் வேதசாஸ்திர மதமெனவும் அதை வெறுப்பவர் வேதபாஹியரெனவும் ஷை வேத சாஸ்திரப் பிரமாணங்களைக்கொண்டே காட்டுவாம்.

## கைவலியோபநிஷத்

சூட்சுமத்திலும் அதிசூட்சுமமாயும் நித்தியமாயும் இருக்கிற பரப்ரம்மம் எதுவோ, அது நீ; நீயே யது...... சாட்சியாயும் சின்மாத்திரமாயுமிருக்கிற சதாசிவன் நான்.

## அமிர்தபிந்தூபநிஷத்.

அந்தப்பிரமமே நானென் றறிந்தால் ப்ரம்மமே யாகிறான், நிச்சயம்.

## ஸ்கந்தோபநிஷத்.

அவனே ப்ரம்மம்; அந்தப்ரம்மம் நான் தான். சமுசயமில்லை. ஜீவனே சிவன்; சிவனே ஜீவன். அந்த ஜீவன் சிவனேதான்.

## சூதசங்கிதை காலஅளவை அத்தியாயம்.

மன்னிய ஆன்மாக்களெங்குஞ்சிவசொரூப மென்றேமதித் திடார்மாயையால் மறைப்புண்டுநான் நீயென்னமிகுபேதமே குறித்துழல்வர். (15)

## கூர்மபுராணம்
### இந்திரத்துய்ம்மன் முத்திபெற்ற அத்தியாயம்.

சீவான்மாவினைப்பரமான்மாத்தன்னோடும்பிறிதறவொடுக்கி. (42)

## வாயுசங்கிதை
## ஞானநிலைமையுரைத்த அத்தியாயம்.

ஆன்மாவை, முறையிலந்தமாயைதான் மூடுமலமாயை கெட
வுறைவது வேசிவமென்னவுரைப்பரா பரால். (10)

அப்புருடனேசிவனென்னவுறைவன். (18)

## பிரமகீதை முண்ட கோபநிடதம்.

ஜீவன் தன்னுருவான சிவத்தை. (34)

## ஈசுவர கீதை சாங்கியயோக அத்தியாயம்.

அந்தமில்பிரமத்துருவாயினோர். (3)

*பரவொளியாம்பரம்பரனை, ஞானந்தன்னால்*
*வேற்றவே நானென்றறிந்த நல்லோன்.* (11)

## சிவரகசியம் ரிபு கீதை 1-ம் அத்தியாயம்.

அச்சிவமோர்மேயென்றும். (83)

## பாரதம் உத்தரகீதை 2 - வது அத்தியாயம்.

நானேபிரமமென்றுஏகாக்கிரமனத்துடனேகூடி. (31)

## திருமந்திரம் முப்பதம்.

தொம்பதந்தற்பதந்தோன்றும்அசிபதம்
நம்பியசீவன்பரஞ்சிவனாய்நிற்கும். (5)

ஷை முச்சூனியம் தொந்தத்தசி.

சீவன்பரசிவனாமே. (6)

## கூர்மபுராணம் திருக்கலியாண அத்தியாயம்.

*அருமாமறைகள்முழுவதுமென்சத்தியாகுமாங்கவைகள்*
*திருமாலுந்தித்தடம்பூத்தசெல்வன்முன்னைப்படைப்பதனில்*
*ஒருநான்மறையாக்பெயரோடுநடக்குமன்னூல்வழியொழுகார்*
*மருவார்முத்திவீடதனின்மம்மருறுநூல்வலைப்பட்டே.* (39)

*வேதவொழுக்கமிகழ்ந்துபுல்லர்விரகின்றம்போற்றனிபுனையுந்*
*தீதுநூலின்வழிசென்றோர்செல்வர்நரகர்க்கதிதிகளா*
*யாதறன்னாற்புன்சமயங்கற்றோர்முகத்தினருமறைகள்*
*ஓதியுணர்ந்தமுதுக்குறைவினுரவோர்சிறிதுநோக்காரால்.* (40)

*அங்கமாறுமறைநான்குமீமாங்கியமென்றருள்கொழித்துத்*
*தங்குநீதிநூலொன்றுபுராணமொன்றுதவறெறிந்து*
*பொங்குதருமநூலொன்றுபுகன்றவீரேழ்விஞ்சையினை*
*யங்கணுலகீன்றவனளித்தானிவற்றையுணர்ந்தேதோரறிவுடையோர்.* (43)

## பிரமகீதை ஐதரேய உபநிடதம்.

*தருமமதறிவில் பாசண்டர் தங்களை*
*மருவலால் வேதமாவாக்கியப்பொருள்*

*கருதிடார் அது கரமணியிற் காட்டிடும்*
*குருவையும் வழிபடார் குதர்க்கமேவலார்.* (19)

## ஷை பிரகதாரணிய உபநிடதம்.

வேதநூல்மிருதிபுராணம் அத்துவித மெய்ம்மையேவிளம்பமெய்த்தர்க்கம், சாதியாநிற்கத்தத்துவஞானத்தவருமிப்பொருளையேசரவாதியாஞ்சிவனாராயணனிங் கறைந்ததும் அபேதமாயிருக்க, வாதியாமொருவர்க்கிதையனாதரித்தல் மாயையினு டையவல்லபமே. (14)

(இந்த ஐந்து செய்யுள்களினால் வேதமுதலிய நூல்களை இகழ்கின்றவர்கள் இன்னாரென விளங்குகின்றது.)

## தாயுமானவர் பாடல்.

*என்னையேஎனக்களித்த.*
*அதுதானாகநிற்க.*
*நீதானாகநிற்க,*
*சச்சிதானந்தசிவந்தானென்பதெந்நாளோ.*

*தானவனாந்தன்மையெய்தி.*
*நீயேநானென்று நினைப்புமறப்புமறத்*
*தாயேயனையவருடந்தாய்.*

*தன்மயமாய்நின்றநிலைதானேதானாகிநின்றா*
*னின்மயமாயெல்லாம்நிகழும்.*

*நீநானாகிநிற்பதெந்நாளோ.*

*அத்துவிதமானஐக்யஅனுபவமே.*
*மறையென்னையுநீதானாகச்சொல்லாதோ.*
*நானாகிநீயிருந்தநியாயஞ்சற்றே*
*யின்றெனக்குவெளியானால்.*

*நானவனாய்நிற்பதெந்தாள்.*
*நீயெனநானெனவேறில்லை.*

*தன்னையறிந்தவர் தம்மைத்தானாகச் செய்தருளுஞ்சமத்தை.*

ஒன்றிரண்டாய் விவரிக்கும் விவகாரங்கடந் தேழாம் யோகபூமிநின்று தெளிந்தவர்.

*யானெனல்காணேன்பூரணநிறைவில்யாதினுமிருந்தபேரொளிநீ*
*தானெனதிற்குஞ்சமத்துறஎன்னைத்தன்னவனாக்கவுந்தகுங்காண்*
*வானெனவயங்கியொன்றிரண்டென்னாமார்க்கமாமநெறிதந்துமாறாத்*
*தேனெனருசித்துளன்பரைக்கலந்தசெல்வமேசிற்பரசிவமே.*

*அங்கிருநீயெங்கிருந்தும்அதுவாவைகண்டாய்.*
*தானானதன்மயமேயல்லாலொன்றைத்தலையெடுக்கவொட்டாது.*
*அதுவானால்அதுவாவர்அதுவேசொல்லும்.*
*தன்னிலேதானாய்அயர்ந்துவிடுவோமென.*

இந்தப் பிரமாணங்களினால் அகம் பிரமவாதம் வேதசாஸ்திரங்களுக்குச் சம்மதமா மெனவும் பௌத்த மல்லவெனவும் மாயாவாதமல்லவெனவும் ஏற்பட்டது.

## மாயையை முதற்காரணமாகச் சொல்லும் சைவமே மாயாவாதமதமென்பது,

"சைவம் மாயாவாதமானால் சைவப் பெயர் தாங்கினாரெல்லாம் மாயாவாதி களாவரன்றோ?" என் ஒருகேள்வி கேட்டு, எதிரிகளினுடைய சித்தாந்தத்தை யுணராத வரானார். இவர் “'வெளுத்ததெல்லாம் பால், கறுத்ததெல்லாம் நீர்" என்பாரைப் போன்றவர். நாமாவது மற்றவராவது சைவத்தை மாயாவாதமெனச் சொல்லவில் லையே. எவ்விடத்திலாவது சைவமென்றாவது சிவனென்றாவது சொல்லியிருந்து விட்டால் அதை யெனது மதமென்று சொல்லப் பேராவல் கொள்ளுகின்றார். சைவத்தில் அத்துவித சைவம், விசிஷ்டாத்து வித சைவம், துவிதசைவம், அபேத சைவம், வீரசைவம், தாந்திரிக சைவ முதலிய பலசைவங்க ளிருக்கின்றன. அவற்றில் மாயையை முதற்காரணமெனச் சொல்லும் சைவத்தையே நாம் மாயாவாதம் என்கின்றோம். மற்ற அத்துவித சைவத்தை அதாவது சிவாத்துவித மதத்தை மாயாவாதமென யாம் சொன்னோ மில்லை. ஸ்ரீமாணிக்கவாசகர், ஸ்ரீஞானசம்பந்தர் முதலியவர்கள் அனுசரித்த சைவத்தை நாம் மாயாவாதமெனச் சொல்லுகின்றோமா? அவர்களெல்லாம் சிவனை முதற்காரணமாகச் சொல்லும் அத்துவித சைவர்களாயிருப்பதால் அவர்களை யொருபோது மெவரும் மாயாவாதி களெனச் சொல்லார். அன்றி அவர்களெல்லாம் வேதசாஸ்திரங்களையும் வைதிக கர்ம்மங்களையும் அத்துவிதத்தையும் பூஷிப்பவர்கள்; இவரினத்தாரைப் போலத் தூஷிப்பவர்க ளல்லர்.

"சீநிவாசசாஸ்திரியார் சில சமயம் யாம் அசைவரென் றொதுக்கினாலும் சில சமயம் யாம் சைவர் என்று முத்துகிறார்" எனக்கூறித்தம தியற்கைக் குணத்தைக் காண்பிக்கிறார். இவ்வாறு சொல்லிவிட்டதால் இவர் சைவராய்விட்டதாக மனப்பால் குடிக்கிறார் போலும்! இவரின்னாரென வெளிப்பட்டாரில்லை. இவர் குலம், கோத்திரம், ஜாதி, இருப்பிடம், அந்தஸ்து, பேர் முதலியவைகளின்ன வென்றும், இன்ன சைவரென்றும், இவ்வளவுகாலத்துச் சைவரென்றும், நவீன சைவரென்றும், பரம்பரைச் சைவரென்றும் காட்டாமலே ஷை சாஸ்திரியாரவர்களை யொதுக்கின

தாய்ச் சொல்லுகின்றார். இவருடைய வாக்கே யிவரது நிலைமையைக் காட்டுகின்றது. ஆதலால் இப்படிப் பட்டவரினின்றும் அவர் முன்னமேயே யொதுங்கித்தா னிருக்கின்றார். இவர் ஒதுக்க வேண்டாம்.

*கொம்புளதற்கைந்துகுதிரைக்குப்பத்துமுழம்*
*வெம்புகரிக்காயிரந்தான்வேண்டுமே - வம்புசெறி*
*தீங்கினர்தங்கண்ணிற்றெரியாததூரத்தே*
*நீங்குவதேநல்லநெறி.*

*தீயாரைக்காண்பதுவுந்தீதேதிருவற்ற*
*தீயார்சொற்கேட்பதுவுந்தீதே-- தீயார்*
*குணங்களுரைப்பதுவுந்தீதேயவரோ*
*டிணங்கியிருப்பதுவுந்தீது.*

*மருவுகமாசற்றார்கேண்மையொன்றீத்தும்*
*ஒருவுகவொப்பிலார்கேண்மை.*

இவை முதலிய நீதி வாக்கியங்களின் பொருளைச் சிந்தித்தே அவர் ஒதுங்கி யிருக்கின்றார். வேதாகம இதிகாச புராணங்கள் இவரையும் இவர் கொள்கையையும் ஒதுக்காமல் அங்கீகரித்த பிறகு இவர் பிறரை யொதுக்க வருவாராக.

## சிவனை முதற்காரணமாகச் சொல்லுஞ்சைவர் மாயாவாதியன் றென்பது.

"அவர் சைவராக முந்துகிறபோது மாயாவாதமருள் அவர் தலைமேலேறி வியாபியாமற்போகாது" எனக்கூறி, தமது மாயாவாதத்தைப் பிறர் தலைமேலும் ஏற்றப்பார்க்கின்றார். நாம் தான் மாயாவாதியாய் விட்டோமே; பிறரை அதினின்றும் தப்பவிடுகிறதா?" என்கிற வெண்ணத்தோடு பிறர்மேல் சொல்லப்பார்க்கிறார். இது பொறாமைக்குணம். தமக்குவந்த தரித்திரத்தை யொழிக்க வகைதேடாமல் செல்வரை யெல்லாம் தரித்திரராக்கப் பார்க்கிறார். இந்த அழுக்காறு இவரைக் கெடுத்து விடும். இவனாக்கெடுப்பா ரொருவரு மிருக்கத் தேவையில்லை. அழுக்காறே கெடுத்துவிடும். அது பற்றியே திருவள்ளுவநாயனார்

*அழுக்காறுடையார்க்கதுசாலும்ஒன்னார்*
*வழுக்கியும்கேடீன்பது.*

எனக்கூறினார். அவர் மாயாவாதசைவ ரன்றென முன்னரே கூறி விட்டமை யால் மாயாவாத மருள் அவர் தலைமே லேறாது. அதுமாத்திரமா? அவர் காலையும் பற்றாது. அவர் சன்னிதானத்திலேயே மாயை தலைகாட்டாதென்றால் அவர் தலைமேலா போய் ஏறப்போகிறது? மாயை எவர் தலையில் ஏறுமென்றால் பொருள ல்லவற்றைப் பொருளாகக் கொள்வோரிடத்திலும் பொருளைப் பொருளாகக்

கொள்ளாதவரிடத்திலுமே யேறும் என்பதாம். அத்துவிதிகள் பொருளைப் பொருளாகக் கொள்பவராதலாலும் தோற்றத்தைத் தோற்றமென்று சொல்லி அது பொருளல்லவெனக் கழிக்கின்றவராதலாலும் அவரிடத்தில் மாயாவாதமருள் நெருங்க அஞ்சும். அதுபற்றியே பொருளல்லவற்றைப் பொருளென்றுணர்தலை மருள் என்றார் நாயனார். இந்தத் துவிதசித்தாந்திகள், பொருளல்லாத் தோற்றவுலகைப் பொருளாக் கொள்ளுநீரராகலின் அவர் தலைமேல் மருள் குடிகொண்டு, இந்த விடந்தான் நமக்குச் சொந்தமெனக் கருதி யிறங்காது. இவரினத்தார் பொருளல்லவற்றைப் பொருளென வுணர்பவரெனப் பலவருஷங்களாக யாம் காட்டியே வருகின்றோம்; அத்துடன் பொருளல்லவற்றைப் பொருளல்லவெனக் கழித்து, பொருளைப் பொருளாகக் கொள்பவர் அத்துவிதிகளெனவும் காட்டி வருகின்றோம்.

"யாம் மாயாவாதமென்றது ஆகமசைவமேயன்றி வேதசைவம் ஆகாதெனின்" என்கிறார். பிரமகீதையில் கேனோபநிடதத்தில் அத்துவித சித்தாந்தத்தைச் சொல்லி, ஐயன் சைவாகமத்துக்கும் இதுவே பொருளெனச் சொல்லி யிருப்பதாலும், சூதசங்கிதை வேதாவிரோத முரைத்த அத்தியாயத்தில் "மிருதி புராணம் சைவாகமங் தருக்கம் பாரதமுன் விளம்பு நூல்கள் கருதுறும் அத்துவித பரமே யுரைக்கு" மென்று கூறியிருப்பது பற்றிச் சைவாகமமும் அத்துவிதமே யென ஏற்படுவதாலும், சிவாகம முடிவான சிவஞானபோதமும் அத்துவிதமே கூறுவதாலும், அச்சிவஞான போதத்துக்கு (வேதமுழுமைக்கும் பாஷ்யஞ்செய்த) வித்தியாரணியசுவாமிகள் அத்துவித பரமாகவே பாஷியஞ்செய்திருப்பதாலும், "பாசபத்ஸ்ததாஜீவப்பாசமுத்தச் சதாசிவா" 'ஜீவச்சிவச்சிவோஜீவச்சற்ஜீவக்கேவலச்சிவா" "சர்வசாக்ஷிசிவோகம்" "பிரத்யகாத்மாசிவோகம்" என இவ்வாறு ஆகமமுடிவும் அத்துவிதத்தையே சொல்லுவதாலும் யாம் ஆகமசைவத்தை மாயாவாத சைவமென வொருபோதுஞ் சொல்லோம். பின்னை இவருடைய துவிதசைவத்தையே மாயாவாதமெனச் சொல்லுகின்றோ மென்றறிக.

## வைதிகத்தில் சைவம் அடங்குமென்பது.

"இவரது (சீநிவாச்சாஸ்திரிகளது) வாதாரம்பத்தில் வைதிகம் வேறு, சைவம் வேறு என்று தத்துவ விசாரஞ் செய்தாராகையால் இவர் சைவபேதங்கூறித் தப்பமுடியாது" என்கிறார். வைதிகம் என்பதில் சைவம் அடங்கிவிட்டமையால் வேறு பிரிப்பது ஆவசியகமன்றாயினும் சைவமென்று பேர்வைத்துக்கொண்டு இவரினத்தார் வேத தூஷணஞ் செய்கின்றா ராகையால் அவரினின்றும் வேறுபிரிந்து கொள்வதற்கே ஸ்ரீநிவாசசாஸ்திரியாரவர்கள் வைதிகசைவம் எனச் சொல்கின்றார். இது நூதன வழக்கே. இது நூதன வழக்கென்றும் வைதிகமென்பதில் சைவம் அடங்கி யிருக்கின்ற தென்றும் இவர்க் கபின்ன சிநேகரான சோமசுந்தரநாயகர் சொல்லியிருப் பதைக் காண்க. இக்காலத்தில் சோமசுந்தரநாய்க்கர் என்பவரும் இன்னும் சிலரும் தம்மைச் சைவரென்று சொல்லிக்கொண்டு, வேதம் சாமானிய நூலெனவும், பசு நூலெனவும், மோக நூலெனவும், விபசரிக்கும் நலெனவுஞ், சொல்லுகின்றார் களல்லவா? அவர்களினின்றும் தாம் வேறுபடும் பொருட்டும் ஸ்ரீசம்பந்த சுவாமிகள் முதலானோரை இவர்களினின்றும் வேறுபடுத்துவதற்கும் வைதிகசைவரென்று

சொன்னாரேயன்றி, மற்றப்படி வைதிகசைவமென்பது நவீனவழக்குத்தான். இது விஷயமாகப் பத்திரிகாபிமானி ஒருவர் நந்தனஸூ ஆவணிமீ 8உ ப்ரம்ம வித்தியாவில் நீளமாய்ப் பேசி, சோம - நாயகரது அநேசமுரண்களையும் ஆபாசத்தையும் காட்டியிருக்கிறார். சைவரென்னில் வேததூஷகரெனப் பொருள்படா திருக்குமாறு வேததூஷகரல்லாத வைதிகர், வைதிகசைவரெனச் சொல்லிக்கொள்ள வேண்டுவதிக்காலத்துக்கு ஆவசியகமாம். மேல் "வேத சைவமும் இவரைத் தீண்டவஞ்சும்" என்று சொல்லி, இப்படிச் சொல்லிவிட்டதினால் வேததூஷணஞ் செய்த அதிபாதகம் மறைந்து போமென நினைக்கின்றாராக்கும்! வேதம் சர்வோத்கிருஷ்டமான நூலென்றும், முதனூலென்றும், மோக்ஷநூலென்றும், சுதந்தர நூலென்றும், மற்றவைகள் அதைச் சார்ந்தே பிரமாணங்களென்றும் சொல்லும் வைதிகசைவோத்கிருஷ்டரைத் தீண்ட வஞ்சுமானால் அவைகளுக்கு மாறாக அதைச் சதா தூஷித்துக் கொண்டே திரியும் அதிபாதகர்களையா வைதிகசைவம் அஞ்சாமல் தொட்டுக் கொள்ளும்! ஆ! ஆ!! விந்தை! விந்தை!! வெகு விந்தை!!! இவர் வைதிகசைவத்துக்கும் வேதத்துக்கும் ஆசைகொள்ளுவது எழை ராஜனாக ஆசைகொள்ளுவது போலாம்.

"சீநிவாசசாஸ்திரியார் அல்லது அவரது அபிமானிகள் சைவமே மாயாவாதமென்று நாயகரவர்களது வாதத்தை மறுத்ததுண்டெனில் அதனையெடுத்து அது அனுவாதமுகத்தால் நமது பாநுமூர்த்தி விளக்கி மகிழ்வராக" என ஒன்று மறியாது போலச் சொல்லி நடித்து, இந்தப்பூனையும் பால்குடிக்குமாவென வேஷம் போடுகிறார். நாம் ப்ரம்ம வித்தியா 6-வது புத்தகம் 11-வது 14-வது பத்திரிகைகளில் இது விஷயமாய் விரித்தெழுதியிருக்கவும் அதன் மேல் விகடதூதனில் வந்த அற்ப கண்டனைக்கும் பலமாக ஷை புத்தகம் 16-வது பத்திரிகையில் தும்சஞ் செய்திருக்கவும் ஒன்றுமறியார்போ லிங்ஙனம் பேசுதல் ஆண்மையாமா? இப்படி யெழுதிவிட்டால் கண்டனைசெய்த விஷயம் ஒருவரும் அறியாரென நினைக்கின்றாராக்கும்! சோம. நாய்க்கரை மாயாவாதியென்று சொன்னதோடு விடவில்லையே. அவரது சுருதி யுக்தியனு பவமில்லாப் போலிச் சைவத்தின் தோஷங்களெல்லாவற்றையு மல்லவோ காட்டியிருக்கின்றது? இந்தத்தோஷங்களை நிவர்த்திசெய்யத் தம் மாலாகாதென்றல்லவோ முடிவுரையென்னும் வேஷம்போட்டுக்கொண்டார்? அன்றிச் சங்கராசாரியரை ஷை சோம. நாய்க்கர் தூஷித்து எழுதிய விஷயத்துக்கு நாம் எழுதிய மறுப்பு மிகப் பெரிய விஷயமாயிற்றே. அதற்கெல்லாம் பதிலெழுதாமல் ஓடியொளிந்த சங்கதி பிரத்தியக்ஷமாக, மகாமேருமலையைச் சாண் வஸ்திரத்தால் மூட நினைத்தது போல இவர் அவற்றை மறைக்கப்பார்ப்பது கூடுமா? "அதனைப் பின்னர் விசாரிப்பாம்" என்று ஒருவீரியம் சொல்லுகிறார். ஒரு வீரன், தன் பகைவனது தேகத்தை அஸ்திரத்தால் சல்லடைக் கண்களாகத் துளைக்க, பகைவன் வீரனை நோக்கி, "பின்னா லுன்னை விசாரித்துக்கொள்ளுகிறே" னென்று சொல்வது போலப் பதில் சொல்லாமல் ஓடி யொளித்துக்கொண்ட அவமானத்தை நிவர்த்தித்துக் கொள்ளச் சத்தியின்றி, 'பின்னர் விசாரிப்பாம்' எனக் கம்பீரமாய் ஆம் விகுதி கொடுத்துச் சொல்வதென்ன பேதைமை! அத்வைதிகள் மாயாவாதிகள் அல்லரென்பதற்கும் இவர் மதத்தினரே மாயாவாதிகளென்பதற்கும் ஏற்ற நியாயங்களை ப்ரம்மவித்தியா 6-ம் புத்தகம் 11-வது 14-வது 16-வது பத்திரிகைகளில் அனுவாதித்துத் தீர்மானித்திருக்கின்றோமாகலின் அவற்றை ஆண்டுக் கண்டு தெளிந்திடுக.

## சிவஞானபோதம் அத்துவிதசித்தாந்தமென்பது.

"சிவஞானபோதம் சைவ நூலென்பது இவருக்கு மொத்த துணிபு" என்கிறார். இவருக்கு மென்பதால் அரக்கோணத்தாருக்கு மொத்ததுணிபு என விளங்குகின்றது. இவர் அதை ஒத்துக்கொண்டதினாலென்ன பயன்? அது அத்துவித சித்தாந்தமான மையின் அதை யிவரொத்துக்கொண்டதினால் பயனொன்றுமில்லை. சிவஞான போதத்தை யிவரொத்துக்கொண்டதாய்ச் சொல்வதினும் பார்க்க இவரினத்தார் செய்த அதனுரையை யொத்துக்கொண்டோ மென்பது உசிதம். "சடகோபன் பாட்டை நம்பிச் சபைக்கேறாதே" என வைணவர்க்குள் பழமொழியொன் றுண்டு. அது அத்துவிதமா யிருப்பதால் அங்ஙனங் கூறற் அதுபோலச் சிவஞான போத மூலத்தை நம்பிவாதத்திலிறங்கினால் அது இவரினத்தாரை நட்டாற்றில் விட்டுவிடும்; அது அத்வைதமாயும் துவிதசண்டமாருதமாயு மிருக்கின்றமையா னென்க.

## தாயுமானவர் அத்துவிதத்தை அனுசரித்தே யுலகம் பொய்யென்றரென்பது.

“அதில் பேய்த்தேர் என்று கூறியிருக்கின்றது" என்றார். இந்தச் சிவஞான போதம் வேதமுதலிய கலைகளை யொத்துச் சிவனொன்றே முக்கால சத்துப் பொருளென்றும், பரிபூரணப் பொருளென்றும், மற்றப் பசுபாசப்பொருள்கள் அசத்து அல்லது சத்துப்போலி அல்லது அநிர்வசனீயப் பொருளென்றும் கூறுவதால் பேய்த்தேர் எனச்சொல்வது நியாயமே யாம். பேய்த்தேரெனக் கூறுகின்ற தென்பதற்கு வேதமுதலிய பிரமாணங்களை யெல்லாம் விசேஷமாக நாமும் அத்வைத சித்தாந்தியும் காண்பித்திருக்கின்றோம். அவ்விடத்தில் காணலாம். ஆகமமுடிவான சிவஞானபோதமும், வேதமுடிவான வுபநிஷத்துகளும் உலகு பொய்யென்று கூறுவதனாலும் இவ்விரண்டு நூல்களுக்கு மொத்து மற்றப் புராணாதிகளும் பேசுவதனாலும் வைதிகர்களும் ஆகமஸ்தரும் அத்வைத சித்தாந்திகளும், த்வைத விரோதி களு மானார்கள். இவர் வேதாகமங்களுக்கு மாறாகப் பேதவாதஞ் செய்வதால், இவர் வேதாகம பாஹியரென்றே தள்ளத்தக்கவரானா ரென்க. இதற்குப் பின்னர் “அவ்வாறே தாயுமானவரும் கூறினர். சங்கராசாரியாரும் உலகத்தைப் பேய்த்தேர் என்று கூறினர். தாயுமானவர் சிவஞானபோத முரைத்த மெய்கண்ட தேவரைப் பின்றொடர்ந்து உலகம் பேய்த்தேரென்றனரா? சங்கராசாரியரைப் பின்றொ டர்ந்து உலகம் பேய்த்தேரென்றனரா? என்று யோசிக்கின் அவர் மெய்கண்ட தேவரைப் பின்றொடர்ந்து கூறினாரென்பது அவரது ஏனைய வாக்கியங்கள் ருசுப்படுத்தும். அவர் 'மெய்கண்டான் பொன்னடியை மேவுநாளெக்காளோ' என்று கூறியதனோடு 'யாங்களே கடவுளென்றிடும் பாதகத்தவரும் என்று சங்கராசாரி யரையும் அவரினத்தவராகிய அகம்பிரமவாதிகளையும் தூஷித்து ஒதுக்கியிருக் கின்றனர். இதனை யறியாது தாயுமானவர் கூறியது பௌத்தர்களை யென்று பாநு மூர்த்தி பரக்கத் தீட்டினார்" என்று சொல்லியதிலுள்ள அனுசிதங்கள் அம்மட்டிம்மட்டல்ல. உலகம் பொய்யென்று சுருதியினாலும் யுக்தி யனுபவங்க ளினாலும் சோம. நாய்க்கரோடும் பிறரோடும் வாதஞ்செய்து நாமும் பிறரும் வெற்றி பெற்றிருக்க, அதன் பேரில் கட்சி செய்து தம் நியாயத்தைச் சொல்வதை விட்டு

'அவரைப் பின்றொடர்ந்து சொன்னாரா? இவரைப் பின்றொடர்ந்து சொன்னாரா?' என ஆண்மையின்றிப் பேசுவ திவர்க்கே தகும்.

“உலகம் சத்தா? அசத்தா?" என்னும் விஷயத்திலும் அதைச் சார்ந்த மற்ற விஷயங்களிலும் உலகம் பொய்யென்று ஸ்தாபித்திருப்பதால் அதை மறுத்துப் பேசமுடியாமல் வேறு வழியினுழைந்து தெரியாத ஜனங்களைப் பசப்பி யேமாற்றப் பார்க்கின்றார். “மெய்கண்டான் பொன்னடியை மேவுநாளெந்நாளோ” என்று சொன்ன தினால் வேதாகம புராணே திகாசங்களுக்கு மாறாகப் பொய்யான வுலகத்தை மெய்யென்று சொல்லவேண்டுமோ? கானனீரை மெய்யென்று சொன்னால் எல்லாரும் பரிகசிப்பார்களென்றெண்ணி, மெய்யென்றும் பொய்ட்யென்றும் வாயினாற் சொல்லாமல் ‘அவர் சொன்னபடி சொன்னாரா இவர் சொன்னபடி சொன்னாரா?' என்று போக்குக்காட்டிப் பேசுகின்றார். கானல் நீர் பொய்யா? மெய்யா? பொய்யென எவரும் ஒத்துக் கொள்வார்கள்.) இவர் உலகை மெய்யென்கிறார். மெய்யான வுல. கிற்குப் பொய்யான கானல் நீர் திருட்டாந்தம் சொல்வார்களா? பொய்யான கானல்நீர் திருட்டாந்தஞ் சொன்னதினால் தாயுமானவர் உலகம் பொய்யென்று ஒத்துக்கொண்டவராகின்றார். அதுமாத்திரமா?. "அண்டபகிரண்டமும் மாயாவிகாரமே" என்று சொல்லி, அதனோடு “அம்மாயை யில்லாமையே யாம்" என்கிறார். தாயுமானவர் மாயையை யில்லதென்கிறார். மாயை யில்லதாகிறபோது அதன் காரியமான வுலகுமாத்திரம் உள்ளதாய்விடுமா? காரணமே யில்லதாகிற போது காரியம் உள்ளதாய் விடுமா? மற்றொரு இடத்தில் “அகிலம் மாயை” என்று சொல்லி, அதற்குத் திருட்டாந்தமாக முயற்கொம்பு, கானல் நீர், ஆகாயதாமரை இவைகளை உபமானமாகச் சொல்லுகிறார். இவற்றில் முயற்கொம்பு, ஆகாய தாமரை இவ்விரண்டு திருட்டாந்தங்களும் இவர்க்கு விரோதம். இவர்க்கு விரோதமான அவைகள் அத்துவிதிகளுக்குச் சாதகம். மற்றொரு இடத்தில் "கடத்தை மண்ணெனல் உடைந்தபோதோ, இந்தக்கருமச் சடத்தைப் பொய்யெனல் இறந்த போதோ சொலத்தருமம்" என்கிறார். கடத்துக்குப் பொருள் மண்ணைத்தவிர முக்கால த்து மில்லாமையால் கடமாயிருக்குங் காலத்திலேயே மண்ணென்றே சொல்ல வேண்டு மென்பதவர் கருத்து. இன்னும் பல விடங்களில்,

“முற்றுமில்லாமாயை, பொய்யான வுலகத்தை மெய்யாநிறுத்தி யென்புந்திக்கு ளிந்திரசாலம் சாதிக்குதே. ஜகம்பொய்யெனத் தம்பட்டம் அடியே. அகில வாழ்வத் தனையும் சொப்பனங்கண்டாய். ஜகமனைத்தினையும் பொய்பொய்யென்று. பொய் யுலகும் பொய்யுறவும் பொய்யுடலும் பொய்யெனவே.”

என இவ்வாறு பல விடங்களிற் சொல்லியிருக்கின்றார். உலகை இவ்வாறு பலவிதமாய்ப் பொய்யென்று சொல்லியிருக்க, மெய்யென்று சொல்லியிருப்பது போல் காட்டுவது நியாயமாமோ? சிவஞானபோதம் “யாவையுஞ் சூனியஞ் சத்தெதிராகலின் சத்தேயறியாது அசத்திலது அறியாது" என்றும், “உணருரு அசத்" தென்றும், சொல்லுகிறதே யன்றி, கானர்நீர்போல் உலகு உண்மை என்று கானல்நீர் பொய்யாதலால் உலகும் பொய்யாம். ‘மெய்கண்டான் பொன்னடியை மேவுநாளெந் தாளோ' என்றதற்குக் காரணம் அவர் ஓர் அடியராதல் பற்றி யென்க. திரு ஒற்றியூரிலுள்ள காவனங்க ளெல்லாம் பட்டினத்தடிகள் கூறியபடி கணநாதரான

போது பரமசிவனை வணங்கும் மெய்கண்டாரை யோர் அடியராகக் கொள்வதிற் குற்றமென்னை? சேரமான் பெருமாணாயனார் ஏகாலியின் திருநீற்றுப் போலியைக் கண்டு அவ்வேகாலியை அடியராய் வணங்கினாரென்னின், உண்மையாகத் திருநீறு உருத்திராக்க மணிந்து பரமசிவனைப்பணியும் மெய்கண்டாரை அடியராகக் கொள்வதிற் குற்றமில்லையே. சேரமான் பெருமாள் நாயனார் ஏகாலியை வணங்கின தினால் அவனது சித்தாந்தத்தையும் அவர் கொண்டவராக வேண்டுமோ?

*"கண்டதுபொய்யென்றகண்டாகாரசிவமெய்யெனவே*
*விண்டசிவவாக்கியர்தாள்மேவுநாள்எந்நாளோ"*

என்றதால் அவர் கொள்கையையு மிவர் கொள்ள வேண்டுமே. ஜனகர், சுகர், ஸனகாதிகள் முதலானவர்களை யெல்லாம் வியந்து பேசியிருப்பதால் அவர்கள் கொள்கைகளை யெல்லாம் தாயுமானவர் கொள்ளவேண்டுமே. அவர்களெல்லாம் உலகைப் பொய்யென்று சொல்லும் அத்துவிதிகளாயிற்றே.. அதுவெல்லா மிருக்கட்டும். தாயுமானவரால் கடவுளென வணங்கப்படும் பரமசிவன் சொன்ன ஈசுவரகீதை அத்துவிதமா யிருக்கின்றதே. அன்றிப் பிரமன் தேவர்களுக்கு அத்துவித உபதேசஞ் செய்தாரெனவும், பிறகு பரமசிவனும் வந்து அதையே யுபதேசித்து, "நான் முகனு முரைத்த துங்கட்குண்மையிதே" எனச் சொன்னாரெனவும் பிரமகீதை சாந்தோக்கிய உபநிடதத்திற் கூறுகின்றதே. அப்போது பரமசிவன் சொன்ன அத்துவித சித்தாந்தத்தை அனுசரித்துக் கானல் நீர் பொய்யென்று கொண்டதாய்ச் சொல்ல வேண்டுமே. எந்த விடங்களிலும் உலகம் பொய் யென்று சொல்லி, அதற்கிணையாக வான் மலர், முயற்கோடு, கயிற்றரவு, கானனீர், மலடிமைத்தன், சொப்பனவுலகு, இந்திரசாலமாகிய இந்தத் திருட்டாந்தங்களெல்லாம் சொல்ல, அவைகளுக்கு மாறாக வுலகு மெய்யென்று சொல்லுவதும் அத்துவித சித்தாந்தத்தின்படி கானனீரை அவர் சொல்லவில்லை யென்று சொல்வதும் நகைப்பிற்கிடமாம் என்க. கானனீர் பொய்யல்ல, மெய்யென்று கூறும் பிரத்தியக்ஷவிரோத புத்திசாலிகளுக்கு நாம் யாது கூறப்போகின்றோம்! அத்துவிதத்திற்குத் துவிதம் சாதகமாயிருப்பதாலும் துவித சித்தாந்தத்தையாவது கூறி முத்தியில் பேத நிலை சொல்வதும் அரிதாதலாலும் அதுவரையில் மெய்கண்டாரைக் கனஞ்செய்து துதித்தது நியாயமானதேயாம். அதனால் அவர் சித்தாந்தத்தையே முற்றும் அனுசரிக்கவேண்டு மென்பது சட்டமா?

'யாங்களே கடவுளென்றிடும் பாதகத்தவரும்' எனத் தாயுமானவர் சொன்னாரேயன்றி அவர் இன்னாரெனப் பெயரிட்டுச் சொன்றில்லை. "நானே பிரமம், நானே சிவன், அகம்பிரமாஸ்மி, சிவோகம்" முதலிய வாக்கியங்கள் வேதசம்மதமும் அவ்வேதாதாரத்தின் பேரில் பிரவர்த்தித்த ஸ்மிருதி புராண இதிகாசாதிகள் சம்மதமும் பெற்றனவாதலாலும் அப்பிரமாணங்களை முன்னரே விளக்கியிருக் கின்றோமாகையாலும் தாயுமானவர் ஷை பிரமாணங்களை அங்கீகரித்து அதற்குக் கட்டுப்பட்டவராதலாலும் நானே பிரமம், நானே சிவன், சிவோகம் முதலிய வாக்கியங்களைப் போலத்

*"தன்னையறிந்தவர்தம்மைத்தானாகச்செய்தருளும்சமத்தை.*
*அத்துவிதமானஐக்கியஅனுபவமே."*

தன்மயமாய் நின்ற நிலை தானே தானாகிநின்றால் நின்மயமா எல்லாம் நிகழும் பராபரமே.

"*என்னைத்தானாக்கிக்கொண்டசமர்த்தைப்பார்தோழி.*
*அதுவானாலதுவாவர்அதுவேசொல்லும்.*
*யானெனல்காணேன்பூரணநிறைவில்.*
*என்னைத்தன்னவனாக்கவுந்தகுங்காண்.*
*நீயெனநானெனவேறில்லை.*
*நானவனாய்நிற்பதெந்நாள்.*
*மறைஎன்னைநீதானாகச்சொல்லாதோ.*
*சித்தந்தெளிந்துசிவமானோரெல்லோர்க்கும்.*
*நீயேநானென்றுநினைப்புமறப்புமற.*
*தானவனாந்தன்மையெய்தி.*
*சச்சிதானந்தசிவந்தானென்பதெந்நாளோ*
*அதுதானாகநிற்கவுண்மைசெப்பியதுமல்லால்.*
*என்னையுந்தன்னையும்வேறா - வுள்ளத்*
*தெண்ணாதவண்ணமிரண்டறநிற்க."*

முதலிய செய்யுள்கள் கூறியிருப்பதாலும் அவர் தம்மையே தாம் நிந்தித்துக் கொள்ள மாட்டாராதலாலும் அவர் அங்ஙனங் கூறியது பௌத்த சித்தாந்திகளையே யென்பது திண்ண மென்க. இனிப் பௌத்த சித்தாந்திகளை மறுத்தாரென்பதைப் பற்றிப் பின்னர்க் கூறுவாம்.

## சூதசங்கிதை அத்துவித சித்தாந்தமென்பதும், வேதத்தில் சிவனே பரத்துவமென்பதும்.

"சூதசங்கிதையில் அகம் பிரமவா தங் கூறியது என்னை யெனின் வேத முதலிய கலைகளில் நாராயணன் இந்திரன் முதலானோரைப் பரம் என்று கூறியது போலாம்" என்றதிலுள்ள ஆபாசங்களையு மெடுத்துக் கூறுவாம். வேதத்தை யாராய்ச்சி செய்தோர்: பரமசிவனே பரமெனக் கூறியதோடு, இதரதேவதைகள் பரமன்றென நியாயவாயிலாக எவ்வளவோ காட்டியிருக்கவும் பெயர்த்தும் அங்ஙனங் கூறுவது விசாரணையின்மையே யாம்.

## அப்பயதீக்ஷதகவாமிகள் இயற்றிய சிவதத்துவவிவேகம். (சிவஞானசுவாமிகள் மொழிபெயர்ப்பு)

வீச்சுவாதிகனும் விசுவசேவியனும் விமலனீயேயெனமறைக, ணிச்சயமாக முழக்கவுமறியா நீசர்தாம் பிணங்குவரந்தோ, மச்சரத்துனக்கே தீங்கிழைத்தவர் தம் வாழ்க்கையும் பயன்படாதாலத், துச்சர்சொற் கேட்டோர்க்கிறுதலே தண்டஞ் சொற்றிடு நூலெலாமன்றே.

*முளரியோன்முதலாஞ்சுமபொலாம்பூதமுதலவற்றோடுதித்துள்ளோ*
*ரளவிடுந்தலைமையாளரென்றவரையகற்றிமால்விடையவனினையே*
*வளமுறுமெல்லாத்தலைமையுமுடையோன்வருமுதற்காரணனல்லோ*
*ருளமுறுதியானப்பொருளெனச்சிகைதேர்ந்துரைப்பவுமயங்குவர்சிலரே.* (12)

இச்செய்யுள்கள் இனி அவனா யிவ்வாறு பேசவொட்டாது நாவை யுள்ளடக்கும்படி செய்யுமெனக் கருதுகின்றோம். எந்தமதவாதிகளும் வேதம பலபொருள் கொண்டு முடிவதாகச் சொல்லுகின்றனரில்லை. வேதத்திற்கூறிய பொரு ளொன்றே யென்றும், அப்பொருளே தாம் கொண்ட கடவுளென்றுஞ் சொல்லு கின்றனர். யார்யார் என்னென்னபேர் சொல்லிக்கொண்டாலும் அவரவர்க்கும் பரமசிவ னொருவரே அந்தந்த வடிவமாய் நின்று அனுக்கிரகஞ் செய்கின்றமையால் பரமசிவன் பரம்பொருளாவதற்கு யாதொரு ஆக்ஷேபமு மில்லை. சிலா ரூபத்தை வணங்குவார்க்கும் சிவன் வந்து அருள் செய்கின்றா ரென்னின் பரமவியூகத்திற் சேர்ந்த திரிமூர்த்திகளு ளொருவரான நாராயணன் முதலினோரைத் தியானிப்பவர் க்கு அவரிடத்தில் அந்தரியாமியாய் இருக்கும் பரமசிவன் அனுக்கிரகஞ் செய்யக் கேட்பானேன்? பரமேசுவரன் பெருங்கருணைக் கடலும் வள்ளலுமானதால் தம்மை வணங்குபவர்க்கு மாத்திரம் அருள் செய்வாரென்று சொல்லப்படாது. தம்மை யார் எந்தெந்த வடிவமாகப் பாவித்தும் பொருள் செய்தும் வணங்கினாலும் அவரவர் களுக்கு அவ்வவ்வடிவமாய் நின்று அருள் செய்வது பரமசிவன் கருணைக்கு அழகும் இயற்கையுமாம். வேதப்பொருளான பரமசிவனை வேறுவேறு வடிவமாக அவரவர் கள் கொள்வதினால் வேதத்துக்கு யாதொரு பாதகமுமுண்டாகாது; எல்லாமாய் நிற்பதும் அவராதலின் என்க. “என்னைத்தான் வணங்க வேண்டும், எனது வடிவத்தைத்தான் தியானிக்க வேண்டும். அவர்களுக்குத்தான் அருள் செய்வேன், மற்றவர்களுக்கு மருள் செய்வே" னென்பது அருட்கடலான பரமசிவன் சுபாவத்துக் கொவ்வாமையின் அஃது பொருந்தாமை காண்க. தம்மைவிட்டு வேறு கடவுளை வணங்குபவர்களைக் கல்லாலடித்துக் கொல்வேமெனவும் இம்மாதிரிப் பிறவும் சொல்லும் கடவுள்: பைபில் கடவுள் முதலிய கடவுளுக் கிலக்கிணமாம். வேதப் பிரமாண வாதிகளில் யார் யார் எந்தெந்த மூர்த்தியைச் சொன்னாலும் அவை களெல்லாம் வேதாந்தப் பொருளான பரமசிவனிடத்திலேயே நிலைபெறுமென்று, சைவவிசிஷ்டாத்துவித பாஷியக்காரரான நீலகண்ட சிவாசாரியாரவர்கள் உரைத் திருக்கின்றனர். பரமசிவன் தம்மைவிட வேறு தேவதைகளை வணங்குவோர்க்கும் பொதுவாய் அனுக்கிரகஞ் செய்கின்றாராகலின், தம்மை நேரே வணங்குவோர்க்குச் சிறப்பா யனுக்கிரகம் செய்யமாட்டாரென்று எந்த மூடர்க்கேனும் சொல்ல நாவெழுமா? பொதுவாய் எல்லா மதத்து ஏழைகட்கும் தருமஞ் செய்யும் ஓர் வள்ளல் : சிறப்பாய்த் தனது மதத்து ஏழைகட்குத் தருமஞ் செய்யானா? எல்லோருக்கும் பொதுவாய்த் தருமஞ் செய்தது கொண்டு அவ்வள்ளலை யிகழலாமா? அங்ஙனமே யிதரதேவதா பத்தர்களுக்குப் பொதுவாய் அனுக்கிரகஞ் செய்தல் காரணமாகப் பரமசிவனை வெறுக்கலாமா? சிறப்பாய் நேரான தமது பத்தர்க்கு அனுக்கிரகஞ் செய்யமாட்டாரென்று நினைக்கலாமா? செய்யமாட்டாரென நாமே நினைத்துக் கொண்டு அவர் பேரில் குற்றங் கூறலாமா? பரமசிவன், தம்மை வணங்கும் சிவபத்தர்களுக்கு மாத்திரம் அருள் புரிய வேண்டு மென்றும், இதர தேவதாபத்தர் களுக்கு அருள் புரியப்படாதென்றும், மருள்புரிய வேண்டுமென்றும் நாம் சொல்ல

லாமா? அப்படிச் சொல்வோமானால் நம்மைப் பொறாமைக்குண முள்ளவர்களென் றன்றோ சொல்வார்கள்? நமது பொறாமைக் குணத்தால் அவரையும் பொறாமைக் குணத்தராக்கப் பார்ப்பது நியாயமா? அப்படியாக்க நாம் பார்த்தாலும் சகல குணமேரு வான அவர் அங்ஙனமாவாரா? அங்ஙனமாவாரென்னின் அவரைக் கடவுளென்று யார் நினைப்பார்கள்? அப்படிப்பட்டவர் கடவுள் தானாவாரா? அளவு கடந்த அருளுடைய பரமசிவனை அளவுக் குட்படுத்தலாமா? நாமுட்படுத்தினாலும் அவருட்படுவாரா? உட்படுவாரானால் அவரைக் கடவுளென நாமெப்படி நினைப்போம்? எப்படி வணங்கு வோம்? இப்படிப்பட்ட ஆக்ஷேபங்கள் வெகுவாயுண்டாவதால் நாராய்ணன் முதலான வரைப் பரமென்று வேதங் கூறுவதாய்ச் சொல்லிக் குற்றப்படுத்துங் கூற்று, பயனில் கூற்றாய்ப்போனமை காண்க. ஆதலால் நாராயணன் முதலானோரைப் பரமென்று கூறுவதாயிருந்தாலும் அதனால் அவ்வேதத்திற்கும் வேதப்பொருளான பரமசிவனுக் கும் பெருமையே யொழியச் சிறுமையில்லை. பொறாமைக் குணத்தாலும் அவைதிகத் தன்மையாலும் இவர் போன்றார் சிலர்: இப்படிப்பட்ட குற்றங்கூறி வேதத்தையும் வேதாந்தப் பொருளான பரமசிவனையு மிகழ்ந்து அதிபாதகத்தை யடைகின்றார்கள்.

வேதம் பல கடவுளைச் சொல்வது உண்மையானால் வேதப்பிரமாணத்தால் சிவனே பரமென்று ஸ்தாபித்த லில்லையாம்; இல்லாத போது இதரப் பிரமாணங் களைக்கொண்டு ஸ்தாபித்தலினால் கௌரவமில்லையாம். அப்போது வேதப் பிரமாணப்படி சிவனுக்கே பரத்துவ மென்றுசொல்ல இடமில்லாமற் போகின்றது. இது சிவோத்கிருஷ்டவாதிகளுக்கு அவமானமும் வெட்கமுமாம்! இவ்வாறு வேதத்தில் பல கடவுள் சொல்லுகிறதென்று சொல்லுவோர் மருளுடையோரே யன்றித் தெருளுடையோரன்று. வேதத்தில் பலகடவு ளுபாசனைக்காகச் சொல்லிருக் கின்றதைப்பற்றி இவர் மருளுகின்றாராக்கும்! உபாசனையினிமித்தம் பல மூர்த்திகள் சொல்லியிருந்தாலும் அம்மூர்த்திகளினிடத்து அந்தரியாமியாய் நின்று அருள் புரிபவர் பலரென்று சொல்லவில்லையே!

ஒருவரென்றுதானே சொல்லுகின்றது. அந்தவொருவர்தான் பரமசிவன், வேதத்தில் பலமூர்த்திகள் சொல்லியிருந்தாலும் சச்சிதானந்த நித்திய பரிபூரணப் பொருள் பலவென்று சொல்லவில்லையே. ஒன்றென்றுதானே சொல்லுகின்றது. மணிகள் பலவாயிருந்தாலும் அவற்றினுள் ஊடுருவிநிற்கும் நூலொன்றுதானே. அதுபோலப் பிரமவிஷ்ணுவாதி தேவதைகளை அவரவர் கருமத்துக்கும் பக்குவத்து க்கு மீடாகப் பரம்போலக் கூறியிருந்தாலும் அவர்களுள் சச்சிதானந்த நித்திய நிரம்மல நிர்ச்சல நிர்க்குண நிரஞ்சன நிஷ்களப்பொருளான துரியசிவ னொருவரே பரமன்றிப் பலரன்றே. இவர் தூலவிசாரணை புரிபவராகலின் இவருடைய புத்தியும் அவ்வாறுதானிருக்கின்றது. பரமசிவன் ராஜனைப்போன்றவர்; இதரதேவதைகள் மந்திரிப் பிரதானிகளைப் போன்றவர். மந்திரிப்பிரதானிகளிடத்தில் ராஜபுத்தி வைத்தாலும் வைக்கலாம். ராஜனிடத்தில் மந்திரிப்பிரதானிகளது புத்தி வைக்கப் படாது. அங்ஙனமே பிரமாதி தேவதைகளிடத்தில் சாக்ஷாத் பரமசிவபுத்தி வைக்கலாம். பரமசிவனிடத்தில் பிரமாதிகள் புத்தி வைக்கலாகாது. மந்திரியாதியர்க ளிடத்தில் ராஜபுத்தி பண்ணுவதுபோல் விஷ்ணுவாதி தேவதைகளிடத்தில் சிவபுத்தி, அதாவது பரத்துவபுத்தி வைக்கச்சொல்வதைக்கண்டு, இதரதேவதைகளைப்

பரத்துவமாகச் சொல்வது போல் மருண்டனரோ? அல்லது வேதத்தினிடத்துள்ள துவேஷ புத்தியால் அங்ஙனங் கூறுகின்றனரோ அறியேம்! எங்ஙனமாயினு மாகுக. இவர்க்கு நாம் சொல்ல வேண்டிய சமாதானங்களைக் கூறிவிட்டோம். இன்னு மிது விஷயமாக அறிய வேண்டுவோர் அப்பயதீக்ஷதர் இயற்றிய சிவதத்துவ விவேகம் அரதத்தாசாரியரியற்றிய சதுர்வேததாற்பரிய சங்கிரக முதலிய நூற்களைக்கண்டு மருளையொழித்துத் தெளிவுறுவராக.

## சூதசங்கிதை அத்துவித சித்தாந்த மென்பது.

சூதசங்கிதையில் அகம்பிரமவாதம் சித்தாந்தமல்ல வென்பதற்கு ஒரு சுலோக மிருக்கிறதென்று சொல்லுகிறார். சூதசங்கிதை ஆறாயிரம் சுலோகங்களையுடையது. அந்த ஆறாயிரத்தில் 5999 சுலோகங்கள் அகம்பிரமவாதங் கூறுகின்றன போலவும், அந்த 5999 சுலோகங்களும் பூர்வபக்ஷம் போலவும், ஒரு சுலோகஞ் சித்தாந்தம் போல வும் நடித்து அந்தச்சித்தாந்த சுலோகத்தைத்தான் இவரெடுத்துத் காட்டவருகிறார். அது வெகு ரகசியமாய் ஆறாயிரத்தில் மறைந்திருக்கின்றது; அது ஒருவர் கையிலும் அகப்படாது. பூர்வபுண்ணிய. விசேஷத்தினால் இவர் கையில் அகப்பட்டது. பூர்வபக்ஷமாயுள்ளவை யார்க்கும் கிடைக்கும். சித்தாந்த சுலோகம் அப்படிக் கிடைக்கத்தக்கதல்ல. அந்தச்சுலோகம் இதுவரையில் அத்வைதிகள் பார்த்திருந் தாலும் அவர்கள் கையி லகப்பட்டிருந்தாலும் அன்றே அத்துவித மதத்தை ஆற்றில் புளியைக் கரைத்து விடுவது போல் கரைத்து விட்டுத் தலைமுழுகி, இவரது துவைத சித்தாந்தத்தை அனுசரித்திருப்பார்கள். பாவம் அவர்கள் கண்ணுக்கு அகப்படாமற் போயிற்று! ஆறாயிரம் சுலோகத்தில் பின்னும் நான்கு சுலோகம் அத்துவிதமதவிரோ தமாகவும் துவைதமத சாதகமாகவும் எழுதியிருந்தால் ஒன்றில்லாவிட்டாலும் ஒன்று தெரியும். வேதவியாச மகாமுனிவர் ஒரு சுலோகத்தையே எழுதிவைத்தாரே. அவரும் வெகு கபடஸ்தர்தான். பின்னும் நான்கு சுலோகம் எழுதிவைக்கின் அதைப்பார்த்துப் பேதமுத்யை யடைந்து விடப்போகிறார்கள் என்ற பொறாமை யினால் அங்ஙனம் எழுதிவைத்தாராக்கும்! அப்படித்தானெழுதி வைத்தாரே; பார். க்கிறவர்கள் கண்களுக்கெல்லாம் விளக்கமாய்த் தெரியும்படியாவது எழுதி வைத்தனரா? அதுவுமில்லையே. மர்ம்மமா யல்லவோ ஒரு மூலையி லொடுக்கி யெழுதிவைத்தார்? அது இருக்கட்டும். இந்த அரக்கோணவாசியார்தான் பூர்வ புண்ணிய விசேஷத்தால் அதைக்கண்டு பிடித்தாரே. கண்டுபிடித்தவர், அது இன்னபாகத்தில் இன்ன காண்டத்தில் இன்ன அத்தியாயத்தில் இருக்கிறதென்றும் இத்தனையாவது சுலோகமென்றும் சொன்னாரா? வியாசமகாமுனிவர் எவ்வளவு மர்ம்மமாய் வைத்தாரோ அவ்வளவு மர்ம்மமாயன்றோ இவரும் வைத்தார்? வைத்தாலும் வைக்கட்டும். அதனுரையையாவது நாலுபேர் அறிய வெளிப்படுத் தினாரா? நாம்தான் எப்படியோ பார்த்துக்கொள்ளுகிறோம்; பார்த்துக்கொள்ள வேண்டிய கடமை நமக்கிருக்கின்றது. மற்றவர்கள் எப்படித் தெரிந்துகொள்வார்கள்? தமிழ் வாசித்தவர்கள் சமஸ்கிருத சுலோகத்தின் பொருளை எப்படி யுணர்ந்து கொள்வார்கள்? சமஸ்கிருதக் தெரிந்தவர்களிடத்திற் சென்று தெரிந்து கொள்ளலாமெ ன்றாலும் சமஸ்கிருதந் தெரியாதவ ரிருக்குமூர் எத்தனை யிருக்கின்றன? அவ்வூரிலுள்ளவர்கள் தெரிந்து கொள்வ தெங்ஙனம்? சமஸ்கிருதந் தெரிந்தவர்

களிருக்கும் ஊரி லிருந்தால்தா னென்ன? அவர்கள் சும்மா சொல்வார்களா? அதனுரையை யெழுதுவ திவர்க்கு மிகச் சுலபம். மற்றவர் சமஸ்கிருதம் தெரிந்தவர் களைத் தேடிப்பிடித்து அதனுண்மையான. வரையை யுள்ளபடி யுணர்ந்து கொள்வது மிகக்கடினமென யாங்கூறவேண்டுவ தில்லையே. தமிழ்ச் சூதசங்கிதையில் அத்துவிதத்திற்கு விரோதமாக ஒரு செய்யுளையாவது யாம் பார்த்திலேம். எமது நண்பர்களும் அவ்வாறே யுரைத்தார்கள். சமஸ்கிருதந் தெரிந்த பல பண்டிதர் களையும் அத்துவித விரோதமாகச் சமஸ்கிருத சூதசங்கிதையில் ஏதேனுஞ் சுலோக முண்டாவென விசாரித்தோம். அவ்வாறில்லையெனச் சொன்னதோடு, அவ்வாறிருக் கவுமாட்டாதெனச் சொன்னார்கள். அரக்கோணத்தார்க்கு மாத்திரம் அது அகப்பட்டது அதிசயத்தினும் அதிசயம்!!

இந்த அதிசயத்தைப்பார்க்க நெடுநாள் முன்னர் நமது நண்பர் ஒருவர் சொன்ன ஒரு அதிசயமான சிறுகதை ஞாபகத்தில் வந்தது. அதைச் சொன்னால் நண்பர்கள் சந்தோஷப்படுவார்கள் என்று சொல்லுகிறோம்.

மகாதந்திரமும் கபடுமுள்ள ஒரு ஏழைச்சேணியன், தன் தேயத்து அரசனிடம் சென்று, "மகாராஜாவே! நான் நெய்தற்றொழிலில் மகாசமர்த்தன், வெகு நாணயமான வஸ்திரம் செய்கிறவன், நான் நெய்கிற வஸ்திரத்தை யுடுத்திக்கொள்ளும் பாக்கிய முடையவர்கள் மகாராஜாவே யன்றி வேறே யொருவருமிலர்" என்றான். அரசன் அவன் சொல்லை நிஜமென்று நம்பி, “அதன் விலை யென்ன ஆகு?” மென்றான். சேணியன், "ஆயிரம் விராகன் ஆகும்” என்றான். அப்படியே அரசன் ஆயிரம் விராகன் கொடுத்தான். சேணியன் உள் மகிழ்ந்து அதை வாங்கிக்கொண்டு, “அரசனே! அந்த வஸ்திரம், நெய்ய ஒருவருஷமாகு” மென்று சொல்லிவிட்டுப்போய் அந்தப்பணத் தைக்கொண்டு சொஸ்தமாய்ச் சாப்பிட்டுக்கொண்டிருக்கான். அரசனது ஏலாளன் ஆறுமாசம் பொறுத்து ராஜா வினுடைய உத்தரவின் பேரில் சேணியனிடத்தில் சென்று “வஸ்திரம் எவ்வளவு நெய்தாயிற்று" என்றான். சேணியன் “நூல் நூற்றுப் பதஞ்செய்து வைத்திருக்கிறேன், இனி நல்லநாள் பார்த்துத் தறியில் பூட்டுவேன்" என்றான். ஏவலாளன் பின்னும் ஒருமாசம பொறுத்துச் சென்றான். அவன் வருவதை முன்னுணர்ந்து சேணியன் தறியிலுட்கார்ந்து. கொண்டு நெய்வதுபோல் இரண்டு கையையும் சும்மா வீசிக்கொண் டிருந்து, ஏவலாளன் வந்தவுடனே, வெகு பிரயா சைப்பட்டு நெய்கிறதுபோல் பாசாங்கு பண்ணிக் கையை வீசிக்கொண்டிருந்தான். ஏவலாளன் பார்த்து, “இது என்ன அதிசயம், தறியில் நூலையுங் காணோம், நெய் தலையுங் காணோம், இவனென்னமோ நெய்கிறதாகச் சொல்லுகிறானே" யென்று அந்தச் சேணியனைக் கேட்க, சேணியன், “அட பைத்தியக்காரா! ஊரிலுள்ள வஸ்திரத்தைப்போ லிதை நினைத்துக் கொண்டாயா, இந்த வஸ்திரம் வெகு நாணயமாயுள்ளதாக்கும், யாவருடைய கண்களுக்கும் புலப்படுவதொன்றன்றென, நினை, யார் தனது தகப்பனுக்குப் பிறந்தார்களோ அவர்களுக்கு மாத்திரந்தான் இந்த வஸ்திரம் புலப்படும், மற்றவர் கண்களுக்குப் புலப்படமாட்டாது" என்றனன். ஏவலாளி இதைக்கேட்டு, "ஒ ஒ இதென்ன விந்தையா யிருக்கிறது! நாம் நமது தந்தைக்குப் பிறக்கவில்லை போலிருக்கிறது, அதனாற்றான் நமது கண்ணுக்குப் புலப்படவில்லை, நமது கண்ணுக்குப் புலப்படவில்லை யென்றால் நமது தாய் விபசாரி யென்றேற்பட்டுவிடும்" என்று அதன் மேல் ஒன்றும் பேசாது “சேணியரே!

சீக்கிரமாய் நெய்து கொண்டுவாரும்" என்று சொல்லிவிட்டு, அரசனிடம் உண்மையைச் சொன்னால் நமது தாய் விபசாரியென்று சொல்வாரெனக் கருதி, "செட்டியார் நெய்து கொண்டுதா னிருக்கி'றார், ஆறுமாசத்தில் நெய்து கொண்டு வருவார்" என்றான். சேணியன் பிறகு ஆறுமாசமும் சொஸ்தமாய்ச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். மறு ஆறுமாசம் பொறுத்து ராஜாவினுத்தாவின் பேரில் ஷை ஏவலாளி சேணியனிடம் வந்து நெய்தாயிற்றா? என்றான். சேணியன் "ஆயிற்று, நல்லநாள் பார்த்து ஊர்க்கோலத்துடன் வருகிறே" னென்றான். அப்படியே அவன் ராஜனிடம் சொல்லி விட்டான். கடைசியில் சேணியன் வெறுந் துணியைப் பத்து வரையில் எடுத்து, உள்ளே கண்ணுக்குப் புலப்படாப் பொய் வஸ்திரத்தை வைத்து அதன்பேரில் ஒன்றன் பின்னொன்றாக வுண்மையான வஸ்திரத்தைச் சுற்றி, பல்லக் கில் வைத்து, மேளவாத்தியத்துடன் ஊர்வலம் வந்து ராஜன் கோட்டைக்குட் புகுந்து ராஜசபையிற்போய் உட்கார்ந்து, மேல் வஸ்திரங்களை யெல்லாம் பிரித்துக் கடைசியில் வெறுங்கையை யேந்தி, அதிலேதோ வஸ்திரமிருப்பது போல் காட்டி, அதையெடுத்து, ஆசீர்வாதஞ்செய்து வெறும் வெளியை அரசனிடங் கொடுத்து, "இது தமது தந்தைக்குப் பிறந்தவர்கள் கண்களுக்கு மாத்திரந்தான் தெரியும், மற்றவர் கண்களுக்குத் தெரியாது, அவ்வளவு நாணயமுள்ளது, இதற்காக ஒருவருஷங் கஷ்டப்பட்டேன், மகாராஜாவே! எனது கஷ்டத்தை யறிந்து தக்க பரிசுதரவேண்டு" மென்றான். அரசன் *இதென்ன வெறும் வெளியைக் கொடுத்து விட்டு, வஸ்திர மென்கிறானே, இதன் உளவு புலப்படவில்லையே, சேணியன் சொல்லுகிறபடி நமது தாய் பரபுருஷனோடு விபசரித்துத்தான் நம்மைப் பெற்றனளோ, இது நமது கண்ணுக்குப் புலப்படவில்லையே, வெறும் வெளியைக் கொடுத்தாயே யென்றால் நமது தாய் விபசரித்து நம்மைப் பெற்றாளெனச் சபையார் நகைப்பார்களே" யென யோசித்து, வஸ்திரமிருப்பது போலவும் அதை வாங்கிக்கொள்வது போலவுங் காட்டிச் சேணியனிடம் வாங்கிக்கொண்டு, அதை மந்திரியினிடங் கொடுத்தான். அவன் பிரதானியிடங் கொடுத்தான். இப்படியே யொருவன் கொடுக்க யொருவன் வாங்கி, வாங்கின முறைப்படி கடையில் ராஜனிடம் வந்துவிட்டது. அதை மறுபடியுஞ் சேணியன் வாங்கிப் பழையபடி துணிக்குள் வைத்துக்கட்டி ராசனிடங் கொடுத்தான். ஷை ஒன்றுமில்லா வஸ்திரம் ஒருவர்க்கும் புலப்படா திருந்தும் புலப்படவில்லை யென்று சொன்னால் தங்கள் தாய் விபசாரியென்று சொல்வது மாத்திரமன்றி, தாங்கள் தங்கள் தகப்பன்மார்க்குப் பிறக்கவில்லை யென்றும் வேறு புருஷர்க்குப் பிறந்ததாக ஏற்பட்டுப்போமென்றும் எண்ணி யாவரும் வஸ்திர மிருப்பது போலவே வாங்கிக் கொடுத்து விட்டார்கள். பிறகு உண்மை வெளிப்பட்டுச் சேணியன் சிட்சை யடைந்தான்.

சேணியன் வஸ்திர முள்ளது போலக் காட்டி இராஜன் முதலியவர்களை யேமாற்றினது போல அரக்கோணத்தார் முற்றும் அத்துவித பரமாயுள்ளதும் ஆறாயிரம் சுலோகங்களையுடையதுமான சூதசங்கிதையில் அத்துவித விரோத மாகவும் துவிதமதச் சார்பாகவும் உள்ளது ஒரு சுலோகமென்று சொல்லி யேமாற்றப் பார்க்கின்றார். 5999 சுலோகம் அத்துவிதமாகவும் ஒரு சுலோகம் துவைதமாகவும் இருந்தால் பெரும்பான்மையைப்பற்றி அத்துவிதமே சித்தாந்தமாய் விடப் போகிற தென வொரு சூட்சி கண்டு பிடித்தார். அந்தச் சூட்சியா தெனின் 5999 சுலோகம் பூர்பக்ஷமும் ஒரு சுலோகம சித்தாந்தமுமாம் என்பதாம். இங்ஙனம் 5999 சுலோகம்

பூர்வபக்ஷமென்றும் ஒரு சுலோகஞ் சித்தாந்தமென்றும் சொல்வதற்கும் ஒரு சுலோகம் வேறே வேண்டுமே. அது எங்கே யிருக்கிறது? அதை யெந்த மூலையில் வியாசர் ஒளித்து வைத்தாரோ? அவர் ஒளித்து வைத்தாலும் அரக்கோணத்தார் விடுகிறாரா? ஆறாயிரத்தில் ஒன்றை யரித்துத்தேடிக் கண்டு பிடித்த கோணத்தார்க்கு இஃதொன்றைக் கண்டு பிடிப்பதசாத்தியமா? கண்டு பிடித்திருந்தால் சொல்ல வேண்டுமே. பின்னிட்டுச் சொல்லலாமென வைத்திருக்கின்றனரோ? சோம. நாய்க்க ரைப்போல உமக்குச் சொல்லவேண்டிய அவசியமிலலை யென்கின்றனரோ? அவருடைய விஷ்டம், நமது பாக்கியம். அத்துவித விரோதமாகவும் திவிதசாதக மாகவுமான அருஞ் சுலோகத்தைக் கண்டு பிடித்துச் சொல்லிய கோணத்தார்க்குப் பூர்வபக்ஷ சித்தாந்தஞ் செய்த சுலோகமொன்றனைச் சொல்லாவிடில் அவரது கருணைக்குப் பயனேது மில்லாமறபோகும். நாம் விசாரித்த மட்டில் அத்துவித விரோதமும் துவிதசாதகமுமான சுலோகமில்லா திருப்பதோடு, கோணத்தார் கூறியபடி அத்துவிதத்தைப் பூர்வபக்ஷப்படுத்தித் துவைதத்தைச் சித்தாந்தப்படுத்திய சுலோகமு மொன்று கூட வில்லை யெனத் தெரிகிறது. அன்றி அந்தச் சூதசங்கிதையில் எங்கும் துவித சித்தாந்தத்தைப் பூர்வபக்ஷம் பண்ணி அனேக தருக்க நியாயங்களோடு கண்டித்து அத்துவிதமே சரியானதென்று கூறுகின்றது. அத்துடனே அத்துவிதத்தை அனுசரியாதவர்கள் பாவஞ்செய்தவர்களென்றும், மாயாமயக்கில் அகப்பட்டவர்களென்றும், பாஷாண்டிகளென்றும், குதர்க்கிகளென்றும் ததீசி, கௌதமர் சாபத்துக்குட்பட்டவர்களென்றும் இன்னும் பலவிதமாக அவர்களை யிகழ்ந்து கூறுகின்றது. இப்படிக் கெல்லாம் இருக்கச் சேணியன் வஸ்திரம் போன்ற தொரு அத்துவித விரோதமான சுலோகமுண்டென்று சொல்ல வருவதும் அப்படிப் பட்ட சுலோகம் சித்தாந்தமென்று வாயினாற்சொல்ல வருவதும் வெகு வியப்பாயி ருக்கின்றது! இனி அவர் காட்டுஞ் சுலோகத்தைப் பரீக்ஷித்துப் பார்ப்போம். கோணவாசியார் எப்படியோ மனமிரங்கி அத்துவித விரோதமும் துவிதசாதகமுமான அந்தச் சுலோகத்தை ஆன்மாக்க ளுய்யும்படி வாய்விட்டுச் சொல்லிவிட்டார். அது இது: -

*கேசிதத்வைதமாச்ரித்ய*
*பிடா'லப்ரதிமாநரா:*
*ருத்ரேணசாம்யமந்யேஷாம்*
*வதந்திப்ரவிமோஹிித:*

இதைச் சொல்லிவிட்டு இதில் தமது சித்தாந்தத்துக்கு ஏதோ வெகு பல மிருப்பதாய் மனப்பால் குடித்துக் களிப்பேறி அந்தக்களிப்பின் வெறியினால் தானென்பது மீறி அகங்கொண்டு, “அவ்வகம் பிரமவாதமாகிய அத்துவிதத்தை அது காலைவாரி அப்புறம் வீசிடச் சம்மதியாது" எனப் பேசித் தமது சுபாவ குணத்தை மறவாது காட்டினார். நாம் இச்சுலோக மெங்குளதெனத் தேடிப்பார்த்ததில் சமஸ்கிருத சூதசங்கிதை யெக்கிய வைபவகாண்டத்தில் சூதகீதையில் இரண்டாவ தத்தியாயத்தில் "ஆத்மநாசிருஷ்டி" என்னும் பிரகரணத்தில் 62 - வது சுலோகமாக விருக்கக் கண்டோம். ஆனால் தெலுங்கு எழுத்து அச்சுப்பிரதிக்கும் இவரெழுதிய தற்கும் சிறிது வித்தியாசமிருக்கிறது. இருந்தாலும் தாற்பரிய பேதமில்லை. இவரெழுதிக் காண்பித்த சுலோகம் எத்தனையோ கைமாறி வந்திருக்கலாம். அது

பற்றிப் பிழையாயிருந்தாலு மிருக்கக்கூடும். சிதம்பரத்தில் ப்ரம்ம வித்தியா பத்திராதிபர் கிரந்த எழுத்தில் அச்சிட்டிருக்கிறார். அது நம்மிடத்திலில்லை. அது எப்படியிருக்கிறதோ தெரியவில்லை. நாம் தெலுங்கு எழுத்துப் பிரதியைப்போலத் தமிழ் எழுத்தில் எழுதி அதனுரையைத் தெரிவிப்போம்.

**தமிழெழுத்துப் பிரகாரம்**.

*கேசிதத்வைதமாச்ரித்யபைடாலவ்ரதிகாநரா:*
*ஸாம்யம்ருத்ரேணஸர்வேஷாம்வாஞ்சந்திசவிமோஹிதா:*

**இதன்பொருள்.**

**பைடாலவ்ரதிகா:** (எலி பிடிக்குஞ் சமயத்தில் நிர்ச்சலமான ஸ்திதியை யுடைய) பூனையினுடைய விரதம் போன்ற விரதங்கொண்டவர்களாயும்
**விமோஹிதா:** = விசேஷமான அஞ்ஞானத்தை யுடையவர்களாயுமிராநின்ற
**கேசித்** = சில
**நரா** = மனிதர்கள்
**அத்வைதம்** = அத்வைதத்தை
**ஆச்ரித்ய** = ஆசரயித்து
**ருத்ரேண** = உருத்திரனோடு
**சர்வேஷாம்ச** = மற்றவர்களுக்கும்
**சாம்யம்** = சமானத்வத்தை
**வாஞ்சந்தி** = (சொல்ல) இச்சிக்கிறார்கள்.

இதில் அத்துவிதத்திற்கு விரோதமும் துவிதத்திற்குச் சாதகமுமிருக்கின்றன வாம். எலி பிடிக்கும் சமயத்தில் பூனையானது சலன மற்றிருப்பதுபோன்ற சீலத்தவர்களும், அஞ்ஞானத்தை யுடையவர்களுமான சில மனிதர்கள், அத்வைதத் தை ஆதரவாகக்கொண்டு, உருத்திரனுக்கும் இதர தேவதைகளுக்கும் சமானத்துவத் தைச்சொல்லுகிறார்கள் என்பது ஷை சுலோகத்தின் அபிப்பிராயம். இப்படிச் சொல்வதினால் பூனையைப் போன்ற கபடில்லாதவர்களும் அஞ்ஞானத்தை யொழித்தவர்களும் அத்வைதத்தை யாதரவாகக்கொண்டு, உருத்திரனோடு இதரதேவதைகளைச் சமானமாய்ச் சொல்லார்கள்; பின்னைப் பேதமே சொல்வார்கள் என்றாகின்றது. இதில் அத்துவிதிகளுக்கு என்னவிரோதம்? துவிதிகளுக்கு என்ன சாதகம்? அந்தந்தக் கிரந்தங்களை அந்தந்தப் பரம்பரையாரிடம் சம்பிரதாயமாய்க் கேட்கவேண்டும். தாமே விபரீதமாய்ப் பொருள் கொள்ளப்படாது. அப்படி ஒன்றிருக்கப் பிறிதொன்றாய் விபரீதப் பொருள் கொண்டு அத்துடனே அஞ்ஞானமும் கபடமும் சேர்ந்தொழுகும் அறிவிலிகளுடைய தப்பர்த்தத்தைக் கண்டித்தால் மற்ற வுண்மையான அத்துவிதிகளுக் காகவேண்டுவ தென்ன? உண்மையான அத்துவிதிகள் பாரமார்த்திகத்தில் அத்துவிதஞ் சொன்னால் பொய்ம்மையான அத்து விதிகளில் சிலர் வியாவகாரிகத்தில் சொல்லப்பார்க்கிறார்கள். பயிர் வளர்ந்து வரும் போது அதற்கு விரோதமான களைப்புற்களை யெப்படிப் பிடுங்கி யெறிகின்றார்களோ, அதுபோல வுண்மையான அத்துவித சித்தாந்தத்தைச் சொல்லும்போது இடையில்

வரும் போலி அத்துவிதத்தை நிராகரணஞ் செய்கின்றார்கள். இதில் உண்மையான அத்துவித மதத்திற்காவது உண்மையான அத்துவிதிகளுக்காவது வந்த கஷ்டமென்ன? அது பற்றியே அத்துவித நூல்கள் முமூட்சுகளுக்கே போதிக்கவேண்டுமெனவும் அமுமூட்சுகளுக்குப் போதிக்கப்படாதெனவும் கூறுகின்றன. களைப்புற்களைப் பிடுங்கப் பிடுங்கப் பயிருக்கு எப்படிப் பலமோ, அப்படியே போலி போலி அத்துவிதத்தைக் கண்டிக்கக் கண்டிக்க வுண்மையான அத்துவித சித்தாந்தத்திற்குப் பலமாகிறது. சூதசங்கிதை அத்துவித சித்தாந்தததிற்குப் பலந்தேடிக் கொண்டால் இந்தத்துவித சித்தாந்திக்கு வந்த லாபமென்ன? நஷ்டந் தானே. அதிலும் அத்துவிதத்திற்குப் பலம் ஏற ஏறத் துவிதத்திற்குப் பலங் குறைவுதானே.

“கல்லிலுஞ் செம்பிலுமோ இருப்பான் எங்கள் கண்ணுதலே” என்றும், "உளியிட்ட கல்லையும் ஒப்பிட்ட சாந்தையும் ஊத்தையறப் புளியிட்ட செம்பையும் போற்றுகிலேன்" என்றும், "எழுகோடி மந்திரம் என்ன கண்டாய்" என்றும், "ஆரூரருகிரு ஆரூரருகிருக்க அவ்வூர்த் திருநாளென் நூரூர்கடோறுமுழலுவீர்" என்றும் இன்னுமிவ்வாறு பலசெய்யுள்கள் பட்டினத்தடிகள் முதலாயினோர் கூறியிருக்கின்றனரன்றோ? அந்தச் செய்யுட்களி னுட்பொருள்களைத் தக்கார் பால் விசாரியாது தாமே விபரீதப் பொருள் கொண்டு, விக்கிரகத்தை வணங்குவதிற் பயனில்லை யென்றும், மந்திரங்களைச் செபிப்பதில் யாது பயனென்றும் சொல்லி அவற்றை யிகழ்ந்து வருபவர் சிலருளரென நாம் அறிவோம். இப்படிப்பட்டவர்க்கு அதனுண்மையை யுணர்ந்தோர் அவ்வுண்மைப் பொருளை யெடுத்துச் சொல்வதையும் அறிவோம். அது போல உருத்திரனோடு இதரதேவதைகளைச் சமமெனக் கூறும் அஞ்ஞான கபடிகளுக்கு அதன் பொருளை யெடுத்துச் சொல்லி, பாரமார்த்திகத்திலன்றி வியாவகாரிகத்தில் அத்துவிதஞ் சொல்லப்படாதெனச் சற்புத்தி கூறுகின்றது. நாம் சோம. நாயக்கரைக் கண்டித்து, ‘சங்கராசாரியார் அவதாரமகிமை' யெழுதும்போது, சூதசங்கிதையின்படி "பிரம விட்டுணுவினும் உருத்திரனே அதிகரென்றும், பரமான்மாவினது வியூகமாயிருப்பது பிரம விட்டுணு உருத்திரர்க்குக் சரியானாலும் அதிலுருத்திரரொருவரே சிரேஷ்டர்" என்றும் சொல்லியிருக்கின்றோம். பொன்னாலான கிரீடத்தையும் சிலம்பையும் ஒன்றென்று சொல்லவொண்ணாது. கிரீடத்தின் விலைக்கும் சிலம்பின் விலைக்கும் வித்தியாசமுண்டு; அவைகளைச் செய்வதற்குக் கொடுக்கும கூலியும் வித்தியாசந்தான். இங்ஙனமாக வொன்றெனப் பகர்தல் கூடுமா? ஒரு இரும்பை யெடுத்துக் கத்தியும் செய்கின்றோம்; அதே யிரும்பை யெடுத்துக் கடியாரத்துக்கு ஸ்பிரிங் (Spring) என்னும் கருவியுஞ் செய்கின்றோம். கத்தியும் ஸ்பிரிங்கு மொன்றெனச் சொல்லப்படுமா? அது போல உருத்திரனையும் இதரதேவதைகளையு மொன்றெனச் சொல்லக்கூடுமா? இப்படிச் சொல்லுகிறவர்கள் அஞ்ஞானிகள் தானே. ஆதலால் சூதசங்கிதை கூறியது யதார்த்தந் தான். இதனால் அத்து விதிகளுக்குப் பாதகம் யாது? இவரது துவித சித்தாந்தத்திற்குச் சாதகம் யாது? உருத்திரனுக்கும் இதரதேவதை கட்கும் பேதங் கூறுவது மாத்திரத்தானே அத்துவித விரோதமும் துவித சாதகமுமாமென்று கொண்டனராக்கும்! இதுவெகு விந்தை தான்! இவரது சித்தாந்தமும் வெகு சிரேஷ்டந்தான்! எவராவது எங்கேயாவது இன்ன பொருளுக்கும் இன்ன பொருளுக்கும் பேதமென்று சொல்வார்களானால் இவரது சித்தாந்தத்துக்குப் பலிதமாயிற்றென் றகமகிழ்வாராக்கும்! மனிதனுக்கு மிருகம் வேறு, மிருகத்துக்குப் பறவை

வேறு, பறவைக்கு மச்சம்வேறு, மச்சத்துக்கு ஊர்வது வேறு, ஊர்வதற்குத் தாபரம் வேறு, மனிதரிலும் மற்ற மிருகாதிகளிலும் ஒன்றுக்கொன்று வேறு எனவும் மற்றச் சடப்பொருள்களும் ஒன்றுக்கொன்று வேறு எனவும் காண்பாரானால் இவரது மனமும் உடலும் புளகாங்கிதப்பட்டு, தமது துவிதமத சித்தாந்தம் பலித்து ஜயித்து விட்டதென இறுமாப் படைவர்போலும்! அதிலும் சென்னை ஓக்ஸ் கம்பெனி, ரென்பனெட் கம்பெனிகளிலும் மற்றும் பல சில்லரைக்கடைகளிலும் நுழைந்து பார்க்கின் ஒன்றுக்கொன்று பேதமாகப் பல்லாயிரம் பொருள்க ளிருக்கின்றன. அவற்றை யிந்தக் கோணத்தார் பார்ப்பாரானால் தமது இரட்டைச் சித்தாந்தம் சித்தாத் தமாய் விட்டதென எப்படிப்பட்ட சந்தோஷத்தை யடைவாரோ வறியேம்! இவரது சூட்சுமபுத்திக் கிணையாக யாருடைய சூட்சும புத்தியைச் சொல்லுகிறது? இவருடைய சூட்சுமபுத்திக்கு இவரது சூட்சும புத்தியைத் தான் ஒப்புச் சொல்ல வேண்டும். அத்துவிதஞ் சொல்ல வேண்டுவ திந்தவிடத்தில், துவைதஞ் சொல்ல வேண்டுவதித்தவிடத்திலென வறியாது "எல்லசட்டிலக்க ஏகலக்க" எனக் குழப்பி விட்டு, தமக்கு அத்துவிதமத மேதோதெரிந்ததாகக் கருதி, அத்துவிதிகளோடு வாதஞ்செய்ய வருவது பரிகாசத்திற் கிடமாமென்க. ஒருவாதியினுடன் வாதஞ்செய்யப் புறப்பட்டால் அந்த வாதியினது முழுக்கொள்கையினையும் பூர்வபக்ஷ சித்தாந்தங்களையு முண்மையா யுணர்ந்து வாதஞ்செய்ய வெளி வரவேண்டும். குருடர் யானையினது ஓரவயவத்தை யறிந்து இதுதான் யானை யெனச் சொல்வது போல் வேதாந்தத்தில் ஓர் பாகத்தைப் பார்த்துவிட்டு இதுதான் அத்வைத சித்தாந்தமெனக்கொண்டு எதிரியோடு வாதஞ் செய்யவரின் இப்படித் தான் அவமானப்பட்டுப் போகநேரிடும். உருத்திரனோடு இதரதேவதைகளைச் சமமென்பவர் உண்மையான அத்துவிதிகளெனச் சூதசங்கிதை சொல்லவில்லை. அவர்களை அஞ்ஞானத்தினால் மோகிக்கப்பட்டுப் பூனையைப்போல் கபடுள்ளவர்கள் என்கிறது. அவரும் சிலரென்கிறது. இதனால் அஞ்ஞானமோகமும் பூனையைப் போன்ற கபடுமில்லாத மற்றப் பல அத்துவிதிகளுக்கு வந்த தாழ்வென்னை? கபட்டுத் தன்மையால் உண்மைப் பொருளைக் கிரகிக்காமல் பொய்ப்பொருளைளக் கிரகித்தால் அவர்களை நாமே கண்டிக்கின்றோம். ராஜாங்கத்தார், துஷ்டர்களைச் சிட்சிக்கச் சரியான சட்டஞ் செய்திருக்கின்றார்கள். யாரோ சில துஷ்டர்கள் தங்களுக்கனுகூலமாக ஷை சட்டத்திற்கு மாறுபாடாய் உரைசெய்து துன்மார்க்கமாய் நடந்தால் உண்மையான சட்டத்திற் கியாது குறைவு? நியாயாதிபதி அவர்களைத் தண்டிக்காமல் விடுவாரோ? அங்ஙனமே யுருத்திரர்க்கும் ஏனைய தேவர்க்கும் சாஸ்திர விரோதமாக அபேதஞ் சொல்வாரானால் அதன் நஷ்டத்தை யவர்கள் அடையாமற்போகார்கள். இதுவரையில் பேசி வந்ததில் சூதசங்கிதை ஆறாயிரஞ் சுலோகத்திலும் அத்துவிதிகளுக்கு விரோதமும் துவிதிகளுக்குச் சாதகமு மில்லை யென்று சொன்னோம். இனி அத்துவிதிகளுக்கே சாதகமென்றும் துவிதிகளுக்கு விரோதமேயென்றுங் காட்டுவாம். அரக்கோணத்தார் காட்டிய சுலோகத்தில் உருத்திரனுக்கும் இதரதேவதைகளுக்கும் சமத்துவங் கூறப்படாதெனச் சொல்லுகிற தேயன்றி, உருத்திரனுக்கும் துரிய சிவன் அல்லது பிரமத்துக்கும் ஏகத்துவங் கூறப்படாதெனச் சொல்ல வில்லையே. கிரீடம், சிலம்பு இவைகளுக்குச் சமத்துவங் கூறப்படாதேயன்றி, அவைகளுக்குக் காரணமான பொன்னுக்கும் கிரீடத்துக்குமாவது, பொன்னுக்கும் சிலம்புக்குமாவது ஒற்றுமை சொல்லத் தடையென்ன? கத்திக்கும் ஸ்பிரிங்குக்குஞ் சமத்துவஞ் சொல்லப்படாதேயன்றி, கத்திக்கும் இரும்புக்கும்,

ஸ்பிரிங்குக்கும் இரும்புக்கும் ஒற்றுமை சொல்ல யாதொரு தடையுமில்லையே. இவ்விரண்டு உவமானங்களைப்போல உருத்திரனுக்கும் விஷ்ணு முதலிய தேவர்க்கும் சமத்துவஞ் சொல்லப்படாதேயன்றி, உருத்திரனுக்கும் துரிய சிவன் அல்லது பிரமத்துக்கும், விஷ்ணு முதலிய தேவருக்கும் துரிய சிவன் அல்லது சொல்ல பிரமத்திற்கும் ஒற்றுமை சொல்ல ஆக்ஷேபமென்னை? காரியப் பொருளுக்குள் ஒன்றுக்கொன்று சமத்துவமாவது ஒற்றுமையாவது சொல்லப்படாதேயன்றி, காரியங்களுக்கும் காரணத்திற்கும் ஒற்றுமை சொல்லத் தடையென்ன? இவர் சாதாரண ஜனங்கள் மயங்கும்படி அஞ்ஞானத்தனமாயும் கபட்டுத்தனமாயும் காரியப்பொருளில் பேதஞ் சொல்லப்படாதென்கிற வொரு சுலோகத்தை அதிலும் கிரந்த சுலோகத்தை அதிலும் அதனுரையைக் காட்டாமல் சொல்லவந்தாரேயன்றி, காரியத்திற்குங் காரணத்திற்கும் அதாவது துரியசிவன் அல்லது பிரமத்திற்கும், பிரம விஷ்ணு உருத்திரர்களுக்கும் அபேதஞ்சொல்லும் நூற்றுக்கணக்கான சுலோகங்களைச் சொல்லவில்லையே. சொல்லாமல் மறைத்தனரே. அஞ்ஞானத்தினாலும் பூனையைப் போன்ற கபட்டுத்தனத்தினாலும் எப்படி உருத்திரனுக்கும் இதரதேவதைகளுக்கும் அத்துவிதஞ் சொல்லுகின்றார்களோ, அப்படியே துரியசிவனுக்கும் பிரம விஷ்ணு உருத்திரர்க்கும் ஒற்றுமை சொல்வதைப் பூனையைப்போன்ற கப்பட்டுத் தனத்தினாலும் அஞ்ஞானத்தனத்தினாலும் அரக்கோணத்தார் சொல்லாமல் மறைத் தார். அவர்களுக்கு இவர் குறைந்தவரல்லர். அவர்கள் காரியங்கள் பலவற்றிற்கும் சமத்துவஞ் சொல்லிக் குற்றப்பட்டார்கள்; இவர் காரிய காரணங்களுக்கு அபேதஞ் சொல்வதை மறைத்துக் குற்றப்பட்டார். இருவரும் குற்றவாளிகளாகலின் இருவரும் ஈசுவரனால் தண்டிக்கப்படுபவர்களே. “அவன் கெட்டான் குடியன் எனக்கு இரண்டு மொந்தை கள்ளுவாரு" என்பதற்கினமாய்த் தாம் யோக்கியர் போலவும் பிறர் அயோக்கியர் போலவும் காட்ட வந்து, பிறர் அயோக்கியதையைவிடத் தாம் அதிக அயோக்கியரெனக் காட்டிக்கொண்டார். ஆறாயிரஞ் சுலோகத்தில் இவரது சித்தாந்தத்துக்காக அரித்தெடுக்கப்பட்ட வொரு சுலோகமும் இவரை நட்டாற்றிற் கைவிட்டதோடு, அது இவரது சித்தாந்தத்துக்கே பங்கமுஞ்செய்து விட்டதென்க.

## சூதசங்கிதை சருவசாத்திர சங்கிரகமுரைத்த அத்தியாயம்.

*மூவர்விபூதிசொரூபமாகியவானவருமுனிவீர்காள்*
*தேவர்தொழும்அப்பரசிவத்தைத்தியானஞ்செய்வாரெப்போதும்*
*பாவநினைப்பார்க்கறவகற்றும்பளகிலாவம்மூர்த்திகளும்*
*தாலில்சிவசொரூபமேயென்றுநவில்வார்தக்கோரே.* (5)

*திரிமூர்த்திகளும்அவருடையதிகழும்அவதாரங்களும்நன்*
*கரியசிவத்தியானஞ்செய்தாலும்அவிரும்பரமான்ம*
*வரியதாயவிபாகத்தினுறச்சேர்ந்தவரேயல்லாமல்*
*விரியுஞ்சீவவிபாகத்திற்சேர்ந்தோரல்லர்மெய்த்தவத்தீர்.* (6)

## ஷை சருவவேதாந்த சங்கிரகமுரைத்த அத்தியாயம்.

*கிளர்தருசிவாதிநாமங்களேகீர்த்தனஞ்செயத்தக்கனவென்று*
*முளரளிவனசத்தவிசினான்மாயனுருத்திரதேவனென்றிவர்கள்*
*வளரொளிபரதத்துவவிபூதிகளேயாயிருந்தாலுமற்றிவருள்*
*தளர்விலாமதுகையுருத்திரப்பிரானேதலைமையோனென்றளங்கொள்மின்.* (3)

இந்தச் செய்யுள்களினால் பிரம விஷ்ணு உருத்திரர்களில் உருத்திரனே மேற்பட்டவரென்றும் இம்மூவரும் பரமான்மாவான துரிய சிவனுக்கு அபேதமென் றும் விளங்குகின்றன வென்பதை யறிந்து இவ்வாதத்தை யறவே விட்டொழியக் கடவர்.

இன்னும் சாட்சாத் பரமசிவனே அடியில் வருமாறு கூறுகின்றார்.

## ஈசுரகீதை யோக அத்தியாயம்.

*ஏதமுறநாரணனை யென்னிலயல்காணும்*
*பேதவிழியாளர் பிறவிப்பிணியறாரே*
*மாதவனையானென மனத்தினினைகிற்கும்*
*போதவிழியாளர்பரி பூரணமடைந்தார்.* (72)

*ஆகலிலருச்சிமினிவ்வா தியரியானாய்க்*
*காதலொடுகாண்மின்மயலாகியயல்காண்பார்*
*தீதூதருமாநரகு சேர்வுறுவர்தீதா*
*நீதியுறுநீசரிடையானும் வெளிநில்லேன்.* (73)

*நான்மறையந்தணர் நாய்வதைசெய்துஅதன்*
*ஊன்மிசைகின் றவரோதினர்மூடப்*
*பான்மையரும் மரியைப்பழியாதம்*
*மேன்மைசெய் பத்தரைவீடுறுவிப்பன்.* (74)

*மருவற்கென்னைமனம்வைத்தோன் மாலாமிவனென்வடிவென்றே*
*பரவிப்பணிவானென்றேசெம்பவளத் திருவாய் மலர்ந்தருளி*
*யரவிற்றுயிலச்சுதனாக மழுந்தத்தழுவ அவ்விடத்தே*
*கரவுற்றருளவதிசயமாய்க் கண்டார்மேனிகண்டிலரால்.* (75)

இச்செய்யுள்களினால் பரசிவனைவிட நாராயணனைப் பேதமாகக் காண்போர் பிறவிப்பிணியறாரென்றும் நரகத்திற் சேர்வாரென்றும் ஏற்படுகின்றமையால் பேதங் கூறிய அவசரமின்ன தெனவும் அபேதங் கூறிய அவசரமின்ன தெனவும் உணராது மயங்குதல் சாஸ்திர ஆராய்ச்சிக் குறைவென்பதாம்.

## ஷ சூதசங்கீதை ஷ பரமவிஞ்ஞானமுரைத்த அத்தியாயம்.

*உருத்திரபிராற்குஅரியைஅயனையொப்பதிகமென்றுரைப்போர்*
*பாற்றரிதாயகொடுநிரயத்துப்பற்பனாள்முழ்குவருண்மை.* (25)

இச்செய்யுளில் உருத்திரர்க்கு நாராயணன் பிரமன் இவர்களைச் சமமாகச் சொன்னாலும் அதிகமாகச் சொன்னாலும் நரகமுண்டாமென்று சொல்லுகிறார். ஷ ஈசுரகீதையில் பரமசிவனுக்கு நாராயணனை அயலாகச் சொல்லுவார்களேயானால் நரகமடைவார்களென்றும் பிறவிப்பிணி நீங்காரென்றும் சொல்லுகிறார். இதனா லென்ன விளங்குகின்றதென்னின் உருத்திரனுக்கு நாராயண்னாதியோரை வேறு படுத்தியே சொல்ல வேண்டுமென்றும் துரியசிவனுக்கு உருத்திரன் நாராயணனாதி யோரை வேறுபடுத்திச்சொல்லப்படாதென்றுமாம். இதுவரையி லெழுதிவந்த விஷயத்தினால் சிவனே பரத்துவமுள்ளாரென்று ஏற்படுவதோடு இதர தேவதை களுக்குப் பேதங்கூறும் இடம் இதுவென்றும் அபேதங்கூறு மிட மிதுவென்றும் ஏற்படுகின்றன.

நிற்க, வேதமுதலிய கலைகளில் நாராயணன் இந்திரன் முதலினோரைப் பரமென்று கூறியதுபோலச் சூதசங்கிதையில் அகம் பிராவாதங் கூறியதென்று சொல்லியதோடு, சூதசங்கிதை அறாயிரம் சுலோகத்தில் ஒருசுலோகம் துவிதசித்தா ந்தனெக்காட்டினாரன்றோ? இதில் 5999 சுலோக வரையில் அத்துவித பக்ஷமாகவும் ஒன்று மாத்திரம் துவித பக்ஷமாகவும் எப்படி அருமையா யிருக்கின்றதோ, அப்படியே வேதமுதலிய கலைகளில் மிகப்பெரும்பாலும் நாராயணன் முதலிய தேவதைகள் பரத்துவமெனவும் ஏகதேசமாய் ஏதோ ஒரு இடத்தில் சிவன் பரத்துவ மெனவும் அருமையாய்ச் சொல்லுகிறது போலும்! ஷ திருட்டாந்தத்தால் அவ்வொரு இடத்துக்கும் உலோபம் வந்து விட்டது. யாங்ஙனமெனின் ஷ ஒரு சுலோகமும் எப்படித் துவிதசித்தாந்தத்திற் கிடமில்லாது அத்துவித சாதகமாகவே முடிந்துவிட்டதோ, அப்படியே வேத முதலிய கலைகளி லேக்தேசமாகச் சிவனுக்குப் பரத்துவங்கூறியதும் பறந்து போய் முற்றும் நாராயணன் முதலினோரே பரமென்று கூறுவதாய் முடிந்துவிட்ட தென்பதாம். இவர் சிவனுக்குப் பரத்துவங்கூறுவது போலக் காட்டி விஷ்ணு முதலானார்க்குப் பரத்துவங்கூறாமற் கூறுவதால் இவர் உண்மையாகச் சைவரோ, அல்லது சைவவேடத்தவரோ எனச் சந்தேகமா யிருக்கின் றது.

பொன்னொன்றே சத்து எனச்சொன்னால் அதைவிட்டு அதைப் போலச் சத்து அல்லாததும் சத்துப்போலியுமான கிரீடம் சிலம்புகள் வேறுவேறுதான், ஒன்றல்ல என்று சொல்வது போன்று அத்துவிதிகள் பிரமசொரூபமான சிவனொன்று தான் சத்தெனச்சொன்னால் இத்துவிதசித்தாந்தி, சிவமென்பதை விட்டுவிட்டு, சிவனைப் போல் சத்தல்லாததும் சத்துப்போலியுமான உருத்திரனும் இதர தேவதைகளும் ஒன்றல்ல, வேறு வேறு என்று சொல்லி அதற்கிணங்கச் சுலோகத்தையுங் காண்பிக்கிறார். தும்பைவிட்டு வாலைப்பிடிப்பதுபோல் சிவனை, விட்டு உருத்திராதி யர்களைப் பிடிக்கிறார். உலகத்துக்குச் சக்கிரவர்த்தி யொருவன் என்றால், அது

உண்மையா அல்லவா வென்று பார்ப்பதை விட்டு, மந்திரிப்பிரதானிகள் வேறு வேறுதான், ஒருவரல்லவென்பது போலவும், சூரியனொருவன் தானென்றால், நக்ஷத்திரங்கள் ஒன்றல்ல, வேறு வேறுதான் என்பது போலவும் இந்தக்கோணவாசி பேசுகின்றார். இந்தக்கோணல்புக்தி ஒழிய எந்நாள் பிடிக்குமோ அறியேம். அத்துவிதிகள் காரணத்திலும் சத்திலும் ஒன்றெனச் சொன்னால் இவர் காரியத்திலும் சத்துப்போலியிலும் பலவென்கிறார். அத்துவிதிகள் காரியத்தில் ஒன்றெனச் சொல்ல வில்லையே; பலவெனத் தானே சொல்லுகின்றார்கள், அத்துவிதிகளும் பிரம விஷ்ணு உருத்திரர்களை வேறு வேறென்று சொல்ல, இவரும் அவ்வாறு சொல்வதில் அத்துவிதிகளை மறுத்ததாமோ?

"சூகசங்கிதை மந்தாதிகாரிகள் பொருட்டுப் பூர்வபக்ஷமாகப் பிரவர்த்தித்து முடிவில், சிவசித்தாந்தத்தை நிறுத்தியதுணர்க" எனத், தீட்டியதை யோசிக்கின், இவர் முழுப்பூசினிக்காயைச் சோற்றில் மறைக்கும் சமர்த்தர் எனச்சொல்லலாம். இவர் படித்த புத்திமான்கள் எவருஞ் சதா தூங்குகிறார்களென்று நினைத்தாரோ? அல்லது இவர் செய்யுஞ் சாலத்தால் மயங்கிப்போவ ரென நினைத்தாரோ? இன்னும் யாது கருதி யிங்ஙனம் வரைந்தனரோ? இவர் சொல்லுகிறபடி பார்த்தால் சூதசங்கிதை 5999 சுலோகம் மந்தாதிகாரியின் பொருட்டுப் பூர்வபட்சமாகவும் ஒருசுலோகம் தீவிரதர அதிகாரியின் பொருட்டுச் சித்தாந்தமாகவும் சொல்லியிருக்கிறதாய்த் தெரிகிறது. இவ்வாறு அந்தச்சூதசங்கிதை சொலலுகிறதா? சொல்லுகிறதானா லெந்த விடத்திற் சொல்லுகிறது? எத்தனை முறை புரட்டிப்புரட்டிப் பார்த்தாலும் அது அகப்பட வில்லையே. வியாசமகாமுனிவர் இவர்க்காகச் சித்தாந்த சுலோகமொன்றெழுதி வைத்து, அதை யிவரிடத்தில் நேரே வந்து கொடுத்துப்போயினரோ? அவ்வாறில்லா விடில் வேறே என்ன விதமாய் அந்தச்சுலோகம் இவரிடத்தில் அகப்பட்டதோ தெரியவில்லை. 5999 சுலோகம் பூர்வபக்ஷமெனவும், ஒருசுலோகஞ் சித்தாந்த மெனவும் சூதசங்கிதையி லில்லாவிட்டாலும் வேறு புராணாதிகளிலாவது வேதாதி களிலாவது எழுதியிருக்கின்றதா? ஒருவேளை இவ்வாறு சொப்பனங்கண்டாரோ? அந்தச்சொப்பனத்தில் வியாசமகாமுனிவராவது துரியசிவமூர்த்தியாவது வந்து அனுக்கிரகஞ் செய்து விட்டுப் போயினரோ யாதோ, அது அரக்கோணத்தார்க்குத்தான் தெரியும்.. அந்தச் சொப்பனக்காட்சியை மெய்யென்று நம்பி எதிர்வாதிகளிடத்தில் சொல்லுகின்றார் போலும்! வியாசமகாமுனிவராவது துரிய சிவனாவது சுருதி முதலிய கலைகளுக்குமாறாக. இப்படிச்சொல்வார்களா? ஒருபோதும் சொல்ல மாட்டார்கள். "சூதசங்கிதை முற்றும் அத்துவிதமா யிருக்கிறதே, அதிலும் பூர்வபக்ஷ சித்தாந்தஞ்செய்து துவித வாசனையைத் தலையெடுக்கவொட்டாமல் தும்சஞ் செய்கின்றதே, அது புராணத்திலு மொன்றாயிருக்கின்றதே, அதிலும் சிவபுராணத்தி லும் ஒன்றாயிருப்பதோடு மகாபுராணத்திலு மொன்றாயிருக்கின்றதே, அதிலுஞ் சிவோத்கிருஷ்டமாகவு மிருக்கின்றதே, அதை யெப்படி அப்பிரமாணமாகச் சொல்லுகின்றது? அப்பிரமாண மெனச் சொல்லி விட்டால் நம்மைத் துலுக்கன், கிறிஸ்தவன், பௌத்தன், சமணன் முதலியவரைப்போல் வேத பாஹியராகவும் அநாரியராகவும் சொல்லித் தள்ளிவிடுவார்களே, இதற்கென்னசெய்கிற" தென அதுவே சிந்தையாய் அன்ன ஆகாரமின்றிப் படுத்து நித்திரை செய்திருக்கலாம் அன்ன ஆகாரமின்மையால் பித்தம் அதிகரித்துமிருக்கலாம்; அப்போது ஏதேதோ விபரீத கனவுங் கண்டிருக்கலாம். அந்தக் கனவில் இவருடைய மனந்தடித்துச்

சொப்பனவுலகாகி அதிலேதேதோ வுருக்கள் தோன்றி இவரது எண்ணத்துக்கொத்தபடி ஏதேதோ சொன்னதாயும் கண்டு மருண்டு மிருக்கலாம். அந்த வுருக்களை வியாசராகவும் துரியசிவமூர்த்தியாகவும் பிரமித்து ஏமாந்து போயுமிருக்கலாம். அதை வைத்துக்கொண்டுதான் இவ்வாறு தைரியத்தோடு எழுதினாராக்கும்! என் செய்வார் பாவம்! இவர் தோற்றப் பொருளை யதார்த்தமாகக் கொள்ளும் புத்திசாலி யானதால் அதை நம்பிவிட்டார் போலும். இவரதபின்ன நண்பரான சோம. நாய்க்கர் சொப்பனத்தைச் சத்தியமென்பவராகலின் அவர்வழிச் செல்லு மிவரும் தாம் கண்ட சொப்பனத்தை யுண்மையென நம்பி யேமாந்து போனார் போலும்!

இவர் சூதசங்கிதையை அப்பிரமாணமென்று சொல்விவிடுவார்; சொல்லி விடுவாரேல் இலட்சம் கிரந்த சங்கியையுள்ள மகா ஸ்காந்தமே பொய்யாய்ப்போம்; அது பொய்யாய்ப்போனால் மற்றப்பதினேழு புராணங்களும் அவற்றை யாதாரமாகக் கொண்டு உஜ்ஜீவிக்கும் உபபுராணங்களும் இதிகாசங்களும் ஆகமங்களும் அப்பிர மாணமாம். இவைகளெல்லாம் போனாலும் வேதமாவது பிரமாணமாமேயெனின் அதைப்பசு நூலெனவும் உலக நூலெனவும் விபசார நூலெனவும் மோக நூலெனவும் இவ்வாறு பல பலவாய் இகழு நீரரான சோம. நாய்க்கரது அபின்னதோழராகலின் அவர் கொள்கைப்படி வேதமும் அப்பிரமாணமாம். வேதத்தின் பொருளே ஸ்மிருதியாகலின் அதுவும் அப்பிரமாணமாம். இவைகளெல்லாம் அப்பிரமாண மாமாயின் இவர் ஆரியரென்று வெளிப்படுவதே கஷ்டசாத்தியம். அது பற்றிச் சூதசங்கிதை அப்பிரமாண நூலென்றுசொல்ல அஞ்சுகின்றார் போலும். சூதசங்கிதை இவருக்கு எமனாகவுமிருக்கிறது. அதைத்தள்ளவும் முடியவில்லை. என் செய்வார் பாபம்! யோசித்துயோசித்துப்பார்த்தார்; கடன் வாங்கியும்பார்த்தார்; முடியவில்லை. கடைசியில் ஏதேனு மொன்று சொல்லித் தொலைக்கவேண்டுமே; அதுபற்றி 5999 சுலோகம் பூர்வ பக்ஷம் என்றும், ஒரு சுலோகஞ் சித்தாந்த மென்றுஞ் சொல்லித் தொலைத்தார். அந்த வொரு சுலோகமும் இவரைக் கிட்ட நெருங்கவொட்டாமல் துரத்திவிட்டது, அதனுடனே அத்துவிதபக்ஷத்திற்கு அனுகூலமாயும் நின்றுவிட்டது. இனிச் செய்வதென்ன விருக்கின்றது? ஆதாரமின்றி அந்தரத்தி னிற்கவேண்டியதே யாம்.

ஷை சூதசங்கிதையானது சொல்வதெல்லாம் அத்துவிதந்தான். துவிதத்தை அனேகவித நியாயங்களால் பூர்வ பக்ஷஞ் செய்து தும்சஞ் செய்கின்றது. அத்துடனே துவிதத்தைப் பன்னிப்பன்னிப் பேசி அதோகதியாக்கியும் விடுகின்றது. துவிதமானது சூதசங்கிதையின் முன் சூரியனெதிர் இருள் போலத்தான். நிற்க; சூதசங்கிதையின் பிற்பாகத்திலுள்ள பிரம கீதையின் தசோபநிஷத்துகளைப் பிரம தேவன் தேவர்களுக் குபதேசிக்கும்போது:

### பிரமகீதை சாந்தோக்கிய வுபநிடதம்.

*ஆதரமுடையீர்கேண்மி னருமறைப்பொருளீதென்றே*
*ஓதலாலுவமையில்லாப் பொருளிதிலையமுண்டேல்*
*தீதறமழுவைக்காய்ச்சிச் செங்கையினிடுவேனென்றான்*
*நாதனாயுலகமெல்லாம் படைக்குநான்முகனாயுள்ளோன்.* (96)

*பத்தராயுள்ளீர்கேண்மின்பகர்ந்தவேதத்தினர்த்தம்*
*இத்தகைத்தாகும்வேறொன்றில்லையாமிதனிலுங்கள்*
*சித்தம்நம்புதலுண்டாகச்செப்பினோமாணைமூன்றோ*
*டத்தனார்பாதந்தொட்டேயென்றனனலரின்மேலோன்.* (97)

*அன்பராயுள்ளீர்கேண்மினறிவித்தபொருள்மெய்யன்றேல்*
*என் சிரமிற்றுவீழ்வதென்றனனிதுவுமன்றி*
*யின்பமேயளிக்குமீசனிவ்விடந்தன்னின்வந்து*
*தன்பெருங்கருணையாலுந்தளர்வறப்பண்ணுகின்றான்.* (98)

வேதார்த்தம் இதுதானென்றும் சந்தேகமுண்டானால் மழுவைக் காய்ச்சிச் செங்கையி லிடுவே. னென்றும் பரமசிவன் பாதததைத் தொட்டு மும்முறை யாணை செய்து, அதன் பேரில் "நான் சொன்ன பொருள் உண்மையல்லாமற்போமாயின் என் சிரமிற்று வீழக்கடவது" என்று முரைத்தார். உடனே பரமசிவனும் எழுந்தருளிவந்து,

*நானேமுழுதுமெனையொழியநாடிற்சிறிதும்வேறில்லை*
*யானபொருளையருமறைதானறையும்படியானதனாலும்*
*யானுமிசைத்தபடியாலுமிதுவேதிடமாயுளபொருடான்*
*ஊனமின்றிநான்முகனுமுரைத்ததுங்கட்குண்மையிதே.* (124)

என்று கூறினார். மற்ற விஷயங்களை யெல்லாம் அந்நூலிற் காண்க. இதனாலே யெல்லாம் சூதசங்கிதை அத்துவித சித்தாந்த மென்றும் துவித சித்தாந்த மன்றென்றும் துவித வாசனையே அதற்காகாதென்றும் நிலைப்பட்டமை காண்க. இங்ஙனமாக அது துவிதசித்தாந்தமெனச் சொன்னது என்னமோசம்! ஆ! ஆ!! இப்படிப்பட்ட இவர் வேறு என்ன மோசந்தான் செய்யத்துணியார்? இப்படிப்பட்ட மோசக்காரரிடத்திற் பேசுவது கொடிது! கொடிது!! மிகக்கொடிது!!! அரக்கோணத்தார் க்கு ஒருவகையாய்த் தீர்மான மிருக்கலாம். எங்கெங்கே அத்துவிதமாயிருக்கின் றதோ அவைகளெல்லாம் பூர்வபக்ஷம்; வேதாதி கலைகளெல்லாம் அத்துவிதமா யிருப்பதால் அவைகளெல்லாம் பூர்வபக்ஷமாம். அப்படியானால் துவைதத்திற் கிடமெங்கே யென்னில் ஷை சுலோகம் போன்ற சுலோகம் ஒன்றுண்டாயிருக்கு மானால் அதுதான் துவைத சித்தாந்தத்திற்குப் பலம். இவர்க்குக்கபட்டுத்தனமும் கள்ளத்தனமும் இருக்கிறவரையில் இவரது சித்தாந்தத்திற்குச் சற்றுப் பிழைப்பு ண்டாம்.

## சிவசித்தாந்தத்தை நிறுத்த அத்துவிதிகளாலேதான் ஆகுமென்பது.

"முடிவில் சிவசித்தாந்தத்தை நிறுத்தியதுணர்க" என வொரு பசப்புப் பசப்புகிறார். இந்தப் பசப்பு குல்லாப் போடும் பசப்புத் தான். சிவசித்தாந்தம் நிறுத்தப்பட்டால் இவருக்கு வந்த லாபமென்ன? இரட்டைச் சித்தாந்தம் பலித்தால் தானே இவரது சித்தாந்தத்துக்குப் பலிதமுண்டாம். சூதசங்கிதையானது சிவனொ ன்றே அழியாத சத்திய நித்திய பரிபூரணப் பொருளென்றும் இதர பொருள்க ளெல்லாம்

மித்தைப்பொருளென்றும் சாதித்தமையாலும் அதைப் பரமசிவனும் சாதித்தமையாலும் அத்துவித சிவசித்தாந்தம் நிறுத்தப்பட்டமை காண்க. சக்கிரவர்த்தி யெங்கும் அரசாக்ஷி செய்வது போலச் சிவனெங்கும் பரிபூரணரென அத்துவிதம் சித்தாந்தம் செய்வதால் சிவசித்தாந்தத்தை நிறுத்த அத்துவிதிகளுக்கே யோக்கியதை. துவிதிகளோ அங்ஙனம் பரிபூரணஞ் சொல்லமுடியாமல் இதர பொருள்களுக்கும் இடங்கொடுத்து ஏகதேசப்பொருளாய்ச் சொல்லிச் சிவனைச் சிற்றரசனைப்போலச் சொல்ல நேருகின் றமையால் சிவசித்தாந்தத்தை நிறுத்த இந்தத் துவிதசித்தாந்திகளா லாகாது. ஒரு வேளை நிறுத்தினாலும் சிவனை யேகதேச கண்டப்பொருளாய் நிறுத்தினால் நிறுத்தக் கூடுமே யல்லாமல் அத்துவிதி களைப்போல் பரிபூரணமாய்ச் சிவசித்தாந்தத்தை நிறுத்த அவர்களால் ஆகாது! ஆகாது!! இப்படிப்பட்ட துவிதிகள் அத்துவிதிகளைப் பார்த்துச் சிவசித்தாந்தம் நிறுத்து கின்றோமென்று சொல்வது புலியைப் பார்த்துப் பூனை சூடிக் கொள்வது போலாம். சிவனுக்கும் பூரணத்துவஞ் சொல்லவேண்டும்; பலகோடி ஜீவான்மாக்களுக்கும் தனித்தனிப் பூரணத்துவஞ் சொல்லவேண்டும்; கூடப் பாசத்துக்கும் பூரணத்துவஞ் சொல்ல வேண்டும். இது எப்படியாகும்? கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசையா? இப்படிப்பட்ட போலிச் சித்தாந்தத்தைப் போலிச் சித்தாந்தமாய்க் கொள்ளாமல் அதை யொருசித்தாந்தமாய்க் கொண்டு, தீட்டினமரத்திலேயே கூர்பார்ப்பதுபோல அத்துவிதிக ளிடத்திலேயே வாதஞ்செய்ய வருவது அடாது! அடாது!! இப்படிப்பட்ட அவமானக் கடித மெழுதிப் பத்திரிகையை நிரப்புவதைவிட எந்த ஜோலிக்கும் வாராமல் சோம. நாய்க்கரைப்போல பயந்து நடுங்கி யொடுங்கி ஒதுங்கி யொளிந்து பதுங்கித் தலைகாட்டாது தந்திரமாய் முடிவுரை கூறி மௌனஞ் சாதிப்பது அறிஞாக் கழகாமென்க. இனி அரக்கோணத்தார் அத்துவிதிகளின் முன்னர், சிவசித்தாந்தத்தை நிறுத்துவேமெனக்கூறுவதை மறந்தொழிவாராக.

## இவர் சூதகங்கிதையை யிகழ்கின்றரென்பது.

"தாயுமானவரோ சூதசங்கிதையைத் தூஷிக்கமாட்டார்" எனச் சொல்லுகிறார். இதை நோக்கினால் தாயுமானவர் மனிதரை மாடென்று சொல்லமாட்டார் என்று சொல்வது போலிருக்கின்றது. ஆனால் அப்படிச் சொல்லுகிறவரு முளரோவெனின், உளர்; அவர் யாரென்னின், இவரேயாம். தாயுமானவர் சூதசங்கிதைக்கு ஒரு அணுக்கூட மாறாகப் பேசினாரில்லை. இவரோ அதற்கு முற்றும் மாறாகப் பேசு கின்றார். சூகசங்கிதை முற்றும் அத்துவிதம். இவரோடு வாதம் செய்யும் நாம் சூதசங்கிதையைப் பிரமாணமாகக் கொண்டே பேசுகின்றோம். அதில் சிவனொன்றே சத்துப் பொருளென்றால் அதை யிவர் மறுக்கின்றார். அதில் உலகு அசத்தென்றால் இவர் சத்தென்கிறார். அதில் வேதமே மோக்ஷ நூவென்றால் இவர். அது பசுநூல். உலக நூல் மயக்க நூல் விபசார நூலென்னுங் கக்ஷியிற் சேர்ந்தவரா யிருக்கின்றார். இவ்வாறு இன்னும் அனேகவிதமாய்ச் சூதசங்கிதைக்கு மாறாய்ப் பேசுகின்றவரா கலின் அதற் கிவர் விரோதி; அதிலும் முழுவிரோதி. இப்படிப்பட்ட முழுவிரோதி, வெகு அவிரோதி போல் பசப்புகிறார். இப்படிப்பட்ட முழுவிரோதி “அவர் திருவடி யை யாச்சிரயிக்கும் யாமும் சூதசங்கிதையைத் தூஷிக்கமாட்டோம்" என

நாணமின்றிப் பேசுவ தென்ன பேதைமை! இப்படிப்பட்ட பொய்யர் காக்கை வெள்ளை நிறமெனச் சொல்ல அஞ்சுவரோ!

இந்த ஆபாசத்தின் பின் "வேதத்தினாற் பெறப்பட்டமை மாத்திரத்தானே நாராயணன் முதலினோர் பரமாகாதவாறுபோலச் இதையிற் பெறப்பட்ட மாத்திரத்தானே அகம் பிரமவாதம் சித்தாந்தமாகமாட்டாது" என ஓர் ஆபாசம் வரைந்தார். வேதத்திற் சிவனே பரமென்று கூற, அதை அரதத்தாசாரியர் அப்பய தீக்ஷிதர் முதலியவர், நியாயத்தால் ஸ்தாபித்திருக்க, பெயர்த்தும் நாராயணன் முதலினோர் பரம்போல் கூறியது இவர் மருளறிவின் பயனும் வேத தூஷணையின் வினையுமாம். இவர் கூறுவதுபோன்று நாராயணன் முதலினோர் பரமென்று வைத்துக்கொண்டாலும் சூதசங்கிதையில் துவித ஸ்தாபனை கூறுகின்றதா? துவைதத்தைத் தூரீகரணஞ்செய்து அத்துவித ஸ்தாபன மன்றோ செய்கின்றது? இது ஒன்றுதானா? மற்றப் புராணேதிகாசங்களும் சுருதி ஸ்மிருதிகளும் அத்துவிதந் தானே கூறுகின்றன. அவை மாத்திரமா? தேவாரந் திருவாசகம் திருமந்திரம் சிவஞானபோத முதலியவைகளும் அத்துவித சித்தாந்தந்தானே பேசுகின்றன. புராணாதிகளில் எந்த வீடத்திலாவது சிவனென்று வந்து விட்டால் அது இவரது துவிதசித்தாந்தமெனச் சொல்லப் பார்க்கின்றார். அவ்வாறு எந்தப் புராணாதிகளும் துவிதசித்தாந்தத்தைச் சொல்லவில்லை; அத்துவிதமே சொல்லுகின்றன. அது மாத்திரமா? துவித சித்தாந்தம் தலையெடுக்க வொட்டாமல் தூரீகரணமுஞ் செய்கின்றன.

## அத்துவிதிகள் பிரமம் அல்லது சிவனையே பொருளாக மதித்தவர்களென்பது.

"இனிப் பௌத்தன் புத்தியைப் பொருளாகக் கொண்டவன்" என்கிறார். உண்மைதான். இது யாவரும் அறிந்தசங்கதிதான். இதன் பேரில் "சங்கரமதத்தவர் ஆன்மா அல்லது பசுவைப் பொருளாக மதித்தவர்கள்" என்று சொல்லித் தம் மருட்சியைக் காண்பிக்கின்றார். சங்கரமதத்தவர் என்றதனால் அத்துவிதிக ளென்றா கின்றது. இவர் அவரவர் மதசித்தாந்தங்களை அறிந்து சொல்வதிற் புலி, நமது கவர்ன்மெண்டார் இந்துக்களுடைய மதசித்தாந்தங்களைப்பற்றி யெழுதும்படி அடிக்கடிப் பலரை நியமிப்பதுண்டு. அப்படி நியமிக்கும் போது இந்த அரக்கோண வாசியை நியமிப்பது உசிதம். இவரைப் போல மதசித்தாந்தங்களை யறிந்தவர் உலகி லெவருமிரார். அதிலும் அறிந்தபடி யொளியாமலும் பாரபக்ஷமில்லாமலும் சொல்லத்தக்க சத்தியவாதி திரிவித உலகத்திலும் ஒருவரிருப்பாரெனச் சொல்ல வொண்ணாது. அமெரிக்கா கண்டத்துச் சிக்காகோவுக்கு இந்துமத சித்தாந்தங்களை விளக்கிக் காட்ட வொருவர் வேண்டும். இந்தக் கோணவாசியை அனுப்பினால் கறந்தது கறந்தபடி சொல்லிவிடுவார். அதிலு மொளியாமல் சொல்லிவிடுவார். தவிர அவ்விடத்தில் அத்துவிதசாஸ்திரம் படித்தவர் பலரிருக்கின்றார்கள். அவர்களும் இவரைச் சபாஸ் என்று மெச்சி விலையுயர்ந்த நல்ல பரிசளிப்பதோடு நல்ல யோக்கியதா பத்திரமும் அளிப்பார்கள். அத்துடனே இவருடைய மதசித்தாந்தத் தையும் ஒளியாம லுள்ளதுள்ளபிரகாரம் சொல்லிவிடுவார். இவர் மகா சத்தியவாதி.

இவர் அன்று பிறந்திருந்தால் திருவள்ளுவ நாயனார் திருக்குறளில் இப்படியா வாய்மை யதிகாரஞ் சொல்லியிருப்பார்? இப்படிப்பட்டவர் அன்று இலக்கியமாய் அகப்படாமையால் அப்போது நேர்ந்தபடி யெழுதினார். ஜனங்களுக்கெல்லாம் நல்லகாலமில்லாமையினால் இக்கோணத்தார் அன்று பிறக்காமற் போனார். இனி யாது செய்வது? மிஞ்சிப் போய் விட்டது.

நிற்க, இவர் ஆன்மாவைப் பசு என்றதனால் ஆன்மா என்றாலும் பசு என்றாலும் ஒரு பொருளென்று கொள்ளுகிறதாய்த் தெரிகிறது. பசுவுக்குப் பெயர் ஜீவனென்றும் நூல்களிற் சொல்லப் படுகின்றமையால் ஆன்மாவென்றாலும் பசுவென்றாலும் ஜீவனென்றாலும் ஒரு பொருளையே குறிப்பதாய் ஏற்படுகின்றது. இப்படிப்பட்ட பொருளைத் தான் அத்துவிதிகள் பொருளாகக் கொள்ளுகின்றனராம். ஆகவே இதற்குமேல் பொருளேதும் சொல்லுகின்றன ரில்லையென்பது குறிப்பாய்க் காட்டுகின்றது. இப்படிச் சொல்வது முற்றும் அறியாமை! இவ்வாறு சொல்லும் அத்துவிதிகளையாவது அத்துவித நூல்களை இதுவரையில் கண்டோமில்லை; கேட்டோ மில்லை. இவர் தமது மத இரட்டைச் சித்தாந்தத்துக்கு மோசம் வந்து விட்டதே; எந்தக்கேள்விக்கும் பதில் சொல்ல வழியின்றி முடிவுரை கூறி யொளித்துக் கொண்டிருக்க நேரிட்டுவிட்டதே; இனி யாது செய்வதென அதுவே சிந்தையாயிருப்பாராதலால் அது முதிர்ந்து பித்தம் தலைக்கேறி யிருக்கும். இப்படிப்பட்டவருடைய நித்திரையில் சொப்பனமுங் கூடிவிட்டால் புத்தி கலக்கத்திற்குச் சொல்ல வேண்டுவ தில்லை. மற்றப்பேர் சொப்பனத்துக்கும், இவர் சொப்பனத்துக்கும் வெகுவித்தியாசமுண்டு, அந்தச் சொப்பனத்தில் ஜீவனை அல்லது பசுவை அத்துவிதிகள் பொருளாகக் கொள்ளுகின்றன ரெனப் படித்திருப்பார்; அல்லது கேட்டிருப்பார்; அல்லது உமாபதி சிவன் முதலானோர் வந்து உபதேசித்திருப்பார்கள். அதைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு, அத்துவிதிகளை வெல்வதற்குத் தக்க பிர மாணம் அகப்பட்டதென் றகமகிழ்ந்து அதைப்பத்திரமாய்ச் சொப்பனத்திலேயே யிரும்புப் பெட்டியில் பூட்டி வைத்துக்கொண்டிருந்து, ஜாக்கிரத்தில் வந்து அதை எடுத்துப் பார்த்து இனி ஒற்றைச்சித்தாந்தம் தோற்றது, இரட்டைச் சித்தாந்தம் வென்றது எனச்செருக்கி, அங்ஙனம் எழுதிவிட்டார் போலும்! அங்ஙனமன்றி இச்சாக்கிரத்திலுள்ள அத்துவித நூலகளி லொன்றிலேனும் ஜீவனை அல்லது பசு வைப் பொருளாகக் கொள்ளவில்லையென்பது துணிவு. இனத யாவரும் அறிவர். கோணத்தார் சொல்லுவதுபோலச் சொப்பனத்திற் கூட நமக்கு அப்படிப்பட்ட நூல் கிடைக்கவில்லை. "மனம்போ லிருக்கும் மாங்கலியம்" என்பது போல இவரது மனோ விஷ்டம்போல் கிடைத்தனவாக்கும். சொப்பன நூற்பிரமாணத்தைக் கொண்டு தான் ஜாக்கிராவஸ்தையில் வந்து அத்துவிதிகள் ஜீவனை அல்லது பசுவைப் பொருளாகக் கொள்ளுகின்றனர் என வாதஞ் செய்ய வருகின்றார் போலும்! இவருக்கு எவராவது சாக்கிரத்தில் கடன் கொடுத்திருந்து, அப்பணத்தைச் சொப்பனத் தில் திருப்பிக் கொடுத்துவிட்டதாகக் காண்பாரானால், அவர் சாக்கிரத்தில் வந்து பணங் கொடுத்துவிட்டேனென்பார்; கொடுத்து விட்டதாகச் சத்தியமுஞ் செய்வார்; கோர்ட்டிற்சென்று உறுதி மொழியுங் கூறுவார்; நெய்யிலுங் கை தோய்ப்பார். அரக்கோணத்தார்பேரில் குற்றமில்லை. அவர் பொய்யரல்லர், சொப்பனம் மெய்யென்பது அவர் முன்னோராலெழுதப்பட்டிருக்கும் மதப்புத்தகத்தின் நம்பிக்கை. அந்த நம்பிக்கையின் பேரில் தான் அவருக்குச் சொப்பனம் மெய்யென்று கொள்ளும்

நம்பிக்கை யுண்டாயிற்று. ஆதலால் அவர்க்கு யாருங் கடன் கொடுக்கப்படாது. கொடுத்தாலும் பாதகமில்லை. அந்தக்கடனை அவர் சொப்பனத்தில் திருப்பிக் கொடுத்துவிட்டதாகக் காணக்கூடாது. கண்டாலோ கொடுத்த பண மெள்ளுதான். ஆதலால் அரக்கோண வீரபத்திர மூர்த்திக்காவது அவரதபின்னதோழரான சோம. நாய்க்கருக்காவது கடன் கொடுக்கும் விஷயத்தில் சற்று யோசிக்கவேண்டும். மிஞ்சிக் கொடுக்கிறதாயிருந்தால் "நான் சொப்பனத்தில் திரும்பிப் பணங் கொடுத்து விட்டதாகக் காணுவேனாயின் சொப்பனம் பொய்யாதலால் அது திருப்பிக்கொடுத்து விட்டதாய் ஆகமாட்டாது" என இவ்வாறு ஸ்டாம்புக்காகிதத்தில் எழுதி ரிஜிஸ்தரும் பண்ணிக் கொடுக்கச்சொல்லி வாங்கிக்கொள்ள வேண்டும். இல்லாவிடில் கொடுத்த பணத்தை வாங்குவதற்குச் சொப்பனம் பொய்யெனக் கோர்ட்டில் வக்கீலை வைத்து வாதாடவேண்டும். அதற்கு அனேக தத்துவ சாஸ்திரிகளையும் டாக்டர்களையுங் கொண்டு வந்து சாக்ஷி சொல்விக்க வேண்டும். இவைகளுக்கெல்லாம் விசேஷமாய்ப் பணம் பிடிக்கும். இதன் செலவு கொடுத்த பணத்திற்கு அதிக மானாலு மாகும் இதை விட முதற்போனாலும் போகட்டுமென்று விட்டுவிட வேண்டியதாய் நேரிடும். ஆதலால் இவ்வளவையும் யோசித்தே கடன் கொடுக்க வேண்டும்.

நிற்க, அத்துவிதிகள் ஜீவனைப் பொருளாகக் கொள்ளுகின்றார்க ளென்பதற்குப் பிரமாணமென்ன? எந்த அத்துவித நூலில் ஜீவன் தான் பொருளென்றும் அதற்குமேல் பொருளில்லையென்றுங் கூறுகின்றன?

## சூதசங்கிதை பரமவிஞ்ஞானமுரைத்த அத்தியாயம்.

*சச்சிதானந்தரூபனாயும்தாமரையோன்செய்து*
*வைச்சபல்லுலகங்கட்கும்வயங்குறுகருத்தாவாயும்*
*நச்சியபசுபாசங்கடமக்குவேறாயுநாளும்*
*உச்சமேயடைந்துநிற்போன்பரசிவனொருவனோர்மின்.* (2)

*வான்முதற்பூதங்களைந்தும்மற்றவற்றின்குணமைந்தும்*
*ஞானவிந்திரியமைந்தும்நவில்கன்மேந்திரியமைந்தும்*
*பான்மையுறுவாயுவொருபத்தும்மனாதிகணான்கும்*
*ஆனவிவைகட்குக்காரணமானஅவித்தையொன்றும்.* (3)

*ஆனவிம்முப்பானைந்தற்கப்பாற்பட்டவன்பசுவே*
*யீனமிலாப்பரசிவனிப்பசுவினுக்குவேறானோன்*
*மானமிலாப்பசுக்களுக்குமருவியுளதனாதியே*
*தானமெனவஞ்ஞானஞ்சமுசாரபீசமதே.* (4)

## கைவலியம் சந்தேகந்தெளிதற்படலம்.

*திகழ்ந்தரசனார்சிருட்டியும்சீவனார்சிருட்டியும்வெவ்வேறே*
*சகந்தனிற்பொதுசனார்சிருட்டிகள்சராசரப்பொருளெல்லாம்*
*அகந்தையாம்அபிமானங்கள்கோபங்கள்ஆசைகளிவையெல்லாம்*
*இகழ்ந்தசீவனார்சிருட்டிகளாகும்காண்ஈசனார்செயலன்றே.* (55)

*இந்தச்சீவனால்வரும்அறுபகையெலாம்இவன்செயலல்லாமல்*
*அந்தத்தேவனால்வருமென்றமூடர்கள்அதோகதியடைவார்கள்*
*இந்தச்சீவனால்வரும்அறுபகையெலாம்இவன்செயலல்லாமல்*
*அந்தத்தேவனால்அன்றெனும்விவேகிகள்அமலவீடடைவாரே.* (56)

## ஷை தத்துவவிளக்கம் சீவேசுரபேதம்.

*பேதமானதுவுங்கேளாய்பெயராலும்இடங்களாலும்*
*ஓதருமுபதியாலும்உடலாலும்உணர்வினாலும்*
*பாதலம்விசும்புபோலப்பலதூரம்அகன்றுநிற்பர்*
*ஆதலால்இவர்க்கு(சீவேசுரர்க்கு)எந்நாளும்ஐக்கியமென்பதுகூடாதே.* (77)

*இக்குணங்களிலேவிண்போன்றிருக்கும்சிற்சாயைதோன்றும்*
*முக்குணங்களினுந்தூய்தாம்முதற்குணமாயையாகும்*
*அக்குணப்பிரமச்சாயையந்தரியாமிமாயை*
*எக்குணங்களும்பற்றாதோனிமித்தகாரணனாமீசன்.* (92)

இந்தப் பிரமாணங்களினால் பிரமமான சிவனொன்றே உண்மைப் பொருளெனவும் மற்றப்படி ஈசுவரன் மாயாப் பிரதிபிம்பப்பொருளெனவும் ஜீவர்களான பசுக்கள் அவித்தியாப் பிரதிபிம்பப் பொருள்களெனவும் விளங்குகின்ற மையினாலும் பிரதிபிம்பப் பொருள்கள் பிம்பப் பொருள்களைப்போலச் சத்தாகாமை யினாலும் பிமபப்பொருளே சத்தானமையினாலும் ஜீவர்களான பசுக்களைப் பொருளாக அத்வைதிகள் சொல்லுகின்றார்களென்று கூறுவது பேதைமையிற் பேதைமை யாம் என்றறிக. பிரமமான சிவனொன்றே முக்காலத்துமுள்ள சத்துப் பொருளெனவும் ஈசுவரனும் ஜீவர்களான பசுக்களும் சிவனைப்போலப் பொருள்களல்ல, அதாவது சத்துப் பொருள்களல்ல, பின்னைச் சத்துப்போலிப் பொருள்கள் எனவும் லட்சாதிலட்சங் சிரந்தங்களுடனே சுருதி ஸ்மிருதி புராணாதிகளும் ஆகமங்களும் தம்பட்டம் அடிக்கவும் அதையே தங்கள் சித்தாந்தமாக அத்துவிதிகள் கூறவும் இவர்க்கு மாத்திரம் அது விளங்காமற்போனது என்ன தீவினையோ அறியேம்! இது விஷயமாக இப்பிரமவித்தையிற்றானே சோம. நாய்க்கரை மறுத்து, 'சங்கராசாரியர் அவதாரமகிமை' யெழுதும்போது, வெகுவாய் எழுதியிருக்கின்றோம்; இன்னு மிதைச் சார்ந்த பற்பல விஷயங்களுமெழுதி, இனி அவர் தலைகாட்டவொட்டாதபடி.யுஞ் செய்திருக்கின்றோம். இன்னும் அவரது ஆக்ஷேபங்கட்கெல்லாம சமாதானமுஞ் சொல்லி யிருக்கின்றோம். அங்ஙனமாக,

ஒன்றுந்தெரியாது போல "இந்தப்பூனையும் பால்குடிக்குமா?" என எழுதவந்தது ஆண்மையாமா? நாம் அடிக்கடி எழுதினதையே யெழுதுவது பிரதிவாதிகளுக்கு அவமானமல்லவா?

## பேதவாதகண்டனம்.

இதன்மேல் கழுதையுவமானங்கூறிக் கழுதைத் தன்மையாகவே முடித்துக் கொள்ளுகின்றார். அது வருமாறு: - “தானல்லாத பாசத்தை அகமென்று கொண்ட வனைப்போலத் தானல்லாத பதியை அகமென்று கொண்டவனும் நிர்மூடனாயினும் முன்னவனிற் பின்னவன் அதிக கேவலப்பட்டழிவனென்க. ஏனெனின், பாசத்தைப் பசு யாளுபவன். பசுவைப் பதி யாளுபவர். தன்னாலாளப்படும் பாசத்தைத் தானென்பதால், அப்பாசந் தன்னைத் தண்டியாது. தன்னையாளும் பதியைத் தானென்றால் அந்தப்பதிப்பொருள் தன்னைத் தண்டியாமற்போகாது. ஒருநான் தன்னைக் கழுதையாக எண்ணுவதுபோல் தான் பாசமென்பதும் ஒரு அடிமை தன்னை யரசனென்பது போல் தான் பதியென்பதுமாம். ஒருவன் தன்னைத் தான் கழுதை யென்றதனால் அவனை யந்தக் கழுதையெழுந்து தண்டிக்கமாட்டாது. நானுநாமும் ஒன்றாய்விட்டோமென்று அந்தக்கழுதை சந்தோஷத்தையே யடையும், ஒரு அடிமை தன்னைத் தான் அரசனென்று வெளிவந்தால் அரசன் சந்தோஷிக்க மாட்டான். அப்போதே யவனைப்பிடித்துத் தண்டித்துவிடுவான்." என்பதாம்.

இவருக்கு ஆத்திரமும் கோபமும் துவேஷமும் பொங்கிப் பொங்கி யெழு கின்றன. நியாயத்தால் பிறர்மதத்தை வெல்ல விடமின்மை யான் கழுதை யுவமானங்கூறி யிழிவுபடுத்தி அதனால் வென்றதாய்ச் சிறிது சந்தோஷிக்கப் பார்க்கின்றார். "உண்டதைக் கக்குவான்" என்றபடி யிவருக்குள்ள புத்தி வெளிப் படுகின்றது. கழுதை யெவ்வளவு சந்தோஷப்பட்டதா யெழுதுகின்றாரோ அவ்வளவு சந்தோஷமிவருக்கு முண்டானதாய்த் தெரிகின்றது. நாமும் பிறரும் சோம சுந்தர நாயகரையும் சுந்தரனையும் ஸ்ரீ கோவை சபாபதி நாவலரையும் கண்டனைசெய்து எழுதிய விஷயங்களைப்பார்த்த இந்த அரக்கோணத்தார்க்கு இவ்வித வுவமானங்கள் கூறுவது குற்றமென ஏன் புலப்படவில்லை? இதற்குக் கண்டனை முன்பே வந்திருக் கின்றமையால் இப்போதும் வந்துவிடுமென்று கோணத்தார்க்குத்தெரியும். வந்தால் வரட்டும்; வருகிறமட்டும் ஜெயமாயிருக்கட்டுமென்பதே யவர் கருத்தென்க. அல்லாமல் எத்தனையோபேர் இதைப்படித்தவரெல்லாம் அதைப் படிக்கப்போகிற தில்லை; அதைப்படித்தவரெல்லாம் இதைப் படிக்கப்போகிறதில்லை. இதற்கிடையில் இப்படிப்பட்ட விஷயங்களைத்தெரிந்துகொள்ளச் சத்தியற்றவர் வெகுபேர் இருக்கவுங் கூடும். இப்படிப்பட்டவர்கள் வரையில் ஷை அவமானம் வெளிப்படாமலிருக்கு மன்றோ? அதுவரையில் இலாபந்தானே யென்று கருதி யெழுதுகின்றார்போலும்.

இவரது வாக்கியத்தில் பதியென்பதொன்று, பசு என்பதொன்று, பாசம் என்பதொன்று ஆக முப்பொருள்க ளேற்பட்டன. இவ்வாறு அத்துவிதிகளும் மூன்று பொருள்களெனவே அங்கீகரிக்கின்றனர். இதற்குப்பிரமாணம்: -

## கைவலியம் தத்துவ விளக்கம்.

*ஏமமாயாவினோதவீசனாரருளினாலே*
*பூமலியுயிர்கட்கெல்லாம்போகசாதனமுண்டாகத்*
*தாமதகுணமிரண்டுசத்தியாய்ப்பிரிந்துதோன்றும்*
*வீமமாமூடலென்றும் விவிதமாந்தோற்றமென்றும்.* (35)

*இவ்வுடல்மருவுமீசன்இரணியகர்ப்பனாவன்*
*இவ்வுடல்மருவுமீசன்இரணியகர்ப்பனாவன்*
*இவ்வுடலிரண்டுபேர்க்குமிலிங்கசூக்குமசரீரம்*
*இவ்வுடல்கோசமூன்றாம்இதுகனாவவத்தையாமே.* (39)

*சீரியாசனார்க்கும்சீவர்க்கும்உபாதியொன்றேல்*
*ஆரியகுருவேபேதம்அறிவதெப்படியென்றக்கால்*
*காரியவுபாதிசீவன்காரணவுபாதியீசன்*
*வீரியமிகுசமட்டிவியட்டியாற்பேதமாமே.* (43)

## ஷை சந்தேகந்தெளிதற்படலம்.

*அச்சுவத்தமென்றொருமரமதிலிரண்டரும்பறவைகள்வாழும்*
*நச்சுமங்கொருபறவையம்மரக்கனிநன்றுநன்றெனத்தின்னும்*
*மெச்சுமங்கொருபறவைதின்னாதெனவியங்கியப்பொருளாக*
*வைச்சுமாமறைசீவனையீசனைவகுத்தவா றறிவாயே.* (58)

இச்செய்யுள்களாலும் இதற்குமுன் காண்பித்த செய்யுள்களாலும் ஜீவர்கள் வேறெனவும், ஈசுவரன் வேறெனவும், ஜீவர்கள் சிருஷ்டி வேறெனவும், ஈசுவரன் சிருஷ்டி வேறெனவும், ஜீவர்களுடைய போக சாதனத்துக்காக வுலகு சிருஷ்டிக்கப் பட்ட தெனவும், ஈசுரன் சிருஷ்டி சராசரவுலகெனவும், ஜீவசிருட்டி அகந்தை, அபிமானம், கோபம், ஆசைகளெனவும், ஈசுவரனுக்கும் ஜீவர்கட்கும் ஐக்கியம் அதாவது ஏகத்துவங்கூடாதெனவும் இவ்வாறு பல பல விதமாய்ப் பேதங் கூறுகின்றன வேதாந்த நூல்கள் என அறியலாம். அன்றி ஜீவன் கிஞ்சிக்கியன்; ஈசுவரன் சர்வக்கியன் எனவும் அறியலாம். இவ்வளவு பேதமிருப்பதால் ஜீவனான பசு, ஈசுவரனான பதியைத் தானெனவும் இரண்டும் ஒன்றெனவும் சொல்வதாக அத்துவிதிகள் ஒருபோதும் அங்ஙனங் கூறவில்லையென்பதற்கு ஷை பிரமாண மாத்திரமன்று; எந்தவைதிக நூல்களும் பிரமாணமாம். ஷை லட்சணமுள்ள ஜீவர்களான பசுக்கள்: உபாசனைக்கும் கிரியைக்குந் தக்கபடி கைலாசாதி பதவிகளைப் பெறுகின்றன. சாதாரணமான் குடித்தனக்காரன் தன்னை ராஜனென்று சொல்வானேல்
ராஜனால் தண்டிக்கப்படுவான். அதுபோலக் கிஞ்சிக்கியனான ஜீவன், தன்னை ஈசுவரனென்று சொல்வானேல் ஈசுவரனால் தண்டிக்கப்படுவான். ஈசுவரன் ஆண்டான்; ஜீவன் அடிமை. ஆண்டான் அடிமையாகமாட்டான்; அடிமை

ஆண்டானாக மாட்டான். இதுவரையில் வேதாந்திகளும் சித்தாந்திகளும் ஒப்புக் கொண்டார்கள். இது வேதத்தின் கர்மோபாசனை காண்டவிஷயம். பாசத்தைத் தானென்பது உலோகாயுதர் விஷயம். அதைப்பின் கவனிப்பாம். கர்மோபாசனா காண்டவிஷயம் நம்பிக்கை; விசாரணையல்ல. ஞானகாண்டத்திலோ தருக்க நியாயத்தைக் கொண்டு எவ்வளவு தூரமானாலும் விசாரிக்கலாம். வேதத்தின் பூர்வகாண்டம் கர்ம்ம பத்திகள்; அவைகளுக்கு விசாரணைகூடாது; விசாரணைக்கு நிற்கவுமாட்டாது. கர்ம்மகாண்ட பத்திகாண்டப்படி யொழுகினவர்க்குச் சொற்காதி பதவிகளும் கைலாசாதிபதவிகளும் உண்டாம். நிஷ்காமியமாய் ஒழுகினவர்க்கு மனத்தூய்மையும் முமூட்சுத்துவமு முண்டாகும். முன் சொன்ன ஞான காண்டமோ எவ்வளவு விசாரணை செய்தாலும் அதற்கெல்லாம் இடங்கொடுக்கும். துவித சித்தாந்திகள் கர்ம்ம பத்திவரையில் நின்றுபோனார்கள். அவர்களுக்குத் துவிதம் பாலும் பழமும்போ லினிமையாயிருக்கும். அவர்கள் ஞானமென்று வாயினால் சொன்னாலும் அங்கும் பேதஞானத்தை விடமாட்டார்கள். அத்துவிதமென்று வாயினால் சொன்னாலும் அங்கும் துவிதப்பொருளே சாதிப்பார்கள். அவர்களுக்கு அத்துவிதம் எட்டிக்காயாகும். வேதாகம புராணாதிகளில் அத்துவிதமென்னுஞ் சொல் எங்கும் விசேஷமாய் வழங்குவதால் அது தங்களுக்குரியது போலக்காட்டி அத்துடனே சுத்தம் என வொருசொல் சேர்த்துச் சுத்தாத்வைதமென வைத்துக் கொண்டார்கள். வைத்துக்கொண்டாலும் காரியத்தில் துவிதத்திற்கு உலோபஞ் செய்வதில்லை. இந்தத் துவிதசித்தாந்திகள் காம்மோபாசனையில் ஜீவனையும் ஈசுவரனையும் பேதமாய்ச்சொல்வதுபோல முத்தியிலும் சொல்ல ஆசைப்படுகின் றார்கள். இது கர்ம்மோபாசனைவரையில் பயன்படுமே யன்றி ஞான காண்டத்தில் பயன்படாது. அத்துவிதிகள் கர்ம்மோபாசனை வரையில் பதி பசு பேதத்தை யொப்புக் கொள்ளுகின்றார்கள். அதன்மேல் பேதத்தை யொப்பவில்லை. அப்படி யொப்பினால் வேதம், ஸ்மிருதி, புராணம், உபபுராணம், இதிகாசம், பலவித கீதைகள், ஆகமங்கள், இவைகளுக்கு மாறில்லாமல் பல பெரியோர்களியற்றிய நூல்கள் இவற்றினுக்கும் யுக்தி அனுபவங்கட்கும் மாறாம். சித்தாந்திகள் எது வரையில் ஆண்டானடிமை பேதத்தையொப்பினார்களோ, அதுவரையில் அத்துவிதிகளு மொப்பிவிட்டமையால் சாதாரண மனிதன் தன்னை ராஜன் என்று சொல்வதால் அடையுந் தண்டனையைப் போல் அத்துவிதிகள் அடைய வேண்டியதில்லை. ஞானகாண்டத்திலும் பேதஞ் சொல்லவேண்டும் என்பாராயின் அதைப்பற்றிச் சுருதி யுக்தி அனுபவங்கட்கொத்து விசாரணை செய்வாம். இதைப்பற்றி, 'சங்கராசாரியார் அவதாரமகிமை' என்னும் விஷயத்திலும் சித்தாந்திகள் தான் மாயாவாதிகள் என்றெழுதிய விஷயத்திலும் அனேகமாய்ப் பேசியிருக்கின்றோம். ஆயினும் இங்கும் வேண்டிய மட்டும் பேசுவாம். அடிமையானவன், தன்னை அரசன் என்று சொல்லும் விஷயத்தில் எம்மாதிரிக் குற்றம் நிகழ்கின்றதோ, அம்மாதிரிக்குற்றம், ஜீவன், தன்னை யீசுவரன் என்று கூறும் விஷயத்திலுமுண்டென்கிறாரன்றோ? இது உண்மைதான். ஆனால் வெகு பிரயா சைப்பட்டு இச்சிறு குற்றத்தைத்தேடிக் கண்டுபிடித்தவர். ஆய்ந்துதேடாமல் பெருங்குற்றத்தைக் கைசோர நழுவவிட்டாரே யென்று தான் விசனமுறுகின்றேம். சாதாரண மனிதனான அடிமையும் எண்சாண் மனிதன் தான்; ராஜனும் எண்சாண் மனிதனதான். இருவரும் வேறு வேறு ஸ்தானத்திலிருக்கும் பேதப்பொருள்கள்; அன்றி இருவரும் சத்துப்பொருள்களுமாம். அவ்வாறு ஜீவனான பசுவும் ஈசுவரனான பதியும் அவ்வாறு பேதப் பொருள்களும் சத்துப்பொருள்களுமா? இரண்டும்

பேதப்பொருள்களும் சத்துப்பொருள்களுமாக விருந்தால் யாது குற்றமென்னின், பதி, பூரணப்பொருளென்று சொல்லும் வேதாகமாதிகளுக்கு விரோதப்படுமே. அடிமை அரசன் விஷயத்தில் இருவரும் கண்டப்பொருளாயிடுதல் சித்தம். அங்ஙனமே பதியும் பசுவும் கண்டப்பொருளென் றிவரொத்துக்கொள்ளுகின்றனரா? பதியாகிய சிவனும் பரிபூரணப்பொருள்; பசுவாகிய ஜீவான்மாவும் பரிபூரணப்பொருள் எனக் கொள்ளும் இவரது சித்தாந்தத்திற்கு எண்சாணுடம்புள்ள கண்ட அடிமை, எண்சாணுடம்புள்ள கண்ட அரசன் ஆகிய விவர்களுடைய உவமானம் எங்ஙனம் பொருத்தமாகும்? உபமான உபமேய விலக் கணந் தெரியா விவர்: அந்த ஜோலிக்கு ஏன் வரவேண்டும்? கழுதையுபமானஞ்சொல்லித் தூஷிக்கவந்த விவர்: அவ்வுபமா னத்தைக் கழுதைத்தன்மையாகவே முடித்துக்கொண்டது பெரியதோர் அவமான மென்க. இவராவது, சோம. நாய்க்கராவது எவ்வளவு பேசினாலும் எழுதினாலும் பரிபூரணக்கடவுளிடத்து மற்றப் பசு பாசப்பொருள்கள் எங்ஙனமிருக்கும் என்கிற கேள்வி வந்து விட்டால் பாதாளத்திற் போய் ஒளித்துக்கொள்ளுகின்றார்கள். அத்து விதிகள் சிவனொன்றே முக்காலத்து முள்ள சத்துப்பொருளென்றும், ஈசுவரனாசிய பதியும் ஜீவனாகிய பசுவும் மாயையாகிய பாசமும் சிருட்டிகாலகதிற்றோன்றி, லயகாலம் வரையில் இருந்து, லயகாயத்தி லொடுங்கிவிடுகின்றனவென்றும், அவைகள் ஓர் காலச் சத்துப்போலி அநிர்வசனீயப்பொருள்களென்றும், பதி பசு பாசங்கள் தனித் தனிப்பொருளென்றும், பசு தன்னைப் பாசமென்றாவது பதியென்றா வது சொல்லுதல் கூடாதென்றும், அவ்வாறு கூறுவது அத்துவிதசித்தாந்த மவ்லவெ ன்றும், அவ்வாறு அத்துவிதிகள் சொல்லுகிறார்களென்பது பிதற்றலேயன்றி யுண்மை யல்லவென்றும், பதிபசுபாசங்களுக்கு மூலமாயும் விலக்ஷணமாயும் சத்தாயுமுள்ள துரியசிவனிடத்திலே சத்துப்போலி அநிர்வசனியப் பொருளான பசு: முத்தித்தசையில் சிவமாய் விளங்குமென்று சொல்வதையுணராது, சத்துப்போலியும் அநிர்வசனீபமும் சிவத்கினின்றுந் தோன்றியதும் காரியமுமான பதியைப் பசுவாக அத்துவிதிகள் சொல்லுகிறார்களென்று சித்தாந்திகள் சொல்வது வெறும் பொய்வார்த் தையென்றும், பதிபசு பாசங்கள் ஒன்றாகிறதென்று அத்வைதிகள் சொல்லவில்லை யென்றும் இதை வாசிப்போர் அறிந்து தெளிந்திடுவாராக.

துரியசிவன் காரணப் பொருள்; அந்தச் சிவனிடத்தி னின்றுக் தோன்றிய பதியும் பசுவும் பாசமும் காரியப்பொருள்கள், மனம் காரணப்பொருள்; மனத்தினி ன்றும் தோற்றிய சேதனா சேதனவுலகம் காரியப்பொருள். ஷை சொப்பன உலகத்திலுள்ள பற்பல பொருள்களும் ஒன்றுக்கொன்று பேதப்பொருள்களென்றே சொல்லவேண்டும். அங்ஙனமே சிவத்தினின்றுந்தோன்றிய பதிபசுபாசப்பொருள்கள் ஒன்றுக்கொன்று பேதப்பொருள்களாம். சொப்பனப்பொருள்கள் முடிவில் மனமாதல் போல் பதி பசு பாசப் பொருள்கள் முடிவில் சிவமாய் நிற்கத்தக்கனவேயாம். ஒவ்வொரு சிருட்டியிலும் இவ்வாறே தோன்றித் தோன்றி யொடுங்குகின்றன. வித்தினின்றும் விருக்ஷ முண்டாவது சகஜமானாலும் வித்தை வறுத்துவிட்டால் பிறகு எப்படி முளையாதோ அப்படியே பசுக்களைச் சிவஞானத்தீயால் வறுத்து விட்டால் பின்பு அவைகள் பிறப்பதில்லை. அதன் பொருட்டுப் பசுக்கள், பதியை யுபர்சித்துச் சித்தசுத்தியடைந்து முமூட்சுத்துவம் பெற்று, கேட்டல் சிந்தித்தல் நிட்டை கூடுதல்களால் அபரோக்ஷ சாக்ஷாத்காரம் பெற்றுச் சிவசொருபமாய் விடுகின்றன. இப்படிப்பட்ட அதீத நிலையில் சங்கற்ப விகற்பமில்லை; காண்பான்

காட்சி காணும் பொருளில்லை; இரவு பகலில்லை; நன்மை தீமைகளில்லை; மேல் கீழில்லை; பெரியார் சிறியாரில்லை; சினேகிதர் பகைவரில்லை; நான் நீ அவன் அவள் அது என்பதில்லை; மூன்று சரீரமும் மூன்று அவத்தைகளும் முக் குணங்களும் மூவுலகங்களுமில்லை, இப்படிப்பட்ட நிலைமையில் தான் ஜீவனாகிய பசு சிவமாய் விளங்குவது. இங்ஙனமாக, மேற்கூறியவைகளெல்லாமிருக்கும் பந்த நிலையில், பசு, தன்னைப் பதியென்று சொல்வதாக அபவாதஞ்சொல்வது நன்றா காது. மேற்சொன்ன அதீத நிலையில் நான் அது, அது கான் என அபேதஞ்சாதித்தால், முற்றும் பேத நிலையில் அதாவது பந்தநிலையில் அபேதஞ் சாதிப்பதாகச்சொல்லி, ஞான நூல் பழக்கமில்லாதவர்களுக்கு வேதாந்த நூல்களில் வெறுப்பு வரச்செய்வது துன்மார்க்கச்செயலாம். இப்படிப்பட்ட முத்தியில் அகம் பிரமம் அதாவது நான் பிரமமெனச்சொல்வது வேதாகம புராணாதி சாஸ்திரங்களுக்கும் யுக்தி அனுபவங் கட்கும் சம்மதமாயிருப்பதால் அதற்குத் தோஷங்கூறுவோர் வேதாகமாதி நூல்களுக்கு அப்புறப்பட்ட புறச்சமயத்தவரென்றே சொல்லற்பாலரென்பதாம்.

முத்திநிலையில் ஜீவனே சிவனாய் விளங்குகின்றா னென்றதற்குப் பிரமாணங்கள் விசேஷமாய் 'வேதாந்தசங்கை நிவாரண' த்தில் கூறி யிருக்கின்ற மையால் ஆங்குக் கண்டுகொள்க. இதுகாறும் ஏதோ வெகு நுட்பங்களைச் சொல்லிவிட்டதாய்க்கருதி, "இந்த நுட்பங்களை விவேகிகள் யோசிக்கக்கடவர்" என்று கூறுகின்றார். ஆ! ஆ!! வெகு நுட்பம்! வெகுநுட்பம்!! இந்த நுட்பம் ஸனகாதி யோகியர்க்கும் விளங்கமாட்டாது! இந்த நுட்பத்தை வெகு பிரயாசைப்பட்டு அறிய வேண்டும் போலும்!

## யாங்களே கடவுளென்றிடும் பாதகத்தவருமென்று தாயுமானவர் கூறியது பௌத்தசித்தாந்திகளையே என்பது.

"யாங்களே கடவுளென்றிடும் பாதகத்தவரும் என்று தாயுமானவர் கூறியது பௌத்தசித்தாந்திகளை யென்று இவர் போக்குக்காட்டியதை யெங்கனோ வொப்புவார்கள்" எனவும் ஒன்று கூறினார். இவர் கூறுவதை மாத்திர மொப்புக் கொண்டு எவரோ இவர்க்கு யோக்கியதா பத்திரங் கொடுத்தார்கள் போலும்! அகம்பிரமாஸ்மி, சிவோகம் முதிலிய வேதாகம வாக்கியங்களெல்லாம் நானே பிரமம், நானே சிவன், பிரமமே நான், சிவனே நானெனப் பறையடிக்கின்றமையாலும், தாயுமானவரும் ஷெ வாக்கியங்களை யுதகரித்துக்கூறுவதாலும், அங்ஙனங் கூறாது துவிதசித்தாந்தங் கூறுவதில் வேதசாஸ்திர விரோதம் வருவதோடு யுக்தி அனுபவ விரோதமும் சிவனுக்கு அபரிபூரணதோஷமும் வருவதாலும், இவரைப்போலத் தாயுமானாரை வேதாகமசாஸ்திர பாஹியரெனச் சொல்லக்கூடாதானதாலும்' யாங்களே கடவுளென்றிடும் பாதகத்தவரும்' என்று கூறியது பௌத்தசித் தாந்திகளையே யாம் என்றறிந்திடுக. பௌத்தர்கள் ஜீவனையே புத்தியென்று சொல்லி, அது க்ஷணிக விஞ்ஞானமென்றும் அதன் பிரதிபிம்பம் வெளிப் பொருள் களென்றும் அந்தப்புத்திப்பொருளே கடந்தபொருளென்றும் கூறுகின்றார்கள். அந்தப் புத்திப்பொருளான ஜீவனை அத்துவிதிகள் பிரதிபிம்பமாகவும் சத்துப்போலியாகவும் அநிர்வசனீயமாகவும் சொல்லிக்கழித்து, இதற்கு ஆதாரமாகவும் அதிஷ்டானமாகவும்

காரணமாகவும் காரணகாரிய ரகிதமாகவும் அகண்டபரிபூரண சச்சிதானந்த நித்திய பரிபூரணமாகவுமுள்ள சிவனென்னும் துரியப்பொருளுண்டெனச் சாதித்து, பௌத்தர்களைக் கண்டித்திருக்கின்றார்கள். போலிப்பொருளை யதார்த்தமாகவும் முக்கியப் பொருளாகவும் கடந்த பொருளாகவும் சொல்லுகின்றமையால் பௌத்தர்களைத் தாயுமானார் 'யாங்களே கடவுளென்றிடும் பாதகத்தவர்' எனக்கூறி மறுத்தார்.

“பௌத்தன் தனக்குக் கீழிட்டபாசத்தைத் தானென்றவன். தனக்குமேலிட்ட பதியை அல்லது கடவுளைத் தானென்று கூறினவன் அல்லன்" என்கிறார். அவனவன் சொல்வதைக்கொண்டு அவனவன் சித்தாந்தத்தை யறியவேண்டுமேயன்றி, தம் சித்தாந்தத்தைக் கொண்டுபோய் அவன் மதத்திலேற்றி, அதன்பேரில் தமக்கிஷ்டமான சித்தாந்தஞ் செய்துகொள்வது புத்தியன்று. தனக்குக் கீழ்ப்பட்டது பாசமென்றும் மேற்பட்டது பதியென்றும் கூறுவது அவன் சித்தாந்த மன்று. அவனுக்கு ஜீவன் தான் பொருள். உலகம் அதனது பிரதி பிம்பம். பௌத்தர்கள் வேதாந்திகள் சொல்வதுபோல் ஈசுவரனைச் சொல்லாமையாலும் ஜீவன் ஈசுவரன் இவ்விரண்டின் பேரில் அகண்ட பரிபூரண பிரமத்தை யொப்பாமையாலும் வேதாந்திகளால் போலிச் சத்து என்றும் அநிர்வசனீயமென்றும் சொல்லி நீக்கப்பட்ட ஜீவனான புத்தியையே பொருளாகக் கொள்ளுகின்றமையாலும் ஜீவனை விட வேறே ஈசுவரனை யொப்பாமையாலும் ஒப்பாமை காரணமாக அவ்வீசுவரனை யுபாசித்தல், வழிபடுதல், பூசித்தல், தியானித்தல் முதலிய சற்காரியங்கள் ஏதும் புரியாமையாலும் அவர்களைக் கண்டித்தாலும் பாதகத்தவரும் எனக் கூறலும் நியாயமேயாம். ஈசுவரனை யொப்பாமைபற்றி அத்துவிதிகளும் பௌத்தர்களைக் கண்டித்திருக்கின்றார்கள். ஜீவனென்கிறபேர் எப்போது வந்ததோ அப்போதே ஈசுவர னென்கிறபேரும் அத்துடன் றொடர்ந்தே யிருக்கின்றது. அங்ஙனமே பசு என்கிற பேர் எப்போது வந்ததோ அப்போதே பதியென்கிற பேரும் தொடர்ந்தேயிருக்கின்றது. ஒன்றை விட்டு ஒன்றிராது. அண்ணன் என்கிற சொல் தம்பியையும் தம்பியென்கிற சொல் அண்ணனையும் எப்படித் தொடர்ந்திருக்கிறதோ, அப்படியே ஜீவன், பசு என்கிற சொற்கள் ஈசுவரன் பதியென்கிற சொற்களைத் தொடர்ந்தேயிருக்கின்றன. இது வேதாகம சாஸ்திர சித்தாந்தமாகலின் இதை அத்துவிதிகள் கௌரவஞ்செய்து அங்கீகரித்து அவைகளுக்குக் கட்டுப்பட்டுப் பேசுகின்றார்கள். ஆத்திரத்தையும், பதைபதைப்பையும், வெகுளியையும், அடங்காமைபையும், துவேஷத்தையும் சற்றுப்போது ஓரிடத்தில் கட்டிவைத்துவிட்டு, கோணவாசி ஆலோசித்துப் பார்த்தால் நாம் கூறியவைகளெல்லாம் உண்மையென விளங்கும். தனக்கு மேலிட்ட பதியை அல்லது கடவுளைத் தானென்று கூறினவனல்லன் என்கிறாரே. இதை விடக் கைலாசத்தில் காளகண்ட திரிநேத்திர சதுர்ப்புஜ சந்திரசூட உமைபாக பரமசிவனைத் தானென்று கூறினவனல்லன் என்று கூறுகிறது தானே. ஜீவனுக்கு மேற்பட்ட பொரு ளில்லை என்றுதான் அவன் சொல்லுகிறானே. அவனிடத்திற் போய்த் தனக்கு மேற்பட்ட பதியைத் தானென்று கூறினவனல்லன் என்று சொல்லுவானேன்? முடிவில் தானென்றும் அதுவென்றும் பேதமில்லையெனச் சாதிக்கும் தாயுமானார் முன்னேயே, இவர் பேதம் பழுத்துப்போகின்றதென்றறியாது இந்தச் சித்தாந்தத் தையே யங்கீகரியாத பௌத்தரிடம் போய் இவரது பேதஞானத்தைப் பழுக்கப்பார் ப்பதென்னமதி? நாம் மேலே காட்டிய காரணங்களால் யாங்களே கடவுளென்றிடும்

பாதகத்தவர் என்பது ஜீவனான புத்தியைவிட மேலே பொருளில்லையென்கிற பௌத்த சித்தாந்தியை யாதலாலும் தாயுமானவர் அத்துவித சித்தாந்தியாதலாலும் அரக்கோணத்தார் கோணலெல்லாம் கோணலாகவே முடிந்தமை காண்க. ஆதலால் பானுமூர்த்தி சொன்னது சத்தியமான வாக்கியம்; போக்குக்காட்டியதன்று. அத்து விதிகளைக் தூஷிப்பதற்கு வைத்துக்கொண்டிருக்கும் பல குறுக்குவழிகளி லிஃதொன்று தப்பிப்போகிறதே யென்கிற துக்கத்தால் கோணவாசி வாதஞ் செய்கின்றாரேயன்றி மற்றப்படியன்று.

## வேதத்தின் நெறிநின்று சிவனைவழிபடுபவர் வைதிகசைவரென்பது.

"வைதிகசைவ சிந்தாந்தசிகாமணியாகிய ஸ்ரீ தாயுமானவர் மெய்கண்டான் பொன்னடியையே மேவினவராகையால்" மேவினவராகையால்" என்கிறார். வேத வேதாந்த நெறிநின்று சிவனை வழிபட்டுச் சிவ சொரூபமாய் விளங்குபவர் யாவராயினும் வைதிகசைவரேயாம். வேதவேதாந்தங்களையிகழ்ந்து அந்நெறி நில்லார் யாவராயினும் அவைதிகரும் பாஷாண்டிகளுமாம்.

## முன்பின் விரோதம்.

"பேய்த்தேர் அல்லது கானனீர் தோற்றமாயிருந்தும் அனுபவிக்க முடியாதாற் போல ஞானிகளுக்குச் சிவானுபவமுண்டாயகாலத்தில் உலகமிருந்தும் அனுபவ வேத்யமாகாமையால் அதனைப் பொய்யென்று கூறுவர் சைவசிந்தாந்திகள்" என்று கூறியதிலுள்ள ஆக்ஷேபமும் முன்பின் முரணும் விளங்க எடுத்துரைப்பாம். கானனீர் தோற்றமாயிருக்கிறதென்று சொல்வதினால் பொருளில்லை யென்றாகின்றது. பொருளில்லாதபோது அதை யெவ்வண்ணம் அனுபவிக்கிறது? அதை யனுபவிக்க முடியாதாற்போல என்றால் அதை அனுபவிக்கவும் கூடும்போலிருக்கின்றது. இதற்கு உவமேயஞ்சொல்லுகிற விவேகத்தைப்பாருங்கள்! ஞானிகளுக்குச் சிவானுபவ முண்டாயகாலத்தில் உலகமிருந்தும் அனுபவவேத்ய மாகாயையால் அதனைப் பொய்யென்று கூறுவர் சைவசித்தாந்திகள் என்பதுதான் விவேகமென்பது. இதில் ஞானிகளுக்கு உலகம் இருந்தும் அனுபவவேத்ய மாக வில்லையாம்; உவமானத் திலோ கானனீர் தோற்றல் மாத்திரமாம். இந்த ஆபாச வுவமானங்கூற எங்கே கற்றாரோ? உவமானத்தில் கானனீர் தோற்றம்; உவமேயத்தில் உலகு உள்ளது. உள்ள உலகுக்கு இல்லாத கானனீர் எப்படி யுவமானமாகும்? இந்தக் கானனீருவமான மிவர் சொல்லு முவமான மன்று. வேதசாஸ்திரங்களில் சொல்லப்பட்ட வுவமான மேயாம். இந்த வுவமானப்படி கானனீர் தோற்றமென்றும் இதன்படி உலகுந்தோற்ற மென்றும் நிதர்சனமாய் விளங்க அதைமறைத்து உவமானத்திற்கு மாறாக வுவமேயத்தைச் சொல்வது பரிகாசத்திற் கிடமாம். உவமானத்திற்கும் உவமேயத்திற்கும் பொருத்தமாக அத்துவிதிகள் சொல்ல, துவித தோஷபுத்தியால் அதைக் கண்டிக்கப் புகுந்தால் வருமா? ஞானிகளுக்கு உலகமிருந்தும் அனுபவிக்க முடியவில்லை யென்கிறார். இதன்படியே கானனீர் இருந்தும் அனுபவிக்க

முடியவில்லை யென்றாகின்றது. இவர் சொப்பனத்தைச் சத்தியமென்கிற சோம. நாய்க்கரைச் சேர்ந்தவராகலின் கானனீரையும் சத்தியமென்று சொல்லப்பார்க்கிறார். கவர்ன்மெண்டார் கானனீகா யுள்ளதாகக்கொண்டு நீர்வரி விதித்தால் இவரும் அவ்வரியைச் செலுத்திக் கானனீரைப் பாய்ச்சிப் பயிரை வளர்த்து ஜீவிப்பார்போலும்! கானனீர் உண்மையெனக்கொள்ளும் இவர், கயிற்றரவு, இப்பிவெள்ளி, கட்டையிற் கள்ளன் இவற்றையு முண்மை யென்று கொள்வார்போலும்! இவற்றை யுண்மை யென்று கொள்ளும் இந்தச் சித்தாந்தி, முயற்கொம்பு, ஆகாயமலர் இவற்றையு முண்மை யென்றுகொள்ளத் தடையென்ன? ஞானிகளுக்கு உலகமிருந்தும் அனுபவப்படாமையால் உலகைப் பொய்யென்று கூறுவர் என்பதோடு சைவ சித்தாந்திகள் என்று சொல்லி என்று சொல்லி அவர்களைப் புகழ்வது போலி கழ்கினறார். ஞானிகளுக்கு உலகிருந் தனுபவப் படவில்லையா? இல்லாதிருந் தனுபவப்படவில்லையா? இது விஷயமாக மாயாவாத திமிரபாஸ்கரன் சுந்தரனுக்குக் கொடுத்தபதிலில் விரிவாய்க்காணலாம். ஞானிகளுக்கு உலகமிருந் தும் அனுபவப்படாமையால் பொய்யென்று கூறுவார் என்பதினாபாசம் பின்னும் வருமாறு: -

சென்னையில் பி. ஆர். அண்டு சன்ஸ் கம்பெனியில் விற்கும் பற்பல ரத்னாபரணங்கள் ஏழைகளால் வாங்கி அனுபவிக்க முடியவில்லை. அதனால் அவ்வாபரணங்கள் பொய்யென்று சொல்லலாமா? இப்போ திங்கிருந்து காசி கங்காஸ்நாநஞ்செய்யக் கூடவில்லை. அதனால் கங்காநதி பொய்யென்று சொல்ல லாமோ? இவ்வுலகிலிருந்து நரகதுக்கத்தையாவது சொர்க்கபோகத்தையாவது அனுபவிக்க முடியவில்லை. அதனால் நரக சொர்க்கங்கள் பொய்யெனச் சொல்லலாமா? பூலோகத்திலிருப்பவர் கைலாச வைகுந்த சத்தியலோக பதவிகளை அனுபவிக்க முடியவில்லை. அதனால் கைலாச வைகுந்த சத்தியலோகங்களைப் பொய்யென்று சொல்லலாமா? அஞ்ஞானிகள் கடவுளை யறியவில்லை. அதனால் கடவுளைப் பொய்யென்று சொல்லலாமா? சிவஞானிகள் சிவானந்தத்தை அனுபவிக்கும் போது உலகு அனுபவப்படாமையால் உலகு பொய்; அஞ்ஞானி களுக்குச் சிவானுபவம் இல்லாமையால் சிவன் பொய். ஆகச்சிவனும் உலகும் பொய், இவர் மகாபுத்திசாலி. இவர் புத்தி யுலக்கைக்கொழுந்து தான். நாம் ஒரு புத்தகத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும்போது புத்தகவுருவங் கண்ணுக்குப் புலப்படு கின்றது. அப்பொழுது எதிரிலுள்ள மனிதனது உருவங் கண்ணுக்குப் புலப்பட வில்லை. மனிதன் புலப்படும் போது புத்தகமும், புத்தகம் புலப்படும்போது மனிதனும் புலப்படாமையால் புத்தகமும் மனிதனும் பொய். நாம் காசியின் காட்சியை அறியும்போது இராமேசுவரக்காட்சியையறிய வகையில்லை. அதனால் இராமேசுவரம் பொய். இராமேசுவரக்காட்சியை யறியும்போது காசியை யறியவகையில்லை. அதனால் காசி பொய். இந்த அரக்கோண வீரபத்திரமூர்த்தி யாருக்கு எ. பி. என இரண்டு பிள்ளைகளிருப்பதாய் வைத்துக்கொள்வோம். (அனேக பிள்ளைகளு மிருக்கக்கூடும். திருட்டாந்தத்துக்கு இரண்டு பிள்ளையெனக் காட்டு கின்றோம்.) அவ்விரண்டு பிள்ளைகளில் எ, என்னும் பிள்ளையைப்பார்க்கும் போது பி. என்னும் பிள்ளை புலப்படாது. அதனால் பி. என்னும் பிள்ளை பொய்யா? பி. என்னும் பிள்ளையைப் பார்க்கும் போது எ. என்னும்பிள்ளை புலப்படாது. அதனால் எ. என்னும் பிள்ளை பொய்யா? இவ்வளவு தூரம் அன்னியப் பொருளில் போவா

னேன்? இந்த அரக்கோண வீரபத்திர மூர்த்தியாருடைய வடிவத்திலேயே இந்த ஆராய்ச்சியைச் செய்து பார்ப்போம். இவருடைய கையை இவர் பார்க்கும்போது இவரது கால் புலப்படவில்லை. அதனால் இவரது கால் பொய்யோ? இவரது காலைப்பார்க்கும்போது இவரது கை புலப்படவில்லை. அதனால் இவரது கை பொய்யோ? கையை நோக்கக் காலும் காலை நோக்கக் கையும் பொய்யாய் மொத்தத்தில் கையும் காலும் பொய்யாம். இப்படியே இவரது அவயங்களெல்லாம் பொய்யாய்ப் போகின்றன. அவயவங்களை யன்றி அவயவிக்குப் பொருளில்லாமை யால் இவரது உடலே பொய்யாய்ப் போகின்றது. தலை முதலிய அவயவங்களின் விசாரணை இன்னுங்கொஞ்சம் விநோதமாயிருக்கும். கை கால் முதலிய அவயவங்கள் ஒன்று புலப்பட்டபோது ஒன்று புலப்படாமைபற்றி அது அது பொயயாய் மொத்தத்தில் யாவும் பொய்யாய்ப் போகின்றன. இவரது கண், நாசி, வாய், செவி, தலைகளான அவயவங்களை இவரெக்காலத்தும் பார்த்திராமையால் அவைகள் பொய்யென்று சொல்ல அஞ்சார்போலும்! ஒருகாலத்தில் பார்த்ததைப் பிறிதொருகாலத்தில் பாராமை காரணமாக அதைப் பொய்யென்று சொல்லத் துணிந்தவர், எக்காலத்தும் பாராத கண் முதலிய அவயவங்களைப் பொய்யென்று சொல்ல இவர் பின்னிடவே மாட்டார். இது இப்படியிருக்க, இவர் இவரது ஜீவாத்துமாவைப் பார்த்தாரா? இல்லை. அதனால் இவரது ஜீவாத்துமாவும் பொய்யாம்.. இவரது பரமாத்துமாவான பரமசிவனைப் பார்த்தாரா? இல்லை. ஆத லால் பரமசிவனும் பொய்யாம். இவர் சிவஞானியாயிருந்து சிவனைப் பார்த்ததாகவே வைத்துக்கொள்வோம். அங்ஙனமாயின் எது பார்க்கப்படும் பொருளோ, அது சடமாய்ப்போம். எது சடமோ அது அசத்தாய்ப்போம். உணருரு அசத்தென இவரது சிவஞானபோதமே கூறுவது கொண்டு சிவன் அறிபடும் பொருளாதலால் அசத்தாம். மனோ வாக்குக் காயங்களினால் எட்டப்படாதவன் சிவனெனச் சுருதி யாதிகள் கோஷிப்பதால் அதை யறிந்தேனென்பது நகைப்புக் கிட மாம். இதுவரையில் பேசி வந்த விஷயங்களினால் காணப்படும் பொருள்கள், இவரது பிள்ளைகள், கைகால் முதலிய அவயவங்கள், அவய வியான சரீரம் இவைகள் பொய்யாவதோடு இவரது ஆன்மாவும் இவரது பரமசிவனும் பொய்யாம். ஆதலால் இவர் பரம நாஸ்திகராம். உலோகாயுக நாஸ்திகருக்கு உலகு மெய், கடவுள் பொய். இந்தப் பரம நாஸ்திகருக்கு உலகும் பொய், கடவுளாகிய சிவனும் பொய். இப்படிப்பட்ட பரம நாஸ்திகருடைய சம்பந்திகளும் பரமநாஸ்திகராய்ப் போவார்கள். இவர் சொல்லைக் கொண்டே இவ்வளவுதூரம் பேசினோமேயன்றி, நாம் ஒன்றும் புதிதாய்ப் பேசவில்லை.

உருவத்தைப்பற்றி இதுகாறும் பேசினோம். இனி சத்த பரிச ரூப ரச கந்தங்க ளெல்லாவற்றையு மிவ்வாறு ஆராய்ந்திடின் அவையும் அந்தக்கதியாம் என்பதற்கு ஆக்ஷேபமில்லை. கண்ணுக்கு ரூபம் அனுபவம்; சத்த பரிச ரச கந்தங்கள் அனுபவ மில்லை; அதனால் சத்த பரிச ரச கந்தங்கள் பொய்யாம். செவிக்குச் சத்தம் அனுபவம்; பரிச ரூப ரச கந்தங்கள் அனுபவமில்லை; அதனால் பரிச ரூப ரச கந்தங்கள் பொய்யாம். நாசிக்குக் கந்தம் அனுபவம்; சத்த பரிச ரூப ரசங்கள் அனுபவ மில்லை; அதனால் அவைகள் பொய்யாம். நாவிற்கு ரசம் அனுபவம்; சத்த பரிச ரூப கந்தங்கள் அனுபவமில்லை; அதனால் அவைகள் பொய்யாம். தேகத்துக்குப் பரிசம் அனுபவம், சத்த ரூப ரச கந்தங்கள் அனுபவ மில்லை. அதனால் அவைகள்

பொய்யாம். இப்படிச் சத்த பரிச ரூபரச கந்தங்கள் பொய்யான போது அவைகளைக் குணங்களாக வுடைய ஆகாயம் வாயு தேயு அப்பு பிருதிவி இவைகள் பொய்யாம். இவைகள் பொய்யானபோது இவைகளையே பொருளாகக் கொண்ட வுலகும் பொய்யாம்.

## உலகுபொய்யென்னும் பக்ஷத்துக்கே கானனீர் உவமானமென்பது.

"பேய்த்தேரை யங்கீகரித்த இருதிறத்தவரும் ஒரே யபிப்பிராயத்தைக் கொள்ளாமையால் ஒருகருத்தே அதற்குள்ளதாக மயங்கித் தமது கருத்தையே தாயுமானவர் தழுவியதாகப் பிதற்றியது நிஸ்புருஹமாயதென்க" என்று கூறி, தாயுமானவர் இவரது கருத்தை யனுசரித்ததாக வீண் பிரமை கொள்ளுகின்றார். அவர் கருத்து இவர் கருத்து எனத் தந்திரமாய்ப் பேசித் தப்பப் பார்க்கின்றனரே யன்றி, உலகு அசத்து என்று பலவருஷகாலங்களாகக் கூறியதைத் தடுத்துச் சத்துத்தானெனத் தாபித்தன ரில்லை. உலகு சத்தென்னுங் கொள்கையை மறுத்து ஐந்து வருஷ காலங்களாக இப்பிரமவித்தையில் எழுதப்பட்டு வருகின்ற தென்ப தியாவரு மறிந்த விஷயம். அதை நிராகரணஞ்செய்து சத்து எனத் தாபிக்க வகையில்லாது, தாயுமானவர் அவரை யனுசரித்துப் போயினரா? இவரை யனுசரித்துப் போயினரா வென்று போக்குக் காட்டி. அதை மறக்கச் செய்யப் பார்க்கின்றார். இனித் தாயுமானவர் இவரது சித்தாந்தத்தை அனுசரித்து உலகைச் சத்திய மென்றாரென்பது அவல வார்த்தையினும் அவல வார்த்தையாய்ப் போனமையான் இவரெழுதிய 'பிதற்றல்' இவரையே காணியாட்சியாகக் கொண்டு விட்டதென்க.

"இனிப் பாலைநிலத்திற்றாக்கிய சூரியப்பிரகாசம் நேத்திர காந்தியோடு சம்பந்தப் பட்டபோது பேய்த்தே ருண்டாகிறது. இதனோடுவமித்துப் பூர்வ பக்ஷிகள் கூறும் உலகம் எதனோடு சம்பந்தப்பட்டபோ துண்டாகிறது? பிரமத்தைத்தவிர இரண்டாவது வஸ்துவை அங்கீகரியாத பானுமூர்த்திக்கு அப்பிரமத்தோடு மற்றொன் றின் சம்பந்தங்காட்டி யுலக முதித்தவிதத்தை நிரூபித்தல் கஷ்டசாத்தியமென்க" எனக்கூறி யிவரது மருட்டன்மையையும் அத்துவிதசித்தாந்தம் அறியாத்தன்மையையும் பரக்கக்காட்டினார். இவ்வாறு கஷ்டசாத்தியம், கஷ்டசாத்தியமென்று சொன்னவைகளை யெல்லாம் துகள் துகளாகக் காற்றிற் பறக்கவிட்ட அத்துவிதிகளுக்குத் துகளினுந் துகளான இவ்வொரு துகள் வரவா? செலவா? இதில் கோணத்தாருடைய தெரியாமையே மிஞ்சியிருக்கின்றமையால் அந்தத் தெரியாமையைத் தெரியாமை யெனக் காட்டப் போகின்றோமேயன்றி மற்றப்படி அதில் விஷயம் ஏதுமில்லை கயிற்றை யரவென அறிபவனுக்கு அச்சம் நடுக்க முதலியன வுண்டாமேயன்றி அதனுண்மையை யுணர்ந்தவனுக்கு அவையுண்டாகவேண்டிய அவசியமில்லை. அது போல வேதாந்த சாஸ்திர விசாரணை யில்லாதவர்க்கு விஷயந்தெரியாமையால் அதி லேதோ ஆட்சேப மிருக்கிறதாய்ப் புலப்படுமே யன்றி மற்றவர்க்கு அங்ஙனம் புலப்படாது. 'பாலைநிலத்திற்றாக்கிய சூரியப்பிரகாசம் கேத்திர காந்தியோடு சம்பந்தப்பட்டபோது பேய்த்தேருண்டாகிறது' என்ப துண்மையானால் தெளிவுண்டாய்க் கானனீர் பொய்யெனத் தேர்ந்தபோது சூரியப்பிரகாசமும் நேத்திரகாந்தியும் இல்லையோ? தூரமாயிருக்கிறபோது கானனீர் தோன்றுகின்றது.. நெருங்கினாற்

றோன்றவில்லை. நெருங்கிய போது சூரியப்பிரகாசமும் நேத்திர காந்தியும் இல்லாமற் போய்விட்டனவோ? அப்போது இருள் வந்து மூடிக்கொண்டதோ? சூரியப் பிரகாசமும் நேத்திரகாந்தியும் சம்பந்தப் பட்டபோது கானனீர் உண்டாவது நிஜமானால் அது உண்டான போதெல்லாம் கானனீர் உண்டாமென்று சொல்ல நேரிடும். இதில் 'நேத்திர காந்தியோடு' என அடிப்பட்டு ஆழக்குழியில் புதைந்து போன சொல்லொன்றை மறுபடியும் எடுத்துச் சொல்லுகின்றார். நேத்திரத்துக்கு ஒளியுண்டென்கிற சொல் இவருக்குப் பித்துச்சொல்லாய் முடிந்து விட்டது. சோம. நாய்க்கரும் கோயமுத்தூராரும் பிறரும் இவ்வாறு சொல்லிவிட்டுப் பட்டபாடு இவரறிந்திலரோ? அதற்கு மறுமொழி கூறாது மீண்டும் நேத்திரத்துக்கு ஒளியுண்டெ னும் பித்துமொழியைப் பித்துத்தனமாய்ப் பேசுவது பித்துத்தன்மையே யாம். இந்தப் பித்துத்தன்மையொழிய எத்தனைபேர் மருந்து கொடுத்துந் தீரவில்லை. இந்தப் பித்து வியாதி இடையில் பிடித்ததன்று; ஜன்மத்திலேயே யுண்டு. அதுவு மிவர் பரம்பரை க்கே யுண்டு. ஆதலால் அது கொஞ்சத்தில் தீராது. நிற்க, இந்தவுவமானம் வெகு சரியானது போல வைத்து, 'உலகம் எதனோடு சம்பந்தப்பட்டபோதுண்டாகின்றது?' என்கிறார். இதனால் உவமான உவமேயப் பொருத்த மிவர்க்குத் தெரியாதெனத் தெரிகின்றது. சிவனிடத்தில் உலகு தோன்றுகின்றது என்கிற வுவமேயத்துக்குக் கானலினிடத்தில் நீர்தோன்றுகின்றது என்னும் உவமானங் கூறப்படுகின்றது. அந்த வுவமான வுவமேயம் வரையில் தோஷமுண்டா? ஒருவஸ்துவினிடத்தில் மற்றொரு வஸ்து தோற்றும் என்பதுமட்டில் உவமானம். முத்தைப்போல் பல்லென்றால் வெண்மைக்கும் பிரகாசத்துக்கும் உவமானமேயன்றி மற்றப்படியன்று. அதுபோல வுண்மைப் பொருளினின்றும் உண்மைப்போலிப்பொரு ளுண்டாம் என்பது மட்டில் உவமானம். இதன் படியே கானலினிடத்தினின்றும் நீர் தோன்றுகின்றது. இந்த வுவ மானத்தின்படி பிரமத்தினின்றும் உலகு தோன்றுகின்றது. இம்மாதிரிக் கேள்வி சோம.நாய்க்கர் 1838௵ சூன்மீ 9உ இந்துஜன பூஷணியில் கேட்டதற்கு இந்தப் பிரமவித்தையிற்றானே "ஓர் நண்பர்" என்பவர் அதே வருஷம் ஆகஷ்டுமீ 31உ பதில் விடுத்திருக்கிறார். அந்தப்பதில் வருமாறு: - "பரவஸ்துவின் கண் உலகம் தோற்றல் மாத்திரம் என்பதற்குக் கயிற்றினிடத்து அரவு உவமானமுரைத்தாம். இது சத்துப்பொருளில் அசத்துப்பொருள் தோற்றல் மாத்திரம் என்பதுவரையில் உவமானம். கயிறுஸ்தானத்தில் பரவஸ்துவும், அரவுஸ்தானத்தில் சேதனாசேதன வுலகமுமாக வைத்துக்கொண்டால் சங்கைதோன்றாது, சத்தான பரவஸ்துவின் கண் அசத்தான அல்லது சத்துப்போலியான சேதனா சேதனவுலகம் தோற்றுகின்றதென்ப தற்கே கயிறு அரவு திருட்டாந்தம். உவமான மேகதேச மென்பதியாரு மறிந்த விஷயமே" யாம். இன்னும் அனேகமுறை இதுவிஷய.மாகப் பலர் கூறியிருக்கின்றார்கள். இதுமாத்திரமா? சபாபதிநாவலரான பரசமயகோளரியார் "கயிற்றுக்கும் அரவிற்குங் கோணி நீண்டு கிடத்தல் முதலிய இலக்கண வொப்புமையால், ஆண்டு ஒன்றை யொன்றாகத் திரியக்காண்டல் பொருந்தும். ருந்தும். அதுபோல, சித்தாகிய பிரமத்தை ஜக ஜீவ பரங்களாக அங்ஙனந் திரியக்காண்டற்குத் தம்முள் ஒப்புமை யின்மையின், அதனையும் அவ்வாறு திரிபுக்காட்சி யென்றல் பொருந்தாமை யறிக" என்று கூறியதற்காக இப்பிரம வித்தியாவில் வந்து கொண்டிருக்கும் "வேதாந்தசங்கை நிவாரணம்" என்னும் பதிலிலும் அதற்குச் சமாதானம் வரைந்திருக்கின்றது. கிறிஸ்தவர் மாதிரி இவரும் இவர் மதஸ்தரும் பதிலைக் கவனிப்பதில்லை. எழுதியதையே யெழுதிக்

கொண்டிருப்பார்கள். மனத்திலிருந்து தோற்றும் சொப்பனவுலகு வேறு எந்தப் பொருளோடு சம்பந்தப்பட்டுத் தோன்றிற்று? வேறு ஒரு சம்பந்தமுமில்லாது தோன்றியது போலப் பிரமத்தினின்றுந் தோன்றிய வுலகும் வேறொரு சம்பந்தமு மில்லாது தோன்றிற்றென வறிந் தடங்கக் கடவர். எது எதனிடத்து அடங்கி யிருக்கின்றதோ அது அதனிடத்தினின்றும் தோன்றும். கயிற்றின் கண் அரவு அடங்கியிருக்கின்றமையால் அது தோன்றுகின்றது. எது எதன்கண் சத்திரூபமாய் அடங்கி யிருக்கின்றதோ, அது அதன் கணின் றுந் தோன்றும். ஒவ்வொரு பொருளின் கண்ணும் நியமசத்தி யுள்ளது. அது வெளிப்படும்போது காரியமெனச் சொல்லப் படுகின்றது. நியமசத்தி யிருப்பதினாற்றான் எந்தக் காரியஞ்செய்ய விரும்புகின்றார் களோ, அந்தக் காரியம் சத்திரூபமா யடங்கியிருக்கும் காரணப் பொருளையே தேடுகின்றார்கள். இதற்குச் சாக்ஷி வஸ்திரம் நெய்வோர் பஞ்சையும் கடம் வனைவோர் மண்ணையும் தேடுவதே போதுமானது. அதுபோல ஜக ஜீவ பரங்கள் சத்திரூபமாய்ச் சிருட்டிக்கு முன் பிரமமான சிவனிடத்தி லடங்கிச் சிருட்டிகாலத்தில் வெளிப்படுகின்றன. இதற்கு வேறு சம்பந்தம் வேண்டாம். இந்த வளவு தெரியாமல் வீண் துவேஷபுத்தியால் (சமாதானமுள்ள) வீண் கேள்வியைக் கேட்டுச் சமாதானம் வந்தகாலத்தில் தலை குனிகின்றார். இனி வரும் ஆட்சேபம் இன்னும் வெகு வினோதமானது. "பேய்த்தேர் ஒருவராலும் அனுபவிக்கமுடியாது. இவ்வுபமானத் தாற் சாதிக்க இவர் தேடிய வுபமேயமாகிய வுலகம் யாவருக்கும் அநுபவ வேத்ய மானது" என்றதிலுள்ள குற்றம் இவர்க்குப் புலப்படாமையால் கபடில்லாமல் கேட்டுவிட்டார். "உள்ளபடியே வேதாந்திகள் இதற்குச் சமாதானஞ் சொல்ல மாட்டார்கள், மாட்டாராகவே இரட்டைக் கொடி போட்டுவிடலாம்" என்று இரட்டைக் கொடி தைத்தும் வைத்திருப்பார். அது வீணாய்ப் போமே யென்றுதான் அனுதாபப்படுகின்றோம்! இவர் கேட்ட கேள்வி வேதாந்தம் படித்தவர் கேட்கும் கேள்வியல்ல; வேதாந்தம் படித்தது போலவும் அதிலுள்ள விஷயங்க ளெல்லாம் தெரிந்தது போலவும் மனப்பா லருந்தி வேதாந்தங் குற்றமுள்ளதாய்க் காட்டி யெழுதி வைத்திருக்குஞ் சுவடியைப் படித்து, அதை மெய்யென்று நம்பியவர் கேட்குங் கேள்வியாம். இவர் மாத்திரமன்று; இவரைச் சார்ந்தவ ரெவருடைய வியற்கையும் இதுவே யாமென்க. சுயஞான மின்றியும் சுய ஆராய்ச்சியின்றியும் அத்துவித ஆக்ஷேபஞ் செய்ய வருகின்றமையால் இவருடைய ஆக்ஷேபங்களுக்குச் சமாதானஞ் சொல்வது அத்வைதிகளுக்கு மிகச்சுலபமாம். விஷயமாகப் பழைய பிரமவித்தியாவில் 'உலகம் சத்தா? அசத்தா?' என்னும் விஷயத்திலும், 'சங்கராசாரியார் அவதார மகிமை' யிலும் 'வேதாந்தசங்கை நிவாரண' த்திலும் நன்றா யெழுதப் பட்டிருக்கின்றது. ஆயினும் இவ்விடத்திலும் சிறிது எழுதுகின் றோம். பேய்த்தேர் கானனீர் உபமானம்; உலக உபமேயம். கானலினிடத்து நீர் தோன்றுவதுபோல் உலகு தோற்றுகின்றது.. சிவன் திருக்கு; உலகு திருசியம். திருக் கான சிவனிடத்துத் திருசியமான வுலகு தோற்றுகின்றது. இடையிலனுபவ வேத்தியமென வொன்று கூறுகின்றார். அனுபவ வேத்தியம் யாருக்கு? ஜீவனுக்கு. ஜீவன் உலகப்பொருளில் சேர்ந்துவிட்டமையால் ஜீவன் திருசியமாய்விட்டான். உலகம் என்பது சேதனம் அசேதனம் ஆகிய இருபொருளும் சேர்ந்ததென்பதற்கு, "அகரமுதல வெழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றேயுலகு" என்னும் திருக்குறளே போதுமான சாட்சியாம். இதில் உலகு என்பதற்குப் பொருள் சட பூதங்களுடனே யுயிரும் அடங்கிவிட்டமையால் பஞ்சபூத சடமும் அதையுணரும் உயிரும் ஆக

விருபொருளுஞ் சேர்ந்து உலகாகி, சிவத்தினிடத்தே (கானலின் கண் நீர் போல்) தோற்றுகின்றது. சேதனா சேதனம் சிவனிடத்துப் போலிச்சத்தாய் நிகழ்கின்றன வென அத்வைதிகள் கூறின் சேதனமானவுயிர் அசேதனத்தை யறிகின்றமையால் அசேதனம் உண்மையென்கிறார். இது எப்படியிருக்கின்றதெனின் கானலினிடத்து நீர் பொய்யென்றால் நீரிலுள்ள வொரு அலை மற்றொரு அலையுடனே மோதுவதால் நீர் உண்டென்று சொல்வதுபோலவும் சொப்பனவுலகு பொய்யென்றால் அச்சொப்பன வுலகில் ஒரு மனிதன் ஆகாரம் புசித்தானாயின் புசித்தது கொண்டு சொப்பன வுலகு மெய்யென்று சொல்வதுபோலவும் இருக்கின்றன. சிவனிடத்துச் சேதனா சேதன வுலகு பாரமார்த்திக சத்தியமன்று; வியாவகாரிக சத்தியமாம். எது அசத்தோ அதனுள் ஒன்றுக்கொன்று அனுபவேத்தியமானது கொண்டு அதைச் சத்தியமென்று சொல்லப்படாது. அப்படிச்சொல்லுங்கால் சொப்பனவுலகும் சத்தியமெனச் சொல்ல நேரிடும். ஆகாயமலர் மலடிமகன் ஆகிய இருபொருள்களும் வியாவகாரிக அசத்தியம். இச்சாக்கிர வுலகும் அதன் வியாபாரமும் வியாவகாரிக் சத்தியம். இதைப்போல ப்ரம்ம சொரூபமான துரியசிவன் பாரமார்த்திக சத்தியம், இச்சாக்கிரவுலகு பாரமார்த்திக அசத்தியம். இச்சாக்கிரவுலகை நோக்க ஆகாய தாமரை முதலிய பொருள்கள் எங்ஙனம் வியாவகாரிக அசத்தியமோ, அங்ஙனமே, சிவனை நோக்க இச்சாக்கிரவுலகு பாரமார்த்திக அசத்தியமாம். அங்கங்கு அததில் மாறிப் பேசப்படாது. சொப்பன ப்ரபஞ்சத்தில் அனுபவிக்கும் சத்த பரிச ரூப ரச கந்தங்கள் அதுவரையி லுண்மையென்றே சொல்லவேண்டும், சொப்பனத்தில் நெருப்புச் சுடுமேயொழியக் குளிராது. நீர் குளிருமேயொழியச் சுடாது. இவற்றில் ஒன்றை யொன்று மாற்றிச் சொல்லப்படாது. மாற்றவும் இசையாது. அங்ஙனமே சொப்பனத்தில் சத்த பரிச ரூபாச கந்தங்கள் அனுபவிக்கப்படினும் அனுபவிப்பவர் களும் அவர்களுடைய அந்தக்கரண புறக்கரணங்களுமுள்ள சகல ஜீவர்களும் அவர்களாலனுபவிக்கப்பட்ட சத்த பரிச ரூப ரச கந்தங்களான வுலகமும் எங்ஙனம் இச்சாக்கிரத்தை நோக்கப் பொய்யென்று சொல்லப்படுகின்றனவோ, அங்ஙனமே இச்சாக்கிரவுலகத்தை அனுபவிப்பவர்களும் அவர்களுடைய அந்தக்கரண புறக்கரணங் களுமான சகல ஜீவர்களும் அவர்களால் அனுபவிக்கப்பட்ட சத்த பரிச ரூப ரச கந்தங்களான வுலகும் துரியசிவனை நோக்கப் பொய்யாம். இச்சாக்கிரத்தை நோக்கச் சொப்பனவுலகு பொய்யும், சொப்பனவுலகை நோக்கச் சாக்கிரவுலகு மெய்யு மானாலும் துரிய சிவனை நோக்க யாவும் பொய்யாம். கயிற்றரவுங் கானனீரும் சொப்பனவுலகும் அவ்வக்காலத்து உ.ண்மையாயிருந்தாலும் அனுபவமானாலும் உண்மையாயிருந்த காலத்திலும் அனுபவமாயிருந்த காலத்திலுங் கூட அவைகள் எப்படிப் பொய்யோ, அப்படியே உண்மையா யிருந்த காலத்திலும் உண்மையாய் அனுபவப்பட்ட காலத்திலும் இச்சாக்கிரவுலகு பொய்யாம். இப்போது உண்மையா யிருக்கின்றதே; அனுபவமாயு மிருக்கின்றதே ஆதலால் இச்சாக்கிரவுலகை மெய் யென்று சொல்லுகின்றோமெனச் சொல்லப்படாது. துவிதிகள் விசாரணை யில்லா மையாலும் உலக அவாவினாலும் அப்படிச்சொன்னாலும் அத்துவிதிகள் அங்ஙனஞ் சொல்லமாட்டார்கள். அனுபவவேத்திய மென்பதொன்றைக்கொண்டே யுலகு உள்ள தெனச்சாதிக்கப்படாது. உலகு உள்ளதென்பதற்கு ‘அனுபவவேத்தியம்' என்பது ஒரு பெரிய காரணமாகமாட்டாது. அனுபவேத்யமாவதே உண்மைக்குக் காரணமாயின் கஞ்சா அபின் முதலிய லாகிரிவஸ்துக்களைத் தின்பவர்க்கும் சன்னிதோஷங்

கொண்டவர்க்கும் காணப்பட்ட வுலகும் உண்மையென்றங்கீகரிக்க வேண்டும். வேதசாஸ்திரங்க ளெல்லாவற்றிற்கும் ஷெ நூல்களில் சொல்லப்பட்ட. மகாரிஷிக ளுடைய வாக்குகளுக்கும் யுக்தி அனுபவங்கட்கும் விரோதமாக வுலகு உண்மை யென்று கூறவந்தமையால், இந்த அரக்கோணவாசியை நாம் ஒரு சிறு துரும்பாய் நினைத்து விடை பகர்ந்தோம். இவர் செய்யும் எந்த ஆக்ஷேபமும் நமக்குச் சிறு துரும்பு தான்.

## உலகு அநீர்வசனியமென்றே சாதிக்கப்படுகிறதென்பது.

“பாநுமூர்த்தியாகிய நமதன்பர் காணப்படும் இவ்வுலகத்தை வெறும் பொய் யென்று சாதிக்குங்கால், தேகேந்திரியாதிகளைத் தாங்கியிருந்தே சாதிக்கிறார். இவருக்குத் தேகாதிகளில்லாதபோது என் செய்வார்? ஒருவிஷயத்தைப் பேசுவாரா? எழுதுவாரா? தநுகரண புவனபோகங்களாகிய காரியங்களே யுலகமாகையால், இதனை யில்லாததாய்ச் சாதிக்கும் இவரது வார்த்தையும் இல்லாததாகிய பேய்த்தேராயழியும்" என அபாண்டம் சொல்லி, பொய் பேசுவதில் முதற்றாம்பூலம் வாங்குவேமென முந்துகின்றார். வெறும் பொய்யென்று பாநுமூர்த்தி சொல்லா திருக்கவும், வேதாந்திகள் உலகை வெறும் பொய்யென்று சொல்லுகிறார்களென அபத்தம் பேசிய சோம. நாய்க்கரை நாம் ஒவ்வொரு முறையிலுங் கண்டித்திருக் கவும் வேதாந்த நூல்களெல்லாம் பொய்யுமல்ல, மெய்யுமல்ல, இரண்டுஞ்சேர்ந்த பொய் மெய்யுமல்ல, இவைகளுக்கு விலக்ஷணமென்றும் அநிர்வசனீய மென்றும் கோஷிக்கவும் பொய்யென்று சாதிப்பதாய்ச் சொல்வது புத்திமான்களுக்கழகாமா? காம் கிளிப்பிள்ளைக்குச் சொல்வதுபோல் பன்னிப்பன்னிப் பன்முறையும் எழுதித் தொலைத் ருக்க, பின்னும் வெட்கமின்றி வெறும் பொய்யென்று சொல்வதாய் அதிலும் சாதிப்பதாய் வரைவது தோல்விக்கு இலட்சணமாம். இவர், அத்துவித சாஸ்திரார்த்தங்களை மாறுபாடாக ஜனங்களுக்குச்சொல்லி அதில் துவேஷ புத்தியை யுண்டாக்குவேமென்னும் விரதம் பூண்டிருப்பதாய்த் தெரிகின்றது. இல்லாவிடில் ஒவ்வொரு விஷயங்களிலு மிவ்வாறு பேசுவாரா? “தான் கெட்டது மன்றிச் சந்திரபுஷ்கரணியையுங் கெடுத்தான்” என்பதற்கிணங்க, இவர் கெட்டுப் போவதுமன்றி, மற்றவரையுங் கெடுக்கக் கங்கணங் கட்டிக்கொண்டிருப்பது விசனிக்கத்தக்கதாம்! ஒருவன் மூக்கறுப்புண்டு அதனால் அவமானப்படுவது சகியாது பிறரையும் மூக்கை யறுத்துக்கொள்ளச் செய்யுமவரைப்போல, ஜந்மாந்தர பாபவிசேஷத்தால் இவர் தான். அத்துவித விரோதியாய்த் துவேஷித்தாலும் பிறரையும் அவ்வாறு அத்துவிதத் துவேஷிகளாக்குவது நியாயமன்று. ஆதலால் கோணத்தார் சகவாசம் ஒருபோதும். ஒழுங்குபடுத்தாது. கோணலாகவே செய்யும். உலகை மலடிமகன் வான்மவனைப்போல வெறும் பொய்யெனச்சொல்லாமல் அநிர்வசனீயமென்று சொல்வதாலும் அவ்வுலகத்தின் அம்சமான தேகேந்திரியாதி களைத் தாங்கலாம்; பேசலாம்; எழுதலாம். இவைகளை இல்லாததாய்ச் சாதித்தா ரொருவருமில்லை. ஆதலால் பாநுமூர்த்தி யாருடைய வார்த்தை யில்லாததாய்ப் போகாது; உள்ளதாகவே யாகும். இவருடைய வாக்கியத்தில் 'இல்லாததாகிய பேய்த்தேரா யழியும்' என்பது ஒன்று. இல்லாத பேய்த்தேர் எப்படி அழியுமோ அது நமக்குத் தெரியாது. கானனீரை அழிக்கவல்ல சாமர்த்தியர் இவரென இனி யாவரும்

அறிவார்கள். கானனீர் என வொன்றிருப்பதனால் அனேக ஜனங்கள் உண்மையான நீரென நம்பி, அதை யருந்த வோடுகின்றார்கள். இன்னும் மான் முதலிய மிருகங்களும் ஓடியலைகின்றன. இவர் கொஞ்சம் புண்ணியங் கட்டிக்கொள்வாரா னால் கானனீரையெல்லாம் அழித்துவிடுவார். அது இவருக்கு வெகு உபகாரமா யிருக்கும். அது மாத்திரமா? கயிற்றரவைக் கண்டும் அநேகர் பயந்து நடுங்கி யவஸ்தைப்படுகின்றார்கள். கோணத்தார் அதையும் அழித்துவிடுவாரானால் உபகாரத்தின்மே லுபகாரமாயிருக்கும். இந்த வேலை முடிந்தபிறகு முயற்கொம்பு மலடிபுத்திரன் ஆகாய தாமரை யிவைகளையும் அழிக்க இவரை நாம் கேட்டுக்கொள்ளலாம்.

## பிரம உருத்திராதியர் பொய்யன்று, அநிர்வசநீயமென்பது.

"தாயுமானவர் 'நான் முகத்தேவே நின்னானாட்டிய அகிலமாயை கான் முயற்கொம்பே யென்கோ கானலம் புயலேயென்கோ, வான் முகமுளரியென்கோ மற்றென்கோ விளமபல்வேண்டும்' என்று கூறியருளினர். இதில் உலகம் பிரமதேவ னால் உண்டு பண்ணப்பட்டது. இதனை யில்பொருளென்றிடல் யாங்ஙனம்? இஃது இல்பொருளாயிடின் இதனைப் பிரமன் படைத்தது பொய்யாம்." எனக்கூறி, அத்துவித நூல் அறியாதவரில் முதல் பட்டம் பெற்றவரெனக் காட்டிக் கொண்டார். உலகு இல்பொருளெனச் சொல்லப்படாதென் றிவ்விடத்திற் சொன்னார். மற்றொரு இடத்தில் உலகுக்கு உவமானமாகக் கானனீர் எனச்சொல்லி, அந்தக்கானனீர் தோற்றமென்றும் அதை யனுபவிக்க முடியாதென்றும் சொன்னார். உவமானமாய்ச் சொல்லும் கான்னீர் தோற்றம் என்றும் அது அனுபவத்துக்கு வாராதென்றுஞ் சொன்னதில் அது இல்பொருளென விளங்கவில்லையா? அங்ஙனமாக அதை யுவமேயமாகப் பெற்ற வுலகுமாத்திர மெங்ஙன முள்பொருளாகும்? தாயுமானார் உலகத்தை மாயையென்று இக்கவியில் கூறினார். அவரே “அண்டபகிரண்டமும் மாயாவிகாரமே, அம்மாயை யில்லாமையேயாம்" என்னுங் கவியில் மாயையை என்னுங் கவியில் மாயையை யில்லாமை யென்கிறார். அன்றி, ஷை கவியில் உலகுக்கு முயற்கொம்பு கானனீர் ஆகாயதாமரை இவைகளை யுவமானமாகக் கூறுகின்றார். முயற்கொம்பு கானனீர் ஆகாயதாமரை இவைகளை யுள்பொருளென எந்த விவேகியுஞ் சொல்லமாட்டானே. அவைகளில் முயற்கொம்பு ஆகாய தாமரைகள் இவருக்கும் இவர் மதத்தவர்க்கு முடன் பாடா? இல்லையே. உடன்பாடற் றதும் உலகில்லதென்று சொல்லும் வேதாந்திகள் சொல்வதுமான ஷை முயற்கொம்பு ஆகாயதாமரை திருட்டாந்தங்களைச் சொல்வதினாலும் “முற்றுமாயமாய், பொய்யார் உலகம், சகமனைத்தும் பொய்யெனவே, ஜகம் அனைத்தினையும் பொய் பொய், ஞாலத்தை மெய்யெனவே நம்பி நம்பி, பொய்யுலக வாழ்க்கை, பொய்யெல்லாம் ஒன்றாய்ப் பொருத்திவைத்த பொய்யுடலை மெய்யென்றால் மெய்யாய்விடுமோ, உண்டு போலின்றாம் உலகை, பொய்யுலகும் பொய்யுறவும் பொய்யுடலும் பொய்யெனவே” என இவ்வாறு பல செய்யுள்கள் கூறியிருப்பதால், தாயுமானவர்க்கு உல கின்றென்பதே அபிப்பிராயமாம். இல் பொருளானால் உலகத்தைப் பிரமன் படைத்ததும் பொய்யென்றும் படைத்தது பொய்யானபோது பிரமனும் பொய்யா மென்றுங் கூறுகின்றார். படைத்தலையும் பிரமனையும் இல்லையென்று சொல்லப்

படாதென்றுதான அத்துவிதிகள் உலகைச் சதசத் விலக்ஷண அநிர்வசனீய மென்று சொல்லுகிறார்கள். உலகு பொய்யென்றும் பொய்யென்பதற்குப் பொருள் அநிர்வசனீயமேயன்றி மலடி புத்திரன்போ லல்லவென்றும், மலடிமகன், கயிற்றரவு, கானனீர், சொப்பனவுலகு முதலிய பல வுவமானங்கள் சொல்வது அவசர பேதமெ ன்றும் பலபத்திரிகைகளில் சோ. நாய்க்கருக் கிடித்திடித்து எத்தனையோ நாளாகப் புத்தி புகன்றும், பின்னும் மலடி புத்திரனைப்போல் பொய்யென்று சொல்வதாய்ப் பிரமித்து, பிரமன் படைத்தது பொய்யென்றும் அத்துவிதிகள் சொல்வதுபோலக் கூறியகூற்றுக் கூற்றாகவே முடிந்தது. சொப்பனவுலகில் ஒருவன் வீடுகட்டினா னென்னில் அந்த வுலகத்தில் அவ்வீட்டையும் அவ்வீட்டைக் கட்டினவனையும் உண்மையல்லவெனச் சொல்லக் கூடாதாயினும், உண்மை யென்றே சொல்ல வேண்டுமாயினும் மனத்தை நோக்க எப்படிப் பொய்யென்று சொல்லப்படுமோ, அதுபோலச் சிவனை நோக்க இவ் வுலகத்தையும் இவ்வுலகைச் சிருட்டித்த பிரமனையும் பொய்யென்றே சொல்லவேணடும். இவ்வுலகும் பிரமனும் ஒருகாலத் திலிருந்து ஒரு காலத்தில் இல்லாமற் போதலாலும் மலடிபுத்திரனைப்போல முற்று மில்லாமற் போகவில்லை யாதலாலும் அநிர்வசனீயமென்று சொல்லுகிறார்கள் அத்துவிதிகள். எது வியாவகாரிக சத்தியமோ அதுதான் அனிர்வசனீயம். சிவனையுஞ் சத்தாகச் சொல்லி அத்துடனே பிரமனையும் உலகையுஞ் சத்தாகச் சொல்லின் வரும் இழுக்கு யாதென்னின் அங்ஙனங் கூறுமிடத்துச் சிவன் அபரிபூரணப்பொளாய் விடுவாரே, இதற்கு யாது செய்வது? சிவனுக்குப் பரிபூரணஞ் சொல்லுமிடத்து அதில் மற்றப் பொருள்களிருப்ப தெங்ஙனம் அமையும்? சிவனைச் சத்துப் பொருளாய்ச் சொல்லிப் பிரமனையும் உலகையும் சத்து போலியாய்ச் சொன்னால் பொருந்தும். அப்படிச் சொல்லுமிடத்து பிரமனையும் உலகத்தையும் உள்பொருளாகக் கூறுதல் அமையுமா? இந்த விஷயங்களைப் பலமுறை பன்னிப் பன்னி யெழுதி யிருக்கின்றோம். அங்ஙனமாகப் பின்னும் பின்னும் ஆக்ஷேபிப்பதும் அதற்கு நாம் பதில் கூறுவதும் பூர்வபட்சிகளுக்கு அவமானமும் தலை குனிவுமாம். “அவமானம் வந்தாலும் வரட்டும், தலைகுனிவு வந்தாலும் வரட்டும், புதிய ஜனங்கள் அத்துவிதக்கிரந்தங்கள் தோஷமுள்ளதாக அறிந்து கொண்டாற்போதும்" எனக்கருதி ஆக்ஷேபிக்கின்றா மென்னின் இப்படிப்பட்ட அவமானமுள்ளவர்களிடத்தில் நாம் எவ்வளவு நியாயங்காட்டி யெழுதியும் பயனில்லையாயினும் பொதுவாயுள்ள அறிஞர் உண்மை யுணர்ந்து கொள்ளுவார்க ளாதலால் அவர்கள் நிமித்தமே நாம் எழுதுகின்றோம். அதுவே நமக்குப் போதும். இந்தப் பூர்வபக்ஷியைப்பாறி நாம் சிந்திக்கவேண்டுவதில்லை. தாயுமானவர் உலகும் பிரமனும் துரியசிவனைப்போலப் பாரமார்த்திக சத்துப்பொரு ளல்லவென்று காண்பிப்பதற்கே 'மற்றென் கோவிளம்பல் வேண்டும்' எனக் கூறினாரெகை. இவ்வாறு இஃது உண்மையேயாக இதற்குக் கோணல்கட்டுக் கட்டப்பார்க்கிறார் இந்தக்கோணவாசி. அது ஆகாது! ஆகாது!! இவர் உவகு சத்தெனச் சுருதி யுக்தி அனுபவங்களால் ஸ்தாபிக்கும் ஆண்மையைப் பெற்றுப் பிறகு ஷெ செய்யுளைக் காட்ட வருவது உசிதமாகும்.

"வெண்டலைவிழிகைகாலில் விளங்கட நின்றான் யாவன்" எனவும் "விளங்க வெண்ணீறு பூசி விரிசடைக் கங்கைதாங்கி" எனவும் கூறியிருப்பதோடு “அச்சிவனாரது அடையாளங்களை இனிது பிரகாசப் படுத்தியிருக்கின்றனர்” எனவும் கூறியிருக்கின்றார். இப்படிச் சொல்லி விட்டதினால் இவருக்கு வந்த லாபமென்னை?

அத்துவிதிகளுக்கு வந்த நஷ்டமென்னை? நான்கு முகங்களைப் பெற்ற பிரமதேவன் அநிர்வசனீயமாதல்போல வெண்டலைவிழிகைகாலில் விளங்கிடநின்றவரும் வெண்ணீறு பூசிக் கங்கையைத் தாங்கினவருமான வுருத்திரன் அல்லது உருத்திர பேதத்தைக் கொண்டவரும் அநிர்வசனீயமாகின்றனர். இதனால் உருத்திரர் அல்லது உருத்திரபேதத்தைக் கொண்டவர் துரியசிவனைப்போல முக்கால சத்துப்பொரு ளாவரோ? துரியசிவன் முக்காலத்துமுள்ள சத்துப்பொருள். உருத்திரர் உருத்திரபேதப் பொருள்கள் அவ்வக்காலத்துத் துரியசிவனிடத்தினின்றுந்தோன்றிப்பின் அதிலேயே லயமாகின்றன. தோன்றிய பொருள்கள் காரியம்; தோன்றிய பொருள்களுக்கு இடமாயிருந்த பொருள் காரணம். காரியப் பொருள்களெல்லாம் அநிர்வசனீயமென்று சொல்லப்படுதலாலும், அவ்வாறு உருத்திரனும் அநிர்வசனீயமாயிருப்பதாலும், காரணமான துரியசிவனுக்கு வெண்டலை விழி கை கால்களும் வெண்ணீறு சடை கங்கைளுமான அடையாளங்கள் இல்லாமையாலும் பிரமன் எவ்வித நிலைமை யைப் பெற்றிருக்கின்றனரோ உருத்திரனும் அவ்வித நிலைமையினையே பெற்றிருக் கின்றனரென்க. பிரம விட்டுணு உருத்திரர்களில் உருத்திரர் மற்ற இருவரையும் பார்க்க மேற்பட்டவராயினும் மொத்தத்தில் மூவரும் மாயாப்பிரதிபிம்பரென்றறிக. நாமரூபங்களெல்லாம் மாயாசகிதம். உருத்திரனும் உருத்திரபேதப்பொருள்களும் மாயாசகிதம். துரியப்பொருள் மாயாரகிதப்பொருள். அதுபற்றியே

### சூதசங்கிதை எக்கியவைபவ காண்டம் பரசிவசொருப விசாரமுரைத்த அத்தியாயத்தில் 16-வது செய்யுளில்

*மறைமுதல்தனக்குநாமரூபங்கள்மருவுதலில்லையேயெனினும்*
*கறைபறவிளங்குமாயையினாலேகற்பிக்கப்பட்டனவாகும்*
*முறைநமச்சிவனமாதேவன்முற்பெயர்களுருத்திரனாமங்களாகும்*
*மறைபரப்பிரமமுதற்பெயர்பரதத்துவவவிர்வாசகமாமால்.*

என்றும்,

### ஷை பரமவிஞ்ஞானமுரைத்த அத்தியாயத்தில் 6-வது செய்யுளில்

*முன்னும்அவித்தையாற்பசுபேதமும்மொய்வலியமாயையாற்*
*பன்னுபரதத்துவபேதமுங்கற்பக்கப்பட்டது.*

என்றும்,

### ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகத்தில்

*ஒருநாமம் ஒருருவம் ஒன்றுமில்லாற்கு ஆயிரம் திருநாமம்பாடி*
*நாம்தெள்ளேணங்கொட்டாமோ*

என்றும்,

தமக்கு வந்து அநுக்கிரகஞ்செய்த ஈசுவரனுடைய திருமேனிகளை யெல்லாம்

*அந்தமில்பெருமைஅழலுருக்கரந்து*
*சுந்தரவேடத்தொருமுதலுருவுகொண்*
*டிந்திரஞாலம்போ லவந்தருளி*

என்றுங் கூறினாரென்க.

இதனால் துரியப்பொருளை நோக்கப் பிரம விட்டுணு உருத்திரரும் உருத்திர பேதங்களும் மாயாகற்பிதமென்றும் இந்திரஜாலப் பொருளென்றும் விளங்குகின்றன. சொப்பனமானாலும் அதில் இராசனுக்கும் மந்திரிக்கும் பேதமில்லை யெனச் சொல் லப்படாது. அது போல மாயாசகிதரானாலும் பிரமனுக்கும் உருத்திரனுக்கும் பேத மில்லையெனச் சொல்லப்படாது. பேதமிருந்ததுகொண்டே துரிய சிவனைப்போல் உருத்திராதியரைச் சத்தென்று சொல்லப்படாது. உருத்திராதியரிடத்திற் சொல்வது போல் மாயாரகிதமான துரியப் பொருளினிடத்தில் பேசஞ்சொல்லப்படாது. அந்த விடத்தில் ஆண்டானென்றும் அடிமையென்றும் மேலென்றுங் கீழென்றும் பெரிதென் றுஞ் சிறிதென்றும் நல்லதென்றுங் கெட்டதென்றும் இன்னும் எந்த வித வித்தியாச முஞ் சொல்லப்படாது. அது அகண்டபரிபூரணப் பொருளாகலின் இன்னொரு பொருள் அங்கிருக்க இடமேயில்லை. இருக்கும் என்றால் அந்தவிடம் வரையில் ஷை துரியப்பொருளில்லை யென்று சொல்ல நேரிடும் போது மகத்தான தோஷங்கள் வந்துவிடும். ஆதலால் அவ்வாறு சொல்லவேபடாது. பேதஞ் சொல்லவேண்டிய இடமெல்லாம் மாயைக்குக் கீழ்ப்பட்ட விடத்திலே தான். அதுபற்றித்தான் சூதசங்கிதையில்

"முன்னு அவித்தையாற் பசுபேதமும் மொய்வலிய மாயையால், பன்னுபரகத்துவ பேதமுங் கற்பிக்கப்பட்டது"

எனக்கூறப்பட்டிருக்கின்றது. எங்கு ஆண்டான் அடிமை பேத முளதோ அங்கு மாயை யுண்டு, எங்கு மாயை யில்லையோ அங்கு ஆண்டான் அடிமை பேதமில்லை. தாயுமானவர் பிரமனை அடிமையாகவும் நாம ரூப சகிதமான உருத்திரசிவனை ஆண்டானாகவும் கூறியது மாயாசகிதத்தில். மாயாரகிதத்தில் இந்தப் பேதங் தலை யெடுக்காதேன்பது உறுதியாம்.

## வேதசாஸ்கர சம்மதம் நாமருப மெல்லாம் பேய்த்தேரென்பது.

அதன் பின்னர் "இவைகளைப் பேய்த்தேரென்று பேசி யொழித்தாரில்லை" என்கிறார். இதுவரையில் பேசியவற்றால் அவைகள் பேய்த்தேராகவே முடிந்தமையான் அல்லவையென்றதே பேய்த்தேராயிற்றென்க. "நமதன்பருக்கு நாம ரூபங்களெல்லாம் பேய்த்தேராகையால்" என்கிறார். நாம ரூபங்களெல்லாம்

பானுமூர்த்திக்கு மாத்திரம் பேய்த்தேரன்று. வேதசாஸ்திரங்களெல்லாவற்றிற்குமே. பேய்த்தேராம்.

## பிரமகீதை சாந்தோக்கிய வுபநிடதம்.

*உண்மையிற்பேதமின்றியிருந்தேயும்பேதமென்னல்*
*வெண்மையேசெய்தரூபவியாபாரந்தோற்றங்கேடு*
*பண்வயினிவற்றாற்கொள்ளும்பயனாமரூபம்வேறு*
*முண்மையிலெல்லாம்பொய்யாலுண்டாகுமனைத்துமன்றே.* (71)

இந்தப் பிரமாணத்தினால் நாமரூபம் பொய்யென ஏற்பட்டது. இனி யுக்தி அனுபவங்களைக்கொண்டு ஆராய்வாம்: -

கடமானது ஒருருவாயும் கடமென்னும் நாமம் பெற்றதாயுமிருக்கின்றது. அதை விசாரிக்குமிடத்து மண்ணையன்றிப் பொருளில்லை. (இதைப்பற்றிப் பலமுறை சோம. நாய்க்கரை மறுத்து இதுவரையில் அவர் வாய் திறவாவண்ணம் எழுதியிருக்கின்றோம். அதன் விரிவை ஆங்காங்குக்சாண்க.) இதில் காரணமுண்மை; காரியம் பொய். காரியம் பொய்யான போது கடமும் பொய்யாகின்றது. கடம் பொய்யாகின்றபோது கடம் என்னும் நாமமும் அதனுருவும் பொய்யாகாமல் நிற்குமோ? இங்ஙனமே ஒவ்வொரு பொருளையும் விசாரிப்புழிக் காரியமெல்லாம் பொய்யாம். இந்தப் பூர்வபக்ஷியின் கொள்கைப்படி மாயை காரணம்; உலகு காரியம். மண்ணையன்றி யெப்படிக் கடத்துக்குப் பொருளின்றோ, அப்படியே மாயையன்றி உலகுக்குப் பொளில்லை. பொருளில்லாதபோது அதன் ரூபமும் பேரும் பொய்யாய்ப் போகமாட்டோமென நின்று வழக்குச் செய்யுமோ? இங்ஙனமே துரியப் பொருள் காரணம்; பிரம விட்டுணு உருத்திரர் காரியம். காரணத்தை யன்றிக் காரியத்துக்குப் பொருளில்லையென்றபடி துரியப் பொருளையன்றிப் பிரம விட்டுணு உருத்திரர்க்குப் பொருளில்லை. பொருளில்லாதபோது அவர்களுடைய வுருவங்களும் நாமங்களும் பொய் யாகாமற் போகுமோ? துரியப்பொருள் நாமரூப ரகிதமென மாணிக்கவாசக சுவாமிகளும் 'ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமில்லாற்கு' எனத் திருவாய்மலாந்தமை காண்க. எது பொய்யோ அதுதான் பேய்த்தேர். இவரைப்போலன்றித் தாயுமானவர் சூதசங்கிதையையும் மற்ற வேத சாஸ்திரங்களையும் அப்பிரமாணமாகக்கொண்டு அவைதிக சித்தாந்தியானவ ரன்று. அவர் ஷெ பிரமாணங்களையெல்லாம் பிரமாண மாகக்கொண்ட சிவஞானியேயாம். முடிவாக "இவரதெண்ணத்தை யிடித்துத்தகைத்து அப்புறஞ்செல்லும் தாயுமானாரது பேய்த்தே ருபமானத்தை யிவராதரித்தது இவரது வெள்ளறிவின் பயனே யாயதென்க" என்றார். பேய்த்தே ருபமானத்தை யிவர் ஆதரித்தது அவ ரநாதரித்தது என்று போக்குக்காட்டிப் பேசுகின்றாரேயன்றி பேய்த்தேர் அதாவது கானனீர் பொய்யா? மெய்யா? என விசாரிக்க வரமாட்டே னென்று பதுங்குகிறார். இப்படிப் பதுங்குவதற்குக் காரணம்: "கானனீர் பொய் யென்பதைச் சிறுவரும் உணர்வாரே, அதை மெய்யென்று சொன்னால் எல்லோரு ங்குலுங்கக்குலுங்கச் சிரித்து இகழ்வார்களே, அதனால் பவிஷ்போமே, இதை யுபமானமாகக்கொண்ட வுலகமும் பொய்யாய்ப்போமே, அப்போது உலகத்தைச் சத்தியமென்று கொண்டசித்தாந்தத்தின் வாயில் மண் விழுமே, இது வரையில்

வேதாகம புராணாதி நூல்களுக்கு விரோதமாய்ப் பிரபஞ்சத்தை மெய்யென்று சொல்லியும் எழுதியும் பேசியும் வந்ததற்கெல்லாம் மோசம் வருமே, இனி நமதாயுள் நாள் முற்றும் 'தான் பிடித்த முயலுக்கு மூன்றேகால்' என்பதற்கொக்கப் பேசிக் காலத்தைக் கழித்துவிடுவோம்" என்பதே யாமன்றி வேறொன்றுமில்லை. பாநுமூர்த்தியினது அத்துவிதக்கொள்கைக்குத் தாயுமானார் மாறுபடுவாரானால் வேதாகம இதிகாசபுராணாதி நூல்களை யிடித்துத் தகைத்து அப்புறஞ்சென்று வாழும் பேதசித் தாந்தியாவார். ஆதலால் அவரை அவ்வாறு சொல்ல நாம் துணிய மாட்டோம். சுருதியாதிகளில் உலகம் பொய்யென்று சொல்லி, சிறுபிள்ளைகளு மங்கீகரிக்கத்தக்க பொய்ம்மையான கானனீரை யுபமானஞ்சொல்வதுபோல, தாயுமானவரும் உலகைப் பொய்யென்று சொல்லி, அதற்குச் சரியாகப் பொய்யான கானனீரை யுபமானமாகச் சொல்லியிருக்கின்றமையின் தாயுமானாரது உபமானத் தைப் பாநுமூர்த்தி ஆதரித்துப் பேசியது வெள்ளறிவின் பயனன்று; ஒள்ளறிவினும் ஒள்ளறிவின் பயனாம். இந்த அரக்கோணவாசியாரது அறிவோ இவ்வொரு விஷயத்தில் மாத்திரமன்று; இவரெழுதிய எல்லாவிஷயத்திலும் வெள்ளறிவினும் வெள்ளறிவேயா மென்க.

## பரமோபகாரிகளான அத்வைதிகளைத் தூஷித்தல் நியாயமன்றென்பது.

மனிதன், தன்னைக் கழுதை யென்பதுபோல, பசுவாகிய ஜீவன், தன்னைப் பாசமாசுக் கொள்வதுங் குற்றமென முன்னர்க் கூறி நாஸ்திகனை மறுத்தனரன்றோ? மனிதனும் கழுதையும் பின்னப்பொருளானமையின் இவ்வுபமானம் பொருந்தும்.. அவ்வாறு ஜீவான்மாவான பசுவும், பாசமும் பின்னப் பொருளன்றே. இவர் மதப்படி ஒவ்வொரு ஜீவாத்துமாவும் தனித்தனிப் பரிபூரணசத்துப்பொருள்; பாசமும் பரிபூரண ப்பொருள். ஒரு ஆன்ம பரிபூரணப்பொருளில் மற்றொரு ஆன்ம பரிபூரணப் பொருளே யிருப்ப தசங்கதமாக, அனேக கோடி ஆன்ம பரிபூரணப்பொருள் ஒரு இடத்தில் இருக்குமென்பதும் அதேயிடத்தில் பரிபூரணக்கடவுளருக்குமென்பதும அதேயிடத் தில் பரிபூரண பாசப்பொரு ளிருக்குமென்பதும் எப்படிப் பொருந்து மெனக் கேட்டு, அத்துடனே தனித்தனிப் பரிபூரண ஆன்ம பாசவுபமேயத்துக்குத் தனித்தனி அபரிபூரண கண்ட ஏகதேச மனித கழுதை யுபமான மெங்ஙனம் பொருந்து மென நாஸ்திகன் கேட்பானே யாயின், அவனுக்குப் பதில் சொல்ல வழியேது? ஆந்தை போல் விழிக்க வேண்டியது தானே. அப்போது அபயம்! அபயம்!! என அகது விதிகளுடைய திருவடிகளில் சரணாகதி! சரணாகதி!! யெனவந்து விழுந்து, அவர்கள் சொல்லும் யுக்தியை அதாவது கடவுளொருவரே பரிபூரண சத்துப்பொருள், மற்றப் பசு பாசப்பொருள்கள் சத்துப்போலிப் பொருள்களென்று சொல்லும் யுக்தியைக் கேட்டுக்கொண்டு போய்த்தானே சமாதானஞ் சொல்லவேண்டும். இங்ஙனமாக, தமக்குச் சகாயஞ்செய்யும் பரமோபகாரிகளான அத்துவிதிகளைத் தூஷித்தல் நியாயமாமோ? நன்றிமறத்தலன்றா?.

உ
சிவமயம்.

# மாயாவாத சைவ சண்டமாருதம்.

## இரண்டாம் பாகம்.

இனி மகாவிகடதூதன் 8 வது புத்தகம் 29 வது பத்திரிகையி லெழுதிய விஷயத்தைக் கவனிப்பாம்: -

### தாயுமானவர் பாடலும் மடத்தாரும்.

பானுமூர்த்தி அவர்கள் தாயுமானவர் பாடலைத் திருவாவடுதுறை முதலிய ஆதீனங்களில் வாசிப்பதில்லையென்று கூறியதற்கு இவ்வரக்கோண வீரபத்ரமூர்த்தி "அன்னோர் தழுவாமை கொண்டே தாயுமானவர் பாடல் சைவநூலாகாதெனல் அறியாமையாம்" என்றார். அன்னோர் தழுவாமையால் அது இவரது துவைத சைவ நூலாகாதெனல் மாத்திரமேயன்றி, மற்றப்படி தாயுமானார் பாடல் அத்வைத சைவ நூலென்பதற்கு யாதும் ஆக்ஷேபமின்றென்க. இதன்பேரில் "தருமபுர ஆதீனத்து நூலைத் திருவாவடுதுறையாரும், திருவாவடுதுறை யாதீனத்த நூலைத் தருமபுரத் தாரும் தழுவுவதில்லை. இப்படியே திருவண்ணாமலை ஆதீனத்து நூல்களை யேனைய ஆதீனக்காரும், ஏனைய ஆதீனத்து நூல்களை ஷை ஆதீனத்தாரும் தழுவுவதில்லை" என்று கூறி "இதனை யுணர்ந்தவர்கள் தாயுமானவர் பாடலை மடத்தார் அங்கீகரிக்க வில்லையென்று பாநுமூர்த்தி குறைகூறியது அவரது மதியின் குறைவென்றே வருந்துவர்" என்றார். இவரெடுத்துக் காட்டிய வுவமானம் இவருக்கே விரோதத்தை யுண்டாக்குகின்ற தென்புதைக் காட்டுகின்றோம். ஒரு மடத்தார் நூலை மற்றொரு மடத்தார் தழுவுவதில்லை யென்பது உபமானம். எந்த
மடத்தாரும் தாயுமானவர் பாடலைத் தழுவுவதில்லை யென்பது உபமேயம். ஒரு மடத்தார் நூல் மற்றொரு மடத்தார்க்கு எப்படி விரோதமோ, எப்படி அனுசரிக்கப்பட வில்லையோ, அப்படியே தாயுமானவர் பாடல் எல்லா மடத்தார்க்கும் விரோதம்; அதனால் அது எம்மடத்தாராலும் அனுசரிக்கப் படவில்லை யென்பதாம். இதனால் இவர் காட்டிய வுபமானம் எதிர்ப் பக்ஷத்தார்க்குச் சாதகததை யுண்டாக்கியது மாத்திரையேயன்றி, இவர்க்குப் பாதகத்தையு முண்டாக்கி விட்டதென்க. "இனி யுண்மையாக விசாரிக்குமிடத்து எந்தச் சைவாதீனத்தாரும் தாயுமானவர் பாடலை அநாதரவு செய்ததில்லையென அறிக" என்கிறார். இவரது விசாரிப்பு இருவகைப் படும். ஒன்று உண்மை, ஒன்று பொய்யாம். இவ் விரண்டு விசாரிப்பில் மடத்தார் தாயுமானவர் பாடலை அநாதரவு செய்ததில்லை யென்பதை யுண்மை விசாரிப்பில் வைத்துக்கொண்டார். அதனாலேதான் தாயுமானவர் பாடலை அநாதரவு செய்த தில்லை யெனச் சொல்ல நேர்ந்தது போலும். அப்படிச் சொல்ல வந்ததிலும் ஒரு பொடி யிருக்கின்றது. அந்தப்பொடி யாதென்னின் தாயுமானர்பாடலை ஆதரவு செய்கின்றார்களென்று சொல்லாமல் ஆநாதரவு செய்ததில்லை யெனச் சொன்னமை யேயாம். இவ்வாறு சிவஞானபோதம், சிவஞான சித்தியார் முதலிய நூல்களை

அநாதரவு செய்ததில்லை யென்றாவது உண்மையாக விசாரித்ததில் அநாதரவு செய்ததில்லை யென்றாவது சொல்லுவாரா? இதனாலேயே மடத்தார் தாயுமானவர் பாடலை அநுசரிக்கும் விதம் நன்றாய் வெளிப்பட்டமை காண்க.

இவர் உண்மையாக விசாரித்ததில் தாயுமானவர் பாடலை அநாதரவு செய்ததில்லை யென்பது போல, ஒரு மடத்தார்க்குரிய நூலை மற்றமடத்தார் ஆதரவு செய்கின்றார்களா? அநாதரவு செய்கின்றார்களா? என்பதை விசாரித்துப் பார்த்தாரா? அதிலும் உண்மையாய் விசாரித்துப் பார்த்தாரா? திருவண்ணாமலை மடத்தார்க்குரிய சிவசமவாத நூலைத் திருவாவடுதுறை மடத்தார் அநாதரவு செய்யாமல் அங்கீகரிக்கின்றனரா? அப்படியே திருவாவடுதுறை மடத்தார் நூலை அதாவது சிவஞான சுவாமிகளியற்றிய நூலைத் திருவண்ணாமலை மடத்தார் அநாதரவு செய்யாமல் அங்கீகரிக்கின்றனரா? ஒருவர் நூலை மற்றொருவர் தழுவுவ தில்லை யென்பதனால் அங்கீகரிக்க வில்லையென்றேயேற்படுகின்றது. தாயுமான வர் பாடலையோ எந்த மடத்தாரும் அநாதரவு செய்வதில்லை. திருவாவடுதுறை முதலிய மடத்தார் நூல்கள் அவ்வவ் மடத்தாராலே மாத்திரம் ஆதரவு செய்யப் படுகின்றன. இதர மடத்காரால் ஆதரவு செய்யப்படுவதில்லை. ஒரு மடத்தார் நூல் மற்றொரு மடத்தாரால் அநாதரவு செய்யப்பட்டுப்பகைக்கப் படுகின்றமையான் அவ்வவ் மடத்து நூல்கள் அவ்வவ் மடங்களுக்கேயுரியன. உரியனவாயிருப்பதால் அவ்வம் மடங்களை அனுசரிப்பவரும் பலவகைப்படுகின்றனர். அவரி லிவரு மொருவகைப்பட்டவரே யாம். தாயுமானவர் யாவர்க்கும் பொதுவாயிருப்பதால் அவர்பாடல் இவரினத்தவர்க்கே யுரிமையுடையதன்றென்க. திருவாவடுதுறைமடத் தார்க்கும் திருவண்ணாமலை மடத்தார்க்குந் தத்துவவிஷயத்தில் பேதமிருக்கின்றது. திருவண்ணாமலை மடத்தார் சிவசமவாதிகள்; திருவாவடுதுறை மடத்தார் சிவசமத் தை யொப்பாமல் பேதஞ்சொலலுகிறவர்கள். இப்படி யேனைய மடத்தாரும் பேதப்படுகின்றனர். பேதப்படுகின்றமையால் ஒருவர் சொல்லுந் தத்துவத்தை மற்றொருவர் ஒப்பாமல் ஒருவரை மற்றொருவர் மறுத்து நூல்களுஞ் செய்திருக்கின் றனர். அம்மடத்தார் யாவருமே அநாதரவு செய்ததில்லை யென்பதனால் எந்த மடத்தாரும் தாயுமானவர் பாடலைத் தமக்குரிய சொந்த நூலாகத் தழுவுவதில்லை யென் றேற்படுகின்றது. எந்த நூல் தமக்குரிய சொந்த நூலோ, அதை மற்ற மடத்தார் தமக்குரிய சொந்த நூலாகத் தழுவுவ தில்லை. தாயுமானவர் பாடலை யெல்லா மடத்தாரும். அநுசரிப்பதால் அது எல்லா மடத்தார்க்கும் பொது நூலாகின்றது. திருவள்ளுவர் குறள் போலத் தாயுமானவர்பாடல் ஷை மடங்களெல்லாவற்றிற்கும் பொது நூலா யிருப்பதால் அந்தந்த மடத்தார் தாயுமானவர் பாடலைத் தமக்குச் சார்பாகப் பொருள் செய்து கொள்வார் போலும். இவ்வாறு அத்வைதிகள் மாத்திரம் தமக்குச் சார்பாகப் பொருள் செய்துகொள்ள இடந்தராதுபோலும். அதுபற்றியே எந் தச் சைவாதீன மடத்தாரும் தாயுமானவர் பாடலைத் தம் சொந்த நூலெனச் சொல்லுகிறார்களென்று சொல்லாமல் 'எந்தச்சைவாதீன மடத்தாரும் தாயுமானவர் பாடலை அநாதரவு செய்ததில்லை' என இழுப்பாய்ச் சொல்லி விட்டார்போலும். இதனால் இவருக்கும் இவரினத்தார்க்கும் சிவஞானசுவாமிகளுரை யெப்படிச் சொந்தமோ, அப்படியே தாயுமானசுவாமிகள் பாடல் சொந்த மல்லவென ஏற்படு கின்றது. சொந்தமென்று சொல்லின் அது திருவண்ணாமலை மடத்தார் முதலியவர்கள் அனுசரிக்கமாட்டார்கள். அனுசரியாராகவே பலபிரிவினருள்

திருவாவடுதுறை மடத்தைச் சார்ந்த பிரிவினர்க்கு மாத்திரம் தாயுமானவர்பாடல் சொந்தமாய்ப்போம்,.

தாயுமானவர்பாடல் எல்லாமடத்தாராலும் அனுசரிக்கப்படுகின்றமையின் அது பொது நூலாகும். பொது நூலாகுங்கால் அது திருவண்ணாமலை மடத்தாருடைய சிவசமவாத நூலுமல்ல; அதை மறுக்கும் திருவாவடுதுறை மடத்தாருடைய நூலுமல்ல. இரண்டு மல்லாத போது ஷ எல்லா மடத்தார்க்கும் பொதுவாகும் படி எந்தவித சித்தாந்தமாய்த் தமது பாடலைத் தாயுமானவர் செய்திருக்கின்றனரோ அறியேம். பொதுவாகச் சொந்தமென்று சொல்வதிலுஞ் சற்று யோசனை யிருக்கின்றது. ஏனெனின் பொதுவாகவேனுஞ் சொந்த மென்று சொல்லாமல் 'அநாதரவு செய்ததில்லையெனவறிக' வென மேனோக்காகக் கூறினமையா னென்க பூர்வபக்ஷியார் வாக்கியத்தில் பின்னு மொரு ஆக்ஷேபமு மிருக்கின்றது. அது யாதெனின் பாநுமூர்த்தியார் "தாயுமானவர் பாடலைச் சித்தாந்த மடங்களில் வாசி யாமையும், தாயுமானவர் மடத்தில் வேதாந்த நூல் வாசிக்கின்றமையும் இவர் அறிந்திலரோ!" என்றதற்கு "வாசிக்கின்றார்கள் அல்லது வாசிக்கின்றதில்லை" என்று சொல்வதைவிட்டு 'அநாதரவு செய்ததில்லை' என்று மாறுபாடாகச் சொன்னமை யேயாம். 'அநாதரவு செய்ததில்லை' என்பதனாலேயே அது தமது சொந்த நூலாகக் கொள்வதில்லை யென்றும் சொந்த நூலாகக் கொள்ளாவிட்டாலும் முற்றுந் தள்ளப்பட்டது மில்லை யென்றும் விளக்கமாகின்றன. அவர்கள் தமது நூலென்றே யுரிமையாகக் கொள்ளும் பக்ஷத்தில் "உண்மையாக விசாரிக்குமிடத்து' என இவர் சொல்லவேண்டுவதில்லை. இவர்க்கு முன்பே அவ்விஷயம் தெரிந்திருக்கலாம். இப்போது புதிதாய் விசாரிக்கவேண்டிய அவசியமில்லை, இப்போது விசாரித்தமைக் குக்காரணம் சொல்லுவது போலிருக்கலாம். தாயுமானவரைத் தமது மதஸ்தரென முன்பு தெரியாமற் சொல்லிவிட்டார். பிறகு அதைத் தாபித்துக் கொள்ளவேண்டுவது தமது கடமையாய் விட்டது. அதன் பேரில் உண்மை யாதென மடத்தில் விசாரித் திருப்பார். அம்படைத்தார் "தாயுமானவர் பாடலை நாங்கள் பிரமாணமாகக் கொள்வதில்லை" யென்று சொல்லியிருப்பார்கள். அதன்பேரில் "யாது செய்வது? தெரியாமற். சொல்லிவிட்டேனே" என்று கேட்டிருப்பார். அதற்கு அவர்கள் இரண்டுக்கும் படாமல் தந்திரமாய் "அநாதரவு செய்வதில்லை" என்றால் அது முற்று முடன்பாடாகக் கொள்ளாமற்போயினும் சிலபாகமாவது கொள்ளப்படும் (அதற்குக் காரணம் பரமசிவனையே பரமாகச் சொல்வதாலும் சந்தானாசாரியாரைத் துதித்திருப் பதாலும் இன்னும் தங்களுக்குச் சாதகமாகச் சில புகன்றிருப்பதாலு மென்க.) எனச் சொல்லியிருக்கவேண்டும். அதைப் பத்திரப்படுத்திக்கொண்டு "இவ்வளவு கிருபை யேனுஞ் செய்தார்களே போதும்" என மகிழ்ந்து அதைச் சொல்லி விட்டார் போலும், மடத்தார் தழுவுகிறார்களென்றே சொல்லிவிடுவார். அப்படிச் சொல்வதற்கு அவர்கள் இடங்கொடுக்கவில்லைபோ லிருக்கின்றது. அதுபற்றியே ஜாடையாய் 'அநாதரவு செய்ததில்லை' யென மழுப்பிவிட்டார். இல்லாவிட்டால் தங்களுக்குரிமையான நூல்களைப் போலவே தாயுமானவர் பாடலையும் வாசிக்கின்றார்களென்றாவது பிரமாணமாகக் கொள்ளுகின்றார்க ளென்றாவது சொல்வாரன்றோ? இவரே சொல்ல வேண்டாம். பாநுமூர்த்தியார் கேட்டதற்குப் பதிலாகச் சொல்லலாமே. பாநுமூர்த்தி யார் மடத்தரர் வாசிக்கவில்லையென்றுதானே சொன்னார். அதற்குப் பதிலாக வாசிக்கின்றார்களென்று சொல்லலாமே. அதை விட்டு 'அநாதரசெய்ததில்லை'

யென்று சொன்னது சமாதானமாகுமா? வாசிக்கின்றார்கள் என்று சொல்லிவிட்டால் முழுப்பூசணிக்காயைச் சோற்றில் மறைப்பதுபோ லாகுமென அங்ஙனங் கூறினார் போலும்! இவர் சொல்லினாலேயே ஷை மடத்தார் தாயுமானவர்பாடலைப் பிரமாண நூலாக வாசிப்பதில்லையென்றும் பிரமாணமாக அனுசரிப்பதில்லை யென்றும் விளங்குவதால் பூர்வபக்ஷியார்வாதம் தூர்வாதமாய்க் கழிந்து போயிற்றென்க. உண்மையிலும் ஷை மடத்தார் தாயுமானவர் பாடலைப் படிப்பதில்லை. அது "மாயாவாத நூல்" என்றும் ஆதலால் அதைப்படிக்கப் படாதென்றும் கட்டுப்பாடு செய்து வைத்துக்கொண்டிருக்கின்றார்கள். மடத்தாரில் யாரேனுஞ் சிலர் படிப்பது ண்டு. அப்போது ஒருவர்க்குந் தெரியாமல் இரகசியமாய்ப் படிப்பார்கள். வேதாந்த நூல்களைப் படிக்கவேண்டுமானால் எப்படி ரகசியமாய்ப் படிக்கிறார்களோ அப்படியே தாயுமானவர் பாடலையும் படிப்பார்கள்.

மடத்தார் சங்கதிதான் இப்படியாயிற்றே. இனித் தாயுமானவர் மடத்தார் சங்கதியைப் பார்ப்போம். பாநுமூர்த்தியார் 'தாயுமானவர் மடத்தில் வேதாந்த நூல் வாசிக்கின்றமையும்' எனத் தாயுமானவர் மடத்தார் வேதாந்த நூல் வாசிக்கின்றார்கள் என்றாரே. இதற்கேன் பதிற் சொல்லவில்லை? சோமசுந்தரநாயகர் கொண்ட மௌன விரதம் இதற்குந் தக்கதென அவ்விரதத்தை மேற்கொண்டனரோ? அந்த மடத்துக்குச் சொன்ன வழுவழுப்புக்கூட இதற்குச் சொல்ல முடியாமல் எப்போது மௌன விரதத்தை மேற்கொண்டனரோ, அப்போதே தாயுமானவர் மடத்தார் வேதாந்த நூல்கள் வாசிக்கின்றார்களென் றேற்பட்டுவிட்டது. திருவாவடுதுறை முதலிய மடத்தார் வேதாந்த நூல்களை வாசிக்கப்படாதென்கிற விரதமுடையவர்கள் என்பது திண்ணம்; தாயுமானவர் மடத்தாரோ வேதாந்த நூல்கள் வாசிக்கின்றார்க ளென்பது திண்ணம். ஆதலால் இவ்விருமடத்தாரும் விரோதகக்ஷியிற் சேர்ந்தவர்களாம். விரோதகக்ஷியார் இயற்றிய நூலும் விரோதமாகத்தானிருக்கும். அங்ஙனமாக விரோதகக்ஷியாரில் தலைமைபெற்ற தாயுமானவர் இயற்றிய நூல் திருவாவடு துறை முதலான மடத்தவர்க்கு விரோதமாக விராதென நாம் எங்ஙனங் கூறத் துணியலாம்? பூர்வபக்ஷியார், தாயுமானவர் மடத்துக்கும் போயிருப்பார். போய் "நீங்கள் வேதாந்த நூல்களை வாசிக்கின்றீர்களா?" என்றுங் கேட்டிருப்பார். அவர்கள் "ஆம், வாசிக்கின்றோம்" என்றுஞ் சொல்லியிருப்பார்கள். அதன்பேரில் "இனிச் செய்வதென்ன?" என நெடுநேரம் யோசித்திருக்கவுங் கூடும். யோசனையி லேதுந் தோன்றாம லிருக்கவுங்கூடும். பிறகு சபாபதி நாவலர் சோமசுந்தரநாயகர் கொண்ட மகாமௌன விரதமே சரியானது, இதைவிட வேறு வழியில்லை, மேலும் "மோனமென்பது ஞானவரம்பு" என ஞானத்தாயான ஔவையாரும் திருவாய் மலர்ந்தமையின் ஞானத்துக்கும் சாதனமாகு மென ஷை மகாமௌன விரதத்தைக் கைக்கொண்டார் போலும்! இவருக்கும் இவர் பக்கத்தாருக்கு முற்றுமே விரோதமான வேதாந்த நூல்களைத் தாயுமானவர் மடத்தாரே வாசிக்கிற போது, ஷை மடத்தின் றலைவரான தாயுமானவரையும் அவர் பாடலையும் இவர் பக்ஷத் துவிதசித்தாந்த மென வெங்ஙனங் கூறலாம்? ஆதலால் தாயுமானவர் பாடலும் அவர் கொள்கையும் அத்வைத சித்தாந்தமென்புதற்கு யாது மையமின்றென்க.

## வீண் தூஷணைகளிற் பயனில்லை.

இவர் மதவாதிகளே மாயாவாதிகளென்பதற்கு வேண்டிய (மறுக்கக்கூடா, இதுவரையிலுமெவரானும் மறுக்கவுமில்லா) நியாயமழைக ளிதுவரையிலும் சொரி ந்தமைக் களவில்லை யென்ப தியாவருமறிந்த விஷயமன்றா? அத்துடனே இவரா வது இவர் அபின்னதோழரான சூளைவாசியாராவது இதுவரையில் மறுத்துத் தாம் மாயாவாதிகளல்லவென நிலைநாட்டிக்கொள்ளவகையில்லாமற் போனார்களென்பது மியாவரு மறிந்த விஷயமேயன்றா? இதன் பேரில் பாநுமூர்த்தியார் இவரை "மாயாவாதி" யென்றார். அது இப்பூர்வபக்ஷியாருக்குப் பொறுக்கவில்லை. கோபமூண்டுவிட்டது. அந்தக் கோபத்தால் ஷை 31 - வது பத்திரிகையில் "எம்மை மாயாவாதியென்றார். அதன் வாயில் மண் விழச் செய்தோம்" என்றார். எப்போது மண் விழச்செய்தார்? தாம் மாயாவாதி யன்றென்பதற் கிதுகாறும் ஏதும் நியாயம் பேசாமல் இருந்து விட்டு இப்போது வாளா 'மண்விழச்செய்தோம்' என்றால் ஒவ்'வுமா? இவரது துர்வசனம் யாரையாவது ஏதாவது செய்யுமா? யாரையும் ஏதும் செய்யாது. ஆதலால் இனி யேனும் (சுருதியுக்தி அநுபவசம்மதமான நியாயம் ஜெயிக்குமேயன்றித்) துர்வார்த்தைகள் ஜெயிக்கமாட்டா வென்றறிந்து பொறுமை யுடன் வெகுளியை அடக்கிக்கொண்டு நியாயத்தைக் காட்டித்தமது சித்தாந்தத்தை நிலைநாட்டிக்கொள்வாராக. நியாயத்தை விட்டு வீண் வார்த்தைகள் பேசுவதிற் பயனில்லை. மாயாவாதி யென்னும் பேர் தமக்கு வேண்டாதபக்ஷத்தில் அம்மதத்தை விட்டொழிவதே தமக்குக் குணபாம். அம்மதத்திலு மிருக்க வேண்டும்; அப்பேரும் தமக் கிருக்கக்கூடாதென்றாலாகுமா? இவர் மாயாவாத மதஸ்தர் என்பதற்கு வேண்டிய நியாயங்கள் பன்முறை சொல்லிவிட்டமையானும், இதுவரையிலும் இவர் மதஸ்தரில் எவரும் அதைத் தூஷணச் சொற்களாலேயன்றி நியாயத்தால் மறுக்கவில்லை யாதலானும் இனிச்சிறுதலை யொழித்துப் பெட்டியினுள் பாம்பைப் போ லடங்கிக் குணப்படுவாராக. இனியு மெழுவாராயின் நியாயதண்டத்தால் புடைக்கப்படுவ ரென்பது சத்தியம்! சத்தியம்!! சத்தியம்!!! நாம் சுருதி யுக்தி அநுபவ சண்டை செய்கின்றோமே யன்றி அவைகள் ஒழிந்த வாய்ச்சண்டை கைச்சண்டை செய்ய வில்லை. இச்சண்டைசெய்ய நமக்கு வலியுமில்லை; அச்சண்டைசெய்து போலீசுக்கும் போகமாட்டோம்.

## பயந்து ஒளிதல்.

இனிப் பாநுமூர்த்தியார், சிவ ஜீவ ஐக்கிய விஷயத்தைப்பற்றிப் பொருளும் பொருளும் போலவா? பொருளுக் தொழிலும் போலவா? பொருளுங் குணமும் போலவா? என விவ்வாறு பற்பல கேள்வி கேட்டதற்கு ஏதும் விடைதராமல், இப்பூர்வபக்ஷியாரான அரக்கோண வீரபத்திர மூர்த்தியார், "இனி இவர் சைவ சித்தாந்திகள் கூறுமுபமானத்தை நீரே யெடுத்துக் காட்டிச் சாதிக்கலாகாதா வென்று எம்மைக் கடாவலாம். அவ்வா றெடுத்துக் காட்டி யுபகரித்தல் சிவனடியார்களாகிய சாதுக்களுக்கு மாத்திரமே பயன்படும். சிவத்துரோகிகளுக்குப் பயன்படாது." என்று சொல்லிவிட்டார். இந்த வுத்தரவுக்குத்தான் இதுவரையில் எதிர்பார்த்திருந்தோம். "அங்கே தப்பி இங்கே தப்பி அகப்பட்டுக்கொண்டான் தும்மடிப்பட்டன்" என்பது போல

அத்வைதிகளிடத்தில் வந்து அகப்பட்டுக்கொண்டார்; அதிலும் பலமாய் வந்து அகப்பட்டுக்கொண்டார்; அதிலும் மீளாதபடி அகப்பட்டுக்கொண்டார்; அதிலும் தாமே வலியவந் தகப்பட்டுக் கொண்டார். எவ்வகையினும் மீளமுடியாமைபற்றியும் பேச நாவில்லாமை பற்றியும் காட்டச் சற்பிரமாணங்க ளில்லாமைபற்றியும் அத்துடனே யுக்தி அநுபவங்க ளில்லாமை பற்றியும் உண்மையை யொளியாயாமற் சொல்லி விட்டார். இச்சமயத்தில் உண்மையை யொளியாமல் சொல்லாவிட்டால் தீராது. என் செய்வார் பாவம்! எத்தனையோ நாளாய் எத்தனையோ கள்ள வழிகளிலெல்லாம் ஓடி ஓடி நுழைந்து நுழைந்து பார்த்தார். அத்வைதிகள் இவர் நுழையுங் கள்ள வழிகளெல்லாவற்றிலுங் கூட நுழைந்து இறுகப் பிடித்துக் கொண்டர்கள். அதனால் இனி நுழைந்தும் பயனில்லையென வொரே முழுக்காய் முழுகிவிட்டார். இந்த முழுக்கை வெகு வருஷங்கட்கு முன்னரேயே முழுகி யிருக்கலாம். முழுகி யிருப்பாரேயாயின் இவ்வளவு அநர்த்தங்களும் அவமானமும் அபகீர்த்தியு முண்டாகமாட்டா. இந்தப் பூர்வபக்ஷியார் இவ்வாறு தமது மதம் பலவீனம் என மனம் வந்து வாயினாற் சொல்ல மாட்டார். அப்படிச் சொல்லி விட்டமையால் அதற்கு ஏதோ காரணமிருக்கவேண்டும். "ஒன்றுநினைக்க அது ஒழிந்திட்டொன் றாகும்" என்பதுபோல இவர் ஒன்று நினைக்கப் பிறிதொன்றாகவாவது இவரது கை யெழுதியிருக்கவேண்டும். அல்லது இவரதுள்ளத்தில் வீரபத்திர மூர்த்தி ஆவேசமாவது புகுந்து உண்மையை வெளிப்படுத்தி யிருக்க வேண்டும். இவர் பாநுமூர்த்தியாருடைய பல்லை யுடைக்கும் பொருட்டு வீரபத்திரமூர்த்தி வேஷத்தைப் பூண்டாராதலால் இந்த அக்கிரமம் வீரபத்திரமூர்த்தி சுவாமிகளுக்குப் பொறுக்காமல் இவரை மானபங்கம் பண்ணக்கருதி இவரதுள்ளத்தில் புகுந்து இவரது எண்ணத்துக்கு மாறாக எழுதப்பண்ணுவித்தது போலும்!

இவரது மதத்தின் நியாயம் சிவனடியாரான சாதுக்களுக்கு மாத்திரம் பயன்படு மென்பதனால் மற்றவர்க்குப் பயன்படாதெனத் தெரிகின்றது. இஃதுண்மைதான். ஆனால் இவர் மதத்தில் நியாயமிருந்து (அதை அன்னியர்க்குச் சொல்லப்படாதென் பதா? நியாயமில்லாதிருந்து அந்த நியாயமில்லாமையை அன்னியர்க் கெடுத்துச் சொல்லின், அதன்பேரில் அன்னியர் ஆக்ஷேபிப்பார்கள், அதற்குச் சமாதானஞ் சொல்லாவிடில் அவமானமும் மதத்திற் கிழிவு முண்டாகும், ஆதலால்) சொல்லப் படாதென்பதா? இதனுண்மை நமக்கு விளங்கவில்லை. அன்னியர்க்குச் சொல்லப் படாதென இப்போது சொன்னது போல் இதற்கு முன்பே சொல்லியிருப்பாராயின் இப்படிப்பட்ட பயமுள்ள மதஸ்தர் ஜோலிக்கு அத்வைதிகள் ஏன் வருகிறார்கள்? இதற்கு முன் இவ்வாறான சற்புத்தி யேனிவர்க் கில்லாமற்போயிற்று?

அன்னியர்க்கு உபமானத்தை யெடுத்துச் சொல்வதில்லை யென்பதே யுண்மை யானால் 1892ஹு சூலைமீ 4உ நாகை நீலலோசனியில் சோமசுந்தர நாயகர்

“புறச்சமயத் தவர்க்கிருளாய் அகச்சமயத் தொளியாய்ப் புகலளவைக் களவாகிப் பொற்பணி போலபேதப், பிறப்பிலதாயிருள் வெளிபோல் பேதமும் சொற்பொருள் போல்பேதாபேதமு மின்றிப் பெருநூல்சொன்ன, அறத்தினால் விளைவதா யுடலுயிர் கண்ணருக்க னறிவொளிபோல் பிரிவரும் அத்துவிதமாகும்"

என்ற செய்யுளையும்,

"யாவரது கண்ணொளிகளும் இடைவெளியில் ஒன்றோடொன்று கலந்து வியாபித்தலும், அத்தனையும் அந்தச்சந்திரனை முற்றும் பரிசித்து இன்புறுதலும் கூடுமாகையால் எமது வியாபகம் சாமஞ்சஸமேயாயிற்று."

"கண்ணொளியைப் பூதவிருள் மறைத்தது போலாம்."

"கண்ணொளியையே பூதவிருள் மறைப்பதன்றிக் கதிரொளியை மறைக்க முடியாதாற் போல ஆன்மவொளியையே அஞ்ஞானவிருள் மறைக்கு மன்றிச் சிவவொளியை மறைக்க முடியாதென்க"

"சிலந்திபூச்சியினிடம் நூல் உண்டாகியது போல் பிரமத்தினிடத்தில் உலகம் உண்டாகியது."

"நிலங்குளிர்ந்தவழி வித்தினின்றும் அங்குரமுண்டாயது என்பதும்."

என்ற வாக்கியங்களையும் ஏன் எடுத்துக்காட்டினார்?

இதற்குமுன் இவ்வாறு பலமுறை பலவுபமானங்கள் கூறிவிட்டு, இச்சமயத்தில் இவ்வாறான தோல்விச் சொல்லைச் சொல்வதால் இப்போது பாநுமூர்த்தி யாரிடந் தப்பித்துக்கொள்ள வழிபார்க்கிறதாகத் தெரிகிறது. உபமானத்தைச் சொல்லுகிற வரையில் சொல்லி, மேலே சொல்ல முடியாத போது, அன்னியருக்குச் சொல்வதில்லை யெனச் சொல்வது "குடுமி அகப்பட்டாற் பார்க்கிறது, இல்லாவிட்டால் காலைப்பிடித்துக்கொள்ளுகிறது" என்பதுபோல விருக்கின்றது. இவ்வளவே யன்றி யிவர் சொல்வதற்கு வேறு அணுத்துணையும் நியாயமென்பதில்லை. நியாயத்தைப் பாராம லிவர்சொல்வதுபோல மற்றவர்க்குச் சொல்லப் படாதென்றே வைத்துக் கொள்வோம். இந்த நியாயம் இவர்க்கு மாத்திரமா? மற்றவர்க்குமா? இவர்க்கு மாத்திரமென்று சொல்லப்படாது; நியாயமென்பது யாவர்க்கும் பொதுவானதாலென்க. அங்ஙனமாக மற்றவர் சித்தாந்தத்தை யிவர்க்கு எப்படிச் சொல்வார்கள்? சொல்லமாட்டார்களல்லவா? இந்த நியாயப்பிரகாரம் எவரும் தம்தம் சித்தாந்தத்தைப் பிறர்க்குச் சொல்லார். சொல்லாராகவே பிறர் மதத்திற்றோஷங்கூறி யிவரேன் மறுக்கப்போகின்றார்? ஒருவர்க்குப் பிறிதொருவர் சொல்லப்படா தென்பதிவர்க்கு நியாயமாயிருக்க, இவர் பிறரைக் கண்டிக்கப்போவது இவரது நியாயப் பிரகாரம் மதியின்மையேயன்றா? இவர் பிறரை மறுக்க எழும்போது, பிறர் இவரை மறுக்க எழார்களா? அப்படி யெழும்பியவர் மதத்தைப் பிறர் கண்டிருக்கும் போது நாம் பிறருக்குச் சொல்ல மாட்டோமென்று சொல்லலாமா? கொள்ளென்றால் வாயைத் திறப்பதும் கடிவாளமென்றால் வாயை மூடுவதும் மனிதர் செய்கையாமா? மிருகசாதியி லொன்றான குதிரையின் செய்கையன்றா? நாம் விடைசொல்வதாயிருந்தால் பிறரை ஆக்ஷேபிக்க வேண்டும்; இல்லாவிடில் மௌன விரதங் கொள்ள வேண்டும்.

சும்மாபோகிற எ. என்னும் ஒருவனை, பி. என்பவன் சண்டைக்குக் கூப்பிட்டுச் சண்டை செய்து அவனையடித்தானென்றும், பிறகு எ. என்பவன் சண்டைக்காயத்த மாகிச் சண்டைசெய்து பி. என்பவனை அடிக்கும் போது, பி. என்பவன், நான் அன்னியனுடன் சண்டைபோடமாட்டேன், எனதினத்தானுடன்றான் சண்டைபோடுவே னென்று சொன்னானென்றும் வைத்துக்கொள்வோம். இது நியாயமாமா? பி. என்பவன், எ. என்பவனுடன் சண்டை போட விஷ்டமில்லாதபக்ஷத்தில் அவனைச் சண்டைக்குக் கூப்பிடுவானேன்? அவனை யடிப்பானேன்? சண்டைக்குங் கூப்பிட்டு அடிக்கவும் அடித்து, பிறகு அவன் சண்டைக் காயத்தமாகி அடிக்கும்போது அவனது பலத்தையும் அடியின துரப்பையுங்கண்டு தாங்கமுடியாமல் பயந்து இனியும் அடிப்பானேல் உயிர்போய்விடுமெனவெண்ணித் தந்திரமாய்" நான் அன்னியனுடன் சண்டை செய்வதில்லை, எனதினத்தானுடன்றான் செய்வேன்." எனச் சொல்லலா மோ? சொன்னால் அவன் விடுவானா? அதுபோலப். பிறர்மதத்திற் குற்றமுள்ள தென ஆக்ஷேபித்துத்தம்மதம் அங்ஙனமின்றென்று கூறினால் பிற மதஸ்தர் சும்மா விடுவார்களா? அவர் தம்மதம் குற்றமற்றதெனவும் இவர் மதமே குற்றமுள்ளதென வுங் கூறி வாதப்போர் செய்ய மாட்டார்களா? பயந்தொளிகிறதானால் முன்னா லோசனையோடு ஆரம்பத்திலேயேயன்றா வொளிய வேண்டும்? இப்போது தப்பி யொளியப்பார்த்தால் பகைவர்கள் விடுவார்களா? இவர், தமது சித்தாந்தத்தை மற்றவ ர்க்குப் பயன் படாமை காரணமாகச் சொல்லமாட்டாரேயன்றி மற்றப்படி சொல்ல ஆக்ஷேபமில்லை யென்னின் அங்ஙனமே மற்றவரும் இவர்க்குப் பயன்படாமை காரணமாகச் சொல்லமாட்டோ மென்கிறாரே யன்றி மற்றப்படிச் சொல்ல ஆக்ஷேப மில்லையென்று சொன்னால் அதற்கு மேல் இவர் யாது சமாதானங்கூறுவார்? எப்படிப்பார்த்தாலும் சொல்ல மாட்டோமென்கிறதற்கு அணுத்துணையும் நியாய மில்லை. இதுநிற்க; இவர் வாக்கியத்தினால் இவர் மதஸ்தரானால் சொல்வா ரென்பதற்கியாதும் ஆக்ஷேபமில்லையல்லவா? இவர் மதத்திற்கு ஒருவர் செல்வதா னால் நியாயமிருக்கக்கண்டு செல்கிறதா? நம்பிக்கையினால் செல்கிறதா? நியாய மிருக்கக்கண்டு செல்கிறதெனின் அந்த நியாயத்தை முன்பு சொல்லவேண்டுமே. நம்பிக்கையின் பேரில் செல்லுகிற தென்னின் நம்பிக்கையின் பேரில் செல்கிற தானால் எந்த மதத்திற்சென்றாற்றானென்ன? இவர் மதத்திற்கே செல்லவேண்டு மென்கிற ஆவசியகமென்ன? "எல்லாமதங்களும் பொய், எம்மதமே மெய்" எனின் மெய்யென்பது நியாயத்தாலா? நம்பிக்கையினாலா? நம்பிக்கையினா லென்னின் மெய்யென்று நம்புவது எந்த மதமானாற்றா னென்ன? இவர் மதத்தையே மெய்யென்று நம்பவேண்டுமென்பதென்ன? நியாயமில்லாமல் ஒருமதத்தை மெய்யெ ன்று நம்பிச்செல்லும் விஷயத்தைப் பற்றி ஓர் கிறிஸ்து பாதிரியாருக்கும், அவருக்குக் கல்விகற்பிக்கும் ஓர் உபாத்தியாயருக்கும் நடந்த விநோத சம்பாஷணை இச்சமயத்திற்குப் பொருத்தமாயிருக்குமெனக் "கிறிஸ்துமதக் குருட்டு நம்பிக்கை" யென்னும் சிறு புத்தகத்திலிருந்தெடுத்து இதனடியிற் பிரசுரிக்கின்றோம். அது வருமாறு: - -

"ஓர் தமிழ் முனிஷி, பாதிரியார் ஒருவருக்குத் தமிழ் கற்பிக்கும் போது அந்தப்பாதிரி தமிழ் முனிஷியை நோக்கி: "அனேகம்பேர் கிறிஸ்துமதத்தை நம்பிக் கிறிஸ்தவர்களானார்களே; நீர் மாத்திரம் ஏன் ஆகவில்லை? இப்போது கிறிஸ்த வராய் விடும்" என்றனர். ஐயா துரையே! உம்மைப்போல் சைவனும் தம்மதத்திற்கு

அழைக்கிறான், வைஷ்ணவனும் அழைக்கிறான், மகம்மதீயனும் அழைக்கிறான், சமணனும் அழைக்கிறான், பௌத்தனும் அழைக்கிறான், இன்னும் மற்றமதஸ்தர் களும் அழைக்கின்றார்கள், எந்த மதத்திற்குச் செல்வது என்றார் முனிஷியார். அதற்குமேல் நடந்த விஷயம் வருமாறு: -

**பாதிரி:** அந்த மதங்களெல்லாம் பொய்; அதுகளை நம்பாதேயும்.

**முனிஷி:** அந்தந்தமதஸ்தரும் அப்படியேதான் சொல்லுகின்றார்கள்; நீங்கள் சொல்வதில் என்ன விசேஷம்?

**பாதிரி:** அந்த மூடர்கள் பேச்சைக் கேட்கவேண்டாம்.

**முனிஷி:** அந்தந்த மதஸ்தரும் அவ்வாறுதான் உரைக்கின்றார்கள்.

**பாதிரி:** கிறிஸ்துவேதம் ஒன்றுமாத்திரந்தான் சத்தியம்.

**முனிஷி:** தாங்கள் திருவாய்மலர்ந்தருளிய பிரகாரம் ஒவ்வொருவரும் தங்கள் வேதம் ஒன்று மாத்திரத்தான் சத்திய மென்று உரைக்கின்றார்கள்.

**பாதிரி:** கிறிஸ்து வேதத்தை நம்பினால் மோக்ஷமுண்டு; மற்ற வேதங்களை நம்பினால் நரகந்தான் கிடைக்கும்.

**முனிஷி:** பாதிரியாரே! இவ்வாறு மற்ற மதஸ்தரும் சொல்லுகிறார்கள்.

**பாதிரி:** அவற்றை நீர் கொள்ளற்க; என் பேச்சை நம்பும்.

**முனிஷி:** அவரவரும் இவ்வாறுதான் பேசுகின்றார்கள். யான் யாவர் சொல்லைக் கேட்பது? ஒருவர்க்கு இணங்கினால் மற்றவர்க்கு மனஸ்தாப முண்டாகின்றது. என் செய்வேன்!.

**பாதிரி:** முனிஷியே! உமக்கு மோக்ஷத்தில் நித்திய சுகத்தை அனுபவிக்க இஷ்டமா? நரகத்தில் நித்திய துக்கத்தை அனுபவிக்க இஷ்டமா?

**முனிஷி:** கனவானே! நீர் வினவியது போலவே மற்றவரும் வினவுகின்றார்கள்.

**பாதிரி:** கிறிஸ்து சத்திய வேதம் மெய்யான பராபரனால் இயற்றப்பட்டது; மற்றவை மனிதரால் இயற்றப்பட்டன.

**முனிஷி:** ஒவ்வொரு மதஸ்தரும் தாங்களுரைத்தபடியே தங்கள் வேதம் சத்திய மென்றும், கடவுளால் தரப்பட்டதென்றும், மற்றவர் வேதம் கடவுளால் கொடுக்கப்பட்டதல்ல, மனிதரால் எழுதப்பட்டதென்றும் உரைக்கிறார் கள்.

**பாதிரி:** யான் உரைத்தவாறு மற்றவர் உரைக்கினும் அது உண்மையல்ல.

**முனிஷி:** மற்ற மதஸ்தரும் இப்படியேதான் கூறுகின்றார்கள்.

**பாதிரி:** கிறிஸ்துவேதம் நியாயம் நிரம்பி உள்ளது; மற்றவேதங்களில் நியாயமில்லை.

**முனிஷி:** அவரவரும் இப்படியேதான் சொல்லுகின்றார்கள்.

**பாதிரி:** முனிஷி! என்சொல்லைத் தடுக்க வேண்டாம்.

**முனிஷி:** இவ்வாறு நான் பேசினால் மற்ற மதஸ்தரும் தடுக்கவேண்டாமென்று வாயை அடக்குகின்றார்கள்.

**பாதிரி:** கிறிஸ்து பைபிலைக் காண்பித்து, பாரும் எவ்வளவு நீதி சொல்லியிருக் கிறது!

**முனிஷி:** இதரமதஸ்தர்களும் தங்கள் தங்கள் வேதத்தை என்முன் கொண்டு வந்து போட்டு, எவ்வளவு நீதி சொல்லுகின்றது பாரும் என்றுரைக்கின் றார்களே; யாது செய்வேன்!

**பாதிரி:** கனியை விட்டுக் காயைத் தின்னப் பார்க்கிறீரோ!

**முனிஷி:** ஒவ்வொருவரும் தத்தம்மதமே கனியெனவும், ஏனைய மதங்கள் காயெனவும் சொல்லுகின்றார்களே!

**பாதிரி:** நீரென்ன வம்பராயிருக்கின்றீரே!

**முனிஷி:** ஐரோப்பிய பாதிரியே! பதிலுக்குப் பதில்பேசினால் வம்பு பேசுகிறதாக மற்றவர்களும் சொல்லுகின்றார்கள். நீ

**பாதிரி:** நீரென்ன வாயாடியா யிருக்கிறீரே!

**முனிஷி:** இதரமதஸ்தரும் இப்படித்தான் சொல்லுகின்றார்கள்

**பாதிரி:** முனிஷி! நீர் என்ன சண்டித்தனம் பேசுகின்றீர்?

**முனிஷி:** தாங்கள் கூறுவது போல் மற்றவரும் ஜண்டித்தனமாய்ப் பேசுகின்றாய் என்கிறார்கள்.

**பாதிரி:** நீர் எங்கள் கிறிஸ்துமதத்திற்கு வரமாட்டீரோ!

**முனிஷி:** மற்றவரும் இப்படித்தான் அழைக்கிறார்கள்.

**பாதிரி:** முகங் கடுகடுத்துக் கோபத்தோடு முனிஷியைநோக்கி: "அஞ்ஞானிகள் ளிடத்தில் பேசப்படாது" என்றார்.

**முனிஷி:** அந்தந்த மதஸ்தரும் தமது மதத்திற்கு வராவிட்டாலும், நியாயம் பேசினாலும், பதிலுரைத்தாலும் அவர்களை அஞ்ஞானிகளென்றும், தங்களை ஞானிகளென்றும் சொல்லுவதோடு, கடுகடுத்துக் கோபிக்கின் றார்கள். ஒவ்வொரு மதஸ்தருடைய கோபத்தையும் எவ்வாறு ஆற்றுவேன்! எந்தமதத்திற்குச் செல்லினும் மற்றவரால் அஞ்ஞானி யென்னும் பட்டமே பெறவேண்டி வருகிறது.

**பாதிரி:** முனிஷி! இனி உமதிஷ்டம்.

**முனிஷி:** கடைசியில் உமதிஷ்டம் என்று மற்றவரும் சொல்லி விடுகின்றார்கள்.

**பாதிரி:** மௌன விரதங் கொண்டார்.

**முனிஷி:** மற்றவரும் இப்படியேதான் மௌனஞ் சாதிக்கின்றார்கள்.

**பாதிரி:** எழுந்து போய்விட்டார்.

**முனிஷி:** பேச இடமும், நியாயமுமில்லாதபோது, மற்றமதஸ்தரும் இவ்வாறு தான் எழுந்து போய்விடுகின்றார்கள்.

இதுவரையில் சம்பாஷணை முடிந்தது. பாதிரியார் மிக வெட்கமடைந்து, ஏன் இந்த முனிஷியாரிடத்தில் வாய் கொடுத்தோமெனத்தம்மைத்தாமே வெறுத்துக் கொண்டு, அன்று முதல் முனிஷியாரிடத்தில் ஷை விஷயத்தைப் பற்றிப் பேசுவதை யொழித்தார். முனிஷியார், பாதிரியாரிடத்தில் ஜீவிப்பவராகலின் ஜீவனத்திற்குப் பங்கமின்றித் தந்திரமாய்ப்பேசி, பாதிரியார் அவ்விஷயத்தைப்பற்றி நினையாதவகை செய்து கொண்டார்."

மதத்திற்கு நியாயபல மில்லாதவர்கள் ஷை பாதிரியாரைப்போற்றான் நம்பு நம்பு என்று சொல்லுவார்கள். கேட்ட கேள்விக்கு உத்தரஞ் சொல்லமாட்டார்கள். எம்மதத்திற்கு வந்தால் சொல்லுவோ மென்றும், அன்னிய மதஸ்தர்க்குச் சொல்ல மாட்டோ மென்றுஞ் சொல்வார்கள். இது மூக்கறையன மதத்திற்குத்தான் பொருந்தும். யாரானாலுஞ்சரி, ஒருமதத்திலிருந்து மற்றொரு மதத்திற்குச் செல்ல வேண்டின் அம்மதத்தின் சொரூபத்தை அம்ம நூல், யுக்தி, அனுபவம் ஆகிய மூன்றி னாலும் அறிந்து, சரியாயிருந்தால செல்லவேண்டும; அங்ஙனமின்றி ஆரம்ப சூரத்து வமாயேனும் வேறு காட்சிப் பொருள்களுக்காகவேனும் செல்வாரேல், அது தோஷமானதெனக் கண்ட பின்னர் "என் செய்தோம்! என் செய்தோம்!" எனத் தம்மைத் தாமே நொந்து வருந்துவர். இதற்கு வேறே சான்று எங்கும் போக

வேணடுவதில்லை. இவர்க்கு அபினனதோழரான சோமசுந்தரநாயகரிடத்திலேயே பார்த்துக்கொள்ளலார். அவர் மூக்கறையன் கதையாய் மாயாவாத துவிதமதத்தில் பரியாலோசனை யின்றிப் பிரவேசித்து, இப்போது அத்வைதிகளுடைய வலையில கப்பட்டுத் தப்ப வழியின்றி ஆந்தை போல் விழிப்பதும், மகாமவுன விரதத்தைக் கொள்வதும், முடிவுரை கூறிப் பதுங்குவதும் பலரறிந்த விஷயமேயன்றா?

நிற்க; ஷை சோமசுந்தரநாயகர், துவித சைவசித்தாந்த மதத்திற் சென்றனரே. அம்மதத்தை முன்பு ஆராய்ந்து பார்த்துச் சென்றனரா? ஆராயாமற் சென்றனரா? ஆராய்ந்து பார்த்துச் சென்றனதென்னின், அன்னியர் அசாதுக்களும் சிவத்துரோகி களு மாதலால் அவர்களுக்கு இவர் இனத்தார் கேட்டகேள்விக்குச் சமாதானஞ் சொல்ல மாட்டார்களே. அப்போது இச்சோமசுந்தர நாய்க்கர் அத்வைதியா யிருந்த மையால் அசாதுவும் சிவத்துரோகியு மாகவேண்டுமே. அசாதுவும் சிவத்த ரோகியுமான சோமசுந்தரநாயகருக்கு இவர் மதஸ்தர் அப்போது உபமேயத்துக்குப் பொருத்தமாக வுபமானஞ் சொல்லி யிருக்கமாட்டார்களே. உபமேயத்துக்குப் பொருத்தமாக வுபமானஞ் சொல்வது சுயமதஸ்தர்க்கேயன்றியன்னிய மதஸ்தர்க் கன்றே. அன்னிய மதஸ்தரெல்லாம் அசாதுக்களென்றும் சிவத்துரோகிகளென்றும் இவர் சொல்லியிருத்தலாலும் சோமசுந்தரநாயகர் அன்னியமதஸ்தரா யிருந்தபோது அசாதுவும் சிவத்துரோகியுமா யிருந்திருக்கவேண்டுமானதாலும் அவர்க்கு இவரினத் தார் உபமேயத்திற்கிணங்க வபமானத்தைச் சொல்லியிருக்கமாட்டார்க ளாதலாலும் இவர் மதத்தில் தோன்றும் ஆக்ஷேபங்களை யாராய்ச்சி செய்தே அவர் இவர் மதத்திற் சென்றாரென்று சொல்லவொண்ணாது. பின்னை யாராய்ச்சி செய்யாமல் சென்றாரென்பதே திண்ணமாமென்க. அவ்வாறு ஆராய்ச்சி செய்யாமலே சென்றா ரென்றபோது குருட்டு நம்பிக்கையினாலே சென்றாரென்றாவது சொல்லவேண்டும்; அல்லது பிரத்தியக்ஷ லாபத்தை யுத்தேசித்தே சென்றாரென்றாவது சொல்ல வேண்டும். நம்பிக்கையினாற் சென்றாரென்று சொல்லும்பக்ஷத்தில் அப்போதிருந்த அத்வைதமத சித்தாந்தத்தினது உண்மையும், நூதனமாய்ப் பிரவேசித்த துவைதமத சித்தாந்தத்தினது பொய்ம்மையும் அவரறிந்திலரென்றே விளங்குகின்றது. அறிந்திருந் திருந்தால் கிறிஸ்துமதக் குருட்டு நம்பிக்கையின்படி குருட்டு நம்பிக்கை யவரிடத் தினின்றும் விலகிப்போயிருக்கும். விலகிப்போயிருக்கும்பக்ஷத்தில் இப்போது சென்றிருக்கும் துவைத மதத்தில் அப்போது சென்றிருக்கவே மாட்டார். மாட்டாரா கவே யிப்போது அத்வைதிகளிடத்தில் அகப்பட்டுக்கொண்டு ஆந்தைபோல் விழித்துத் தப்ப வழியின்றி முடிவுரை கூறி ஒடுக்கிப் பயந்து பதுங்கி ஒளிந்து தலைமறைத லில்லாமற்போம். ஆராய்ச்சி செய்யாமல் குருட்டுநம்பிக்கையினால் செல்லும் பக்ஷத்தில் புதிய மதமொன்றில் செல்லவேண்டிய ஆவசியமென்ன? இருந்த மதத்தி லேயே குருட்டு நம்பிக்கையோ டிருக்கலாமே. குருட்டு நம்பிக்கையினாலே சோமசுந்தராயகர் துவைதமதத்திற் சென்றிருப்பாரேல் அவர் வாதமெல்லாம். குருட்டுவாதமாகவே யிருக்குமென்பதிற் சந்தேகமில்லை. குருட்டுநம்பிக்கையினால் அம்மதத்தில் அப்போது சென்றாலும் இப்போது அத்வைதிகளிடத்தில் வாதஞ் செய்யச் துவைத மதத்தின் ஊழல்களெல்லாம் வெளிப்பட்டிருக்கு மாதலாலிப்போ தேனும் அந்தத் துவைத மதத்தை விட்டுப் பழைப்படியே அத்வைத மதத்திற் பிரவே சிக்கலாமே யென்னின், பிரவேசிப்பார்; பிரவேசித்தால் பலரும் பரிகசிப்பார்கள். அவர் சற்று மானியாதலால் அதைவிட்டு வெளிப்பட யோசிப்பார். அவர் துவைத மதத்

திற்சென்று அந்த அநுஷ்டானத்தில் மாத்திர மிருந்தவரன்று. சற்றுத் தலையை நீட்டிக்கொண்டு துவைத மதந்தா னுணமையென்றும் அத்வைத மதம் பொய்யென் றும் சொன்னதோடு அத்வைத நூல்களையும் அத்வைதப் பெரியோர்களையும் வேத வேதாந்தங்களையும் வைதிக சிரேஷ்டர்களையும ஓயாது தூஷித்தவர். வேதம் தமக்கு வேண்டியதில்லையென்றும் சொன்னவர். இப்படிக்கெல்லாஞ் சொல்லி விட்டுப் பிறகு அதற்கு மாறாகப் பேசி அத்வைதமதமே உண்மை யென்று சொல்ல எப்படித் துணிவார்? அவர் தணிந்தாலும் அவாது நாத் துணியுமா? அவரது நரத் துணிந்தாலும் எழுத அவரது கை வருமா? ஆதலால் இந்த ஜன்மத்தை அவர் துவைதத்திற்கே தத்தஞ். செய்ய வேண்டியதேயாம்.. சோமசுந்தரநாயகர் துவைத மதத்தின் ஊழல்களை யறிந்திருந்தும் அவமானத்துக்குப் பயந்து அம்மதத்தை விடாமலிருந்தாலும் ஊழலில்லா அத்வைத மதத்தைத் தூஷித்துத் தமது துவிதமே சிறந்ததென்று சொல்வது நியாயமாவென்னின், மூக்கையறுத்துக் கொண்டால் கடவுளைக் காணலாமென ஆராய்ச்சி யின்றிக் குருட்டு நம்பிக்கை கொண்டு மூக்கை யறுத்துக்கொண்டு பிறகு கடவுளைக் காணாமற்போயும் அதைச் சொன்னால் பலரும் பரிகசிப்பார்களே யென அதனுண்மையை வெளியிற் சொல்லாமல் யாவரையும் மூக்கறுத்தவன் கதையை ஷை சோமசுந்தரநாயகர் நன்றாய்ப் பன்முறையும் வாசித்திருப்பா ரானதால் வாசித்த பாடத்தை மறவாமல் ஒப்புவிக்கின்றார். அவர் ஒப்புவித்தாலும் புத்திமான்கள் அவரது கள்ளக்கருத்தை யறிந்து கொண்டு துவைத மதத்திற் பிரவேசியாம லிருக்கவேண்டும். இனிப் பிரத்தியக்ஷ லாபத்தை யுக்தேசித்துச்சென்றாரென்னின் தற்காலத்திற். கிறிஸ்து மதத்திற் பிரத்தியக்ஷ லாபத்தைக் கருதிச் செல்வது போலாம். அப்போது அவர் துவைதமதம் மேலென்று புகழ்வதும், அத்வைத மதம் கீழென்றிகழ்வதும் அந்தப் பிரத்தியக்ஷ லாபத்தைக் கருதியே யாம். பூர்வபக்ஷியார் உபமேயத்துக்குப் பொருத்தமாக வுபமானஞ் சொல்வதில்லையென்று சொல்வதில் இவ்வளவு ஆக்ஷேபங்களிருப்பதால், இனி அரக்கோண வீரபத்திரமூர்த்தியார் இப்படிச் சொல்லித் தோல்வித்கானத்தைப் பெறுவதினுஞ் சபாபதிநாவலர் சோமசுந்தர நாயகரைப்போல மகா மௌன விரதங் கொள்வதே கௌரவமா மென்க.

## தோல்வியடைந்தவர் தூஷிப்பது சகஜமென்பது.

இவ்வாறு சொல்லிவிட்ட பிறகு சற்று மானந் தோன்றிற்றுப்போலும். அந்த மானத்தால் "சிவத்துரோகிகள் அதனைத் தேடி யெடுத்துத் தோஷங்கூற வருவாரெ ன்னின்,, சிவனடியார்களாகிய சாதுக்கள் அதில் மயங்காவண்ணம் எதிரிகள் மனோ ரதத்தைச் சிதைத்து நிர்மூலப்படுத்துவா மென்க." என்று கூறித தம்மானத்தைச் சற்று க்காத்துக்கொள்ளப் பார்க்கின்றார். ஐந்து வருஷங்களாக இவரது மதத்திலுள்ள தோஷங்களையும் சுருதி யுக்தி அநுபவங்கட்குப் பொருத்தமிலலாமையையும் பட்டப்பகலா யெடுத்துக்காட்டி யிருக்கவும் அவைகளுக்குப் பதில் பேசாது தலை மறைந்து முடிவுரை கூறி ஒளிந்த சங்கதி யெங்கும் பிரசித்தியா யிருக்கவும் "தூக்கி நிறுத்தடா, பிணக்காடாய் வெட்டுவேன்" எனக் கூறும் மொண்டியின் வீரவாக்கியம் போல வீண் வீரமொழி கூறுவதிற் பயனென்னை? தம்மவர்க்கு மாத்திரம் உபமேய த்திற்குப் பொருத்தமாகவுமானங்களைச் சொல்வதாய்ச் சொன்னாரே. அப்படி

யானாலுஞ் சொன்னாரா? இல்லையே. சொல்லாதவர்க்கு வீண். வீரமேன்? வீண்வார்த்தையேன்? தமது மதத்தின் நியாயத்தை விஷயங்களிற் காட்டவேண்டுமேயன்றி, வீண் மொழியிற் காட்டுவதில் ஆதாயமென்னை? இதன் பேரில் பானுமூர்த்தியின் பல்லையுடைப்பதற்காகப் பேர் வைத்துக்கொண்ட இவ்வீரபத்திர மூர்த்திக்குக் குரூர குணமேலிட்டு, "சைவமுடிவு தெரியாத இவர் சைவத்தை மறுக்க வெழுந்தது பகடூர்தியின் பாதசேவைக்கே யிவர் பரிபாகியாயின பண்பு கொண்டென்க" என்று துடுக்காய்ப்பேசினார். அவர் பகடூர்தியின் பாதசேவைக்குச் செல்லின் அவராலுண் டாகும் ஆக்ஷேபங்களும் பகடூர் தியின் செல்லும். இப்படி யிவரை மறுப்பவர் களெல்லாம் பகடூர்தியின் பாதசேவைக்குச் சென்று மரித்துப்போவார்க ளானால் அவர்களுடைய ஆக்ஷேபங்களும் மரித்துப்போகும். பிறகு வேததூஷணை, வேதாந்த தூஷணை, பெரியோர் தூஷணை முதலிய தூஷணைகளெல்லாந் தலையெடுத் தோங்கி, இவரது அபத்த அவைதிக மதஞ் செழிக்கும், குருட்டு நம்பகம் கண்டிக்கப் படாமல் உலகில் ஸ்திரப்பட்டுப்போம். இவருக்கு யமதருமராஜவேலை கொடுத்தால் அத்வைத மதம் உலகில் தலைகாட்டாதிருக்கும்படி அத்வைதிகளை யெல்லாம் அன்றே கொன்று படுசூரணப்படுத்திவிடுவார். அத்துடனே இவ்வுலகில ஏகசக்கிராதிபதியா யிருக்கவுங் கிடைத்துவிட்டாலோ சொல்ல வேண்டு வதில்லை. அன்றே "வேதமபசு நூல், உலகநூல், மயக்க நூல்,, விபசரிக்கும் நூல், பதிநூலல்ல மோக்ஷநூலல்ல, தெளிவு நூலலல, சிவனையே பரத்துவமென்று கூறும் நூலல்ல, ஆதலால் அதைப்படிக்கப்படாது, அதைக் கொளுத்திவிட வேண்டும், அதைச் சார்ந்த ஸ்மிருதி புராண இதிகாச ஆகமங்களையும் படிக்கப்படாது, அவைகளையுங் கொளுத்திவிடவேண்டும், இன்னும் துவிதவிரோதமாக எந்தப் பாஷையிலும் எந்த நூல்களையும் வைத்திருக்கப்படாது, கொளுத்தி விடவேண்டும், அத்வைதத்தைப் பேசவும்படாது, கேட்கவும்படாது, இந்த உத்தரவுக்கு மீறி நடப்பார்களானால் கழுவி லேற்றப்படும்" எனக் கெஜட்டில் பிரசுரஞ்செய்வதோடு மகம்மதீயமத வரசர்மாதிரி ஒருகையில் வாளும், ஒருகையி லிவரது சிவஞானபோதவுரை, சிவஞான சித்தியார் முதலிய பதினான்கு துவிதசித்தாந்த புத்தகங்களுங் கொண்டு திக்குவிஜயஞ்செய்து, ஷை புத்தகங்களை நம்பித் துவைதமதஸ்தராகின்றீர்களா, அல்லது இவ்வாளுக் கிரையாகின்றீர்களா" எனக் கேட்டு, இவர் மதஸ்தரானவர்களை விட்டு மற்றவர் களை யெல்லாங் கொன்று துவிதக்கொடிபோட்டு ஜயமுரசடிப்பார். இப்படிச்செய்த பின்புதான் வீரபத்திரமூர்த்தியினது உக்கிரந் தணியும். அதுவரையில் உக்கிரம் தணியாது. இவர் மனதுபோல் நடக்க இந்த இங்கிலீஷ் கவர்ன்மெண்டில் ஆகாதே. அதற்காகத்தான் நாம் வருந்துகின்றோம். ஷை எமபட்டமும் இவ்வுலக சக்கிரவர்த்தி பட்டமும் ஒருவேளை இவர்க்குக் கிடைத்தாலும் கிடைக்கும். இவர் வீரபத்திரமூர்த்தி யல்லவா? இவர் தகப்பனார் பரமசிவனல்லவா? பிள்ளை, வேண்டிய வரத்தைத் தகப்பன் கொடுக்கமாட்டாரா? "நாம் வீரபத்திர்மூர்த்தியாய் விட்டமையால் நாம் கேட்ட வரத்தையெல்லாம் கொடுத்துவிடுவார், அப்போது யமன் உத்தியோகத்தையு மிவ்வுலக சக்கிரவர்த்தி பட்டத்தையும் பெற்று, அத்வைதிகளையெல்லாம் வேலை தீர்த்துவிடலா" மென வெண்ணங்கொண்டிருப்பார். இல்லாவிட்டால் அதியுக்ரமான வீரபத்திரமூர்த்திப் பேரைத் தரித்துக்கொள்ளுவாரா? வீரபத்திரமூர்த்தியென்கிற பேரைக்கேட்கிறபோதே நமக்கெல்லாம் பயமாயிருக்கிறதே. இவர் கிஞ்சித்தும் பயப்படாமல் அப்பேரைத் தரித்துக்கொண்டாரே. "தக்ஷயாகத்து வீரபத்திரமூர்த்தி வேத் விரோதமாக நடந்தவரையன்றா அன்று சிட்சித்தது? நாம் வேத விரோதமாக

அணுக்தனையும் பேசவில்லையே; பூர்வபக்ஷியாரன்றோ வேதாந்தங்களையும் வேதாவிரோதமான அத்வைதத்தையும் தூஷிக்கின்றார்? உண்மையாய் நடப்பவரை வீரபத்திரமூர்த்தி தண்டியாரே" என அத்வைதிகள் சொல்லக்கூடும். அது உண்மைதான். வீரபத்திரமூர்த்திகளில் இரண்டு வீரபத்திரமூர்த்திகளுண்டு. ஒன்று பரமசிவ வீரபத்திரமூர்த்தி; ஒன்று அதற்கு விரோதமான மாயா; வீரபத்திரமூர்த்தி யாம். பிரதிவாதி வீரபத்திரமூர்த்தி மாயா வீரபத்திரமூர்த்தி யாகலின் இந்த வீரபத்திரமூர்த்தி வேதசாஸ்திரங் விரோதமாகத்தான் பேசும். அந்த வீரபத்திரமூர்த்தி வேத வரம்பு கடந்தவரைத் தண்டிக்கும்; இந்த வீரபத்திரமூர்த்தியோ வேதவரம்பு கடவாதவரைத் தண்டிக்கும். இது வேதவிரோதமாயா வீரபத்திரமூர்த்தி யாயிருப்பதால் வேதமொழி கடவாது பேசும் பானுமூர்த்தியாரைப் 'பகடூரதியின் பாதசேவைக்கே யிவர் பரிபாகியாயின் பண்பு கொண்டென்க' என்று அடாமொழி பேசியது.

நிற்க; இவர் பேசவேண்டிய விஷயத்தை இதமாகவும் குளிர்ச்சியாகவும் அடக்கமாகவும் சாந்தமாகவும் ஆத்திரமில்லாமலும் இனிய சொல் கொண்டு பேசப் படாதா? இனிய கனி தம்மிடமிருக்க இன்னாத கனியைத் தேடித்தின்பதுபோலப் பலநன்மையைத்தாராநின்ற இனிய சொல் தம்மிடஞ் சித்தமாயிருக்கப் பல தீமை யைத் தாரநின்ற இனிமையல்லாத சொல்லை வருந்தித் தேடிச் சொல்வானேன்? இவரது வாதம் நியாயத்தால் வெற்றிபெறுமேயன்றிக் கடுஞ் சொல்லாலன்றே. நாம் இது விஷபமாக எத்தனை முறை சற்புத்தி கூறினும் பூர்வபக்ஷிகள் தமது இயற்கைக் குணத்தை விடாராயின் யாம் செய்வதென்னவிருக்கின்றது! எட்டி விருக்ஷக்துக்குத் தேனும் பாலும் வார்த்து வளர்க்கினும் அது தனது கைமைக் குணத்தை விடமாட்டாது. அதுபோலப் பூர்வபக்ஷியாருக்கு நாமேனும் பிறரேனும் எவ்வளவு நீதிமொழி யெடுத்துப் புகன்றிடினும் அவர் கவனிக்கின்றாரில்லை. இன்னும் அவர்க்கு நன்மொழியே கூறுகின்றோம். நாம் கூறுவதைக் கவனிபாவிடினும் நமது தெய்வப்புலமைத் திருவள்ளுவரியற்றிய திருக்குறளையேனும் நன்றாய் வாசித்துப் பார்த்து, அதன்படி யொழுகி அறவழியேநின்று பேசுவாராக. வீரபத்திரமூர்த்தியின் பேரை வைத்துக்கொண்டிருப்பதால் பிறரது பல்லையுகர்த்தாலும் பகடூர்தியின் பாதசேவையி னிமித்தம் கொன்றாலும் குற்றமில்லை யென்று நினைத்து உக்கிரம மாய்ப் பேசுகின்றார் போலும் நாம் சொல்லும் சற்புத்தியைக் கவனியாமல் பின்னும் இயற்கைக் குணத்தையே காண்பித்து வைவாரானால் ஷெ வைதலை ஆபரணமாகக் கொள்வேமேயன்றி அதனிமித்தம் மனஸ்தாபப்படமாட்டோம்.

## அத்வைதிகளே சிவனடியார்களும் சாதுக்களுமென்பது.

பானுமூர்த்தியின் பல்லை யுதிர்க்கும் பொருட்டு வீரபத்திரமூர்த்தி யென்னும் உக்கிரப் பேர் தாங்கிய பூர்வபக்ஷியார் 'சிவனடியார்களாகிய சாதுக்களுக்கு மாத்திரமே பயன்படு' மென்றும், 'சிவத்துரோகிகளுக்குப் பயன்படாது' என்றும் சொல்லிவிட்டதினால் இவர் மதஸ்தர்தவிர மற்றவர் சிவனடியாரல்ல ரென்றும், அசாதுக்களென்றும், சிவத்துரோகிகளென்றும் ஏற்படுகின்றனர். மற்றவரில அத்வைதி களும் ஒருவராயிருப்பதால் அவரும் சிவனடியாரல்லரும் அசாதுக்களும்

சிவத்துரோகிகளுமாம். இது மிகுவிந்தை! இவரும் இவர் பக்கத்தினரும் சிவனடியார் முதலியவரான பிறகன்றா பிறரை அங்ஙனமல்லாதவரென்று சொல்லவேண்டும்? இனிச் சிவனடியார் முதலியவர் இவர் மதத்தினரா? அத்வைதிகளா? என்றதை வேதமுதலிய நூல்களைக்கொண்டும் யுக்தி அநுபவங்களைக்கொண்டும் பார்ப்போம். நாமாவது அவராவது பேசவேண்டுவது நூலாதாரங்கொண்டேயாம். நமது குயுத்தியைக் கொண் டன்று. அதுபற்றியே நாம் எந்த விஷயம் பேசினாலும நூற்பிரமாணங்களைக் கொண்டே பேசுகின்றோம். அதிலும் பொது நூல்களைப் பிரமாணமாகக்கொண்டு அதாவது சுருதி முதலிய பதினான்கு வித்தைகளைக் கொண்டு பேசுகின்றோம். அத்துடனே ஏமக்குரியதாயினும் பிரதிவாதிகள் தங்கட்கு முக்கிய பிரமாணமாகக் கொண்ட நூல்களைக் கொண்டும் பேசுகின்றோம். அவ்வளவேயன்றிப் பொது நூலகளல்லாதவையும் எமக்குமாத்திரம் பிரமாணமா யுள்ளவையுமான நூல்களை நாம் என்றும் பிரமாணமாக எடுத்துக் காட்டுவதே யில்லை. பிரதிவாதிகளோ வேதமுதலிய பொது நூல்களையும் அவர்களும் நாமும் பிரமானமாகக்கொண்ட நூல்களையும் எடுக்கின்றார்க ளில்லை. பின்னைத் தங்கள வர்கள் இயற்றிய நூல்களையே பிரமாணமாக எடுத்துக்காணபிக்கிறார்கள். அது தப்பெனப் பலமுறை நாம் எடுத்துக் காண்பித்திருக்கின்றோம். அப்படிக் காண்பிப் பதற்குக் காரணம் தமது சித்தாந்தத்திற்கு வேதமுதலிய நூல்களிலும் எம்மாலும் அவர்களாலும் கொள்ளப்பட்ட நூல்களிலும் பிரமாணமில்லாமையேயாம். திருட்டாந் தமாகச் சைவசமயியும் வைண வசமயியும் சிவன் பரத்துவமா? விஷ்ணு பரத்துவமா? என்று வாதஞ்செய்யின் இரு பகுதியாரும் ஒப்புக்கொள்ளப்பட்ட வேதமுதலிய பதினான்கு வித்தைகட்குக் கட்டுப்பட்டு, அவைகளைப் பிரமாணமாகக் காட்டி வாதஞ் செய்யவேண்டுமேயன்றி, தேவார திருவாசகங்களைச் சைவரும், திருவாய்மொழியை வைணவரும் பிரமாணமாகக்காட்டி வாதஞ் செய்யலாமோ? தேவார திருவாசகங்களை வைணவரும், தருவாய் மொழியைச் சைவரும் பிரமாணமாக அங்கீகரிப்பார்களா? அங்கீகரிக்கவேண்டுமென்பது நியாயந்தானா? இந்த நியமத்தை யனுசரித்தே பூர்வீக மதாசாரியர்களான சங்கராசாரியார் நீலகண்டாசாரியார் இராமாநுஜாசாரியார் மாத்துவாசாரியார் முதலியவுரையாசிரிய ர்கள் வாதஞ் செய்தார்கள். அவ்வாறு இந்தப் பூர்வபக்ஷிகள் வாதஞ்செய் கின்றனர்க ளில்லை. தங்களுக்குமாத்திரஞ் சொந்தமான நூல்களையே பெரும் பிரமாணமாகக் கொண்டு வாதிக்க வருகின்றார்கள். அதை விட்டால் அவர்களுக்கு வேறுவழியு மிலலை. அதாவது தங்கள் கட்சிக்கு வேதாதாரமாவது பதினான்கு வித்தைக்குட்பட்ட வேறு எந்த நூலாதாரமாவ தில்லை. அப்படியெடுத்துக் காண்பிப்பது பலவீன மென்றும் அவர்களுக்குத் தெரிவ தில்லை. அத்துடனே எம் சைவப் பெரியோர் சொன்னார்கள் என்றும் வெட்கமில்லாமல் சொல்லுகிறார்கள். நாம் அப்படிப்பட்ட பிரமாணங்களை யெடுத்துக்காண்பிப்பதேயில்லை. சிலசமயம் பதினான்கு வித்தை களிலுள்ள பிரமாணங்களை யெடுத்துக்காட்டிவிட்டுப் பின்னர் அவைகளுக்கு விரோதமில்லாதபடி அத்வைதிகள் சொல்லியிருக்கிறார்களென்று காட்டுவதுண்டு. அன்றி அத்வைதிகள் சொல்லாதவற்றைச் சொல்லுகிறதாய்ச் சொன்னால் அப்போதும் எடுத்துக் காண்பிப்போம். அப்படிக் காண்பிக்கிற போதும் எம்பெரியோர் சொன்னார், அவர் அப்படிப்பட்டவர், இப்படிப்பட்டவர், மானத்தை வில்லாக வளைப்பவர், மண்ணைக்கயிறாகத் திரிப்பவரெனப் பிரதிவாதிகளிடத்தில் பிரதிவாதி

களைப்போல் வெட்கமின்றிச் சொல்வதில்லை.. இனிச் செய்யும் வாதத்திலும் மேற் காட்டிய வொழுங்குக்கு மாறாகப் பேசமாட்டோம்.

வேதமுதலிய கலைகளில் முதன்மையாகச் சிறப்பித்துச் சொல்லப்படுவது எவரையெனப் பார்க்குமிடத்து அத்வைதிகளையே. ஷை கலைகளில் முடிவாகச் சொல்லப்படும் விஷயமும் யாதெனின் அத்வைதமேயாமென்பதற்கு இதுவரையில் நடந்த வாதமும், மேற்கோளாகக்காட்டிய வேதமுதலிய சிறந்த பிரமாணமும் சாக்ஷிபகரும். அப்படிப்பட்ட அத்வைதத்திற்குச் சாதனமாக ஷை வேதமுதலிய நூல்களில் விதிக்கப்பட்டவை நித்திய நைமித்திய கருமங்கள் செய்தல், யக்கிய யாகங்கள் செய்தல், விபூதிருத்திராக்ஷந் தரித்தல், சிவபூசை செய்தல், சிவத்தலத்தில் வசித்தல், சிவாலய தரிசனஞ் செய்தல், சிவபுராணங் கேட்டல், சிவபணி யியற்றல், சிவனடியாரைப் பேணல், சிவகாமசங்கீர்த்தனஞ் செய்யல், காயத்திரி பிரணவம் பஞ்சாக்ஷர முதலிய ஜபஞ்செய்தல, இயமம் நியமம் ஆசனம் பிராணாயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதிகளான எண்வகை யோகஞ் செல்தல், வைராக்கியவு பாதிகளை அநுசரித்தல், வேதசாஸ்திரப் பிரமாண ங்கட்குக் கட்டுப்பட்டுப் பேசுதல், ஆஸ்திக புத்தி, அன்பு, இனியவைகூறல், பொறுமை, அடக்கம், டம்பமின்மை, பொறாமையின்மை, புறங்கூறாமை, உபகாரம், அருள், கொல்லாமை, இன்னாசெய்யாமை, வெகுளாமை, சத்திய முதலிய சிறந்த சற்குணங்களைப் பெறுதல், நித்தியாநித்யவஸ்து விவேகம் இகமுத்திரார்த்த பல போகவிராகம் சமம் தமம் திதீக்ஷை உபரதி சிரத்தை சமாதிகளான சட்குணம் முமூட்சுத்துவம் இவைகளைப் பெற்று, பிரமஞானாநுபூதியினைச் சகஜமாய்ப்பெற்ற சற்குரு சந்நிதானத்தில் சிரவண மனன நிதித்தியாசன சமாதி சாட்சாத்கார மெய்ந் நிலை பெறுதல் முதலியவைகளாம். விஷ்ணு விநாயகர் சுப்பிரமணியர் முதலிய தேவதா பத்தி முதலியவைகளுஞ் சாதனமாம். இப்படிப்பட்ட சாதனங்களை வேதோ க்தமாகவாவது வேதத்திற்கு விரோதமில்லாதபடி ஆகமோக்தமாகவாவது செய்ய லாம். சூதசங்கிதை வேதாவிரோதமுரைத்த அத்தியாயத்தில் 7-வது செய்யுளில்

> "*துவிதமறையளவையிச்சியாதுதொகுகாட்சிமுதலளவைகட்குத்*
> *தவிர்தலில்கோசரமாய்முக்கியபயனிலாததாய்த்தங்கலாலே*
> *யவிர்மறைமுக்கியவளவையன்று துவிதத்திற்காயினும் அவ்வேதம்*
> *துவிதத்தையனுவாதமுன்செய்து அத்துவிதமே சொல்லுமீற்றில்*"

என்று வேதத்தின் சித்தாந்தமான அத்வைதத்தைச்சொல்லி, 8 - வது செய்யுளில்

> "*மிருதிபுராணஞ்சைவாகமந்தருக்கம்பாரதம்முன்விளம்புநூல்கள்*
> *கருதுறும்அத்துவிதபரமேயுரைக்கும்சிலசுருதிகடியஞ்ஞானப்*
> *பெருநிவர்த்திமூலமாகவும்பேசுசிலசுருதிபிறங்காநிற்கும்*
> *ஒருவில்விதிமூலமாகவும்அத்துவிதப்பொருளையுரைக்குமாலோ*"

என்றும், பிரமகீதை கேனோப நிடதார்த்தத்தில் 33-வது செய்யுளில்

*"ஐயன்சைவாகமங்கட்குமரியாகமத்துக்குமெனது*
*பொய்யின்றியஆகமத்துக்கும்புத்தாகமங்கட்கும்அருகன்*
*செய்யுமாகமத்துக்குஞ்சித்தரியக்கர்கந்தருவர்*
*உய்யும் பரிசுமற்றுள்ளோருரைத்த ஆகமங்கட்கும்"*

என்றும், 311-வது செய்யுளில்

*"உவமையில் பரமாத்துவிதமாம்"*

என்றும்

சொல்லியிருப்பதால் ஆகமங்களின்படியும் அநுஷ்டிக்கலாம். இவ்வித சாதனங்களில் பலவாவது சிலவாவது அவரவரது சரீர பலத்திற்கும் வாக்கு பலத்திற்கும் புத்தி பலத்திற்குத் தக்கபடி செய்யலாம். எது ஏறினாலும் எது குறைந்தாலும் சிரவண மனனாதிகள் மாத்திரம் செய்யாமலாகாது. அதனாலேயே பிரமஞான முண்டாக வேண்டுவது. பிரமஞானமின்றி முத்தி பெறுவதில்லை. மற்றக் கைலாயாதி பதவிகள் பதவிமுத்தியேயன்றிப் பரமுத்தியன்று. கைலாயாதி பதவிகளை யடைந்த வர்களும் முடிவில் கூடஸ்த பிரம ஐக்கியத்தைப் பெற்றே பரமுத்தியைப் பெற வேண்டும். இது எல்லாச் -'சாஸ்திரங்களின்றுணிபாம். எல்லாச் சாதனங்களையும் செய்து முடிவில் சிவஞானம் அல்லது பிரமஞானம் அல்லது ஆன்மஞானத்தைப் பெற்ற அத்வைதிகளைச் சிவனடியா ரல்லரென்றும் அசாதுக்களென்றுஞ் சிவத் துரோகிகளென்றுஞ் சொல்வதற்கு என்ன ஆதாரம்? சாஸ்திர வரம்பு மீறினதும், சாஸ்திர சம்மதமற்றதும், சாஸ்திரத்தினால் கண்டிக்கப்பட்டதுமான பொய்த் துவிதமதத்தைக் கைக்கொண்ட குற்றம் அபாரமாய் இவர் மதஸ்தரிடத்தி லிருக்க, அதைக் கவனியாமல் சாஸ்திரத்துக்கொத்து மேற்காட்டிய சாதனங்களை யெல்லாம் பெற்று ஷை சாதனபலத்தால் அத்வைதாதுபவம் அடைந்து சிவசொருபமாக விளங்கும் சிவஞானச் செல்வர்களைச் சிவனடியாரல்லரென்றும் அசாதுக்களென்றும் சிவத்துரோகிகளென்றுஞ் சொல்வது நன்றாமா? சிவபத்தி முதலிய சாதனங்க ளெல்லாம் அத்வைதாநுபவம் பெறும்பொருட்டே விதிக்கப்பட்டனவென வேத முதலிய கலைகள் கூறுகின்றமையால் ஷை சாதனங்களெல்லாம் அத்வைதிகளுக்கே யுரியன; மற்றவர்க் குரியனவன்றாம். மற்றவரில் இத்துவித சைவரு மொருவகுப் பின ராகலின் இவர்க்கும் ஷை சிவபத்தி முதலிய சாதனங்களின்றாம். சாதனங்களை யியற்றுகின்றார்களே யென்னின் எந்தச் சாத்தியத்துக்காக இயற்றுகின்றார்கள்? இவர்கள் பக்ஷம் துவிதமாகலின் துவிதஞானத்திற்கே ஷை சாதனங்கள் இயற்று கின்றதாகச் சொல்லவேண்டும். துவிதஞானம் வேதசாஸ்திர சம்மதமும் யுத்தி அநுபவ சம்மதமும் அல்லவென்பதற்கு வேண்டிய நியாயமும் பிரமாணங்களும் நாமும் மற்றவருங் காட்டியிருக்கின்றோமாகலின் ஷை சாதனங்கள் யாவும் அத்வைத சித்தாந்தத்திற்கே யுரியன வென்பதற் கியாது மையமின்றென்க. மாயா வாத துவித சைவசித்தாந்திகளும் மேலே சொல்லிய சாதனங்களைச் செய்கின்றார் களே, அது வரையிலுள்ள பலனையேனும் அடையமாட்டார்களா என்னின் அடைய மாட்டார்களென்பது திண்ணம். அவர்கள் சதா வேதநிந்தை சாஸ்திரநிந்தை வேதசம்பந்தமான கருமநிந்தை வேதாந்த நிந்தை அத்வைத நிந்தை பெரியோர்

நிந்தை முதலிய பலநிந்தைகள் செய்து அதிபாதகத்தைத் தேடிக்கொள்ளுகின்றார் களானதால், அவர்களது சாதனம் சாதனம்போல் மேலுக்குத் தோன்றினும் உண்மை யில் அது சாதனமாகவேமாட்டாது; பின்னைப் பாதகமேயாம்.

இனிச் சுருதி ஸ்மிருதி புராண இதிகாசாகம சாஸ்திரங்கட்கு அத்துவிதமே சித்தாந்தமென்றும், அப்படிப்பட்ட அத்வைத சித்தாந்தத்துக்கே மேற்கூறியவைகள் சாதனங்களென்றும் ஷை சுருதியாதிகளைக் கொண்டே நிரூபிக்கின்றோம்.

## அதர்வணவேதம் நாரதபரிவிராஜகோபநிஷத் ஏழாவது உபதேசம்.

துரியாதீதனுக்குப் பஸ்ம (விபூதி) ஸ்நானம்....... பகூதகனுக்குத் திரிபுண்டரம். ஹம்ஸனுக்கு ஊர்த்துவ புண்டரமும் திரிபுண்டரமும். பரம ஹம்ஸனுக்குப் பஸ்மதூளனம்.

## சுக்கிலயசுர்வேதம் பைங்களோபநிஷத் 4-வது அத்தியாயம்.

அநேகமான கருமம், சௌசம், ஜபம், யக்கியம், அப்படியே தீர்த்தயாத்திரை இவைகளைத் தத்துவத்தை யறிகிறவரையி லனுஷ்டிக்கவேண்டியது.

யசுர்வேதம் வராகோபநிஷத் 5-வது அத்தியாயத்தில் அத்வைதஞான சாதனத் துக்காக அஷ்டாங்கயோகஞ் சொல்லப்பட்டிருக்கிறது. அதில் நியமத்தில் ஆஸ்திக்கியமும் ஈசுவரபூசையும் தியானத்தில் ஈசுவர தியானமும் சொல்லப்பட்டன.

## ஈசுரகீதை பத்திமை அத்தியாயம்.

*சந்ததம் வேதமியாவையும் பரமாச்சாற்றவும் படுவதிங்கெனையே*
*அந்தணரெல்லாம் வேள்வியினாலும் அங்கியிற்போற்றுவதெனையே*
*எந்தலோகத்தும் பிதாமகன் முதலாமியாவருமிறைஞ்சுவதெனையே*
*சிந்தையையொருக்கியோகிகளுளத்தேதியான முற்றிருப்பது மெனையே.* 4

*ஏகனாகநின்றயானே யெல்லா இமையவர்க்குந்*
*தேகம்பண்ணியவற்றுள்ளே திதனாய் நிற்றலாய்ச்செய்யும்*
*யாகமெல்லாம் எனைக்குறித்தே யியற்றுகின்றாரவற்றிலவிர்ப்*
*பாகங்கொள்வேனானவற்றின் பயனுங்கொடுக்கப்படுவேனான்.* 5

## ஷை யோக அத்தியாயம்.

கருத்திலாமூடர் காட்டமாதிகளிற் காண்பர் கற்றவர்களாகாயத், தருக்கனிற் புனலிற் காண்பார் ஆகுதியில் அருச்சனை செய்யும் அந்தணர்அவ், எரிக்கணே

காண்பர் எங்குமாய் நின்ற எனது லிங்கத்தினை நேரே, ஒருக்கிய பரம யோகிகள் என்றும் ஒழிவறக்காண்பர் தம்முளத்தே.

## மஹா இதிகாசமாகிய சிவரகசியம் ஆறும் அம்சத்திலுள்ள ரிபுகீதை 34-ம் அத்தியாயம்.

பரமான அன்புடனே பரமசிவத்தைப் பாங்காக ஆராதித்து அருள்பெற்றோர்க்கே, உரமான அகம்பிரம நிச்சயந்தான் ஊனமற உள்ளத்திலுதியாநிற்கும், திரமான அகம்பிரமநிச்சயத்தைத்தியக்கமறச்செறிந்தவரேமுத்தராவார், வரமானபரமசிவப்பதந் தன்னாணை வகுத்ததிலோரையமிலைவாய்மைதானே. (50)

## ஷை ஷை ஷை 3-வது அத்தியாயம்.

பரிவுடனேயுபநிடதபாடத்தாலும் பரமசிவ பத்தர்க்கேதானத்தாலும், பரையறவே திவ்யமாமிலிங்கத்தின்கண் பூரணமாம் பரமசிவ பூசையாலும், பரவுசிவதலங்களிலே வாசத்தாலும் பலவிதமா மற்றுமுறு நியமத்தாலும், பிரம்மதாம் பரமசிவனருளுண்டாகிப் பின்னமிலா வகண்டான்ம போதமுண்டாம். (26)

## ஷை ஷை ஷை 39-ம் அத்தியாயம்

பொருவில் சிவபூசனையே முதலாம் பத்திபுரிந்ததனால் சிவகருணைபொருந்தினோர்க்கே, சருவமுமே பிரமமென்றும் அதுநானென்றும் சாற்றிய இவ்வகண்ட பரஞானந்தோன்றி, மருவமிக அரிதான முத்திப்பேறாம் மற்றவருக்கில்லையெனவே முன்பு கந்தன், அரியசிவபத்திமிகுஞ்சைகீசவ்யற்கு, அருளியவாறு அகிலர்க்கும் அறைந்தான் சூதன். (30)

## ஷை ஷை ஷை 43-ம் அத்தியாயம்.

அன்றியுமேவிதியுடனே நியமமாக அமலமதாம் விபூதியினால் அங்கமெல்லாம், நன்றுறவேயணிந்து திரிபுண்டரத்தை நலமாகச் சந்ததமுந் தரிப்போருக்கே, துன்றிய நற்பரமசிவகருணையுண்டாம் தோன்றிய அக்கருணையினால் சித்தந்தூய்தாய், என்றும் ஒரு விக்கினமுமின்றி நன்றாய் இருமையிலா அகம் பிரம ஞானந்தோன்றும். (12)

பத்தியுடன் விபூதியுடைத்தாரணந்தான் பாசுபத விரதமெனப்பகரலாகும், சத்தியமாய்விபூதியுடைத்தாரணத்தால் சடிதியினில் அகண்டபரஞான முண்டாம், உத்தம இப்பாசுபதவிரதந்தன்னை ஒருவருடம் அனுட்டித்துன் பாதம் பெற்றேன், அத்தன் நினதருளால் இன்று அகண்டஞானம் அடைந்தவனாய் ஆன்மாவில் அமர்ந்து நின்றேன். (13)

## ஷை ஷை ஷை 44-ம் அத்தியாயம்.

உலகிடையந்தணரேயாதியாக வுற்பத்தி பொருந்தியிடுஞ்சீவரெல்லாம், இலகுமறைவிதித்தபடி முன்புகன்மம் இகழாது செயவேண்டுஞ் செய்யுங்காலைத், திலகமதாமறை முடிவில் விதிக்கப்பட்ட திவ்வியமாம்விபூதியினை நியமமோடு, சலனமறச் சந்ததமுந் தரிக்கவேண்டும் சற்றுமிதில் அநாதரவே செய்ய வொண்ணா. (15)

பூதியினால் அங்கமெலாம் நன்றாய்ப்பூசிப்பொருவில் திரிபுண்டரமும் அணிந்துகொண்டு, மாதவனே நியமமுடன் உருதிராக்க மாலைகளுஞ் சிரமுதலில் தரித்துக்கொண்டு இங்கு, ஓதியிடும் உருத்திரபஞ்சாக்ஷராதி யுத்தமமாம் மந்திரமுஞ் செபித்துக்கொண்டு, நீதியுடனிகழு மகாலிங்கத்தின்கண் நித்தியமாய் அர்ச்சனையுஞ் செய்யவேண்டும். (16)

அத்தனுடைப் பூசனை போல் அன்பர் பூசை அநுதினமும் ஆதரவாயியற்ற வேண்டும், உத்தமமாய் ஓதிய ஓர் சிவதலத்தில் உடலுள்ள பரியந்தம் வசிக்க வேண்டும், சுத்தமதாஞ் சிவநாம கீர்த்தனத்தைச் சோர்வறவே சந்ததமுஞ் செய்ய வேண்டும், மெத்தவுமே யுத்தமமாஞ் சாம்பமூர்த்தி மேனியுடைப்பாவனையும் பண்ணவேண்டும். (37)

பூதியினாலணிந்த திரிபுண்டராதி பொருந்தினரே வேதாந்த விசாரந்தன்னில், ஏதமிலா அதிகார மிசைந்தோராவர் இதரரெலாம் அதிகாரியாகமாட்டார், வேத முடிவிவ்விதமே விதிப்பதாலே வேதவிதிக்கயலான விதியொன்றுண்டோ, ஆதலினாலறைந்த அதிகாரம் பெற்றே யகண்டபர விசாரணையைச் செய்யவேண்டும். (41)

## சூதசங்கிதை சூதகீதை சர்வவேதாந்த சங்கிரகம்.

*வேத வேதாங்கமாதி விரும்பத்தியயனஞ் செய்தல்,*
*போத மற்றவை செய்வித்தல் பொலிந்த வேதார்த்தபத்தி,*
*மேதகுமறைவிரோதமேவுநூலுபேட்சை சாந்தி,*
*காதலார் தாந்தி மற்றுஞானாங்கமென்பகற்றோர்.* (6)

*சிவமலிஞானாங்கங்களெவற்றினுந் தேவர்போற்றும்*
*சிவலிங்க பூசையாற்றல் சிவலிங்கப்பதிட்டை செய்தல்*
*சிவனமர்தலங்கடோறுஞ்சென்று சென்றன்பில் போற்றல்*
*சிவனடியார்கள் பூசை சிறப்புற நாளுஞ்செய்தல்.* (7)

*புண்ணிய நீறுருத்திராக்கம் பொற்புறத்தரித்தல்*
*கண்ணியஞான ஆசான் கழலிணைசேவை செய்தல்*
*நண்ணிய ஐந்தெழுத்து முதலா நன்மனுச் செபித்தல்*
*எண்ணிய இவை நன்கென்பார் இருவினையொருவினோரே.* (8)

## ஷை கடவல்லியோடு சுவேதாசுவதரம்.

*தானமகமுதலான புண்ணியத்தாலியோகசித்திதழையவுண்டாம்*
*ஆன அதனால் ஞானமுண்டாகும் முத்தியதனாலுண்டாகும்*
*ஈனமிலிப்பிரமவித்தை விபூதியக்கமணி புனையின் சாந்தருக்கும்*
*தூநலமார் அத்தியாச்சிரமிகட்கும் பேரன்பிற் சொல்லவேண்டும்.* (22)

## ஷை பிரமன் தில்லையினோற்று ஞானம் பெற்றது.

*சாற்றிடும் யாவருந்தகுஞானத்தால்*
*ஏற்றமார்முத்தியை யெய்துவார் நனி*
*ஆற்றிடுகருமங்களனைத்து ஞானங்கொள்*
*போற்றிடு சாதனமாய்ப் பொருந்துமே.* (85)

### பிரமகீதை சாந்தோக்கிய உபநிஷத்.

*ஓடினார்சிலவர் ஒக்ககின்றவர்கள் ஒருவரோடொருவர் தழுவினார்*
*கூடியொண்புடவை மேலெறிந்து சிலர் கொண்டு கொண்டு விளையாடினார்*
*ஓடிவந்து பிரியத்தினோடொருவரொருவர் உச்சியை முகந்தனர்*
*ஆடினார்கள் சிலர் அன்பினாலறிவதொன் றிலா தபடியாகவே.* (108)

இவ்வாறு பலசெய்யுள்களில் தேவர்கள் பிரமதேவனால் அத்வைதஞான முபதேசிக்கப்பெற்று அப்போது அங்கு வந்த பரமசிவனைத் தரிசித்து ஆனந்த சாகரத்தில் மூழ்கி ஆர்ப்பரித்த விஷயஞ் சொல்லப்பட்டிருக்கின்றது

## ஷை பிரகதாரணிய உபநிஷத்.

*சத்தியத்தால் மிகுஞ்சாந்திதாந்தியால்*
*எத்தொழிலும் மிசைவற்றிருத்தலால்*
*பத்தியாலிறைவனைப் பண்ணும் பூசையால்*
*சத்தவேதாந்த மெய்த்துணிவு தோன்றுமால்.* (20)

## திருவிளையாடற் புராணம் வேதத்திற்குப் பொருளுரைத்தது.

*அருமறைநால்வேறு ஆகையால் வருணம் ஆச்சிரமங்களும் நான்காம்,*
*தருமம் யாகாதிகருமமும் மறையின் றகைமையிற்றோன்றின மறையும்,*
*கருமநூல் ஞானநூலென விரண்டாங் கரும நூலிவனருச்சனைக்கு,*
*வரும் வினையுணர்த்து ஞான நூலிவன்றன் வடிவிலாவடிவினையுணர்த்தும்.* (36)

## திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம்
## திருக்கழுமலம் திருத்தாளச்சத்தி
### பண் வியாழக்குறிஞ்சி

*பத்திப்போர்வித்திட்டே பரந்த ஐம்புலன்கள் வாய்ப்*
*பாலேபோகாமேகாவாய்ப் பகையறுவகைநினையா*
*முத்திக்கே விக்கத்தே முடிக்குமுக்குணங்கள் வாய்*
*மூடாவூடா நாலந்தக்கரணமு மொரு நெறியாய்ச்*
*சித்திக்கேயுய்த்திட்டுத் திகழ்ந்த மெய்ப்பரம்பொருள்*
*சேர்வார்தாமேதானாகச் செயுமவனுறையுமிடங்*
*கத்திட்டோர் சட்டங்கங்கலந்திலங்கு நற்பொருள்*
*காலேயோ வாதார்மேவுங்கழுமலவள நகரே.* (7)

## இலிங்க புராணம் தியானவிதி.

*அருத்தியின் ஞானமின்றி முத்தி வீடடைதல் கூடா*
*விரிப்பரு ஞானந்தானுந் தியானத்தாலன்றி மேவாது*
*உரைத்திடுதியானந்தானும் ஓங்கியஞானம் வல்ல*
*குருத்தனியருளினல்லாற் கூடுதலரியதாமால்.* (22)

## வாயுசங்கிதை இருடிகள் பிரமலோகமடைந்தது.

*அருளுநான்மறைகளுரைத்திடு தருமமாசையின்றாயறிந்தியற்றில்,*
*தெரியுமற் றதனாற் பாவபுண்ணியங்கள் ஒத்திடும் ஒத்திடிற்சிறந்த,*
*பொருவறு சிவமா யோகம் வந்தெய்தும் எய்திடில் புகலுதற்கரிதாய்,*
*மருவொணாதாகி யுயர்வற வுயர்ந்த மாசிலா முத்தி யெய்திடுமால்.* (41)

## ஷை வாயுபகவான் அடைந்தது.

*யாங்கள் முற்காலைஞானமொன்றின்றியன்னவாகனன்றனையெய்தித்*
*தீங்கறஞானமுதவெனவுரைப்பத்திங்கள்கேணிபனடிமுன்னி*
*ஓங்கிருவேள்விபுரிமின்அக்காலையுலவைவேந்துஉம்முழையடைந்து*
*பாங்கினில்ஞானமுமதுளங்கொள்ளப்பாற்படப்பகர்வன்என்றுரைத்தான்.* (2)

## சூதசங்கிதை சமாதிவிதி.

*நடந்தாலும் இருந்தாலும் நவின்றாலும் துயில் கொண்டு*
*கிடந்தாலும் விழித்தாலுமகிளர்முடிமன்னவர் முதலோர்*
*தொடர்ந்தாலும் தொழுதாலும் துதித்தாலும் அவமதித்துக்*
*கடந்தாலும் மெய்ஞ்ஞானிகமலவிலைப்புனல் போல்வான்.* (25)

*இனையஞானிதனைப்பரனென்றெண்ணாதேவனவமதித்தான்*
*அனையபாவிநெடுங்காலம்அள்ளலனைத்தும்அழுந்திடுவான்*
*வனையுஞானியெவன்மனைச்செல்வான்அச்செல்கைமாத்திரத்தான்*
*நினையும்போகம்பற்பலவும்நிரம்பவுறும்அம்மனையாளி.* (26)

*இன்னும் அவன்றன் பிதிரர்க்குழுவேற்றமாகிமுத்தியிடை*
*மன்னும்ஞானி அருட்பார்வைவயங்களவன் மேற்படினும் அவன்*
*துன்னு பாவமெலாமொழிந்தோன் தூயஞானிதானுதித்த*
*மின்னுகுலமும்புனிதமுறும் மேவுவாள் அன்னையுமுத்தி.* (27)

*செய்யஞானி தரிசனமேதேவதேவன்றரிசனமாம்*
*ஐய அவன் றங்கிடுபூமியடைந்தசிவபுண்ணியபூமி*
*தெய்ய அவனை வணங்கிடுதல் சிவபிரானை வணங் தல்*
*பொய்யில் அவனுக்கு இயற்று பணிபூதநாதற்கியற்று பணி.* (28)

*மருவுகுகலைமழவுமணிவள்ளத்தருமையறியாது*
*பெருகஇகழும்அதுபோலப்பித்தின்முழுகும்பேருலகம்*
*பொருவில்ஞானியருமைதனைப்போற்றாதிகழ்ந்துபுகரடையும்*
*கருவன்மலத்தையிருங்கயிலைக்கடவுளருளாலறுத்துள்ளீர்.* (29)

## பிரமகீதை கேனோபநிஷத்

*பரமாத்துவிதஞானியேபரதேவதைதான்அவனேயித்*
*திரமாமுத்தியான்இங்குச்செப்பும்பொருள்செய்வினையாலும்*
*உரமாந்ததீசிகௌதமனால்உண்டாம்சாபவுரையாலும்*
*கரமாமநுடர்நெஞ்சதனில்காதல்செய்யாதொருகாலும்.* (56)

*ஆரணத்தன்னியமில்லாச் சிவன்றன்பாலும் அத்துவிதவேதனத்தம் அடைதற்குள்ள,*
*காரணமாஞ் சிவலிங்கார்ச்சனத்தும் சாலக் காய்வதுவுமேயன்றி யுருத்திராக்க,*
*தாரணத்துந் திரிபுண்டா தாரணத்தும் சர்வாங்கோத்தூளனத்துந் தானேகாய்வர்,*
*சீரிணக்கும்சிவனென்னு முரையுந்தங்கள் செவியாலுங் கேளார் செய்வினை யாற்றீயோர்.* (57)

*தொல்லைநல்லினையால்சுருதிநன்மிருதி சொன்னவா துணிந்தஅத்தூயோர்*
*ஒல்லையில்பரமாத்துவிதவேதனத்தை யுள்ளவாறுணரவேயுணர்வர்*
*நல்லஇப்பரமாத்துவிதஞானியை நாராயணன்நான்உருத்திரனும்*
*எல்லையில்லாத்தேவரும்பூசித்து ஏத்தவும்படும் இவனென்றும்.* (58)
*ஈசனாம்ஞானியிருந்துளவிடத்தே யிருப்பதுமுத்திதானந்தத்*
*தேசிகனேவல்செய்பவன்கால்என்சென்னியிலிருப்பதுமன்னி*
*மாசிலாப்பரமஞானியாமுனிக்கு மகேசனுமொப்பலன்மதிக்கில்*
*ஆசிலாஅரியுமொப்பலன்நானுமொப்பலன்ஏவரொப்பாரே.* (59)

## சூதசங்கிதை மேசகப்பிரதனதியல்பு.

*அனைய நன்ஞானியே யரியதேசிகன்*
*அனையவன் உறையிடம் அவிர் நம்மாலயம்*
*அனையவன் பெரும்புகழ் அலகில் நம்புகழ்*
*அனையனையடுத்தவர் நமையடுத்தவர்.* (21)

இன்னுஞ் சூதசங்கிதை முதலிய பல மகாபுராணங்களிலும் முடிவாக அத்வைத சித்தாந்தஞ்சொல்லி, த்வைத சித்தாந்தத்தை மறுத்து, ஷை அத்வைத சாதனமாகச் சிவபூசை, சத்திபூசை, அடியார் பூசை, சிவாலயதரிசனம், வருணாசிரம தருமம், தீர்த்தமான்மியம், பிராயச்சித்தம், தானம், எண்வகையோகம், ஞானிபணி விடை, கரும பாகம், பிரணவம் காயத்திரி பஞ்சாக்ஷரம் முதலிய வாசக யாகம், மானசயாகம், ஞானயாகம், சிவப்பிரசாதம், சிவபத்தி, சிவத்தலத்தில் வசித்தல், பஸ்மருத்திராக்ஷதாரணம், சிவகாமகீர்த்தனம், சாதன சதுஷ்டயம், சிரவண மனன நிதித்தியாசன சமாதி சாக்ஷாத்கார முதலியவைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளை யெல்லாம் அவ்வவ் நூல்களில் காணலாம்.

இப்படிப்பட்ட பிரமாணங்களினாலே யெல்லாம் அத்வைத ஞானிகளுக்குச் சிவபூசையாதிகள் சாதனமாகவும் சாத்தியமாகவுங் கூறப்பட்டிருக்கின்றன வென்றும், அப்படிப்பட்ட அத்வைத ஞானியின் தரிசனத்தால் பாவங்கள் போமென் றும், அவனது தரிசனம் சிவதரிசனமென்றும், அவன் தங்கிய பூமி சிவபூமியென்றும், அவனை வணங்குதல் சிவனை வணங்குதலென்றும், அவனது பணி சிவபணி யென்றும், அவனை யிகழ்ந்தபாவிகள் நரகடைவார்களென்றும், அவன் பரதேவதையென்றும், அவனை நாரணன் சிவன் பிரமனாகிய இவர்களும் எல்லை யில்லாத் தேவர்களும் பூசித்து ஏத்துவார்களென்றும், அவனிருக்கு மிடத்திலிருப்பது முத்தியென்றும், அவனுக்குச் சிவனும் நாரணனும் பிரமனும் சமானமாகார் களென்றும், அவனுக்கு உடல் பொருள் ஆவியைக்கொடுப்பவர்கள் ஞானத்தைப் பெற்றுப்பிறவியறுப்பார்களென்றும் அப்படிப்பட்ட பரமாத்துவிதத்தைத் ததீசி கௌதமர் சாபத்தைப் பெற்றவர் மனம் காதல் செய்யாதென்றும் ஏற்படுகின்றமை யால் அப்படிப்பட்ட பரமாத்வைத மகாத்துமாக்களைச் சிவனடி யாரல்லரென்றும் அசாதுக்களென்றும் சிவத்துரோகிகளென்றும் சொல்வது என்னபாதகப்பயனோ? இங்ஙனமாய் அதிபாதகத்தொழிலை மேற்கொண்ட சிவத்துரோக அசாதுவுடன் பேசுவ தடாதாயினும் அவரது அசாஸ்திர அயோக்கியவார்த்தைகளை உத்தமரெவ ருங்கண்டு மயங்கிக் கெட்டுப் போகா வண்ணம் அதனுண்மையைச் சாஸ்திரப் பிர மாணங்களோடு எடுத்துக்கூற வேண்டுவது எமது கடமையாயிற்றென்க. வேதம் முதலிய சாஸ்திரங்களில் முடிவாக அத்வைதமே சொல்லுகின்றதென்பதற்கும் துவைதத்தைத் தும்சஞ் செய்கின்றதென்பதற்கும் அத்வைதஞானத்திற்குச் சிவபத்தி முதலியன சாதனமாம் என்பதற்கும் பிரமாணங்கள் இப்போது அனேகமாய்க்காட்டி யிருக்கின்றமையாலும் சாத்தியமான அத்வைதஞானமும் அதற்குச் சாதனமான சிவபத்தி முதலியனவும் வேதாந்திகளுக்கே யுரியனவாமென்பதாம். நூறு ஆஸ்தியுள்ளவனிடத்தில் ஐம்பது இல்லையென்று எங்ஙனஞ்சொல்லப்படாதோ,

அப்படியே வித்து, வரன், வரியான், வரிட்ட னெனச் சொல்லப்படும் சதாநிஷ்டர்களா யிருக்கும் அத்வைத சகஜ ஞானிகளிடத்தில் பத்தியாதிக ளில்லையென்று சொல்லப் படாது. அத்தகைய மகான்களிற் சிலர் பாலரைப்போலவும் பித்தரைப்போலவும் பேயரைப்போலவு மிருப்பதுடன் விதிவிலக்கின்றி அவதூதர்களாய் விபூதி உருத்திரா க்ஷம முதலிய ஜடசாதனங்க ளின்றியு மிருக்கிறார்க ளானதால் அவ்வகைப்பட்டவர் களிடத்தில் விபூதியாதி ஜடசாதனங்கள் காணாமைபற்றி அவர்கள் சிவனடியார் களல்லரென்றும் அசாதுக்களென்றுஞ் சிவத்துரோகிகளென்றுஞ் சொல்வது ஞானநூ லாராய்ச்சி யில்லாமையேயாம். இதனாலேதான் இவரையும் இவர் நண்பர்களையும் நாஸ்திகரென்றும் வேதசாஸ்திர மரியாதை யறியாதவரென்றும் வேதவிரோதி களென்றும் வேதபாஹிய ஆகமிகளென்றும் சொல்லற் கிடனாகின்றதென்க.

இவர் பக்கத்தார் சுருதிமுதலிய நூல்களுக்கு மாறாகத் தப்புத் துவிதசித்தாந்த மொன்று கற்பித்துக்கொண்டு அதன்படி யொழுகாதவர்களை யெல்லாம் தூஷிக்கின்றனர். இதற்குச் சக்ப்ரமாணங்கள் கிடையா; சற்பிரமாணங்களில் துவிதமதகண்டனை மாத்திரம் விசேஷ மாயுண்டு. சிவஞானபோதமூலத்துக்கு விரோதமாக எழுதிக்கொண்ட துவிதவுரையும் அந்தத் துவிதத்திற்கு அனுகூலமான சிவஞான சித்தியார் முதலிய நூல்களுமேயன்றி மற்றப்படி சுருதியாதிப் பிரமாணங் களிவர்களுக்குக்கிடையா. ஆனாலத்வைதத்திற்குச் சாதனமாகச்சொல்லியிருக்கும் மேற்காட்டிய சாதனங்களை மாத்திரம் தங்களுக் குரியதெனக் கொள்ளுவதோடு இப்படியே தேவார திருவாசகாதிகளையுங் கொள்ளுகின்றார்கள். இவ்வாறு மேல் நோக்காகக் கொள்ளுவது மாத்திரந்தானே அவைகள் தக்களுக்கு மாத்திர முரியனபோலவும் அத்வைதிகளுக்கு உரியன வல்லபோலவும் கொண்டு, அத்வைதிகளைத்தூஷிக்கின்றார்கள். இது குடிக்கூலிக்கு வந்தவன் வீட்டுச் சீட்டுப் பிறப்பித்துக்கொள்ளப்பார்ப்பது போலிருக்கின்றது. ஷை விபூதி உருத்திராக்ஷாதிகளின் சூட்சுமார்த்தத்தைப் பார்க்குமிடத்து அவைகளும் அத்வைத பக்ஷமாகவே யிருக்கின்றமையான் அவற்றிலும் இவரது துவைதத்திற்கு ஏதும் சாதக மில்லையென்க. சூட்சுமார்த்தம் பயன். படாமற்போயினும் ஸ்தூலார்த்தமேனும் பயன்படுதல் கூடுமேயென்னின் அந்தஸ்தூலமும் அத்வைதசாதனமாயிருப்பதாலும் அந்த அத்வைத மிவர்களுக்கு விரோதமா யிருப்பதோடு அதைச் சதா தூஷிப்ப தாலும் அதனால் மிகுபாவத்தைத் தேடிக்கொள்வதாலும் அந்தச்சாதனத்தால் அடையவேண்டிய சாத்தியமில்லாமற் போதலாலும் ஷை ஸ்தூலபயனும் இவர்க ளடைய மாட்டார்களென்பது திண்ணம். அத்வைதிகளுக்கு அத்வைத ஞானமும், அதற்குச் சாதனமான விபூதி உருத்திராக்ஷாதி சாதனங்களு முள்ளன; இவர்களுக் கோ அத்வைத ஞானமுமில்லை; அவ்வத்வைதத்திற்குச் சாதனமான விபூதி உருத்திராக்ஷாதி சாதனங்களு மில்லை. ஆதலால் பூர்வபக்ஷிகள் சாதனத்தைக் கைக்கொள்வது போலியேயாமென்க.

## விடை முன்னமே வந்திருக்கின்றது.

பின் ஷெ 32 வது பத்திரிகையில் "ஒன்றே பொருளும், அதற்கிரண்டாவது பொருளின்றென்பதுஞ் சித்தமானால், அவ்வொன்றாம் பொருளை யொன்றென்று சுட்டியவர் யாவர்?" என்கிறார். இப்படிப்பட்ட கேள்வி சபாபதிநாவலரும் சோமசுந்தர நாயகரும் கேட்டு, அதற்கு விடை வேதாந்தசங்கை நிவாரணத்திலும் அத்வைத் துஷண பரிகாரத்திலும் பெற்றிருக்கின்றார்கள். ஷெ இரண்டு நூல்களையும் இவர் வாசித்துப் பார்த்து அதைப் பூர்வபக்ஷஞ்செய்து மேலே நியாயமிருந்தால் எழுதலாம்.

## ஒன்றென்பதுங் கற்பனை.

"இரண்டென்னு மெண்ணில்லாதபோது ஒன்று என்னும் எண்ணுக் கிடமேது? " என்றார். இதனுண்மை யிவர்க்கு விளங்கவில்லை.. "விளங்கினால் இவ்விதசங்கை செய்யமாட்டார். சிவனென்னும் பாரமார் திக சத்துப்பொருளில் தோற்றும் போலிப் பொருளைமெய்யெனமருண்டு துவைதிகள் துவைதம் சாதிக்க வருகின்றமையால் அவர்களைக் கண்டிக்கும் பொருட்டு, இரண்டல்ல, ஒன்றே யெனச் சுருதி சொல்ல வந்ததே யன்றி யுண்மையில் ஒன்றென்பது சுருதி தாத்பரியமன்று. இதனால் சிவனென்னும் பொருளின் றென்பதன்று; அதை யொன்றெனச் சொல்வது மாத்திரமே கற்பனையாம். பிரதிபிம்ப சூரியனைக் கண்டு, அது ஒன்றும் பிம்பசூரியன் ஒன்றும் ஆகவிரண்டு சூரியர்களிருக்கின்றார்களென்று பேதைமைத்தனமாய் எவனேனுஞ் சொல்வானேல் அவனை மறுக்கும் நிமித்தம் சூரிய னொருவன் தான் என்று சொல்வது குற்றமாகாதே. இதனால் இரண்டாவது சூரியனை யொப்புக்கொண்டதாயு மாகாதே. இன்னொரு உபமானமுங் கூறுகின்றோம். கயிற்றின் கண்தோன்றும் அரவு காரியம்; கயிறு காரணம். இது விவர்த்த காரண காரியம். அரவு பொய்யென்று துணிந்தபின் அரவில்லை. அரவில்லாதபோது காரியமென்ப தில்லையென்றாகின் றது. காரியமே யில்லையானால் பிறகு காரணமென்ப தேது? காரிய காரணங்கள் ஒன்றை விட்டொன்று பிரியாதென்பது நாம் அறிந்த விஷயம். காரியமென்று சொல்லும்போதே அந்தச் சொல் காரண. மென்னுஞ் சொல்லைத் தழுவிக்கொண்டே யிருக்கின்றது. எங்கே காரிய மில்லையோ அங்கே காரணமென்பது மில்லை. இதனால் காரணத்துக் கிடமாயிருந்த கயிறென்பது இல்லையென்று கூறவந்தா மில்லை. கயிற்றுக்குக் காரணமென்கிற பேர் இல்லையென்று மாத்திரங் கூறுகின்றா மென்க.. இதுபோலச் சிவன் காரணம், உலகு காரியம். காரணத்தைத் தவிரக் காரியத் துக்குப் பொரு ளில்லையென்கிறபடி சிவனைத்தவிர வுலகுக்குப் பொருளில்லை. பொருளில்லாதபோது காரியமில்லையாகும்; காரியமே யில்லாதபோது காரணமென் பதும் இல்லையாம். காரணமில்லையென்பது கொண்டு சிவனே யில்லையென்ப தல்ல. பின்னைச் சிவனைக் காரணமென்று சொல்லப்படாதென்பதாம். இதனிமித் தமே சிவன் காரிய காரண ரகிதப்பொருளென்று சுருதியாதிகள் கோஷிக்கின்றன.. கயிறு காரணமும் அரவு காரியமுமென ஒரு அவசரத்தில் சொல்லப்படினும் மற்றொரு அவசரத்தில் கயிறு காரியகாரண ரகிதப் பொருளென்றே சொல்லற் கிடனாம். இங்ஙனமே சிவன் காரணமென்றும் உலகு காரியமென்றும் ஒரு அவசரத்தில் சொல்லப்படினும் மற்றொரு அவசரத்தில் சிவன் காரிய காரண

ரகிதப்பொருளென்பதே சித்தாந்தமா மென்க, இங்ஙனமே இரண்டென்னுங் கொள்கையை மறுக்கப் பிரமம் ஒன்றென்று சொல்லப்படினும் மற்றொரு அவசரத்தில் ஒன்றென்பதுங் கழிக்கப்படுதல் சித்தாந்தம். அது பற்றியே சாமவேதத் தின் மைத்திரேயோபநிஷத்தில் 3-வது அத்தியாயத்தில் "துவைதாத்வைதமில்லாத வனாயிருக்கிறேன்" என்றும், "ஒன்றென்கிற கணக்கற்றவனா யிருக்கிறேன்" என்றும், சூதசங்கிதை சமாதி விதியுரைத்த அத்தியாயம் பதினாறாவது செய்யுளில் "சகலபூத ங்களையும் தன்னுயிரிற் காண்பதுவுஞ் சகலபூதங்களிடம் தன்னுயிரைக் காண்பது வும், இகலற எஞ்ஞான் றொருவனுளனாவன் அஞ்ஞான்றே, "இகன் மிகு மின்பார்தரு மொன்றிரண்டறு முத்தியை யடைந்தோன்" என்றும் கூறியிருக்கின்றன வென்க. வேதமானது இரண்டென்று மலைவாரைநோக்கி பிரமம் ஒன்றென்று கூறவந்தால் "சந்து விட்டால் வந்துவிட்டேன்"' என்பது போலத்தமக் கேதோ சாதகங் கூறுவதாகப் பிரமித்துப் பேசுகின்றார். இனி வேதாந்த சாஸ்திரங்களி னுட்பங்களை ஆதியோடந்த மாய்த் தக்கார் பால் துவேஷ புத்தியை விட்டுக் கேட்டுப் பின் இது விஷயமாக ஆசங்கை செய்ய வருவாராக.

## பிரமத்துக்கு ஜீவன் போலியாய் வேறென்பது.

"பிரமம் ஒன்றும், ஜீவர்கள் பலருமாயிருப்பதால், ஜீவர்களில் வேறுபடுத்தவே பிரமம் ஒன்று என்று அப்பிரமத்தைச் சுட்டியவாறறிக. இதனால் பிரமத்துக்கு வேறாக இரண்டாவது பொருள் ஜீவனென்பதொன்று சத்தாய் நிலைத்தது சித்தாந்தமாயிற்று' என்று சொல்லி விருது கூறிவிட்டார். கொடி போடவேண்டியது தான் பாக்கி. இவர் வாய்ச்சொல்லால் விருது கூறிக் கொடி போடப் பார்க்கின்றார். ஏதேனுஞ் சுருதிப் பிரமாணங் கூறுகின்றாரா? யுக்தி அனுபவங்கள் காட்டுகின்றாரா? ஒன்று மில்லை. நாம் எவ்வளவோ சுருதிப்பிரமாணமும் யுக்தி அனுபவங்களுங் காட்டி அத்வைதத்தைத் தாபித்துவர, ஒருநியாயமு மில்லாமல் வாயினால் வீரியம் பேசிக்கொடி போடுகின்றாரே. பிரமம் பரிபூரண சத்துப்பொருளா யிருக்கும்போது ஜீவனென்கிற பொருள் சத்தாய் எப்படி யிருக்கும்? சொல்வார் சொன்னாலும் கேட்பார்க்கு மதியில்லையா? ஜீவன் எப்படிச் சத்தாய் நிலைத்ததோ அதனுண்மை யை செய்டுத்துக் கூறினாரில்லையே.

முன்னொருகாலத்தில் தேவர்களுக்குப் பிரமதேவன் அத்துவிதத்தை யுபதேசித்தாரென்றும் அப்போது அந்த அருத்தம் சரியென்று பரமசிவன் வந்து சொன்னாரென்றும் பிரமகீதை சாந்தோக்கிய வுபநிஷத்தில் கூறியிருக்கின்ற தன்றா? ஈசுரகீதையிலும் அத்வைதமே யுண்மையெனப் பரமசிவன் சொன்னதா யிருக்கின்ற தன்றோ? ஸனகாதிகளுக்கும் பரமசிவன் தக்ஷிணாமூர்த்தி கோலமாயிருந்து அத்வைதத்தை அநுக்கிரகஞ் செய்ததாய்ச் சுருதி புராணாதிகளில் கேட்டிரு கின்றோ மன்றா? அப்படிப்பட்ட பரமசிவன் இவர் முன் வந்து "அத்வைதந்தான் உண்மையான சித்தாந்தம், நீர் கூறும் துவைதம் சுருதி யாதிகளுக்குச் சம்மத மன்று, அது பொய்ச் சித்தாந்தம்" என்று சொன்னாலுங் கேட்கமாட்டார். நெற்றிக்கண், சடைமுடி, கங்கை,, பிறைமதி, மான், மழு, சதுர்ப்புஜம், புலித்தோலாடை, என்பு, அரவாபரணம், யானை ததோல் முதலிய வற்றைக் காட்டி, "நான் தான், பரமசிவன், அன்று

ஸநகாதிகளுக்குபதேசித்தவனும், ஈசுரகீதை சொல்லியவனும், பிரமகீதையில் சொல்லிய அருத்த முண்மையென்று சொல்லியவனும், ஆலகாலவிஷத்தை யுண்டவனும், திரிபுரசங்காரஞ் செய்தவனும், விஜயனோடு சண்டை செய்தவனும், பார்வதியை மணஞ்செய்தவனும், வெள்ளியங்கிரியில் வீற்றிருப்பவனும், இன்னும் புராணாதிகளில் பரமசிவனெனச் சொல்லப்பட்டவனும் நான்றான்" என்று நெய்யில் கைதோய்த்து மும்முறை சாத்தியஞ்செய்து, "வேதாகமாதி நூல்களின் சித்தாந்தம் அத்வைதமேயாம், துவைதமன்று, நீர் வீணாக எனக்கும் என்னால் சொல்லப்பட்ட வேதசாஸ்திரங்களுக்கும் விரோதம் பேசவேண்டாம், இம்மானிடஜன்மங்கிடைப்ப தருமை கிடைத்தாலும் இப்பரதகண்டத்திற் பிறப்பதருமை, பிறந்தாலும் கூன் செவிடு பேடு நீக்கிப் பிறப்பதருமை, பிறந்தாலும் வேதசாஸ்திரத்தின் வழி நின்றொழுகும் மதஸ்தரது குலத்திற் பிறத்தலருமை, தலருமை, பிறந்தாலும் கல்விகற்று அறிவுடையராய்ப் பதி பசு பாச லக்ஷணங்களை விசாரித்தலருமை, அப்படி விசாரிக்க வந்தும் ஷை வேதசாஸ்திர விரோதமாய்த் "தான் பிடித்த முயலுக்கு கால்மூன்றே" என்பது போல் பிடித்தபிடி விடாமல் பேசி இஜ்ஜன்மத்தைப் பாழ் பண்ணிக்கொள்ள வேண்டா" மென எவ்வளவு சற்புத்தி புகன்றிடினுங் கேட்க மாட்டார். "என்ன கதி வந்தாலும் வரட்டும், தெரிந்தோ தெரியாமலோ எனக்குத் தோன்றியதைச் சொல்லிவிட்டேன், இனி அதற்கு மாறிப் பேசமாட்டேன், இனி நெற்றிக்கண் முதலியவற்றில் ஒவ்வொன்றிற்கும் ஒன்பது வீதம் எடுத்துக்கொண்டு வந்தாலும் என் பிடிவாதத்தை விடமாட்டேன், தக்கன் றன் பிடிவாதத்தை விட்டானா? இரணியன் விட்டானா? திரியோதனன் விட்டானா? அவர்களெல்லாம் எனக்கு ஈடாவார்களா? அவர்களெல்லாம் தங்கள் பிடிவாதத்தை அந்த வொரு ஜன்மத்தில் விடாதிருந்தார்கள், நான் எத்தனை கோடி எழு வகைப் பிறப்பிலும் விடமாட்டேனே, இனி நீர் சொன்ன வேதாகம சாஸ்திரங்களை அடியோடு புரட்டித் துவைதப் படுத்தாவிடில் நான் வீரபத்திரமூர்த்தியா பாரும், அரக்கோணவாசியா பாரும், நீர் மாயையையும் உலகையும் பொய்யென்றீரே, நான் அதை மாற்றி மெய்யென்று ஸ்தாபிக்கிறேன் பாரும்" என இவ்வாறு பரமசிவனையே யெதிர்த்துக் கொள்வாரே; அம்மம்ம!! அரக்கோண வீரபத்திரமூர்த்தி லேசானவரா? அன்று பரமசிவன் நெற்றிக் கண்ணொன்றனைக் காண்பித்த போது நெற்றிக்கண் காண்பிக் கினுங் குற்றங் குற்றமென்று நக்கீரர் சொன்னாரென நாம் கேள்விப் பட்டிருக்கின்றா மன்றோ? இவர், ஆயிரங் கண்கள் காண்பிக்கினுங் குற்றங் குற்றமே யென்று சொல்ல அஞ்சாரே!

நிற்க; இந்தப் பூர்வபக்ஷியார் கூறுகிறபடி பிரமம் ஒன்றென்பதும் உண்மை தான், ஜீவர்கள் பல வென்பது முண்மைதான், ஜீவர்களினின்றும் பிரமம் வேறுபடுவதும் உண்மைதான். இதைக் கொண்டு ஜீவனைச் சத்தெனல் மாத்திரம் அமையாது. இவர் சொல்லளவில் வேறுபடுத்தப் பார்க்கிறார். அதுவும் வெகு விரைவில் இரண்டொரு வரியில் சித்தாந்தஞ் செய்யப் பார்க்கின்றார். இது ஆகாது! ஆகாது!! சூதசங்கிதையில் சூத கீதையில் பரமவிஞ்ஞான முரைத்த அத்தியாயத்தில் நான்காவது செய்யுளில் "ஆன இம்முப்பா னைந்தறக்கப்பாற்பட்டவன் பசுவே. ஈனமிலாப் பரசிவ னிப்பசுவினுக்கு வேறானோன்" எனச் சொல்லிவிட்டு, அடுத்த ஆறாவது செய்யுளில் "முன்னும் அவித்தையாற் பசுபேதமும் மொய்வலிய மாயையாற் பன்னு பரதத்துவபேதமுங் கற்பிக்கப்பட்டது" என்று சொல்லியிருப்

பதைத் தயை புரிந்து சற்றுய்த்து நோக்கி ஆராய்ந்து பார்ப்பாரானால் 'ஜீவனென்ப தொன்று சத்தாய் நிலைத்தது சித்தாந்தமாயிற்று' என விருது கூற முன் வாரார். நூற்பிரமாணங்களில் ஜீவர்களைக் கற்பனையாகவும் சிவனை யதார்த்தமாகவுஞ்சொல்லி, ஜீவர்களினின்றும் சிவனை வேறுபடுத்தினால் இவர் இரண்டு பொருள்களையும் யதார்த்தமாக்கிக் கொண்டு வேறுபடுத்தப் பார்க்கின்றார். இவருக்கு வேத வேதாங்கங்கள் வேண்டாம், ஆகமங்களும் வேண்டாம், புராணே திகாசங்களும் வேண்டாம், இவரது யுக்தியே இவருக்குப் பிரமாணமாம் போலும்! அந்த யுக்திக்காவது பொருத்தமா யிருக்கிறதோவென்று பார்ப்போம். இவர் பிரமத்துக்கும் ஜீவர்களுக்கும் பேதஞ் சொல்லுகிறாரா? அபேதஞ் சொல்லுகிறாரர்? பேதஞ் சொல்லுகின்றாரென்னின் பிரமம் ஒரு இடத்திலும் ஜீவர்கள் ஒரு இடத்திலும் இருப்பதாய்ச் சொல்ல வேண்டும். அப்போது பிரமம் அபரிபூரண தோஷத்தை யடையும். இது பிரமமும் பரிபூரணம், ஜீவான்மாக்களும் தனித் தனிப் பரி பூரணமென்று சொல்லும் இவரது சித்தாந்தத்திற்குப் பங்கமாமே. 'பிரமத்தை ஜீவர்கள் சுட்டியவா றறிக' என்றிவர் கூறியதால் பிரமம் சுட்டுப் பொருளும் சடமும் அசத்துமாய் முடிந்து, (பிரமம் அசத்தாய்ப் போவதால்) இவர் நாஸ்திகராகின்றாரென "அத்வைத தூஷண பரிகார" த்தில் நாம் விரிவாயெழுதியதோடு, சபாபதி நாவலரை மறுத்தெழுதிய "வேதாந்த சங்கை நிவாரண" த்திலும் இது விஷயமாகப் "பேசப்பட்டி ருக்கின்றமையால் இவரது யுக்தியும் போலி யுக்தியாய்த் தகர்ந்து போயிற்றென்க.

## பிரதிவாதியாரது துர்ப்பலம்.

"இதற்கு நேர்வழியினின்று விடைபகர்வதொழிந்து விவகாரம் பரமார்த்தம் என்று பழங்கதையிலிறங்கிக் காலப்போக்குச் செய்தல சங்கதமாம்" 'என்கிறார். வியாவகாரிக பாரமார்த்திகமெனச் சத்தியத்தை யிருவகைப்படுத்தி, சிவன் பாரமார்த் திக சத்தியமென்றும் உலகு வியாவகாரிக சத்தியமென்றுங் கூறி, அதற்குச் சுருதி யுக்தி அநுபவங்களையுங் காட்டியிருப்பதோடு, மேற்படி இரண்டையும் பாரமார்த்திக சத்தியமெனக்கூறும் இவரது போலிச்சித்தாந்தத்தைப் பன் முறையிலும் தும்சஞ் செய்திருக்கின்றோ மாகலினானும் அதற்குப் பதில் கூற இவரால் இயலாது காலப்போக்குச் செய்கின்றாராகலானும் இப்போதும் பாரமார்த்திக வியாவகாரிக சத்தியத்தைக்கொண்டே அத்வைதத்தை ஸ்தாபித்துக் கொள்ளுவோமென்று பயந்து குறுக்குவழியென்றும், இரண்டையும் பாரமார்த்திக சத்தாய்ச்சொல்வது நேர்வழி யென்றுங் கொண்டு, இவர் சித்தாந்தப்படி அதாவது இரண்டையும் பாரமார்த்திக சத்தாய்ச் சொல்லும்படி சொல்லுகிறார். இது என்ன விவேகம்! அவர்வழி நமக்குக் குறுக்குவழி, அவர்க்கு நேர்வழி. எமதுவழி அவர்க்குக் குறுக்குவழி, எமக்குநேர்வழி. இது தெரியாதா? அவர் வழியை அநுசரித்துப் பிரதிவாதியை விடைபகரச் சொல்லுவது நியாயமாமோ? அவர் சொல்லுவது போல் அவர் வழியை அநுசரித்து நாம் விடைபகர்கின்றோம்; நமதுவழியை அநுசரித்து அவர் விடை பகர்வாரா? பகர்ந்தால் அவர் அத்வைதியும் நாம் துவைதியு மாகின்றோம். அப்போதும் அத்வைதத் துவைதச் சண்டை யொழியாதே. ஆள்கள் மாறுகின்றார்களேயன்றி ஆள்களால் எடுத்து வாதிக்கப்பட்ட வாதம் ஒழியாதே. இரண்டையும். பாரமார்த்திக சத்தாய்ச் சொல்லுவது துவைதிகளின் சித்தாந்தம். ஒன்றைப் பாரமார்த்திகமாகவும்

ஒன்றை வியாவகாரிகமாகவுஞ் சொல்வது அத்வைதிகளின் சித்தாந்தம். அவரவர் சித்தாந்தத்தை அநுசரித்து அவரவர்கள் வாதிப்பார்களேயன்றி, ஒருவர் சித்தாந்த த்தை யொருவர் அநுசரித்து வாதிக்கமாட்டார்களே.. இது, சிறுவரும் உணர்ந்த விஷயமாயிற்றே. இப்படியிருக்க அதைமாற்றி யெழுதும்படி சொல்லுவதும் அதைப் பழங் கதையென்று பேசுவதும் நியாயமாமா? இது தோல்வித்தானத்திற் சிலக்கன்றா? நமது சித்தாந்தத்தை நாம் சொல்வது பழங்கதையானால் நமது சித்தாந்தத்தை மாற்றி யெழுதச் சொல்வது என்ன கதை? இதனால் பிரதிவாதியாரது துர்ப்பலம் வெளிப்பட்டமை காண்க. விவகாரம் பாரமார்த்திகம் என்பன அத்வைதிகளுடைய சொந்த அபிப்பிராயமன்று; நூற்பிரமாணமேயாம். அதுவும் கேவலம் அத்வைதிகளா லேயே யியற்றப்பட்ட நூற்பிரமாணமன்று யாவரும் அங்கீகரிக்கத்தக்க பதினான்கு வித்தைக்குட்பட்ட நூற்பிரமாணமாம். அந்தப் பிரமாணம் வருமாறு: -

## சூதசங்கிதை பஞ்சாட்சரமந்திரம்.

*வாசகவாச்சியபாவம் இலக்கிய நல்லிலக்கணபாவங்கள்முன்னாப்*
*பேசவருபவையாவும் விவகாரதிசையினன்றிப் பிறங்காநின்ற*
*மாசகன்ற பரமார்த்த நிரூபணத்திலில்லை வயங்குறு வெண்ணீறு*
*பூசனகற்கன்னியமாயவையெல்லாம் பொய்யாகிப்போதலாலே.* (12)

*இல்லை இருப்பது பொய்மெய் விளக்கம் அஃதின்மையென இவைமுன்னாகச்*
*சொல்லும் விவகாரமெலாமாயையினாற்றானின்பசொரூபனென்றும்*
*வல்லசிவன் கற்பித்த மாயா காரியப்பவஞ்சமருவுதோற்றஞ்*
*செல்லலுறு விவகாரதிசையினன்றிப்பரமார்த்ததிசையினில்லை.* (13)

## ஷை வேதார்த்தம்.

*சார்பாரமார்த்தமாய்ச் சாத்தாயென்றுந் தயங்கலாலே*
*யேரதிட்டான் சைதன்னியத்திற்கு நாசமில்லை.* (7)

## ஷை மோசகப் பிரதனதியல்பு.

*சுடருஞானவானந்த சொரூபன் சுயம்பிரகாசன்வினை*
*யிடறில்பரதத்துவனிமலனின்பமாரும்பரமார்த்தன்*
*படர்கேவலனித்தியன் சத்திபதிந்தார்ச்கருளும்பரனவத்தை*
*தொடராதவனாகியவெம்மைத்துவித மறச்சார்ந்தவனேவன.* (11)

## விஷ்ணுபுராணம் முதலம்சம் நான்காம் அத்தியாயம் ஸ்ரீவராஹாவதாரவைபவம்.

*நீயொருவனேபரமார்த்தமாகின்றாய்.*

இதனால் சிவனொருவனே பாரமார்த்திக சத்தியமென்றும், சடசித்துலகம் பாரமார்த்திக அசத்தியமும், வியாவகாரிக சத்தியமுமாமென்றும் தீர்மானமாகின்ற மையான் அத்வைதிகள் வாதம் சாஸ்திரீயமும், இந்தத் துவிதவாதியின் வாதம் அசாஸ்திரீயமுமா மென்க. இவ்வொரு விஷயத்தில் மாத்திரமன்று, வேறு எல்லா விஷயத்திலுமே இவர் அசாஸ்திரீயமான துர்வாதஞ் செய்கின்றார். ஆரியர்போல் நடித்து வேதசாஸ்திரங்கட்குக் கட்டுப் பட்டது போல் காட்டி அவைகட்கு மாறாக வாதிப்பதினும் பகிரங்கமாக வேதபாஹிய அநாரியரென்றே வெளிப்பட்டு வாதிப்பது யோக்கியமும் அழகுமாம்.

## மகா வாக்கியம்.

"ஒன்றே பொருளானால், இரண்டாவது பொருள் அறவே யில்லை. அங்ஙன மாயின் தத், தவம், அஸி சொற்பாகுபாடுகள் வேதத்திற்,, பெறப்பட்டவாறென்னை? இதனையேயன்றோ அஹம், பிரமம், அஸ்மி என்று மீண்டும் அவ்வேதங் கூறியது? தத் என்பது பிரமத்தையும், தவம் என்பது அகத்தையும், அஸி என்பது அஸ்மியென்பதையும் விளக்குகின்றன. இப்படியே சுருதிகள் இன்னும் முழங்குகின்றன. இவ்வுபதேசங்களை இரண்டாவது பொருளை யங்கீகரியாத பூர்வபக்ஷி யார் அவ்வொன்றாயுள்ள பிரமத்துக்கே யொப்படைத்துக் கனம் பெற்று வாழ்வாராக" என்றார்.

இதில் தத்வமசி வாக்கியத்தின் வாச்சியார்த்த லக்ஷியார்த்த பேதங்களையும் அதன் உபமான உபமேயங்களையும் எடுத்துச் சொல்லாமலும் அத்வைதிகள் இன்ன விடத்தில் பேதஞ் சொல்லுகின்றார்கள், இன்னவிடத்தில் அபேதஞ் சொல்லுகின்றார் கள் எனக் காட்டாமலும் குழப்பிவிட்டு, அதுவரையில் அத்வைதிகள் தோற்று விட்ட தாயும், இவர் ஜெயித்து விட்டதாயும் பேசிக்கொண்டார். 'ஒன்றே பொருளானால், இரண்டாவது பொருளறவேயில்லை' என்பதனானும், 'தத், தவம், அஸி யென்னுஞ் சொற்பாகுபாடுகள் வேதத்திற் பெறப் பட்டவா றென்னை?' யென்பதனானும் இரண்டாவது பொருளிருக்க வேண்டுமென்பது பூர்வபக்ஷியார் கக்ஷியாகிறது. இரண்டாவது பொருளிருக்கவேண்டுமானால் பிரமம் பூரணமாயிற்றே. எப்படி இன்னொரு பொருளிருக்கும்? இருக்குமென்று சொல்லின் பிரமம் அபரி பூரணப் பொருளாமே. இதுநிற்க; பிரமம் ஒன்றே பொருளென்றும் மற்றப்பொருள் போலியென்றும் இதுவரையில் சுருதி முதலிய பிரமாணங்களோடும், யுக்தி அனுபவங்களோடும் காட்டியதற் கிவர் யாது பதில் விடுத்தார்? அதற்கெல்லாம் பதிலேதும் பேசாது, இப்போது தத்வமசி வாக்கியத்தை விளக்கிக்காட்டாமல் மேல்நோக்காக இரண்டு வரியில் சொல்லிவிட்டால் வெற்றியாய்விடுமா? அதன் பொருளை விளக்கிக்காட்டினால் அத்வைதத்திற்குச் சாதகமும், தம் மதத்திற்குப் பாதகமுமாய் விடுமென்பது பற்றி அவர் மறைத்தாலும் நாம் உள் நுழைந்து அதன் பொருளையும் உபமான உபமேயங்களையும் விரித்துச்சொல்லி, சுருதி யுக்தி அநுபவங்கட்கும் பொருத்தமுறக்காட்டுகின்றோம். தத், த்வம், அஸி என்கிற சொற் பாகுபாடுகளை வேதங் கூறி விட்டது என்பதனால் இவரது துவைதம் நிலைத்து விடாது. வேதம் பசுநூல் மோகநூல் எனக்கூறுவதனோடு, வேதம் தமக்

கவசியமில்லை யென்றவர் கக்ஷியிற சார்ந்த விவர்க்கு வேதப்பிரமாண மவசியமென்னோ? தத், த்வம், அஸி யென்னும் சொற்பாகுபாடுகள் இருந்துவிட்ட தனால் பொருள் பாகுபாடுகளும் இருக்கவேண்டுமோ? பொருள்பாகு பாடுகளிராமல் சொற்பாகுபாடுகள் இருக்கப்படாவோ? ஒரே மனிதன் தாய்க்குப் பிள்ளையும் பிள்ளைக்குத் தகப்பனும் மனைவிக்குப் புருஷனும் பாட்டனுக்குப் பேரனும் மாமனுக்கு மருகனும் அண்ணனுக்குத் தம்பியும் தம்பிக்கு அண்ணனுமா யிருக்கவில்லையா? இவ்வளவு சொல்லும் ஒருமனிதனுக்குத் தானே யுபயோகப் படுகின்றன. ஆதலால் சொற்பாகுபாடுகள் எவ்வளவோ, அவ்வளவுக்கும் பொருட் பாகுபாடுகளும் உளவெனக் கூறுதல் அமையா தென்பதாம். “பல சொற்களுக்கு ஒரு பொருளும் உள்ளது; பலசொற்களுக்குப் பலபொருளும் உள்ளன. அவற்றில் தத், த்வம், அஸி என்னுஞ் சொற்கள் பலபொருள்களையே யுடையன, அதற்காகத்தான் 'அஹம், பிரமம், அஸ்மி என்று மீண்டும் அவ்வேதங் கூறியது, தத் என்பது பிரமத் தையும், த்வம் என்பது அஹத்தையும், அஸி என்பது அஸ்மியென்பதையும் விளக்குகின்றன" யெனக் கூறினாமென்னின், இதுவும் பொருந்தா தென்பதைக் காட்டுவாம். இதில் அகம் என்பதன் பொருள் நான்; பிரமம் என்பதன் பொருள் பிரமம்; அஸ்மி யென்பதன் பொருள் ஆகின்றேன். இந்த வாக்கியத்தைச் சேர்த்தால் நான் பிரம மாகின்றே னென்றாகின்றது. நான் மனிதனானேன் என்றாலும் அது கடமாயிற்று என்றாலும் இது படமாயிற்றென்றாலும் துவைதஞ் சித்திக்குமோ? நான் மனிதன் என்று சொல்லும் போது நான் என்ற சொல்லும் மனிதன் என்ற சொல்லும் இரண்டானாலும் பொருளும் இரண்டாமோ? ஆகாவன்றோ? காரியப் பொருள்கள் பலவாய்த் தோற்றினாலும் அவற்றிற் கெல்லாம் காரணப் பொருளும் பலவாமோ? ஒன்றுதானே. ஒரு மரத்தா லியற்றப்பட்ட யானை வாகனத்தில் கை தலை கால் வால் முதலிய வுறுப்புகள் பலவேனும் அவைகளெல்லாம் பொய்ப் பொருளாய்ப் போக, அவற்றில் யதார்த்தமாயிருப்பது மரமென்னும் பொருள் ஒன்றுதானே. ஏகமான ஆகாயம் கடாகாயம், கடஜலப் பிரதிபிம்ப ஆகாயம், மேகஜலப் பிரதிபிம்ப ஆகாயம், மகாகாயம் எனப் பலவகையாய்ச் சொல்லப்படினும் அவற்றினுள் யதார்த்தமாயுள்ள ஆகாயம் ஒன்று தானே. அதுபோல நான் என்றும் அது வென்றும் அது நானேயென்றும் நான் அதுவே யென்றும் பலவகையாய்ச் சொல்லப்படினும் அவற்றினுள் யதார்த்த மாயுள்ளது ஏக சைதன்னியமேயாம். சாமவேத மகா வாக்கியமான தத்துவமசி வாக்கியத்தில் தத் என்பதின் வாச்சியார்த்தம் ஈசுவரன்; இலட்சியார்த்தம் பிரமம். தவம் என்பதின் வாச்சியார்த்தம் ஜீவன்; இலட்சியார்த்தம் கூடஸ்தன். அசி யென்பதன் பொருள் பிரமகூட ஸ்த ஐக்கியம். அசி யென்பதன் பொருள் பிரகாரம் ஏகத்வஞ் சொல்ல வேண்டும். தத் பதமான ஈசுரனுக்கும் த்வம் பதமான ஜீவனுக்கும் ஐக்கிய முண்டாகாது. பின்னை யெப்படி யென்னின் இலட்சியப் பொருளான கூடஸ்த பிரமத்துக்கே ஐக்கியஞ் சொல்லவேண்டும். இதற்குத் திருட்டாந்தங் கூறுவாம். ஆகாயத்திலிருந்துண்டான பஞ்ச பூதங்களி லொன்றாம் பிருதிவியின் காரியமான கடத்திலிருக்கும் (ஷை பூதங்களிலொன்றான) நீரின்கண் பிரதிபலித்த கடஜலப் பிரதி பிம்ப ஆகாயத்திற்கும், மேகத்தில் பிரதிபலித்த மேகசலப் பிரதிபிம்ப ஆகாயத்திற்கும் ஒருபோதும் ஐக்கியமுணடாகாது. அதுபோல ஜீவே சுவரர்க்கு ஐக்கிய முண்டாகாது. கடாகாயத்திற்கும் மகாகாயத்திற்குமே ஐக்கிய முண்டாகும். ஏனெனில் ஷை இரண்டு ஆகாயமும் வேறுபட்டில்லை. ஒரே ஆகாயம் கடம் மேகம் இவைகள் காரணமாகப் பகுக்கப் பட்டதுபோலக் கடாகாயமென்றும்

மகாகாயமென்றும் தோற்றப் படுகிறதேயன்றி உண்மையில் பகுக்கப் படவே யில்லை. ஆதலா லொன்றேயாம். அன்றிக் கடாகாயமும் மகாகாயமும் கடஜலப் பிரதிபிம்பாகாயமும் மேக ஜலப் பிரதிபிம்பாகாயமும் ஏகாகாயத்தைத் தவிர வில்லை. ஆகாயங் காரணம், மற்றப் பூதங்க ளெல்லாம் காரியம். காரணமான மண்ணையன்றிக் காரியமான கடத்துக்குப் பொருளில்லாமைபோலக் காரணமான ஆகாயத்தையன்றிக் காரியமான நான்கு பூதங்கட்கும் பொருளில்லையாகும். நான்கு பூதங் கட்கும் பொருளில்லாமையால் அப்பூதங்களி லொன்றான பிருதிவியின் காரியகடடத்துக்கும் பின்னும் ஒன்றான ஜலத்துக்கும் பொருளி ல்லை. அங்ஙனமே ஏக சைதனியத்தைத் தவிர மற்றப்படி பிரம கூடஸ்த ஈசுவர ஜீவர்களில்லையாம். திருட்டாந்தத்தில் கடாகாயம் மகாகாயம் என்பதின் பொருள் உண்மையல்லாது போகவில்லை. கடங் காரணமாகவும் மேகங் காரணமாகவும் வந்த பெயரே யில்லாமற் போயிற்று. அங்ஙனமே கூடஸ்த பிரமப்பொருளில்லாமற் போக வில்லை;. வியஷ்டிசமஷ்டி காரணமாக வந்த பெயரே யில்லாமற் போயிற்றென்க. திருட்டாந்தத்தில் கடஜலப் பிரதிபிம்பாகாயம் மேகஜலப் பிரதிபிம்பாகாயங்கள் அநிர்வசனீயமாய்ப்போகக் கடாகாயம் மகாகாயங்கள் எங்ஙன முண்மையாய் நிலைத்ததோ, அங்ஙனமே ஜீவேசுவரர்கள் அநிர்வசனீயமாய்ப் போக, கூடஸ்த பிரமப்பொரு ளுண்மையாய் நிலைத்தமை காண்க. கடாகாயம் மகாகாயமாகிய இரண்டும் இரண்டல்ல; ஒன்றேயாம். பேர் இரண்டாயினும் பொருளிரண்டல்ல. அங்ஙனமே கூடஸ்தன் பிரமமாகிய இரண்டும் இரண்டல்ல; ஒன்றேயாம். அதாவது இரண்டு பொருளல்ல; ஒரு பொருளேயாமென்க

இவர் கூடஸ்தனை ஜீவான்மாவாகவும் சிவனைப் பிரமமாகவும் சொல்லப் பார்க்கிறார். இது சுருதி யுக்தி அநுபவ விரோதம். சுருதியாதிகளில் கூடஸ்தனுக்குக் கடாகாயத்தையும், பிரமத்துக்கு மகாகாயத்தையும் கூறுகின்றமையின் இவர் கூற்றுக் கூற்றாகவே கழிந்துபோமென்க. சிவமென்னும் பிரமப்பொருள் வியஷ்டி சரீரம் வரையில் கட்டுப்பட்டிருப்பது போன்ற அவசரத்துக்கு அப்பிரமத்துக்கே கூடஸ்தனென்று சொல்லப்படுகின்றது. கூடஸ்தன் சத்துப்பொருள்; ஜீவன் சத்துப் போலி அநிர்வசனீயப்பொருள். ஆதலால் ஜீவான்மாவைக் கூடஸ்தனெனச் சொல்லப் படாது; அவ்வாறு சொல்லச் சுருதிப் பிரமாணமு மில்லை. சுருதிவிரோதம வந்தாலும் வரட்டும், கூடஸ்தனை ஜீவான்மாவாக வைத்துப் பிரமத்தை வேறுபடுத் துவோ மென்னின் அங்ஙனமாயின் பிரமங் கண்டப்பொருளாய்ப்போம். இவாமதத்துக்கு விரோதமாக இவரது ஜீவான்மாவுங் கண்டப்பொருளாய்போம்; பிரமங் கண்டப்பொருளாவது சுருதிக்கும் இவர் மதத்துக்கும் அத்வைத மதத்திற்கும் விரோதம்; ஜீவான்மாகண்டப்பொருளாவது சுருதிக்கும் அத்வைதத்திற்கும் அவிரோதமும் இவர் மதத்துக்கு விரோதமுமாம். இதுகாறும் பேசிவந்ததில் தத்துவமசி வாக்கியம் அத்வைதத்திற்கே சாதகமென்றும் இவர்மதத்திற்குச் சாதகமாகாமை மாத்திரமேயன்றிப் பாதகமாகவே அதிலும் முற்றும் பாதகமாகவே யாகின்றதென்றும் விளக்கிக்காட்டினாம்.

இனி நாம் கூறிய மகாவாக்கியார்த்தமே யுண்மையென்பதற்கு அடியில் வரும் பிரமாணங்கள் சான்று புகலும். அப்பிரமாணங்கள் வருமாறுகாண்க: -

## யசுர்வேதம் சர்வசாரோபநிஷத்
## 8. பிரத்தியகாத்மா யார்?

சத்திய ஞானாநந்த ஆனந்த மயமானது, எவ்வித சரீர உபாதியுமற்றது. கடக மகுடாதி உபாதியில்லாத சுவர்ணக்கட்டிபோலுள்ளது. ஞானக்கட்டி, சித்சுபாவம், ஆத்மசைதனியம், பிரமம் இப்படியாய் எது விளங்குகின்றதோ அது அவித்தியோ பாதிக் குட்பட்டதும், துவம் பதத்தினால் சொல்லப்படுவதுமான பிரத்தியகாத்மா.

## 9. பரமாத்துமா யார்?

சத்தியம், ஞானம், அநந்தம், ஆநந்தம், சர்வஞ்ஞுத்துவ முதலியவைகளுடன் கூடின தாயும், மாயோபாதியுள்ளதாயும், தத்பதத்தினாலே சொல்லப்படுகிறதாயு மிருக்கிறதெதுவோ, அதுதான் பரமாத்துமா.

## சுக்கில யசுர்வேதம் பைங்களோபநிஷத் 3-வது அத்தியாயம்.

பிறகு பைங்கலர் யாக்ஞுவல்கியரை மகாவாக்கிய விவரணஞ் சொல்ல வேண்டுமென்று கேட்டார். அதற்கு யாக்ஞுவல்கியர் சொல்லுகிறார்.- "அது நீயாயிருக்கிறாய், நீ யதுவாயிருக்கிறாய், நீ பிரமமாயிருக்கிறாய், ஆகையால் நான் பிரமமாயிருக்கிறேன்." என்று அநுசந்தானஞ் செய்ய வேண்டியது. பிரத்தியக்ஷமா காமல் மறைந்திருக்கிறவனும் சர்வஞ்ஞத்வாதி லக்ஷணமுடையவனும் மாயையை யுபாதியாயுடையவனும் சச்சிதாநந்த லக்ஷணனுமாகிய ஜகத் காரணனானவன் தத்பதத்துக்கு வாச்சியனாகிறான். (தத்பதமானது ஈசுவரனைக் குறிக்கிறதென்பது தாற்பரியம்) அவனே யந்தக்கரணத்தினாலே பேதப்பட்ட அறிவையுடைய "நான்" என்கிற நம்பிக்கைக்கு ஆதாரமாயிருக்கிறவன். (அவன்றான்) துவம்பதவாச்சியனா கிறான். (துவம்பததமானது அந்தக்கரணத்தினுடைய சம்பந்தத்தால் வேறுபோல் காண்கிற ஜீவனைக்குறிக்கிறது என்பது தாற்பரியம்) பரமாத்துமா ஜீவாத்மா இவ்விருவருக்குமுள்ள உபாதியாகிய முறையே மாயை அவித்தை இவைகளை விட்டுத் தத்துவம் பதத்திற்கு லக்ஷியமாகிய தெதுவோ, அதுவே (கூடஸ்தனுர்கு) அபேதமாயிருக்கிற பிரமம்.

## ஷை ஷை 4-வது அத்தியாயம்.

ஞானியானவன் எந்தெந்தவிடத்தில் எவ்விதமாய் மரணமடைந்தாலும் எங்கும் பரவிய ஆகாயம்போல் அந்தந்த விடத்திலேயே லயமடைகிறான் வாஸ்தவ மாய்க் கடாகாசம்போல ஆத்மாவானவன் லயம் அடைகிறதாக அறியத்தக்கது.

## பிரமகீதை சாந்தோக்கிய வுபநிடதம் 7, 8 வது அத்தியாயம்.

*பின்ன கடாகாயாதிகளாலாகாயம்பேதம் பேதமுறாதே*
*யன்னவனேகாகாரணனேகாகார அகம்புக்காலுமனைத்தா*
*மன்னியபேதாகாரமபேதாகாரமுமாய்மாதேவனிரானேல்*
*இன்னதெனாமத்தானெனுமாறெனியாவையுமீசானன் பிறிதன்றே.* (19)

## ஷை முண்டகோபநிஷத்

*இந்தவுடம்புறை சீவபரங்களெனப்படும் அன்னம் இரண்*
*டந்தவிரண்டிலுமொன்று வினைப்பயன் அங்குநுகர்ந்திடுமாந்*
*தொந்தமறும் பரம்மொன்றுமுணாது சொலப்படுபேதமில்வான்*
*வந்தகடத்தில் அகப்படு பேதமெனப்படுமாயையினால்.* (25)

*உடம்புடன் புணர்ப்பார் சீவனுக்கிறையோடொப்புள்ள தென்னிலொப்பில்லை,*
*கடந்திகழ்வானின்வானம்வேறாகக்கருதியொப்புரைப்பரோவொப்பா,*
*யிடுந்திறங் கன்மத்தாலெனிற் கன்மமிறக்குமே விச்சையாலென்னில்,*
*திடம்படமுன்பேயுள்ளதே ஞானந்திகழ்த்துவதில்லது திகழ்த்தா.* (32)

## சூதசங்கிதை ஞானயாகவைபவம்

*மல்லலான்மாபலவாய்த் தோன்றுவதுஞ் சீவான்மாபரமான்மாவெனும்*
*பேதந்தோன்றுமதுவுஞ்,*
*சொல்லலுறினுபாதியாலன்றி மாமுனிவீர் சுபாவத்தினின்ற*
*ஃதெப்படியென்னிற் கேண்மின்,*
*வல்லகடமுதலாயவுபாதி சம்பந்தத்தால் வான்பேதமாய்த்*
*தோன்றுமதுபோலுமுணர்வீர்,*
*செல்லலில் வேதாந்தவாக்கியங்களெல்லாம் பரமசிவனொருவனே*
*யென்னத்தெரிவிக்கும் நாளும்.* (24)

## கூர்மபுராணம் சாங்கியயோகம்.

*வைத்தநீர்க்குடங்கடோறும் தோன்றிடுமதியம்போல*
*வுய்த்திடுமுபாதி தன்னாற்பற்பல வுருவந்தோன்றும்.* (17)

## ஆரியப்புலவர் பாகவதம் 11-வது கந்தம் 4-வது ஆசிரியரையுரைத்தது.

*கண்ணகன்றிடு மிடத்தளவான் கடத்துள்வான்*
*எண்ணநின்றன போகவொன்றாயியைந்ததனால்*

*பண்ணுகின்றதன்மாயையிற் பற்பலபடைப்பாய்*
*நண்ணுகின்றவும் பிரமமொன் றுருவெனவறிந்தேன்.* (8)

## பகவற்கீதை 15-வது பிரபஞ்ச அத்தியாயம்.

*குடந்தொறுந் தோன்றுகின்ற ஆகாயமும் குலைதற்கேற்பத்*
*தடம்புனறோறுந்தோன்றுஞ் சந்திரன்றானுமென்ன*
*வுடம்புக்கடோறும் வேறாயுயிரென நின்றேயந்த*
*விடம்படுபுலன்களாறு மியல்பினிலியற்றுவேனான்.* (12)

## உத்தர கீதை 2-வது அத்தியாயம்.

ஜீவனைக்கடாகாச மகாகாசத்திலே லயம்பண்ணினாற் போலப் பரமாத்மா விலே லயம் பண்ணுவித்து எதார்த்தமாக நிராலம்ப நிச்சங்கமான ஞானங்கண்டபடி யினாலே பிரமப்பிரகாசத்திலே கூடுவன். சந்தேகமில்லை. இந்த ஞானயோகத்துக்குச் சமான மொன்று மில்லையென்று மேல் கிரந்தத்திலே சொல்லுகிறார். (32)

## திருமந்திரம் முப்பதம்.

*தொம்பதந்தற்பதந் தோன்றும் அசிபதம்*
*நம்பியஜீவன் பரஞ்சிவனாய் நிற்கும்.* (5)

## ஷை தத்வமசிவாக்கியம்.

*ஆகிய அச்சோயந்தேவதத்தன்னிடத்*
*தாகிய விட்டுவிடாத இலக்கணைத்*
*தாருபசாந்தமே தொந்தத்தசியென்ப*
*வாகியசீவன் பரன்சிவனாமே.* (3)

*தொம்பதந் தற்பதஞ் சொல்லும் அசிபதம்*
*நம்பியமுத்துரியத்து மேனாடவே*
*யும்பதமுப்பதமாகும் உயிர்பரன்*
*செம்பொருளான சிவமெனலாமே.* (6)

## சிவரகசியம் ரிபு கீதை 35-வது அத்தியாயம்.

*கடமடமென்றுணர்வுற்ற வுபாதி நீக்கிற்கடவிண்ணு மடவிண்ணுமொறேபோல,*
*மடமைமுதற் சீவபரவுபாதி நீக்கின் மாசற்ற சீவரமிரண்டுமொன்றென்,*
*றிடமருவு மூத்தாற் பரசீவைக்கிய வியல்புதனை யிருமையற வறிந்தேயத்தால்,*
*அடருமகண்டாகார சொருபமாகி யசஞ்சலமாயான மாவில் அமர்ந்து நிற்பாய்.* (29)

*சோயமெனச்சொல்லியிடும் வாக்கியத்திற் சோதித்து விருத்தாமிசம் நீக்கும்போதங்,*
*காயசகசைக்கியமே யறியுமர்த்த மவ்விதமே தத்துவமசிவாக்கியத்து,*
*மேய்மதாம் விருத்தாம்சமனைத்து நீக்கியியல்பான வைக்கியமேயறிந்தேயத்தால்,*
*ஆயமனோ பேதமெலாமிழந்தெப்போதும் அசஞ்சலமாய் ஆன்மாவில்.* (30)

## ஷை 377 வது அத்தியாயம்.

*விட்டவிலக்கணையாலும் ஐக்கியந்தோன்றா விடாத*
*விலக்கணையாலும் ஐக்கியந்தோன்ற,*
*திட்டமதா முபய விலக்கணையொன்றாலே*
*யிலங்குபர சீவைக்யமிலங்குமென்றே,*
*திட்டமுறத் தோற்றிய வித்தோற்றமெல்லாந்திகழு*
*ருவாம்பரப்பிரமசொரூபமென்றே,*
*சிட்டமுறுயகண்டபர நிச்சயத்தாற் சின்மயமாம்*
*பரப்பிரமமாத்ரமாவாய்.* (24)

## ஷை 28-வது அத்தியாயம் மகாவாக்கியார்த்தம்.

இவ்வத்தியாயத்தில் அறுபது செய்யுள்களால் நான்கு மகாவாக்கியம் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றில் சில விங்குக் கூறுவாம்: -

*மாயையெனுமுபாதியுறுமீசன்றானே மருவியதற்பதமுரைசெய்வாச்சியார்த்தம்,*
*ஆயதனதவித்தையறஞ்சீவன்றானே யறைகின்ற துவம்பதமோர் வாச்சியார்த்தம்,*
*ஏயமதாமுபாதியெலாமிழந்தபின்ன ரேகல்லிலக்கணமானவத்துத்தானே,*
*தூயபதமிரண்டுக்குமிலட்சயார்த்தந் தொடர்புற்றவைக்கியமேயசிபதார்த்தம்.* (24)

*தற்பதலட்சியமானபிரமரூபந் துவம்பதலட்சியமானநீயேயாவாய்,*
*அற்பமுமேயிதிலை யமமைவதில்லையகண்டசவன்றன்னாணையறைந்துண்மை,*
*சொற்பமிலாவகண்டபரிபூரணமானசுத்தமதாம்பரப்பிரம்நீயேயென்று,*
*செப்பியிடுங்குருபரனேகுருவாகின்றோன் செப்பியவாறறிந்தவனே சீடனாவான்.* (26)

*சித்திரமாமுபாதியுறுஞ்சீவன்றானே செப்புமயம்பதத்துக்கு வாச்சியார்த்தம்,*
*வித்தரமாமுபாதியுறுமீசன்றானே விளம்பியிடுமான்மபதவாச்சியார்த்தஞ்,*
*சுத்தமதாஞ் சீவபர சொரூபந்தானே சொல்விய விவ்வுபயபதலட்சியார்த்தம்,*
*அத்திரமாமுபயபதலட்சியத்தினைக்கியமேபிரமமெனும்பத்தினர்த்தம்.* (50)

*இன்னவிதமிருக்குமுதல்வேதாந்தத்தி*
*லிலங்கிய விந்நான்குமகாவாக்கியத்தின்,*
*பின்னமிலாவைக்கியமாமகண்டார்த்தத்தைப்*
*பேதமெனும்பிராந்தியெலாந்தீரும்வண்ணம்,*

*அன்னசிவனருளியவாறடைவாய்ச்சொன்னோமறைந்தபடி*
*யழுத்தமுறவப்யாசித்தே,*
*நின்னுருவாய்நிலைபெற்றவகண்டார்த்தத்தை*
*நிருமலமாய்நீயென்றுமனுபவிப்பாய்.* (54)

*சுயமதுவாந் தத்வமசியென்னும்வாக்யம்*
*சொல்லுமுபதேசமகாவாக்யமாகும்,*
*இயலுமகம்பிரமாஸ்மியென்னும்வாக்யமிலகும்நுபூதி*
*மகாவாக்யமாகும்,*
*மயன்மருவாப் பிரஞ்ஞானம் பிரமவாக்யம் மனனத்தி*
*னப்பியாச வாக்கியமாகும்,*
*அயமான்மா பிரமமென வறையும்வாக்கிய மதற்கெல்லாஞ்*
*சம்மதமாம் வாக்யமாமே.* (55)

*ஆதலினாற்றத்வமசிவாக்கியத்தா லருளியவாற்கண்டார்த்த மறிந்துகொண்டு,*
*பேதமறப்பிரஞ்ஞானம்பிரமமென்று பேசுமகாவாக்கதனான் மனனஞ் செய்து,*
*வாதகமிலயமான்மாபிரமமென்னும்வாக்கதனாற்சரியெனவேதம்மதித்திங்,*
*கோதுமகம்பிரமாஸ்மிவாக்கியத்தா லுரைத்தவகண்டார்த்தத்தையநுபவிப்பாய்.* (56)

*அனிசமகம்பிரமாஸ்மிவாக்கியத்தா லகண்டபரபாவனையேயப்யாசித்து,*
*நனிமருவும்பாவனையாநாமரூப நாட்டமெலா நன்றாகநாசஞ்செய்து,*
*துனிமருவுந் துவிதத்தின் றொடர்பேயின்றித் துகளற்றங்கண்டார்த்த மநுபவித்தவ்,*
*அனியமிலாவகண்டார்த்தவடிவேயாவா யவ்வண்ணமாகுவதே யகண்டமோட்சம்.*(57)

## பிரமம் சத்தும், ஜீவன் சத்துப் போலியு மென்பது

இந்த வீரபத்திர மூர்த்தியார்: பிரமம் ஒரு பூரணசத்துப் பொருள், சீவன் ஒரு பூரண சத்துப்பொருள் (சீவர்கள் பல கோடி யாகலின் ஒவ்வொன்றுந் தனித்தனிப் பூரண்சத்துப் பொருள்கள்) ஆக விருவகைப் பொருள்களும் சத்துப்பொருள்களென்று சுருதியினாலாவது யுக்தியினாலாவது அனுபவங்களினாலாவது சாதித்துக்கொள்ள முடியாமலும் அது விஷயமாக நேர்ந்த சங்கைகட்கு உத்தரஞ்சொல்லாமலும் வீண்போக்குக்காட்டுமிவர் : பிரமம் ஒன்றுதான் என்றும் ஒன்றென்று கூறிய பசு வேறு என்றும் கூற எழுந்து "ஒன்றென்றதொன்றேகாண் ஒன்றே பதிபசுவாம் - ஒன் றென்ற நீ பாசத்தோடுளை காண்" என வொரு செய்யுளைக் காட்டுகின்றார். அதை யியற்றியவர் மெய்கண்டார் என்பவர். அவர் இவர் மதத்தினர். அவர் பிரமாணத்தை யிவர் கொள்ளவேண்டுவது ஆவசியகந்தான். இவர் அதற்குக் கட்டுப்பட்டிருக்கிறார். அத்வைதிகள் அந்தப்பாட்டைப் பிரமாணமாகக்கொள்வார்களோ? அதற்குக் கட்டுப்படு வார்களோ? இவரும மெய்கண்டாரும் அத்வைதிகளுக்குப் பிரதிவாதிகள்; அல்லது வாதிகள். அத்வைதிகளால் இயற்றப்பட்ட கைவல்லியம் வேதாந்த சூடாமணி இவைகளைக் காண்பித்தால் இவர் பிரமாணமாக அங்கீகரிப்பாரா? அங்கீகரியார ன்றோ? அங்ஙனமே இவர் மதத்தினராலியற்றப்பட்ட நூலை அத்வைதிகள் எங்ஙனம்

அங்கீகரிப்பர்? இவ்வளவு நியாயந்தெரியாத விவரை விவேகியென மதிப்பதெங்ங னம்? ஒருமதத்தினர் மற்றோருமதத்தினருடன் வாதஞ்செய்ய எழின், இருவரும் பொதுப்பிரமாணத்தைக் காட்டி யன்றோ தம்மதத்தைத் தாபித்துக்கொள்ள வேண்டும்? தம்மவர் கூறியதையே பிரமாணமாகக் காட்டியா தாபித்துக் கொள்வது? இது எவ்வூர் வழக்கம்? தம்மவர்கூறியதையே பிரமாணமாகக் காட்டுவதால் இவர்க்கு வேத முதலிய பொதுப்பிரமாணங்க ளில்லை யென்றேற்படுகின்றது. இல்லாதபோது இவர் வேதப் புறமதஸ்தரென்பதற் கியாது தடை? இனி, ஷை செய்யுளிலாவது இவர்க்குச் சாதகமேதேனு முண்டாவென்று பார்ப்போம். அதனுரையாவது: "வேதம் ஒன்றென்பதற்குப் பொருள் ஒன்றே; அவ்வொன்று யாதென்னின் பதிப்பொருளாகும். அவ்வாறு ஒன்றென்று சொல்லும் நீ யாரெனின் பசுவாம். நீ பாசத்தோடு சம்பந்தப் பட்டா யாகலின் பசுவெனப்பட்டாய்" என்பதாம். இதிலிவர்மதத்துக்குச் சாதகம் யாது? அத்வைத் மதத்துக்குப் பாதகம் யாது? பிரமத்தை விடப் பசுவேறு என்று சொன்னதி னாலேயே துவைதம் நிலைக்குப்போமா? நெருப்பென்றால் விடு வெந்துபோமா? அம்மம்ம! இவருக்குத் துவைதத்தைத் தாபிக்க எவ்வளவு அவசரம்! இவர் சொல்லாலேயே த்வைதத்தை நிலைப்படுத்தப்பார்க்கின்றார். இவர்க்குக் துவைதத் தில் வெகு ஆசை இருக்கின்றது. அந்த ஆசையினாற்றானாக்கும் பொருளின்றிச் சொல்மாத்திரையானே யிரட்டைக் கொடிபோடப் பார்க்கின்றார். இவர் சொல்லளவி லேயே யிருக்கட்டும். நாம் சொல்லோடு பொருளிலும் நுழைந்து அதனுண்மையை யாய்ந்திடிவாம்.

பிரமத்தைவிட ஜீவன் வேறு என்பதனாலேயே பிரமத்தைப் போல ஜீவன் சத்தெனக்கூற வமைந்து பிரமம் ஒரு சத்துப்பொருளும் ஜீவ னொரு சத்துப் பொருளும் ஆய்விடமாட்டா. ஒன்றைவிட மற்றொன்று வேறு என்பதில் இரண்டும் சத்துப்பொருளா யிருப்பது முண்டு; ஒன்று சத்தும் ஒன்று சத்துப்போலியுமா யிருப்பதுமுண்டு. கடம் படம் என்கிற இரண்டைவைத்துக் கடத்தைவிடப் படம் வேறு என்னின் இரண்டும் சத்துப் பொருளாம்; மண் கடம் ஆகிய இரண்டை வைத்துக் கடத்தை விட மண் வேறு என்று சொல்லின் அப்போது இரண்டுஞ் சத்துப் பொருளாகா. ஒன்று சத்தும் மற்றொன்று போலியுமாம். அதாவது மண் சத்தும் கடம் போலியுமாம். (கயிற்றரவு கானனீர் சொப்பனவுலகு முதலிய திருட்டாந்தங்களும் அவசரத்துக்குத் தக்கபடி யெடுத்துக் கொள்ளலாம்.) இவ்விரண்டில் பிரம பசுக்களுக் குக் கடபட திருட்டாந்தத்தை யெடுத்துக்கொள்ளலாமா? மண் கடமுதலிய திருட்டாந்தங்களை யெடுத்துக்கொள்ளலாமா? கட பட திருட்டாந்தத்தை யெடுத்துக் கொள்ளலாமெனின் அது பொருந்தாது. ஏனெனில் கடமும்படமுமவேறுவேறு இடத்திலிருக்கும்கண்டப்பொருள்கள். அவ்வாறே பிரமமும் ஜீவனும் வேறுவேறு இடத்திலிருக்கும் கண்டப்பொருள்க ளாகவேண்டும். அன்றிக் கடமிருக்குபத்திற் படமில்லை. படமிருக்கிற விடத்தில் கடமில்லை. இதுபோலவே பிரம மிருக்கு மிடத்தில் ஜீவனில்லை; ஜீவனிருக்குமிடத்தில் பிரம மில்லை. இதனால் பிரமம் அபரிபூரண தோஷத்தை யடைகின்றது. இது சுருதிவிரோதம். மண் கடமுதலிய திருட்டாந்தத்தைச் சொல்லின் ஷை தோஷ மேதுமில்லை. மண்ணுமிருக்கின்றது; கடமுமிருக்கின்றது. கட மொருகாலத்தி லில்லாமற்போகின்றதால் வேறுமாகின் றது. ஆயினும் மண்ணைப்போல் கடம் சத்துப்பொருளன்று; சத்துப் போலிப் பொருளாம். ஆதலால் மண் கட திருட்டாந்தமே ஏற்கும். இந்தத் திருட்டாந்தத்தால்

பிரமத்துக்கும் பரிபூரணஞ் சித்திக்கின்றது; ஜீவனுக்கும் ஒருவிதமா யிருப்பேற் படுகின்றது; அன்றி மண் கட முதலிய திருட்டாந்தஞ்சொல்வது சுருதியாதிகளுக்குஞ் சம்மத மாயுமிருக்கின்றது; கயிற்றரவுமுதலிய விவர்த்தவாத திருட்டாந்தமும் சுருதியாதிக ளேற்கின்றன. இந்த விஷயத்தைப் பற்றிப் பிரமகீதை சாந்தோக்கிய வுபநிடதமானது பிரமத்தினின்றும் உயிர் உலகங்களான சேதனாசேதனங்க ளுண்டா யினவென்றும் ஷை உயிர் உலகங்கட்கு அப்பிரமம் அபின்ன நிமித்தோபாதான காரணமென்றும் மண்ணைத் தவிரக் கடத்துக்கு எங்ஙனம் பொருளின்றோ, அங்கனமே பிரமத்தைத்தவிர வுயிர் உலகங்கட்குப் பொருளில்லையென்றும் 140 செய்யுள்கள் வரையில் கூறுகின்றது. அச்செய்யுள்களில் சிலவற்றை யிங்கெடுத்துக் கூறுவாம்.

## பிரமகீதை சாந்தோக்கிய உபநிஷத்

*மண்ணதோர்திரளைகாணவனைந்தக்காரியங்களந்த*
*மண்ணில்வேறிலாதுஎக்காலும்வருதலேயாதலால்வே*
*றெண்ணிடுநாமரூபமிசைந்திலையாகுமென்று*
*மண்ணிதேயுள்ளதென்றும்வானவர்க்குஅயன்முன்சொன்னான்.* (3)

*காரியமெல்லாமுள்ளகாரணம்வேறுமன்று*
*காரியமொருகால்வேறாய்வேறன்றியிருப்பதன்று*
*காரியங்காரணத்தின்வேறன்றுக்கருதிலந்தக்*
*காரியம்அசத்தோசத்தோசதசத்தாய்வேறோவென்றான்.* (5)

*சத்தாயேவேறதென்னிற்காரணமுடையதொன்றே*
*பொய்த்தாயகாரியத்தின்சத்தையோபுகலுங்காலே*
*யொத்தாகிநின்றதன்றேயுரைத்தனனுலகமெல்லாம்*
*வைத்தாயுமறைகளோதுமலர்மிசைமன்னும்வானோன்.* (6)

*காரணசத்தைதானேயென்றிடில்வேறுசொன்ன*
*காரியசத்தையில்லையாயிடுமுன்புசொன்ன*
*காரணசத்தையொன்றேயானபினந்தச்சத்தைக்*
*கோதொருபேதமுண்டாம்படியெங்ஙனுரைமினென்றான்.* (7)

*சத்தைதானொன்றநின்றதாயினுங்காரியங்க*
*ளொத்தபேர்வேறுபாட்டாலுள்ளகாரணத்தில்வேறே*
*யித்தகைத்தென்றவார்த்தையியம்புபேரளவேயானால்*
*வைத்தகாரியமுண்டென்னும்வார்த்தையும்அசத்தேயாகும்.* (8)

*சத்தையில்லாதபோதுகாரியமில்லையாகும்*
*இத்தன்மைக்காரியத்துக்கிலாமையேயிசைவதென்றும்*
*அத்தன்மையசத்தினுக்கேகாரியம்பிறந்ததென்றிங்*
*கொத்தொவ்வாதுரைத்தவார்த்தையென்றுமின்றாகுமன்றே.* (9)

*காரணசத்தையேயக்காரியசத்தையின்று*
*வேறொருசத்தையுண்டேயென்றிடில்வேறுசொன்ன*
*காரியசத்தையுள்ளகாரணசத்தையோடு*
*கூரியசத்தாய்க்கொண்டோஅசத்தாயோநிற்பதென்றான்.* (10)

*சத்தாய்க்கொண்டேவேறென்னிலொன்றேசத்தையிரண்டாகா*
*தசத்தாய்க்கொண்டுகாரணத்தோடாகிவேறுநிற்குமெனில்*
*அசத்தாமிதுதானிலாமையினால்அசத்தேயாகுங்காரியத்தை*
*யிசைத்தேலுளதாய்ச்செயமாட்டாதென்றுமலடிமகன்போல.* (11)

*காரியமொருகாலுண்டாமொன்றினாலழிவதில்லை*
*காரியந்தனக்குற்பத்தியிலாமையில்லாதொன்றாங்*
*காரியந்தானொன்றாலேநாசமென்றுரைத்தல்கூடா*
*பாரிதுவென்றுவானோர்க்குரைத்தனன்பதுமமேலோன்.* (12)

*இன்னதோர்படியிருக்குமெனப்படாதிலாமையேபோ*
*லன்னதேயாதலாலேயாவதுமிலனேதேயாகுஞ்*
*சொன்னவிவ்விலாமைகூடியிருந்துளவித்தினின்றும்*
*பின்னையும்வேறேயுண்டென்றுரைத்திடேல்பெயர்த்து நின்றும்.* (13)

*இதுக்குநீர்சொன்னவேறேதிரண்டுமொன்றென்கையென்ன*
*அதற்கொருகாரசத்தாலன்றிவேறமைவதில்லை*
*யொதுக்கமில்லாததொன்றையுளதொடேகூடுமென்னும்*
*அதுக்குவேறொன்றுமில்லையாதலாற்கூடாதென்றும்.* (14)

*காரணத்தோடுகூடல்வேறெனிலதுதன்னாலுங்*
*காரணந்தானேயாகுமிதினின்றுங்கருதிச்சொன்ன*
*காரியம்பிறக்குமென்றவிதுகொண்டுவேறுசொல்லிற்*
*பாருளகுற்றமுன்போற்பரிகரிப்பாருமில்லை.* (15)

*இரண்டுக்குமொன்றேசத்தையெனுமிதுவேறேயென்னிற்*
*றிரண்டிடுங்குற்றமெல்லாஞ்செறிதனிச்சயமெப்போதுந்*
*திரண்டகாரியம்அசத்தேயாதலாற்சதசத்தென்னி*
*லிரண்டிற்குமுரைத்தகுற்றமிசைந்திடுமியல்பினாலே.* (16)

*உண்மையிற்பேதமின்றியிருந்தேயும்பேதமென்னல்*
*வெண்மையேசெய்தரூபவியாபாரந்தோற்றங்கேடு*
*பண்வயினிவற்றாற்கொள்ளும்பயனாமரூபம்வேறு*
*முண்மையிலெல்லாம்பொய்யாலுண்டாகுமனைத்துமன்றே.* (17)

*எல்லாவிகாரங்களும்வாக்காலென்றுமுண்டென்றுரைப்பதுவுஞ்*
*சொல்லாமளவேயெவ்விடத்துந்தோன்றுமென்றதுண்மையதே*
*யல்லாவிகாரமறிவொழியவனைத்தும்பொய்யேவிகாரத்துக்*
*கில்லாதாகுமுண்மைபிறிதில்லாதாகுமாதலினால்.* (18)

*காரணமதனாலன்றிக்காரியமுளவாய்த்தோன்றாக்*
*காரணமொழியவேறுகாரியமின்மையாலே*
*காரியமனைத்தினுக்குங்காரணமதுவேயுண்மை*
*யேர்தரவிரண்டும்வேறென்றியம்பிடலியல்பின்றாமால்.* (19)

*ஆமன்றெனநினைவீரலதன்பின்வழியறிவீர்*
*நாமுன்சொனமுதல்காரணமறியமுழுதறிவாஞ்*
*சேமம்படமிகவுந்தெளிவுறுவீரிதுவேறே*
*தாமந்தருமலர்மேலுறைதலைவனுறைதருமால்.* (20)

*கூறும்பொருள்விரிவென்றிவையறியாமையின்முழுதும்*
*வேறும்மலவேறோடுடனாய்நின்ற துமலதான்*
*றேறும்படியுளகாரணமொன்றேயுளதெனலால்*
*வேறென் றிடுபேதம்மிலதாமெங்கணும் வினையாம்.* (21)

*அயலொன்றிடுபொருளும்மதன்பிரிவும்மறிவரிதா*
*மியல்பின்கணதறியும்பொழுதிவைதான்மிகவேறா*
*மயலொன்றிவையறியில்லறிவறியாமைதன்னியல்பான்*
*முயலும்பலபேதம்மெனமுடியும்வினைமுழுதும்.* (22)

*பேதந்நெறியோரில்லிலதாகும்மதனாலே*
*பேதம்மொடபேதம்மதுபேசல்பிழையேயாம்*
*ஏதம்மிலதாயெங்கணுமொன்றாயொழிவில்லா*
*தியாதொன்றதுமுதல்காரணமெனுமாமலர்மிசையோன்.* (23)

*மண்ணும்மனைவானும்மனைபவையும்பிறிதாயே*
*யெண்ணும்மளவறிவின்செயலிவனைப்பெறவிசையுங்*
*கண்ணென்றிடவருகாரணமொன்றேயமலமதால்*
*எண்ணும்மறிவுருவையிசையாநிற்பதெவ்விடமும்.* (24)

*மனைகின்றவனொருகாரணம்வரசேதனம்வேறா*
*நினையும்படியிலதாதலினிலையாயுளதறிவி*
*லனகாரணமறிவாயினுமனைவானிகரன்றா*
*நினைமண்ணொடுநிகரானவைதனையேகொடுசெயுமால்.* (25)

*தோன்றலாலசித்துமாகித்தமத்தொடுகலந்துநின்றே*
*யான்றவமுனிகள்பண்ணுமனனத்தாலளப்பொணாதாய்ச்*
*சான்றதாயெங்குநின்றசங்கரனுடைத்தாயொன்றா*
*யீன்றிடுமறியவெல்லாமித்தன்மைத்தெனவொன்றுண்டு.* (26)

*காரணமேவிமாயைபடைத்தளித்தழிப்பதாகுங்*
*காரணஞ்சத்தாஞ்சித்தாயிருத்தலாலென்றுகொண்டே*
*பூரணமாகியுள்ளபொருளினைச்சுரர்கள்கேட்ப*
*வாரணமுரைத்தவாதியருளினனறியும்வண்ணம்.* (27)

*உண்மைசித்தினுக்கேயுள்ளதசித்தெனும்பழுதைப்பாம்பிங்*
*கெண்மையினிலாதவண்ணமிசையுமுங்கட்குமேற்கக்*
*கண்ணெனமுழுதுநின்றகாரணமொன்றேத்தா*
*யெண்ணிடிலென்றுமுண்டாயிருப்பதென்றியம்பலுற்றான்.* (28)

*அறியாதாரசத்தாய்முன்புகாரணமுளதாய்த்தென்பர்*
*நெறியாலிவ்வசத்துண்டாக்குங்காரணமாகாதென்றும்*
*பிறிதாயகாரியங்களிதினின் றும்பிறக்குமென்னில்*
*வறிதாயமலடிமைந்தன்காரணமக்கட்கெல்லாம்.* (29)

*அசத்துத்தன்சத்தியாலேயாவுக்குமுதலாமென்னில்*
*அசத்துக்குச்சத்திகூடாதாம்அசத்தாதலாலே*
*யசத்தலாவித்திலென்றுமங்குரந்தோன்றுமானால்*
*அசத்தசத்தாகுஞ்சத்தேயாவையுமாவதென்றும்.* (30)

*அசத்தின்கணுளதாஞ்சத்திசத்தாயோஅசத்தாய்க்கொண்டோ*
*அசத்துடன்சத்தாய்க்கொண்டோஆய்நின்றவாறதென்னை*
*அசத்தினையுளதாஞ்சத்திஆசரித்திடுவதென்னில்*
*அசத்தாயமலடிமைந்தனியாவையும்ஆக்குமன்றே.* (31)

*அசத்தின்றான்சத்திதானும்அசத்தாலேநிற்பதென்னில்*
*இசைத்திடுங்காரியங்களியாவையுமியற்றாதென்றும்*
*அசத்தோடேமலடிமைந்தன்ஆக்குவதிலாமையேபோல்*
*அசத்தோடேசத்தேயென்னில்ஆயிடும்இரண்டின்குற்றம்.* (32)

*அசத்துத்தான்சத்தியாலுங்காரணமாகாதானால்*
*அசத்துமுன்புளதென்றோதற்குஅருத்தமுமில்லையேயாம்*
*அசத்தலாதாகுமொன்றேயனைத்திற்குமுதலதாகும்*
*அசத்துளதாகுமென்றல்அழிந்திடும்வார்த்தையன்றே.* (33)

*பூதத்தாலுளதாயுள்ளபுவனங்களுயிர்கள்முன்போன்*
*றோதத்தானரியசத்தாலுதித்ததென்றுணரும்வண்ணம்*
*வேதத்தால்முழுதுஞ்சொன்னவடிவினைவிளங்குமாற்றால்*
*ஓதத்தான்றொடங்கலுற்றான்உயர்தருசுரர்கட்கெல்லாம்.* (34)

*எல்லாமுண்டாவதற்குமுன்னே தோன்றி*
*யித்தனைக்குங் காரணமாஞ் சத்தையாகும்,*
*இல்லாதமுதல் முடிவை யுடைத்தா யொன்றாயிருக்கும்*
*இது வெனலாகும் இயல்பித்தாகி,*
*நில்லாதவுலகனைத்து முன்புசெய்த நெறியாதனை*
*யுடைத்தாகி நிமலமாகிச்,*
*சொல்லாலும் அளப்பரிதாம் இதன்றனுண்மைசுருதி*
*முடிவதனாலுந் தொடரொனதால்.* (35)

*காலமுங்கன்மந்தானும்பரிபாகமானவாறே*
*ஞாலமுண்டாநல்லகுணத்தினைக்கலந்துநிற்கும்*
*பாலதொன்றில்லஇந்தச்சத்திமான்படைத்தற்காக*
*ஏலவேயெல்லமாவோமென்றுகொண்டிசைந்துபார்த்தான்.* (36)

*பார்த்தபின்முன்னாகாயம்வாயுவைப்படைத்துப்பின்பு*
*தீத்தனையப்பைச்செய்தேயனமெனச்சொல்லப்பட்ட*
*பூக்கனையுளதாய்ச்செய்தகாரணமாகாவீசன்*
*வாய்த்தநுண்பூதமைந்தால்வகுத்தவாறியம்பக்கேண்மின்.* (37)

முதலிய செய்யுள்களாம்.

ஷை சூதசங்கிதை பரமவிஞ்ஞானமுரைத்த அத்தியாயத்தில் 4-வது செய்யுளில் செய்யுளில் "சிவன் இப்பசுவினுக்கு வேறானோன்"" என்று சொல்லிவிட்டு, 4-வது செய்யுளில் முன்னும் அவித்தையால் பசு பேதமும் மொய் வலியமாயையால் பன்னு பரதத்துவபேதமுங்கற்பிக்கப்பட்டது" என்று கூறியதில் பிரமத்தைப்போல் ஜீவன் சத்தாயிருந்து பேதப்படவில்லையென்றும் அசத்தாயிருந்தே பேதப்படுகின்றா னென்றும் ஏற்படுவதால் இவரது துவைத வாதம் தூரீகரணமாய்ப் போயிற்றேன்க. இவர் பிரமாணமாகக்கொண்டசிவஞான போதத்திலும் பசு சத்து என்று கூறியதில்லை. "யாவையுஞ் சூனியஞ் சத்தெதிராகலின், சத்தே யறியாது அசத்திலது அறியாது, இருகிறனறிவுளது இரண்டலா ஆன்மா" என்ற சூத்திரப்படி பசு சதசக்தெனக் கூறப் பட்டிருக்கின்ற தென்க. சதசத்தென்று கூறப்பட்டிருக்கின்றதே யன்றி அசத்தென்று கூறப்படவில்லையேயென்று சங்கைபண்ணலாம். அசத்தென்று கூறாவிடினும் சத்தென்றாவது கூறியிருக்கின்றதா? இல்லையே இல்லாதபோது சத்தென்னுங்கட்சி அடிபட்டுப்போயிற்றன்றா? அசத்தென்னும் கட்சியும் அடிபட்டுப் போயிற்றேயெனின், அது ஒருபோதும் அடிபடாது, சத்தென்பதும் அசத்தென்பதும் பரஸ்பரம் நேர் விரோதமான தர்மமம். அது ஒரு போதும் ஒரு பொருளின் கணிராது; ஒளியும் இருளும் ஒரு பொருளின்க ணிராமைடோல லென்க. இவரது சிவஞான

சுவாமிகளும சிவஞானசித்தி நான்காவது சூத்திரம் 11-வது செய்யுளினுரையில் "மறுதலைப்பட்ட இரண்டு தன்மை ஒரு பொருட்கின்மையானும்" என்று கூறியிருக் கின்றனர். அப்படிப்பட்ட பிரயோக மிருக்கின்றதே யென்னின் அது உண்மைதான். அதற்குரை அசத்தென்றே செய்ய வேண்டும். கானற்சலம் முன்பு சத்தாயும் பின்பு அசத்தாயும் காணப்படினும் அதனது யதார்த்தம் அசத்தே யாம். முன்பு உள்ளதாய்க் காணப்பட்டபோது சத்தென்கிற தர்ம்மத்தையும், பின்பு இல்லாததாய்க் காணப்பட்ட போது அசத்தென்கிற தர்மத்தையும் ஏற்று, அது காரணமாகச் சதசத்தென்கிற நாமத் தைப் பெற்றாலும் உண்மையில் இல்லாமையால் கானற்சலம் அசத்தேயா மென்க. அசத்துக்கும் சதசத்துக்கும் பேத மிருக்கிறது. அசத்தென்பதற்குப் பொருள் இலது; சத சத்தென்பதற்குப் பொருள் உளதிலது. மலடி புத்திரன் என்று மிராமையால் அசத்தே (யிலதே). கானற்சலம் ஒருகாலத்திலிருந்து ஒரு காலத்தி லிராமையால் சதசத்தே (உளதிலதே) யாம். எது சதசத்தோ அது உண்மையில் அசத்தேயானாலும் மலடிமைந்தனது அசத்திற்கும் கானற்சலத்தினது அசத்திற்கும் பேதமிருக்கின்றமை யால் கானற்சலத்தைச் சதசத்தென்றே சொல்லவேண்டி யிருக்கின்றது. காமெற்சலம் மலடி மைந்தனைப்போல முற்றும் அசத்தாகாமலும் உண்மையான நீரைப் போல முற்றும் சத்தாகாமலும் இருத்தல் பற்றி, சத சத்தென்று சொல்லவேண்டுமானாலும் நேர் எதிர்மறைத்தருமம் ஒருபொருளின்கணிருக்கமாட்டா தாகையால் இன்னதன் மைத்தெனக் கணிக்கப்படாதென்று பொருள்கொள்ளும் அநிர்வசனீய மென்கிறார்கள் அத்வைதிகள். இந்த அருத்தங்கொண்டே ஷை சிவஞானபோத சூத்திரத்தில் 'இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா' என்று கூறப்பட்டதென்க.

மகாபுராணங்களிலொன்றான இலிங்கபுராணமென்னும் சிவபுராணம் தியானவிதி யுரைத்த அத்தியாயத்தில் 31-வது செய்யுளிலும்

“*விரிந்தபூதங்களினோடுவிளம்பிந்தியங்கள்தத்துவங்கள்*
*திருந்தாஅகங்காரத்தினொடுசெறிமுக்குணங்கள்மாத்திரைகள்*
*பொருந்துமாயைசீவன்இவைபொய்யாம்யாமேபொய்யின்றி*
*யிருந்துஎவ்விடத்தும்நிலைபெறுவோம்அதனால்தாணுவெனஇசைப்பார்*."

என்றுகூறியிருக்கின்றமை காண்க.

இவர் காண்பித்த 'ஒன்றென்ற தொன்றேகாண்' என்ற வெண்பாவின் மற்றப் பாதியில் “ஒன்றின்றால் அக்கரங்களின்றாம் அகரவுயிரின்றேல் இக்கிரமத்தென்னும் இருக்கு" என்றிருக்கின்றது. இதனுரை யாவது "அகரவுயி ரில்லையாயின் அக்கரங்க ளில்லையென்று வேதம் ஓதும்" என்பதாம். அகரமில்லாவிடில் மற்ற எழுத்து களில்லை. அது போலப் பிரமமில்லாவிடில் மற்றப்பொருள் அதாவது ஜீவ உலகப் பொருள் இல்லை. இதனால் பிரமத்துக்கும் ஜீவவுலகங்கட்கும் அபேதஞ் சித்தித்தது. அகரத்துக்கும் மற்ற எழுத்துகளுக்கும் எப்படி அபேதஞ் சித்தித்ததோ அப்படியே பிரமத்துக்கும் சேதனாசேதனவுலகுக்கும் அபேதஞ் சித்தித்ததென்க. "அகரமுதல வெழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றேயுலகு" என்னுந் திருக்குறளின் பொருளும் இதுவேயா மென்க. மெய்கண்டசுவாமிகள் எந்தச் சூத்திரத்துக்கு ஷை வெண்பா கூறினாரோ, அந்தச்சூத்திரமும் "அவையேதானேயாய்" என அபேதமே சாதிக்கின்றது.

மண்ணானது கடாதிகளாயும் அல்லவாயும் எப்படி. அபேதமாயிருக்கின்றதோ, அப்படியே பிரமமானது சேதனாசேதன வுலகாயும் அல்லவாயு மிருக்கின்றது. சாந்தோக்கிய வுபநிஷத்திலும் பிரமத்துக்கு மண்ணையும் உலகுக்குக் கடத்தையும் உபமானமாகக் கூறி, விவரித்துப் பேசுகின்றதென்பதை முன்னரே காட்டியுள்ளேம். மற்றவேதவேதாந்தங்களும், ஸ்மிருதி புராணாதிகளும் இங்ஙனமே மண் கடம், கயிற்றரவு, இப்பிவெள்ளி, கானனீர், மனம் சொப்பனவுலகு முதலிய திருட்டாந் தங்களைக் கூறுகின்றன. இவ்வாறு சொல்வதில் ப்ரம்மத்துக்கும் பூரணஞ் சித்திக்கின்றது; சுருதி யுக்தி அநுபவங்கட்கும் பொருத்தமாகின்றது. இதற்கு மாறாகப்பேசும் இவரது துவைத சித்தாந்தத்திற்குச் சுருதியுமில்லை, யுக்தியுமில்லை, அநுபவமு மில்லையென்க.

## உபமானங் கூறியிருக்கின்றதென்பது.

“இரண்டறக்கலத்தல் என்பதற்குச் சைவசித்தாந்திகள் கூறும் பொருளிழுக்கிய தென லிவர்மதமன்றோ? இவர் மதத்தில் இவர்க.றும் முத்தி யினைத்தென்று உபமான முகத்தா வினிது விளக்கிக்காட்டுவாராக” என்கிறார். வேதோக்தமாகவாவது வேதவிரோதமில்லாத ஆகமோத்தமாகவாவது இராநின்றசைவசித்தாந்திகள் கூறும் அத்வைத் முத்தியினை இழுக்கென்று சொல்வா ரெவருமில்லை. வேததூஷக அவைதிக மாயாவாததுவித தாந்திரீகப்போலிச்சைவர்கள் கூறும் துவித சைவ முத்தியினையே சுருதியுக்தி அநுபவவிரோதமான இழுக்குடையதெனக் கூறுகின்றார்கள் அத்வைதிகள்.

இவர் மதத்தினர் கூறிய வுபமானங்களை யெல்லாம். ஒருமுறை இரு முறை யன்று, அத்வைதிகள் பன்முறை துகள் துகளாகக் கண்டித்துத் தும்சஞ்செய்தமையும் அதன்பேரில் ஏதும் பேசவிடமின்றிப் பயந்து ஒடுங்கிப் பதுங்கியிருக்கின்றமையும் மேலே பேசவிடமில்லாமை காரணமாகப் பிறர்க்குச் சொல்வதில்லையென நாணமின்றி யெழுதினமையும் யாவருக்கும் தெரியுமன்றா? இங்ஙனமாக அத்வைதிகளை மாத்திரங் கேட்பதென்ன விவேகம்? இப்படிக்கேட்பதை யோசிக்கின் இதுவரையில் அத்வைதிகள் சொல்லாம லிருப்பது போலன்றா விருக்கின்றது? இது முழுப்பூசணிக்காயைச் சோற்றில் மறைப்பது போலாம். இது விஷயமாகத் தற்காலத்தில் த்வைதிகளைக்கண்டிக்க எழுந்த “சங்கராசாரியார் அவதாரமகிமை" "வேதாந்தசங்கைநிவாரணம்" "அத்வைத தூஷணபரிகாரம்," “பதி பசு பாசவாதம்" முதலிய நூற்கள் நன்றாய்ப் பேசப்பட்டிருக்கின்றன; அதற்குச் சுருதி முதலிய பதினான்கு வித்தைகளும் அவைகளைச் சார்ந்த (ஞானவான்களுடைய) நூல்களும் சாக்ஷி கொடுக்கப்பட்டிருக்கின்றன. அது சத்துப்பொருளில் அநிர்வசனீயப் பொருள் இலயமாவதுபோ லென்றறியக் கடவர்.

## பந்தமுத்தி.

"எமக்குப் பந்தமுத்திகளில்லை யென்பாராயின், இப்போது அவருக்குப் பந்தமிருப்பது சத்தியமாகையால், இதனை யவரில்லையென்பது சொற்சம்பிரமமாய்

முடியும்" என்கிறார். ஞாதுரு ஞான ஞேயங்களற்ற துரியாதீத சுத்த சிவாவஸ்தையில் பந்தமுத்தியில்லையென்பது சுருதிசம்மதமாகலின் அதைத் தள்ள எவரானுமாகாது. மற்றப்படி ஜீவாவஸ்தையில் ஜீவனுக்குப் பந்தமுத்தி யுணடென்பது சுருதி சம்மதமும் அத்வைதிகளின் கொள்கையுமா மெனக. சொப்பனாவஸ்தை, சாக்கிராவஸ்தையை நோக்கக் கற்பிதமேயானாலும் அந்தச்சொப்பனாவஸ்தைவரையில் அது உண்மையேயாம். அதுபோலக் காண்பான் காட்சி காணும் பொருளென்கிற விருத்தியற்றதும், நானென்றும், நீயென்றும், அதுவென்றும், நான் அதுவென்றும், அது நானென்றும் கருதப்படும் அதிசூட்சும சங்கற்பமும் அற்றதும், இரவு பகல் மேல் கீழ் நல்லது கெட்டது பெருமை சிறுமை முதலிய பேதங்களற்றதுமான துரியாதீதாவஸ்தையில் பந்தமுத்தியென்கிற சங்கற்பமே யில்லாமையாலும், இல்லாமையென்கிற சங்கற்பமுமில்லாமையாலும் அவ்வவஸ்தையில் பந்தமுத்தியென்பது கற்பனையேயாமென்பதாம். மற்றப்படி சாக்கிராவஸ்தையில் பந்தமும் விடுதியும் சத்தியமேயாமென்க இந்தச் சத்தியம் வியாவகாரிகமான சத்தியமேயன்றிப் பாரமார்த்திக சத்தியமன்று. பந்த மிருப்பது சத்தியமென்றும், அதை யில்லையென்று சொல்லப்படாதென்றும் கூறுகின்றார். அதை நாமும் அங்கீகரிக்கின்றோம். ஆனால் துரியசிவனைப்போலப் பாரமார்த்திக சத்தியமாய் அங்கீகரிக்கமாட்டோம். அங்கீகரித்தால் தோஷம யாதெனின் அப்போது ஜீவனையும் பாரமார்த்திக சத்தியமாய் அங்கீகரிக்கவேண்டும். அங்கீகரிக்கின் பிரமம் அபரிபூரணதோஷத்தையடையும்; அல்லாது சுருதி விரோதமும் வரும். ஆதலால் வியாவகாரிக சத்தியமென்றே கொள்ளவேண்டும். சொப்பனத்தில் சத்த பரிச ரூப ரச கந்தங்கள் அனுபவிப்பது அப்போது சத்தியமேயானாலும் சாக்கிராவஸ்தையில் அது அசத்தியமாய்ப் போகவில்லையா? அசத்திய மென்பதற்குப் பொருள் முற்று மில்லை யென்பதேயன்று; ஒருவாறு உள்ளதே. அது பற்றியே அநிர்வசனீயமென்று சொல்லப் படுகின்றதென்பதாம். பந்தமிருப்பது சத்தியமென்றும் அதை யில்லையென்று சொலலப்படா தென்றும் சொன்னதினால் அக்வைதிகள் முற்றுமே அதாவது ஆகாய தாமரையைப் போல பந்தமில்லையென்று சொல்வதுபோ லாகின்றது. இது வேதாந்த வழக்கறியா ருரையேயாம். அத்வைதிகள் பிரமத்துக்கு அபரிபூரணதோஷம் வராதபடி சீவனுக்கு இருப்புக்கூறி பந்தமும் விடுதியும் உள்ளது உள்ளபடியே சொல்லி வேதசாஸ்திர அவிரோதிக ளாகின்றார்கள். இவர் மதஸ்தரோ அதற்கு மாறாகப் பேசிப் பிரமத்துக்கு அபரிபூரணதோஷத்தைக் கற்பித்து வேத சாஸ்திர விரோதி களாகின்றார்கள். இவர், 'எமக்குப் பந்தமுத்திகளில்லை யென்பாராயின்' என்று சொல்லியதில் நான் என்ற சொல்லுக்கு ஜீவனைப் பொருளாகக் கொண்டார். இந்த ஜீவன் பிரமத்துக்குப் பேதமா? அபேதமா? பேதாபேதமா? பேதமென்னின் பிரமம் அபரிபூரணமாகும். அபேதமெனின் ஜீவன்படும் தாபத்திரயாதி துக்கமெல்லாம் பிரமமே படுகிறதாயாகும். பேதாபேதமெனின் மேற்படி இருவித தோஷத்தையு மடையும். இனி ஜீவன் சத்தா? அசத்தா? சதசத்தா? என்னுங்கேள்விக்குச் சத்தெனின் பிரமம் எங்கும் நிறைந்தபரிபூரணமாகலின் ஜீவனிருக்கவிடமிராது. அசத்தெனின் ஜீவனே யில்லாமற்போம். சதசத்தெனின் மேற்படி இருவிததோஷமும் வந்து பொருந்தும். இவைகளுக்குச் சமாதானஞ் சொல்லிவிட்டுப்பிறகு பந்தமுத்தி விவகாரங்களைப்பற்றிப் பேசினால் அழகாயிருக்கும். ஆறு வருஷகாலமாய் இதற்குப் பதில் பேசாது மறைந்து ஒளிந்திருப்பது எங்கும் பிரசித்தியாயிருக்க, அதை மறைத்துவிட்டு, இப்போது அதற்கெல்லாம் சமாதானஞ் சொல்லிவிட்டதுபோலப்

பகடித்தனஞ் செய்து சொற்சம்பிரமம் காட்டுவதென்னோ! அஸ்திவாரம் போட்டல்லவோ சுவரெழுப்பவேண்டும்? அதுபோல ஜீவன் பிரமத்துக்குப் பேதமா? அபேதமா? பேதாபேதமா? ஜீவன் சத்தா? அசத்தா? சதசத்தா? என்கிற கேள்விகளுக்குச் சுருதி முதலிய பதினான்கு கலைகளுக்கும் விரோதமில்லாமலும், பிரமத்துக்கு அபரிபூரணதோஷம் வராமலும், யுக்தி அநுபவங்களுக்குப் பொருந்துமாறும் உத்தரஞ் சொல்லி, ஜீவன் பாரமார்த்திக சத்தென ஸ்தாபித்துக்கொண்டு, பிறகு இது விஷயமாகப் பேச எழுவாராக. ஜீவன் பாரமார்த்திக சத்தியமாயின் பந்தமும் விடுதியும் பாரமார்த்திக சத்தியமாம்; ஜீவன் வியாவகாரிக சத்தியமாயின் பந்தமும் விடுதியும் வியாவகாரிக சத்தியமாம். அத்வைதிகளின் சித்தாந்தத்தில் ஜீவன் வியாவகாரிகசத்தியமாகலின் பந்தமும் விடுதியும் வியாவகாரிக சத்தியமாமென்க. ஜீவன் வியாவகாரிக சத்தியமென எத்தனையோ முறை சுருதி யுக்தி அநுபவங்கட்கொத்துப்பேசி யிவரையும் சோமசுந்தரநாயகரையும் மறுத்திருக்க, அதற்கெல்லாம் வாயை மூடிக்கொண்டு இப்போது பந்தமுத்தி விவகாரஞ் செய்யவந்தது ஏழை ஜனங்களை யேமாற்றவேயாமென்க.

அதீத நிலையில் பந்தமுத்தி கற்பனையென்பதற்குச் சுருதிமுதலிய பிரமாணங்கள் அடியில் வருமாறு காண்க: -

## ருக்வேதம் ஆத்மபோதோபநிஷத்

எனக்குப் பந்தமுமில்லை, எனக்கு முத்தியுமில்லை, எனக்குச் சாஸ்திரமுமில்லை, எனக்குக் குருவுமில்லை.

## யசுர்வேதம் ஸர்வசாரோபநிஷத்.

நான் கருத்தாவல்ல (ஆகையால்) எனக்குப் பந்தமோக்ஷங்க ளேது?

## ரிபுகீதை முதலத்தியாயம்.

*பந்தமிலாத்தன்மையினால் ஆதியில்லை*
*பரவியவீடின்மையினால் பந்தமில்லை*
*சந்ததமுஞ்சின்மயமாமான்மாவொன்றே*
*சலியாதவத்துவென நிச்சயிப்பாய்.* (53)

## ஷை 27-வது அத்தியாயம்.

*பந்தமிலை மோட்சமிலை பகுப்பேயில்லை*
*அத்துவித பரப்பிரமம் ஒன்றேயுண்மை*
*அதுநானென்றறிவுற்றம்மயமேயாவாய்.* (35)

## அகந்தை நீங்குவதற்கே அத்வைதசாஸ்திரங்கள் ஏற்பட்டனவென்பது.

"பிரமம் தானென்று கூறும் அகந்தை நீங்குமளவும் முத்திகூடாதென்பது சாத்தியம்" என்கிறார். இது உண்மைதான். இந்த அகந்தை நீங்குவதற்குத்தாள் அத்வைதசாஸ்திரங்கள் ஏற்பட்டன. பிரமம் நானென்று சொல்லும் நிலையில் ஏதோ ஒரு சூட்சுமசங்கற்ப மிருக்கின்றது. அதுதான் ஜீவபோதம். அதைச் சாத்வீக அகங்கார மென்றும் அத்வைதசாஸ்திரங்கள் கூறுகின்றன. அஞ்ஞான பூமி யேழையும் கடந்து ஏழாவது ஞானபூமிக்குச்சென்று ஏழாவது பூமி யென்கிற சாத்வீக சங்கற்பமுமற்று, நான் என்றும், அதுவென்றும், அதுநானென்றும், நான் அதுவென்றும் கருதப்படும் சூட்சும சங்கற்பமும் அற்றுத்திரிபுடி தோஷமில்லாமல் தானேதானாய், அதுவே அதுவாய், இவ்விரண்டுங் கழன்றதாய் விளங்கும் நிலைமை வரவேண்டியதின் பொருட்டு ஷை சாத்வீக அகங்காரத்தையும் நாசஞ்செய்யவேண்டுவ தத்தியாவசியக மாகலினானும் அது உள்ளளவும் முத்திகூடாதாகலினானும் இவர் சொல்வது சாத்தியமான வாக்கியமேயாம். ஆனால் இப்படிப்பட்ட நிலைமை வருமளவும் நான் ஜீவனென்பதுவும் நான் தேகமென்பதுவு மொழிய நான் பிரமமெனச் சாதகம் செய்ய வேண்டும். இது சாதகநிலையே யொழியச் சாத்தியநிலை யன்றெண்க. பிரமம் நானென்பதற்குப் பிரமாணம் முன் 14-வது 15-வது 16-வது பக்கங்களிற் காண்க.

## உலகம் பொருளா? குணமா? தொழிலா?

"ஆரியன்" என்பவர் ப்ரம்மவித்தியா 6-வது புத்தகம் 9-வது பத்திரிகையில் சபாபதி நாவலரை எட்டுக்கேள்வி கேட்டார். அவர் உத்தரஞ் சொல்லவில்லை. பிறகு நாகை நீலலோசனி 3-வது புத்தகம் 26-வது பத்திரிகையில் "ப்ரம்மவித்தியா ஆரியன் வினாவின் அழிவுபாடு" எனப் பெயரீந்து சோமசுந்தரநாயகர் உத்தரஞ் சொல்வார் போலெழுந்து ஆபாசமாய்க் குழப்பினார். இந்தக்குழப்பத்தையெல்லாம் குழப்பமெனக் காட்டி, ஷை ஆரியன் என்பவர் * "சோமசுந்தரநாயகரது ஆபாசவிடை" யெனப் பெயர்தந்து, ஷை ப்ரம்மவித்தியாவிலேயே மறுப்பெழுதினார். அதற்கு ஷை சோ. நாயகர் நாளது வரையில் பதிலெழுதாமல் மற்ற விஷயங்கட்குப் பதில் பேசாமற் போனது போல அதற்கும் பதில் பேசாது மௌனஞ்சாதித்தார்.

* அது இப்போது "பதி பசு பாசவாதம்" எனப்பெயரோடு மற்றப் பாக்கியுஞ் சேர்ந்து புத்தகரூபமாய் வெளிப்பட்டிருக்கிறது.

முன் நடந்தசங்கதி யிப்படியிருக்க, இப்போது இந்த அரக்கோண வீரபத்திரமூர்த்தி ஷை ஆரியரால் மறுக்கப்பட்டதைப் பூர்வபக்ஷஞ் செய்யாமல் சோம. நாய்க்கர் முதல் சொன்னதையே அதாவது மறுக்கப்பட்ட விஷயத்தையே கௌரவமாய்ச் சொல்லுகிறார். அத்துடனே ஆரியன் மறுத்ததை மறைத்தார். இனி ஆரியன் கேள்வியும், சோமசுந்தர நாயகரது விடையும் கூறி, எமது அபிப்பிராயத் தையு மெடுத்து விளம்புவாம். ஆரியன் "மாயையின்கண் உலகம் பொருளா? குணமா? தொழிலா?" என்று கேட்டார். அதற்கு விடை சொல்லாமல் பிரமத்தில்

உலகம் பொருளா? குணமா? தொழிலா? என்று கேட்டதுபோல் வைத்துக்கொண்டு, அதற்குச் சோ. நாயகர். விடை கொடுத்தார். அதைத்தான் இந்த வீரபத்திர மூர்த்தி வெகு கௌரமாய் எடுத்துச் சொல்வது.

"பிரமத்தினிடத்தில் உலகம் பொருளெனின் உலகமாகிய பொருள் அழிவுப் பாடுடையதாகையால், அதனை யழிவுபாடெய்தாத பிரமத்தனிடத்தி லுண்டாகிய தெனல் பொருந்தாது" (இது சோ. நாய்க்கர் வரைந்தது) பிரமவித்தியாவில் இவ்விதப்பிரஸ்தாபம் நிகழவேயில்லை. அப்படியிருக்கவும் அம்மாதிரிக் கேள்வி யைத் தாமே கேட்டுப் பதில் கொடுத்து, யானை, தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக் துபோல் தாமே தமக்குக் கெடுதியான கேள்வியைக் கேட்டுத் தாமே ஆபாசமான வத்தரஞ்சொல்லி அவமானப்பட்டார். அந்த அவமானம் அத்துடனே தொலைந்து போக, இவர் மீண்டும் வெளிப்படுத்தி அவமானத்துக்குள்ளாக்குவது பரிதபிக்கத்தக்கதேயாம்! அவர் பிரமத்தினிட முலக முண்டாகின்றதென்று சொல்லும் அத்வைதிகளைக் கண்டிக்க வலிய அவ்விதகேள்வியைக் கேட்டு மறுக்கின்றார். அதிலும் கேள்வியொன்று; அதற்குக் கொடுக்கும் விடையொன்று. இவர் கேட்டுக்கொள்ளுங் கேள்வி 'பிரமத்தினிடத்தில் உலகம் பொருளெனின்' என்பது. உத்தரமோ 'பிரமத்தினிடத்திலுண்டாகிய தெனல் பொருந்தாது' என்பது. இதை ஒருமுறைக்கு இருமுறை நன்றாய் வாசித்துப்பாருங்கள். அவருடைய முன் வாக்கியம் பின் வாக்கியத்தை மறுக்கின்றது. 'பொருளெனின் உண்டாகியதெனல் பொருந்தாது' என்றதினால் பொருளென்று சொல்வது குற்றமாகின்றது. இப்படிச் சொல்லும் அவரே 'உலகமாகியபொருள் அழிவுபாடுடைய தாகையால்' என்றார். இதனால் உலகம் பொருள் எனக் கொள்வதாகிறது. 'உலகமாகிய பொருள் அழிவுபாடுடையதாகையால், அதனை யழிவுபாடெய்தாத பிரமத்தினிடத்தி லுண்டாகிய தெனல் பொருந்தாது என்றதனால் எது அழிவுபாடுடைய பொருளோ, அது அழிவுபாடில்லாத பொருளினிடத்தி லுண்டாகியதென்று சொல்லப்படா தென்றாகிறது. பின் அழிந்துபோகும் காரியப்பொருளான கடம், அழிவுபாடெய்தாத காரணமான மண்ணின் கண் உண்டாகவில்லையா? பின் அழிந்துபோகும் விருக்ஷங்கள் அழியாத பூமியினின்று முண்டாகவில்லையா? இவ்வாறு உலகிலெ ந்தப்பொருள்களும் காரண காரிய சம்பந்தமாயும் அவற்றில் காரணம் அழிவற்ற தாயும் காரியம் அழிவுள்ளதாயு மிருப்பது கண்கூடாகலின் இவரது ஆக்ஷேபமும் சமாதானமும் ஆபாசத்தின் மேல் ஆபாசமும் பிரத்தியக்ஷ விரோதமுமா மென்க. இவருடைய மதத்தில் மாயை அழியாப்பொருள்; உலகம் அழிபொருள். அழியாப் பொருளான மாயையிலிருந்து அழிப்படுபொருளான வுலகுதித்ததென்ப தெங்ஙன மமையும்? 'உலகம் பொருளெனின் பிரமத்தினிடத்திலுண்டாகியதெனல் பொருந்தாது' என்பதனால் எது உண்டானதோ அதைப் பொருளென்று சொல்லப்படாதென்றா கின்றது. இவர் மதப்படி மாயையாகிய வொருபொருளிலிருந்து உலகம் உண்டான தால் உலகைப் பொருளென்று சொல்லப்படாதென்க. உலகமே பொருளாகாதபோது உலகிலிருந்துண்டானவைகளெல்லாம் பொருளாகுமா? ஆகாதன்றோ? ஆகாதபோது உலகில் பொருளென்பதே கிடையாதென் றாகின்றது. இதற்கு மாறாக 'உலகமாகிய பொருள் அழிவு பாடுடையதாகையால்' எனக்கூறினாரென்று முன்னரே கூறினாம். இவ்வாறு முன்பின் மலைவாய்ப் பேசுவதோடு தமது சித்தாந்தமு மித்தகை யதெனத் தெரியாது பேசுகின்றார். இத்தகைய திரிபுணர்ச்சியுள்ள சோம.

நாய்க்கரைத்தான் அரக்கோண வீரபத்திரமூர்த்தி வெகு புகழ்வாய் எடுத்துப் பேச வருகின்றார்.

பின்னும் "இனி யவ்வுலகத்தைக் குணமெனின், ஜடமும் ரூபமுமுடைய அதனைச் சேதனமும் அரூபமுமாகிய பிரமத்தின் குணமென்றிடல் கூடாது" என்று சோ. நாயகர் சொன்னதா யிவரெடுத்துக் கூறினார். மாயையைச் சடமென்றும் பிரமத்தைச் சித்தென்று மிவர் ஒத்துக்கொள்வார். இத்தகைய மாயையை "விமலனுக் கோர் சத்தியாய்" என விவரது சிவஞான சித்தியார் கூறுகிறபடி, பிரமத்துக்கு மாயை குணமாகின்றது; சத்தியென்பது குணமாகலானென்க. முதற்காரண காரியம் அபேதமாகிறபடி முதற்காரணமான மாயையும் அதன்காரியமான வுலகும் அபேதமாம். எப்படி மண்ணே கடமோ அப்படி மாயையே யுலகமாம். இவர் மதப்படி மாயை பிரமத்தினது குணமென ஏற்பட்டதாலும், மாயையும் உலகமும் அபேதமாகி மாயையே உலகமெனச் சொல்லற் கிடந்தருவதாலும் பிரமத்திற்கு உலகம் குணமா மென்க. பிரமம் சித்தும் அரூபமுமாம்; உலகு சடமும் ரூபமுமாம். சித்தும் அரூபமு மான பிரமம், சடமும் ரூபமுமான குணத்தை யெப்படிப் பொருந்தி யிருக்கின்றதோ அறியோம். விமலனுக் கோர்சத்தி யென்றதால் பிரமத்துக்கு மாயை குணமாய் அபேதமாயிற்று; உலகுக்கு மாயை முதற்காரணமாதலால் மாயைக்கு உலகு அபேதமாயிற்று. ஆனதால் பிரமமே மாயை; மாயையே யுலகாம். பஞ்சும் நூலும் அபேதம்; நூலும் வஸ்திரமும் அபேதம். அப்படியே பிரமமும் மாயையும் அபேதம்; மாயையும் உலகும் அபேதம். பிரமம் சித்து; பிரமத்துக்கு அபின்னமான வுலகு ஜடம். சித்தினிடத்தில் ஜட மெப்படி யிருக்கிறதோ அறியேம். இவர் மதப்படி சித்தினிடத்தில் ஜடமிருப்பது உண்மையாயிருக்க, பிறரை ஆக்ஷேபிக்கப்போவது "மல்லார்ந்து உமிழ்ந்தால் மார்பின் மேல்" என்றபடியாம். ஐயோ பாவம்! இவர் வெகுபிரயாசைப் பட்டுப் பிறர்க்குக் குழிவெட்டினார். அது பிறர்க்குப் பயன்படாது தமக்கே பயன் பட்டு விட்டது. இது மிகப் பரிதாபம்!

"தொழிலென்பாமெனின், பரனது தொழிலா லுலகம் தொழிற் படுத லுண்மை யின், தொழிற்படும் பொருளாகிய அதனைத் தொழிலென்றது கூடாது" என்றார். தொழிற்படும் பொருளுக்குத் தொழில் கூடாதென்றதனால் தொழில் செய்வதைத் தொழிலெனக் கூறலா மென்றாகின்றது. இவர் வாக்கின்படி பரனிடத்தில் தொழில் நிகழ்வதால் பரனைத் தொழிலென்னலாம் போலும்; உலகு தொழிற்படுகின்றமை யின் அதனைத் தொழிலெனச் சொல்லப்படாது போலும். இவற்றிற் றொழிற்செய்வ தொன்று; தொழிற்படுவதொன்று. முன்னையது தொழில்; பின்னையது தொழிலன்று. இப்படிச் சொல்லுவது பொருத்தமா யில்லை. தொழில் இயற்றுவானிடத்தும் தொழிலிருக்கின்றது; தொழிலையேற்றுக்கொள்ளும் பொருளினிடத்தும் தொழிலிருக் கின்றது. அங்ஙனமாக ஒன்றைத் தொழிலென்றும் ஒன்றைத் தொழிலற்றதென்றுஞ் சொல்வதமையுமா? குயவன் குடத்தைவனையுங்கால்வினைதற்றொழிலைச் செய்பவன் குயவன்; ஆதலால் வனைந்த தொழில் குயவனிடத் துண்டு. வனைதற் றொழிலுக்கு உடன்பட்டது குடம்; ஆதலால் வனைதலுக் குடன்பட்ட தொழில், குடத்தின்க ணுண்டு. "உபாத்தியாயர் மாணாக்கனை அடித்தார்" என்றதில் அடித்த தொழில் உபாத்தியாயரிடத்திலும் ஏற்ற தொழில் மாணாக்கனிடத்திலு முள்ளன வாகலின் இருவரிடத்திலுமே தொழிலுண்டெனக் கூற வேண்டுமேயன்றி, ஒருவரிட

த்தில் மாத்திர முண்டெனக் கூறுவது பொருந்தாது. இங்ஙனமாகத் தொழிற்படும் பொருளாகிய அதனைத்தொழிலென்றது கூடாது' என்றவாதம் பொருந்தா தென்க.

மேற்கூறிய அவரது வாக்கியத்தால் உலகைத் தொழிலென்பது கூடாதன்றோ? இத்துடனே "தொழிலுக்கு உருவங் கூறுதலுங் கூடாது. உலகம் உருவமுடைய தாகலின்" என்றார். இதற்கு ஷை ஆரியன் கொடுத்தவிடையையே யிங்கெடுத்துக் காண்பிப்பாம். அது வருமாறு: -

"இவர் நம்மைக் கேட்குங் கேள்வியில் உலகம் உருவமுடையதென்றும் ஆதலால் தொழிலல்லவென்றுங் கூறியிருக்கின்றார். இதைச் சற்று ஊன்றிப் பார்ப்போம். உலகம் என்பதன் பொருள் பஞ்சபூதத்தின் கூடுதலைபே, பஞ்சபூதத்துக் கும் தனித்தனியே பெயரிருக்கின்றது. பஞ்சபூகத்தின் கூடுதலுக்கு உலகமென்று பேர். பஞ்சபூதந் தனித்தனியே யிருந்தால் அதற்கு உலகம் என்னும் பேரில்லை. மனிதனுடைய அவயவங்களெல்லாம் தனித்தனியே வேறு வேறு இடத்தில் இருந்தால் அதாவது ஒன்று சிதம்பரத்திலும் ஒன்று சீகாழியிலும் ஒன்று கடவூரிலும் இவ்வாறு பல விடங்களிவிருந்தால் மனிதனென்று சொல்லப்படாது. பஞ்சபூதமு மொன்றாய்க் கூடினால் அப்போது உலகமென்று உலகமென்று சொல்லப்படுகின்றது. அவயவங்களெல்லாம் ஒன்றாய்க் கூடினால் அதற்கு மனிதனென்று சொல்லப் படுகின்றது. கூடுதலாகிய தொழிலே பொருளாகவும் பெயர்ச்சொல்லாகவும் சொல்லப்படுவதனுபவம். மண்ணாயிருக்குங்கால் கடமுளதெனக் கூறார் எவரும் மண்ணினிடத்து வளைதலாதித் தொழிலேற்பட்டால் கடமுளதெனக்கூறுவர். கடமுருவமென்றிவரும் மற்றவரு மங்கீகரிப்பர். உருவென் றங்கீகரிக்குங் கடம் மண்ணினிடத்து வளைதலாதித் தொழிலேயன்றி வேறன்று. நூல் தனித்தனியே யிருக்கும்போது ஆடையென்னும் பேரில்லை. நூல் குறுக்கு நெடுக்காக மாறும்போது ஆடையென்னும் பேர் பெறுகின்றது. மாறுதல் தொழிலன்றா? அந்தத் தொழில் நிகழாவிடத்து ஆடையென்பதேது? இவ்வா றெதை நோக்கினாலும் தொழிலுக்கே பொருட்பெயர் வந்திருக்கின்றது. அன்றி அத்தொழிலே யுருவ மாகவுங் கொள்ளப் படுகின்றது. தொழிலைத்தவிரப் பொருளும் பெயருமில்லை. இது தத்துவ சோதனை யால் நிச்சயிக்கப்படுகின்றது. ஸ்தூல விசாரணை புரிவோர்க் கிஃது தெரியாதா யினும் சூட்சுமவிசாரணைசெய்வோர் சரியென்றே அங்கீகரிப்பர். ஸ்தூலபுத்தியுள்ள இந்நாயகர்க் கிஃது விளங்காவிடில் யாம் யாது செய்வோம்!"

பின்னால் வந்த ஆரியருடைய இவ்விடையை வெளிக்காட்டாமல் மறைத்து விட்டு, இவ்வாரியரால் மறுத்துக் கண்டனை செய்யப்பட்ட பூர்வபக்ஷத்தையே வெகு பெருமையாய் எடுத்துச்சொல்ல வந்தார். இது வெற்றியை விரும்புபவர்க் கழகல்ல. இவரதபின்ன தோழர் பிரமத்துக்கு உலகம் பொருளென்றாவது குணமென்றாவது தொழிலென்றாவது சொன்னாரில்லை. எதிரியை ஆபாசக் கேள்விகேட்டு மறுக்கப் பட்டாரேயன்றி, தம்மதப்படி யேதும் விடையளித்தாரில்லை. விடையிருந்து அவர் சொல்லாமற் போகவில்லை. அவர் மதபலம் அவ்வளவுதான்.

## சிவசீவர்கள் அநாதி நித்திய மென்பதைப்பற்றியது.

"சிவசீவர்களது அநாதி நித்திய முறைமை யுணர்ந்தவர்க்கே சீவனது பந்த முத்தி இலக்கணம் வெளியாமென்க" என்கிறார். அநாதிநித்தியமென்ப துண்மைதான்; ஜீவன் அநாதியென்பது முண்மைதான். ஆனால் ஜீவன் அநாதியென்பது சத்தாகவா? அசத்தாகவா? சதசத்தாகவா? அநிர்வசனீயமாகவா? இந்தக்கேள்விக்குப் பன்முறை யிவரும் இவர்பக்ஷத்தவரும் உத்தரஞ்சொல்லாமலிருக்கின்றார்கள். அநாதியென் பதை நாமும் ஒப்புக்கொள்ளுகின்றோம். ஆனால் இவரைப்போலச் சத்தாக வொப்புக் கொள்வதில்லை. அநிர்வசனீயமாக வொப்புக்கொள்ளுகின்றோம்.

## சூத சங்கிதை அநித்தியவஸ்துவிசாரம்.

*விளம்புதலுற்ற அநித்தியவத்துவிசாரத்தால்*
*உளம்பயிலச் சமுசாரவிராகமதுண்டாகும்*
*இளம்பிறைசூடி தனக்கயலாஞ்சடமெல்லா நூல்*
*வளம்புனைவோர்கள் அநித்தியமென்று வகுப்பாரால்.* (2)

## ஷை நித்தியவஸ்து விசாரம்.

*சுத்தமாய் நிரஞ்சனமாய் அவிகாரமாய் ஒளிர்சிற்சொரூபமேயாய்,*
*உத்தமமாய்ச் சருவசான்றாய் விளங்குபரமசிவ மொன்றேயென்றும்,*
*எத்தகையோரும்புகழும் நித்தியவத்து உயர்மறையும் இவ்வாறோதும்,*
*ஒத்தசடம் அநித்தியமல்லாது சித்துக்கநித்தியம் வந்துறுதலின்றே.* (2)

*மிக்ககடாதிப்பிரத்தியேயத்தந்தக்கரண விருத்தியாலே,*
*தக்கஅநித்தியவத்துவுந்தான்றோன்றுகின்றதேதவிரத் தனியாய்நின்ற,*
*முக்கணுடையெம்பெருமாற்காளாய பெருந்தவத்துமுனிவீர் மேலாம்,*
*எக்கலைஞரும்புகல்வார் பரமார்த்தமாக விலையென்றுமாதோ.* (3)

*அப்பிரத்தியேயத்திற் சிதாகாரம் விருத்தியாகாரமென்னச் செப்பிரண்டுமுள்ளன,*
*வொன்றாய்த்தோன்றும் பிராந்தியினாற்சிதாகாரந்தான்,*
*றப்பினலமுறுபாவபாகமென்றுஞ்சாற்று விருத்தியாகாரந்தான்,*
*றுப்பினுணர்தருகரண பாகமென்றுஞ் சொலப்படுமாற்றூய்மைமீக்கீர்.* (4)

*கரைவிருத்தியாகாரஞ் சடமாதலானசிக்குங்கடாதிபோல,*
*வுரைசெய் சிதாகாரந்தான் மாமுனிவீர் நாசத்தையுறாதாலந்த,*
*விரைதருமந்தக்கரண விருத்திநாசத்தாலே விளங்குமந்தப்,*
*புரையில் பிரத்தியேயந்தான் சில்லோர்க்கு நசித்தலுறல் போலத் தோன்றும்.* (5)

## சிவனிடத்தில் ஜீவன் தோன்றி யொடுங்குகின்றதென்பது.

"எதில் எதுதோன்றும், அதில் அது ஒடுங்கும். சிவத்தில் சீவன் தோன்றிய தின்று." என வீரபத்திரமூர்த்தி புகன்றார். எத்தனையோ முறை யிதற்குச் சுருதி யுக்தி அநுபவங்களுடன் "சங்கராசாரியார் அவதாரமகிமை" முதலிய நூலிற் பதிற்சொல்லி யிருக்கின்றோம். ஆதலால் அதுபற்றி யிங்கொன்றும் பேசவேண்டிய ஆவசியக மில்லை. ஆனாலும் இங்குச் சில பிரமாணங்களை மாத்திரங் காட்டுவோம்.

## பைங்களோபநிஷத் மூன்றவது அத்தியாயம்.

விசுவன், தைஜசன், பிராக்ஞன் இவர்களுக்குத் தம்தம் (அவித்தியா) உபாதி போய் விட்டதினாலே பிரத்தியகாத்துமாவில் அடங்குகிறார்கள் (ஐக்கியமாகிறார்கள்.)

## மைத்திராயண்ணி யுபநிஷத் ஆறவதுபிரபாடகம்.

தனக்குள்ளேயே யிருக்கிற ஆத்மா (பிரமம்) விடத்திலிருந்து சகலபிராணன் களும் சகலலோகங்களும் சகல வேதங்களும் சகல தேவதைகளும் சகல பூதங்களும் உண்டாகின்றார்கள்.

## பிரமகீதை சாந்தோக்கிய உபநிடதம்.

*பூதத்தாலுளதாயுள்ள புவனங்களுயிர்கள் முன்போன்*
*றோதத்தானரியசத்தாலுதித்ததென்றுணரும்வண்ணம்.* (34)

## ஷை முண்டகோபநிஷத்

*தற்பரனுருவஞ்சித்தேதற்பரனிடையேயக்*
*கற்பிதஜீவன்றானுமதானக்காலத்தச்*
*சிற்பொருளொன்றேவேறெனின்மற்றதுசித்தாமோ*
*அற்பமும்வேறாகாதுசித்தாகாரத்தாலே.* (62)

## சூதசங்கிதை பஞ்சாக்ஷரம்.

மாயையாற்பேத நடையராகி, யியங்குறுசீவர்கள்
சிவனோடபேதபாவனைசெய்வதென்பர்தக்கோர். (9)

## கூர்மபுராணம் இந்திரத்துய்ம்மன் முத்திபெற்றது.

சீவான்மாவினைப்பரமான்மாத்தன்னொடும் பிறிதறவொடுக்கி. (42)

## விஷ்ணுபுராணம் முதலமிசம் பிரகலாதசரித்திரம்.

எவனிடத்தினின்றும் மூலப்பிரகிருதியும் சமஷ்டிரூபனான க்ஷேத்திரக்கிய னும் உண்டானார்களோ, எவனிடத்தினின்றும் சராசராத்மகமானசகலபிரபஞ்சமும் ஜனித்ததோ, அப்படிப்பட்ட சர்வகாரண பூதனான ஸ்ரீவிஷ்ணு தேவன் நமக்குப் பிரசன்னனாகக்கடவன்.

## ஷை ஆறம் அம்சம் பிராகிருதப்பிரளயம்.

வியக்தாவியக்த சொரூபமான பிரகிருதி யாதுண்டோ, அதுவும், புருஷன் என்று சொல்லப்பட்டஜீவனும் இவ்விரண்டும் அந்தப்பரமாத்துமாவிலே இலயப் படுகின்றன.

## சிவரகசியம் 6-ம் அத்தியாயம் ரீபுகீதை 2-வது அத்தியாயம்.

*வாரிதியிலலைகுமிழிநுரைகடோன்றும் வகையெனவே வரையற்றபரசிவத்தில்,*
*சாரமிலாச் சகலசராசரமுந்தோன்றும் சலனமுறா விசாரணையாலவையனைத்தும்,*
*பூரணமாம் பரமசிவசொரூபமென்றே புரையற்றபோதவரம் பொருந்தினோரே,*
*கோரமதாம் பவபாசமனைத்து நீங்கிக் குறைவற்ற பரமசிவ சொரூபமாவர்.* (48)

## ஷை ஷை ஷை 13-ம் அத்தியாயம்.

*சீவபரசகத்தெனவே காண்பதெல்லாம் சின்மயமாம் பிரமத்திற்கற்பிதந்தான்,*
*ஆவதனாலாரோப சீவனாதி யதிட்டானமான பரப்பிரமமென்றுங்,*
*கேவலமா மப்பிரமம் நானே யென்றுங் கிலேசமற வறிந்ததனான் முத்தனாவாய்,*
*பாவனமாம் பரமசிவன் பதந்தன்னாணை பகர்ந்ததிலோரையமிலை சத்தியந்தான்.*(20)

## பிரமகீதை ஐதரேய உபநிடதம்.

*வேதமோதியதேமெய்ப்பொருள்மற்றைப்பொருளெலாமித்தையேவேத,*
*மோதமேவுற்றபொருளிருவகையா மதனி லொன் றென்றும் உண்மையதாய்,*
*போத ஆநந்தமாகிய சிவனாம் பொருளது மற்றதப்பொருளில்,*
*ஏதமேவாமல் கற்பிதமாகும் மற்றதனியல்பையு மிசைப்பாம்.* (10)

இந்தப்பிரமாணங்களினால் ஜீவன் சிவனிடத்தினின்றுந் தோன்றிச் சிவனிடத்தி லேயே யொடுங்குகின்றான் என்பது வெளிப்பட்டமையால் இவர் வேதாதி கலைக ளையே யாக்ஷேபிக்கின்றாராகி, அவைகளுக்குப் புறம்புப்பட்டு விலகுகின்றாரென்க.

உ
சிவமயம்.

# மாயாவாத சைவ சண்டமாருதம்.

## மூன்றாம் பாகம்.

நாகை நீலலோசனி 1893ஹு டிசம்பர்மீ 25உ முதல் இம் மூன்றாம் பாகத்தில் விசாரிப்பாம்.

## தாயுமானவரது வணக்கம்.

தாயுமானார் மெய்கண்டார் முதலியவரை வணங்கியது ஸ்தூலமாகவே யன்றி, சூட்சுமமாக வன்றெனப் பாநுமூர்த்தி புகன்றமைக்கு இவர் சூட்சுமமாகத் தானெனச் சொல்லவெழுந்து, "'தாயுமானவர் மெய்கண்டதேவரை வழிப்பட்ட விடத்தும் ஸ்தூலமாக வழிபட்டதில்லை. 'பொய்கண்டார் காணாப் புனிதமா மத்துவித மெய்கண்டான் பொன்னடியை மேவுநாளெக்காளோ' என்று சூக்கும் நோக்கத்துடன் வழிபட்டனர்" என்றனர். உலகை மெய்யென்பவர் நாஸ்திகரும் இவரினத்தவரும். இவ்விருவரில் நாஸ்திகர் உலகு என்றும் அழியாதென்பவர்; இவரினத்தவர் சங்காரகாலத்தில் அழிந்துவிடு மென்பவர். சங்காரகாலத்தில் அழிந்துவிடு மென்பதனால் அதுபற்றி யிவரினத்தினர் பொய்யென்கின்றனர். அத்வைதிகளோ இப்போதே பொய் யென்கின்றனர். என்றும் அழிவதில்லை யென்றவ ரினும் ஒருகாலத்தில் அழிந்துவிடுமென்பவர் மேலானதினாலும், நாஸ்திக ஞானத்தினும் துவித ஆஸ்திகஞானம் மேலானதினாலும் அதுவரையில் மெய்கண் டாரைக் கனஞ்செய்து துதித்தது நியாயமேயாம். மனப்பிரவர்த்தியற்று, ஞாதா ஞான ஞேயங்களொழிந்து, சதா சகஜ நிஷ்டாபரராய் விளங்குவதோடு "ஞானமலதுகதி கூடுமோ" எனவுஞ் சொன்ன தாயுமானார், மனப்பிரவர்த்தியும் ஞாதாதி திரிபுடிகளும் ஞானமன்மையுமுள்ள தாய, "உனையொன்றிற் பாவனையேனுஞ்செய்து புல்லாயி னும் ஒரு பச்சிலையாயினும் போட்டிறைஞ்சி நில்லேன்" என்னும் வாக்கியத்தைச் சொல்லவேண்டுவதென்ன? இதனால் அவரது சகஜ ஞானத்துக்குக் குறையொன்று மில்லையே. இங்ஙனமே அத்துவித ஞானவான் துவித துவிதஞானவானை வணங்கு வதினால் குறையொன்று மில்லையென்றறிக; அதனால் அவர் துவிதமதஸ்தராய் விடமாட்டாரென்று மறிக. வண்ணானது போலிநீற்றைக்கண்டு, சிவனடியாரென வணங்கினால் அதனல் சேரமான் பெருமாள் நாயனார் பத்தியில்லா வண்ணனாய் விடுவரா? அதுபோல் அபேதஞானவானான தாயுமானார் பேத ஞானமுள்ள மெய்கண்டாரை வணங்குவதினால் தாமும் பேதஞானியாய் விடுவரா?

'பொய்கண்டார்' என்ற செய்யுளைச் சொல்லிவிட்டதனாலேயே தாயுமானவர், மெய்கண்டாரைச் சூட்சுமமாய்ச்சொல்லி வணங்கியதாய்ச் சொல்ல வருகின்றார். இது பொருந்தாது. தாயுமானார் சூட்சுமார்த்தத்தைக்கொண்டு வணங்கினதாய் அவர் வாக்கில் வரவில்லை. இவர்க்கு அது சூட்சுமமானதால் தாயுமானார்க்கும் அது

சூட்சுமமெனச் சொல்ல வருகிறார் போலும். பூனை கண்ணை மூடிக்கொண்டு பாலைக்குடிக்கும் போது தன்கண் இருளடைந்தது போல யாவருடைய கண்களும் இருளடைந்தனவாய்க் கருதுகின்றதன்றா? அதுபோல இவர்க்குச் சூட்சுமமாயிருப் பதால் தாயுமானார்க்கும் அதுசூட்சுமமாயிருக்குமெனப் பிரமிக்கிறார்போலும். தாயுமானார் சூட்சுமமென ஒருவேளை சொல்லியிருந்தாலும் அது நாஸ்திக முதலிய மதத்தை நோக்கிச் சொல்லியிருக்கலாமே அன்றி அத்வைதத்தை நோக்கிச் சொல்லியிருக்கமாட்டார். பூர்வபக்ஷமாகவேனும் அவர் சூட்சுமமெனச் சொல்ல வில்லை யானதாலும், மற்றப்படி இவருடைய மதசித்தாந்தத்தை மறுத்து, "உலகும் பொய், துவிதமும் பொய், சிவமொன்றே, யுண்மை" யென காட்டியிருக்கின்றாரென முதற்பாகத்திலேயே நாம் சொல்லி யிருக்கின்றமையாலும், தாயுமானவர் நூலை யிவரது மடத்தார் வாசிப்பதில்லையென்றும், தாயுமானவர் மடத்தார் வேதாந்த நூல் களை வாசிக்கின்றனரென்றும் முன் இரண்டாவது பாகத்தின்றொடக்கத்தில் காட்டி யிருக்கின்றமையாலும் இவரது பக்ஷத்துச் சித்தாந்தியெனத் தாயுமானவரைக் கூறுவது சற்றும் பொருந்தாதென்க. ஞானவானொருவன், ஞானசாதனமான சரியை இயற்றுவானாயின் சரியையாளர் அவனை எம்பக்ஷத்தானெனவும், கிரியை யியற்று வானாயின் கிரியையாளர் எம்பக்ஷத்தானெனவும், யோகம் இயற்றுவானாயின் யோகிகள் எம்பக்ஷக்தானெனவும் கூறுவர். அவ்வப்போது அவனவனைப் போன்றி ருந்தாலும் உண்மையில் அட்மூவர்க்கும் ஞானி வேறன்றா? அதுபோலத் துவிதபேதவாதிகளுக்குத் துவிதபேதவாதிபோலிருந்தாலும் உண்மையில் தாயுமானவர் மாயா சம்பந்த முள்ள ஆண்டான் அடிமை பேதமொப்பும் மெய்கண்டார் முதலிய பேதிகட்கு வேறுபட்டவரேயாம்.

## தாயுமானவரும், குருவும்.

இதன்மேல் இவரது குருமரபை அவர் வணங்கியதாய்ச் சொல்லுகின்றார். இதற்குக்காரணம் துவிதகுருமரபு அத்வைத குருமரபுக்குச் சாதனமா யிருப்பது பற்றியேயாம். தாயுமானார் ஷை குருமரபை வணங்கினாலும் தாயுமானார் குருமரபு வேறுதான். சங்கராசாரியரை யேன் வணங்கவில்லையென்கிறார். இதற்குப் பதில் நீலகண்டசிவாசாரியரை யேன் வணங்கவில்லை யென யாம் கேட்கின்றோம். எந்த அத்வைதிகளையாவது வணங்கினாரா என்கிறார்.. ஸனகாதிகட்கு அத்வைதோப தேசஞ் செய்த ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி, ஸனகாதிகள், சுகர், வாமதேவர், ஜனகர் முதலிய அத்வைதிகளை வணங்கியும் புகழ்ந்தும் இருப்பது காட்சிப்பிரமாணமாம். அன்றித் தக்ஷிணாமூர்த்தியைக் குருவாகவும் துதித்திருக்கின்றார். அல்லாமல் அத்வைத நூலான திருமந்திரத்தைத் திருவாய்மலர்ந்தருளிய திருமூலரது அத்வைத மரபே தாயுமானவரது குருமரபாயு மிருக்கின்றது. தாயுமானவர் அத்வைதி யென்பதற்கு இவ்வளவு ஆதரவிருப்பதால் இனிப் பூர்வபக்ஷியார் இவ்விஷயத்திற் பிரவேசிப்பதை விட்டொழிவாராக.

## தாயுமானவர் பாடல்கள் அத்வைதமென்பது.

எமது அத்வைத பக்ஷத்துக்குச் சுருதி ஸ்மிருதி புராணம். இதிகாசம் ஆகமங்கள் முதலிய பிரமாணங்களும் அவைகட்கொத்துத் தாயுமானவர் பாடல்களும் பன்முறை காட்டப்பட்டிருக்கின்றன. அதற்குப் பூர்வபக்ஷியார் சரியான பதில் சொல்லாமல் அதன் பொருள் வேறெனவும், அப்பொருளைத் தம் சைவாசாரியரைக்கேட்டுத் தெளியும் புண்ணியமில்லையெனவும், அதனால் அத்வைதிகள் தமது பக்ஷம் சாதிக்கப்பட்டதாக மனப்பால் குடிக்கிறார்களெனவும் கூறினார். இப்படிச் சொல்லிவிட்டால் தமது துவிதசித்தாந்தம் சாதிக்கப்பட்டுப் போமா? நியாயஸ்தலத்தில் நியாயாதிபதி சமூகத்தில் நடக்கும் ஓர் வழக்கில், வாதியின் நியாயவாதி, தனக்குள்ள நியாயத்தையெல்லாஞ் சொல்லி, அதற்குச் சரியாகச் சட்டத்தையும் பொருத்திக் காண்பித்தானென வைத்துக்கொள்வோம். அதன் மேல் பிரதிவாதியின் நியாயவாதி யென்ன செய்ய வேண்டுவது? வாதியின் நியாயம் போலியெனச் சொல்லி, தன் யதார்த்த நியாயத்தைக்காட்டி, வாதி காட்டிய சட்டத்தின் பொருள் இன்னவகையால் வேறெனவுமன்றோ எடுத்துச் சொல்ல வேண்டும்? அதைவிட்டு வாதியின் நியாயவாதிக்கு அச்சட்டத்தின் பொருளைக் கேட்டுத்தெளியும் புண்ணிய மில்லையென்றும், அப்பொருளை எமது ஆசிரியரைக் கேட்டுத் தெளிந்துகொள்ளவேண்டு வேண்டுமென்றும் அப்படித்தெரிந்துகொள்ளாமல் தமது பக்ஷம் சாதிக் கப்பட்டதாய் வாதிகள் மனப்பால் குடிக்கிறார்களென்றும் சொல்வானேயாயின் வாதிகக்ஷி தோல்வியும் பிரதிவாதிகக்ஷி வெற்றியும் ஆய்வி டுமா? வாதிக்குச் சட்டத்தின் பொருளை யறியும் புணணியமில்லை யெனப் பிரதிவாதிசொல்வதைக் கேட்டு, நியாயாதிபதி, பிரதிவாதி பக்ஷக் தீர்ப்புக் கொடுப்பாரா? கொடாரன்றோ? அங்ஙனமே பூர்வபக்ஷியார் நாம் காட்டிய பாடலுக்குத் தம் பக்ஷமாகத் துவித உரை கூறாது பதுங்குகின்றமையானும், வேறு உரைகூற அது இடங்கொடாதாதலானும், அது அத்வைத வுரையென்பது வெளிப்படையா தலானும் தாயுமானவர் அத்வைதியென்பதற் கைய மேதுமின்றென்க. நாம் காட்டிய பாடல்கள் துவித பக்ஷமெனச் சாதிக்க முடியாவிடினும் அவர்பாடலில் துவிதபக்ஷஞ்சாதிப்பதற்கிடமாக ஏதோ இடமிருக்கிறதெனக் கனவு கண்டு சில பாடல்களைக் காட்ட எழுகின்றார். நாம் காட்டியபாடல்களுக்கு உரை வேறென்றும், அது தம் ஆசாரியரையடுத்துக் கேட்டுத் தெளிந்து கொள்ளவேண்டுமென்றும் சொன்னாரன்றா? அங்ஙனமே இவர் காட்டும் பாடல்களுக்கு உரை வேறென்றும், அதை யெமது ஆசிரியரைக்கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டுமென்றும், அப்படித் தெரிந்து கொள்ளும் புண்ணியம் இவருக்கில்லை யென்றும் நாம் சொல்ல மாட்டோமா? நியாயம் யாவருக்கும் பொதுவல்லவா? இவருக்கு ஒரு நியாயமும் எமக்கு ஒரு நியாயமுமா? நாம் காட்டிய பாடல்களுக்கு வேறு உரையிருக்கிறதென் றிவர்சொன்னால் இவர் காட்டும் பாடல்களுக்கு வேறு உரையிருக்கிறதென்று சொல்ல எமக்கு வாயில்லையா? இந்நியாயம் படிப்பற்ற சாதாரண ஜனங்கட்குக் தெரியுமே. படிப்பற்றசாதாரண ஜனங்களுக்குந்தெரிந்த நியாயங்கூடத் தெரியாத இப்பூர்வ பக்ஷியாரிடம் நாம் என்ன நியாயம் பேசி வெற்றி யடையப் போகின்றோம்! சொற்சோர்வு படாமல் வாதஞ்செய்யத் திறமையில்லா இந்தப் பூர்வபக்ஷியினிடத் தில் வாதஞ்செய்து வெற்றி பெறினுந் தோல்வியேயாம். ஆதலால் அவர் பொருட்ட

ன்றி இரு வாதங்களினுடைய தாரதம்மியங்களைச் சீர்தூக்கிப்பார்க்கும் நடுவு நிலைமையுடையார்க்கு எமது நியாயத்தை யெடுத்துக்காட்டுகின்றோம்.

இனி அவர் காட்டிய பாடல்களும் அவை அத்வைத விரோதமில்லாமையும் வருமாறு: -

## தாயுமானவர் பாடல்.

(1) "*கருமருவுகுகையனைய காயத்தினடுவுட்களிம்பு*
*தோய்செம்பனையயான்.*"

(2) *"காரிட்ட ஆணவக்கருவறையிலறிவற்ற - கண்ணிலாக் (க*
*குழவியைப்போற் கட்டுண்டிருந்தவெமை"*

'களிம்புதோய்செம்பனையயான்' என்பதும், 'கண்ணிலாக்குழவியைப்போற் கட்டுண்டிருந்தவெமை' என்பதும் ஜீவனாம். இதற்கிணங்க வேதாந்த நூல்களுங் கூறுகின்றன.

## கைவல்லியம்.

*தானிகர்தனக்காமீசன்றனையுந்தங்களைத்தாங்கண்ட*
*ஞானிகடமையுமன்றி நாஸ்திநபாதியென்னும்*
*ஊனிடையுயிர்களுள்ளத்துணர்விழிகுருடாம்வண்ணம்*
*வானிலந்திசைகள் மூடுமழைநிசியிருள்போல்மூடும்.* (49)

## வேதாந்த சூடாமணி.

*அப்பரற்குபா தியாகியமோக காரணியாமாயை*
*பொய்ப்புறுமவித்தையெண்ணிற் போத்திருபசுவென்றோது*
*மொப்பருஞ் சீவர்க்கொல்லாமுபாதியாய் மோகஞ்செய்யு*
*மெய்ப்புறுபகுதிபாசமெனச் சமகுணமாநின்று.* (45)

## தாயுமானவர்பாடல்.

(3) "*அருளுடையபரமென்றோ அன்றுதானே யானுளனென்*
*றும் எனக்கேயாணவாதிபெருகுவினைக்கட்டென்றும்.*"

(4) "*என்றுளை நீயன்றுளம் யாம்.*"

மாயாசம்பந்தமான ஈச னென்றுண்டோ அன்றே அவித்தியாசம்பந்தமான ஜீவனுண்டு. அந்த ஜீவனுக்கு அஞ்ஞானபந்தமுமுண்டு. ஆதலால்ஜீவன் அநாதியாம். இதற்குப் பிரமாணம்.

## கைவல்லியம்.

அதுதானெப்படியென்றக்கால் அநாதியாஞ்சீவரெல்லாம். (29)

பரமென்ற பொருளைத் துரியசிவனாக வைத்தால் துரியசிவன் அநாதிசத்தும் ஜீவன் அநாதி அநிர்வசனீயமுமாம். இந்த விஷயத்தைப்பற்றிச் சுந்தரன் என்பவர் ஆக்ஷேபித்ததற்கு "மாயாவாததிமிர பாஸ்கரன்" என்பவர் நந்தன஍ூ கார்த்திகைமீ 26 262 ப்ரம்மவித்தியாவில் சமாதானஞ் சொல்லியிருக்கிறார். அதைப் பூர்வபக்ஷம் பண்ணி அதன்பேரில் தமது சித்தாந்தத்தைச் சொல்லாமல் அதற்குப்பதின்மூன்று மாசம் பொறுத்து, அதாவது விஜய஍ூ மார்கழிமீ 262யில் அதே ஆக்ஷேபமுள்ள செய்யுளைக் காட்டுகின்றார். பதின்மூன்று மாசத்தின் முன்னர்ச் சுந்தரர்க்கு 'மாயா வாதத்திமிரபாஸ்கரன்' என்பவர் கொடுத்த சமாதானத்தை யிதனடியில் அப்படியே யெடுத்துக்காட்டுகின்றோம் பாருங்கள். அது வருமாறு: -

"இதற்குப்பதில் அத்துவிதிகளுக்கும் பதி பசு பாசம் அனாதியென்றே இனி யறிந்துகொள்வாராக. அத்வைதிகளுக்குப் பதி. சத்தாக அநாதி, பசு பாசங்கள் அநிர்வசனீயமாக அனாதியாம். பதியை யீசுவரனாக வைத்தால் அப்போது பதி பசு பர்சங்களான மூன்றும் அநிர்வசனீயமாக அநாதியாம்."

பூர்வபக்ஷிகள் இவ்வாறே அடிக்கடி, வந்த சமாதானங்களை யெல்லாம் வராதததது போல் காட்டி ஆக்ஷேபிக்கின்றார்கள். இதை விட வேறு ஆக்ஷேபம் அவர்களுக்கு அகப்பட மாட்டாது.

## தாயுமானவர் பாடல்.

(5) "*பண்ணினிசைபோலப் பரமன் பானின்றதிற*
*னெண்ணியருளாகி யிருக்கு நாளெக்காளோ*"

பண்ணும் இசையும் பேதமன்று, அபேதமேயாம். அவ்வாறே கூடஸ்த, பிரமம் பேதமன்று, அபேதமேயாம். முத்தியில் தவிதஞ்சாதிக்கும் பூர்வ பக்ஷிகளுக்கு ஷ செய்யு ளெங்ஙனமுரித்தாகும்? இதைத்துவிதசித்தாந்தமெனச் சொல்லவெழுவதும், அத்வைத சித்தாந்தவிரோதமென எழுதவந்ததும் அஞ்ஞானவிபரீதமாம்.. உபமானத் தையும் உபமேயத்தையும் பொருத்திப்பார்ப்பதோடு, தம் சித்தாந்தத்தைச் சற்று ஊன்றி யுணருவாரானால் இவ்வித ஆபத்தி லகப்பட்டுக்கொண்டு விழிக்க மாட்டார். பண்ணும் இசையும் பேதமன்றெனப்பாமரரும் அங்கீகரிக்கத்தக்கதாயிருக்க, அதைப்பேதம்போல் வைத்துத் தமக்குச்சாதகமாக எடுத்துக் காட்டவந்தது திருடன் தலையாரிவீட்டி லொளிப்பதுபோலாமென்க.

## தாயுமானவர் பாடல்.

(6) *"செங்கதிரின்முன் மதியந் தேசடங்கி நின்றிடல்போல்*
*அங்கணனார்தாளில் அடங்குநாளெந்நாளோ"*

இது கைலாயாதிகளிலிருக்கும் சகுண பரமசிவன் திருவடியில் ஜீவன் அடங்கியிருக்கும் நிலைமை. சர்வஞ்ஞத்துவாதி குணங்களுள்ள பரமசிவ சந்நிதானத்தில் கிஞ்சிஞ்ஞத்வாதிகுணமுள்ள ஜீவன் இருத்தலுக்குச் சூரியன் முன் மதியம் போலச் சொல்லாமல் வேறு என்ன சொல்லுவார்? இதனால் இதுபதவி முத்தியென விளங்குகின்றது. தாயுமானவர் பதவி முத்தியை விரும்புவது கூடுமேர்வென்னின், சரியை கிரியை யோகங்களைக் கடந்த ஞானியான தாயுமானவர், "எல்லா முதவுமுனையொன்றிற் பாவனையேனுஞ் செய்து புல்லாயினும் ஒரு பச்சிலை யாயினும் போட்டிறைஞ்சி நில்லேன்" எனக் கிரியையில் விருப்புற்றது போலப் பேசுவானேன்? இவர் ஞானவானென்பதற்கு "என்னைத் தானாக்கிக்கொண்ட சமர்த்தைப்பார்தோழி'" "யான்றானிரண்டற்றது மாங்கே?" முதலிய வாக்கியங்களே சான்றுபகரும். அங்ஙனமின்றி அதுவே யதார்த்த முத்தியென்று கொள்ளும் பக்ஷத்தில் சூரியன் ஒருகண்டப்பொருள், சந்திரன் ஒருகண்டப் பொருள். இரண்டும் அபரிபூரணப் பொருளாகின்றன. இங்ஙனமே துரிசிவனும் உயிரும் கண்ட அபரிபூரணப் பொருளாகின்றன. உயிர் கண்டப்பொருளென்பது சுருதி சம்மதமாகலின் அது குற்றமின்மையேனும் சிவமும் கண்டப்பொருளெனச் சொல்லத் துணிவ தெங்ஙனம்? இது சுருதிவிரோதமுமாமே. ஆதலால் அதைப் பதவிமுத்தியில் வைத்துச் சொல்வதே சுருதி யுக்தி அநுபவ சம்மதமாம். பதவி முத்தியில் ஜீவேசபேத மொப்புவதில் அத்வைதிகட்கு யாதொரு விரோதமுமில்லையென்றறிக.

## தாயுமானவர் பாடல்.

(7) *"வானூட்டங்கும் வளிபோல இன்புருவாங்*
*கோனூடடங்குங்குறிப்பறிவதெந்தாளோ."*

இதுவும் அதே கருத்தா மென்க. அன்றி இந்தக் கண்ணியிற் சொல்லிய வுமானத்தினால் அதாவது ஆகாயத்தில் வாயு அடங்கிய வுபமானத்தினாலே சிவன் சத்தும், ஜீவன் சத்துப்போலியுமா மென்க. இது விஷயம் அத்வைத தூஷண பரிகாரம் 57 பக்கமுதல் 65ம் பக்கம் வரையிற் காணலாம். காண்பாராயின் வானும் வளியுமான வுவமானம் துவிதிகளுக்கு முற்றும் விரோதமும், அத்வைதிகளுக்கு முற்றும் அவிரோதமுமாமென்று புலப்படும்.

(8) *"ஆணவத்தோடத்துவிதமானபடி மெய்ஞ்ஞானத்*
*தாணுவினோடத்துவிதஞ் சாருநாளெந்தாளோ."*

இதில் ஆணவத்தோடத்துவிதமாதல் அஞ்ஞானமும், துரியசிவனோடத்து விதமாதல் ஞானமுமாம். அன்றி அஃதொரு காலம், இஃதொரு காலம். அஞ்ஞான காலத்தில் ஆன்மா அஞ்ஞானத்தோடொன்றாயும், ஞானகாலத்தில் சிவனோடொன்

றாயும் இருக்கின்றது. ஒரு சத்துப்பொருள் மயங்கிய காலத்தில் அரவாயும், தெளிந்தகாலத்தில் கயிறாயு மிருக்கக் காண்கிறோம். மயங்கியகாலத்தில் அந்தச் சத்துப்பொருளுக்கும் அரவுக்கும் அபேதம்; தெளிந்த காலத்தில் அந்தச் சத்துப் பொருளுக்கும் கயிற்றிற்கும் அபேதம். அங்ஙனமே அஞ்ஞானகாலத்தில் ஆன்மாவுக் கும் அஞ்ஞானத்துக்கும் அபேதம், ஞானகாலத்தில் ஆன்மாவுக்கும் சிவனுக்கும் அபேதம். கயிற்றின்கண் அரவு தோற்றமாவதுபோல ஆன்மாவின் கண் அஞ்ஞானந் தோற்றமாம். ஒருசத்துப்பொருளே கயிறாகவும் அரவாகவு மாதல் போல ஒரு ஆன்மாவே அதாவது கூடஸ்தனே சிவமான பிரமமாகவும் அஞ்ஞானமாகவு மாதல் காண்க. இதற்குப் பிரமாணம் வருவாறு: -

## திருவாசகம்.

*வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி*
*ஊனாகியுயிராகியுண்மையுமாயின்மையுமாய்க்*
*கோனாகியானெனதென்றவரவரைக்கூத்தாட்டு*
*வானாகி நின்றாயையென் சொல்லிவாழ்த்துவனே.*

*கூறும் நாவே முதலாகக்கூறுங்கரண மெல்லாம் நீ*
*தேறும்வகை நீ திகைப்பும் நீ தீமைநன்மை முழுதும் நீ*
*வேறோர் பரிசிங்கொன்றில்லை மெய்ம்மையுன்னை விரித்துரைக்கின்*
*தேறும்வகையென் சிவலோகா திகைத்தாற்றேற்ற வேண்டாவோ.*

## திருஞானசம்பந்தர் தேவாரம்.

*குற்றம் நீ குணங்கணீ கூடலாலவாயிலாய்.*

## தாயுமானவர் பாடல்.

(9) "*ஒன்றிரண்டு மில்லதுவாய் ஒன்றிரண்டுமுள்ளதுவாய்*
*நின்றசமத்துநிலை நேர்பெறுவதெந்நாளோ.*"

ஒன்றிரண்டென்பதைப்பற்றி இதற்குமுன் 97 வது 98 வது பக்கத்திற் காண்க. சிவம் சிவமாய் விளங்குவதே. சமநிலை. ஜீவேசபேதநிலை சமநிலை யாகாது; ஏற்றக்குறைச்சலாகும். ஏற்றக்குறைச்சலைச் சமமாகக் கூறலொணது.

## தாயுமானவர் பாடல்.

(10) "*பாசமகலாமல் பதியிற்கலவாமல்*
*மாசில் சமத்துமுத்தி வாய்க்குநாளெந்நாளோ.*"

**அதனுரை:** - "பாசம் நீங்காமலும் பதியோடு கலக்காலுமிருக்கிற எனக்கு, குற்றமில்லாத சமநிலையிலுண்டாவதாகிய முத்தி கிடைக்கும் நாளெந் நாளோ"

என்பது. பாசத்தைவிட்டு நீங்காமலும். பதியோடு கலக்காமலு மிருக்கிறது ஜீவன். இப்படிப்பட்ட ஜீவன், முத்தியில் சிவமாய் விளங்குகையே சமநிலை.

இது வரையில் சொல்லிக்காட்டிய வுரைகளாலும் நியாயங்களாலும் இவர் காட்டிய பாடல்களும் அத்வைதத்திலேயே அடங்கிப்போய் விட்டமையால் எந்த வகையினாலும் தாயுமானாரைத் துவித சித்தாந்தியெனக் கூறுதல் கூடாதென்பதாம். நாம் காட்டிய பாடல்களுக்குத் துவிதபக்ஷமாக அவர் உரைசெய்துகாட்டாமல் பதுங்கிவிட் டமையாலும், அவர்காட்டிய பாடல்கள் அத்வைத பக்ஷமா யிருப்பதை நாம் விளக்கிக் காட்டிவிட்டோமாகையாலும் பூர்வ பக்ஷியார் வாதம் போலியாய்ப் போயிற்றென்க.

ஒருவிதப் பிரமாணங்களுக்குட்பட்ட இருவர் வாதஞ்செய்யும் போது அப்பிரமா ணங்கட்கு மீறாமல் கட்டுப்பட்டுப் பேசவேண்டும். பிரமாணங்கட்குக் கட்டுப்படாதவர் கள் யுக்தி அநுபவங்களைக்கொண்டு பேசவேண்டும். இதன்படியே வைதிகர்கள் வேதம் 4, வேதாங்கம் 6, ஸ்மிருதி 1, புராணம் 1, தருக்கம் 1, மீமாமிசம் 1 ஆக விப் பதினான்கு பிரமாணங்கட்கும் கட்டுப்பட்டுப் பேசுகின்றார்கள். (ஸ்மிருதி ஒன்றென்பதில் பதினெட்டு ஸ்மிருதியும், புராணம் ஒன்று என் பதில் பதினெட்டுப் புராணமும் அடங்கியிருக்கின்றன.) இவைகளுக்கு விரோதமில்லாவிடில் உபபுராண மும், இதிகாசமும் பிரமாணமாம். இதற்குக் கட்டுப்பட்டே பூர்வாசாரியர்களான சங்கராசாரியார், நீலகண்டாசாரியார், இராமாநுஜாசாரியார், மத்துவாசாரியார், சோமாநாதாசாரியார் முதலியவர்கள் பாஷியங்களும் வாதக்கிரந்தங்களுஞ் செய்திரு க்கின்றார்கள். வேதப்புறச்சமயிகளான பௌத்தர், கிறிஸ்தவர், மகம்மதீயர் முதலிய வர்களும் தங்கடங்கட்குரிய பிரமாணங்கட்குக் கட்டுப்பட்டே வாதஞ்செய்கிறார்கள். இது தான் முறைமையும் நியாயமுமாம். இப்பூர்வபக்ஷிகளோ இந்நியமத்தை அனுசரிக்கின்றன ரில்லை. அவர்கள் அவாந்தர மதத்தைக் கற்பித்துக்கொண்டனர் களாகலின் அந்நியமத்துக்குட்பட அஞ்சி, தங்கட்கு மாத்திர முரிமையுள்ளனவும், தம்மதவரியற்றியனவும், பொது வல்லாதனவுமான நூல்களையே பிரமாணமாகக் காட்டுகின்றார்கள். இப்போதும் இப்பூர்வபக்ஷியார் தாயுமானார் விஷயத்தில் இக்குற்றத்திற் கிரையானார். இவர் தாயுமானாரைத் தம்பக்ஷத் துவிதசித் தாந்தியெனக் கூறுவதனோடு, அத்துவித பக்ஷத்தவ ரன்றெனவுங் கூறுகின்றார். கூறுவதனால் தாயுமானவர் இவர் பக்ஷத்தவ ராகின்றார். ஆகும் போது அவர் வாக்கியத்தை யத்துவிதிகளிடத்தில் பிரமாணமாக எடுத்துக்காட்டுடுவது நியாய மோ? தம்பக்ஷத்து நூலை எதிர்வாதிகளிடத்தில் காட்டலாம், காட்டப்படாதென்று தெரிந்துகொள்ளாத இவரா நியாயவாதஞ் செய்யத் தகுதி யுள்ளவர்? அத்வைதிகள் சிவப்பிரகாசசுவாமிகளியற்றிய "வேதாந்த சூடாமணி" யென்னும் அத்வைத நூலைப் பிரமாணமாகக் காட்டினால் இவர் ஒப்புவாரா? அப்படிக் காண்பிப்பது நியாயந் தானாகுமா? இவர் தாயுமானாரைத் தமது சார்பினரென்று சொல்லி அவரது நூலைப் பிரமாணமாகக் காட்டி அத்வைதிகளை வெல்லப்பார்ப்பது, வாதிகள் அல்லது பிரதிவாதிகள், நியாயஸ்தலத்தில் நியாயாதிபதி முன்னிலையில் தங்களிலொருவ னைச் சாட்சியாகக் கோறி, தங்கள் வழக்கை வெல்லப்பார்ப்பதுபோலா மென்க. அப்படிச் சாக்ஷியாகக்கோறுதல் சொல்லாமைபோல, தாயுமானவர் நூலைப் பிரமாணமாகக் காட்டுவது செல்லாதென்க. இவர்தான் முதல் முதல் தாயுமானவர்

நூலைப் பிரமாணமாகக் காட்டினார். அது இந்நூல் முதற்பாதத்தில் காணலாம். அதன் பேரில் தான் அவர் அத்வைதியென்றும், துவைதியல்லவென்றும் அவர் வாக்கைக்கொண்டும், அவர் மடத்தைக் கொண்டும், இவர்மடத்தைக்கொண்டும் பாது மூர்த்தியாரும் நாமும் பிரமாணமாகக்காட்டி மறுத்து. அவர் அத்வைதியென்றே தாபித்தோம். அவர் அத்வைதியேயாயினும் அவர் நூல் பொதுப்பிர மாணமல்லாமை யால் அதையித்துவிதிகளிடத்தில் நாம்பிரமாணமாக எடுத்துக் காட்டியதில்லை. தாயுமானவர் இவர் சார்பினரென நியாயமின்றிச சொல்லினும் அவரது நூல் பொதுப் பிரமாணமன்றென இவரும் ஒத்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கின்றமையின், உமாபதிசிவன் முதலானோர் நூல்கள் போலத் தாயுமானவர் நூலையுங்கொண்டு, அதை யத்தவிதகளிடத்திற் பிரமாணமாகக் காட்டாதிருப்பதே நியாய நூற்படி வாதஞ்செய்வோர்க்கழகாம். இவர் நியாயவழியினின்றும் பிறழ்ந்து அவரது நூலைப் பிரமாணமாகக்காட்டின்மையால் இவர் நியாய வாதத்திற் கேலாதவராயினாரென்க; அன்றித் தோல்வித்தானத்தையும் தமக்கிருப்பிடமாகவும் பெற்றன ரென்க. இவ்வாறு தோல்வியடைதல் ஒருமுறை யிருமுறை யன்று, பன்முறையுமா மென்பது, இதன் முன்னர் வந்த பலவிஷயங்களாலு மறிந்திடுக. இப்படிப்பட்ட தோல்விகளெல்லாஞ் சேர்ந்தே பூர்வபக்ஷியார்க்கு வெற்றிக் குவியலாய்க்கிடக்கின்றன. இவர் அத்வைதி களிடத்தில் வாதஞ்செய்யவருவதிருக்கட்டும். இவர்க்கு வாதஞ்செய்யு முறைமையே தெரியாதே. இப்படிப்பட்டவர் வாதஞ்செய்ய ஏன் வருகின்றார்? இவர்க்கு வாத முறைமையும் தெரியாது, வாதஞ் செய்யவும் ஆசையிருக்கிறது; வேத சாஸ்திரங்களையும் தூஷிக்கவேண்டும்; துவிதமுஞ் சாதிக்க வேண்டும்; சுருதி யுக்தி அநுபவங்களென்றால் காததுரமும் ஓடவேண்டும்; வெற்றிக்கொடியும் போட வேண்டும். இவையெல்லாம் வாதசபைக்கு எப்படியேற்கும்? ஆதலால் இனி இப்படிப்பட்ட குமார்க்கக்கள்ளவழியினுழையாது. நன்னெறியினின்று, தருக்கவரம்பு மீறாது வாதஞ் செய்வாராக, இல்லையேல் மௌனமுற்றிருப்பாராக.

## உலகம் பொய்யென்பதற் குவமானம்.

அத்வைதியான பாநுமூர்த்தி யென்பவர் “மெய்கண்டதேவரை யுள்ளிட்டார், உலகம் முயற்கொம்பென்றும் வான்மலரென்றும் யாண்டுங் கூறாமையானும், சங்கராசாரியாரை யுள்ளிட்டார் உலகம் முயற்கொம்பென்றும் வான்மலரென்றும் கூறுகின்றமையானும் தாயுமானவர் சங்கராசாரியாரைப் பின்றொடர்ந்தே யுலகம் பேய்த்தேர் என்றும், முயற்கொம்பு என்றும், வான்மலர் என்றும் கூறினாரென்க” என்றார். இதன் மேல் பூர்வபக்ஷியார் கொடுத்தபதிலாவது: - "வேத முதலிய கலைகளில் இவ்வான் மலர் முயற்கொம்புகளேயன்றி இந்திர ஜாலம், கனவு, பேய்த்தேர் முதலியனவும் பெறப்பட்டிருக்கின்றன. இவற்றுள், பேய்த்தேர் உபமானம் சிவஞானபோதத்திலும், இந்திரசாலம் கனவு பேய்த்தேர் ருபமானங்கள் சிவஞான சித்தியாரிலும் பெறப்பட்டிருக்கின்றன. எஞ்சிய வான்மலர் முயற்கொம்புகள் தாயு மான்வரிற் பெறப்படுகின்றன” என்பதாம். இதனுண்மையை நடுகிலை யுடையார் சற்றுச் செவிகொடுத்துக் கேட்கப் பிரார்த்திக்கின்றோம். பாநுமூர்த்தியார், இவர் மதஸ்தர் உலகிற்கு முயற்கொம்பு வான்மலர் உவமானங்கள் கூறுவதில்லை யென்றும், அத்வைதிகள் கூறுகின்றார்களென்றும், தாயுமானவர் ஷெ

உவமானங்களை யெடுத்தமையால் அவர் அத்வைதியேயென்றுங் கூறினார். அதற்கிவர் என்ன சமாதானஞ்சொல்லித் தாயுமானவரைத் தம் பக்ஷத்தவராக்கிக் கொண்டார்? இவர்கொடுத்த வுத்தரத்தினாலேயே தாயுமானவர் இவர்பக்ஷத்தவரல்ல ரென்றும் அத்வைதியேயென்றும் வேதமுதலிய கலைகளைப் பிரமாணமாகக் கொண்டவரென்றும் இவர் சார்பினர் அவற்றிற்குக் கட்டுப்படாதவரென்றும் விளங்கு கின்றன. இவர் வேதமுதலிய கலைகளில் வான்மலர், முயற்கொம்பு, இந்திரசாலம், கனவு, பேய்த்தேர் முதலிய வுவமானங்கள் சொல்லப்பட்டிருக்கின்றனவென்றும், இவர் பக்ஷத்து நூல்களில் இந்திரசாலம், கனவு, பேய்த்தே ருபமானங்கள் சொல்லப் பட்டிருக்கின்றன வென்றும், ஏனைய வான்மலர் முயற்கோடுபமானங்களைத் தாயுமானவர் சொல்லி யிருக்கின்றாரென்றும் கூறினமையால் வேதமுதலிய கலைகளில் வான்மலர் முதலிய ஐந்துபமானங்கள் கூறப்பட்டிருப்பனவாய்த் தெரிகின்றது.

## கைவல்லியம் தத்துவவிளக்கம்.

*கானனீர்கிளிஞ்சல் வெள்ளி கந்தர்ப்பநகர்கனாவூர்*
*வானமைகயிற்றிற்பாம்பு மலடி சேய்முயலின் கோடு*
*பீனமாந்தறி புமானிற் பிரபஞ்சமெல்லாம் பொய்யே.* (108)

## ஷை சந்தேகந்தெளிதற் படலம்.

*சத்திசத்தனைத்தவிரவேறன்றுகாண்சத்தனாமாயாவி*
*வித்தைகாட்டியவிந்திரஜா லம்பொய் வித்துவான் மெய்போல்ப்.* (98)

அத்வைதியால் சொல்லப்பட்ட ஷை செய்யுள்களால் வேதமுதலிய கலைகளிற் கூறியிருக்கிறபடி ஷை ஐந்து உபமானங்களும் அத்வைதிகள் ஒப்புக்கொ ண்டவர்க ளானார்கள். முதலிய என்னும் பதம் ஒன்றிருக்கிறதேயென்னின் அதற்குக் கிளிஞ்சல் வெள்ளி, கந்தர்ப்பநகர், வானமை, கயிற்றிற்பாம்பு, தறிபுமான் முதலிய உபமானங்கள் சொல்லியிருப்பதை வைத்துக்கொள்க. முதலிய என்கிற சொல்லைத் தள்ளி. மற்றப்படி யிவர்காட்டிய ஐந்துபமானங்களையும் அத்வைதிகளும் கொள்ளுகிறார்கள், தாயுமானவரும் எடுத்தாண்டிருக்கின்றார். இவர் சார்பினரோ வான்மலர், முயற்கோடு இவ்விரண்டையும் தள்ளி, மற்ற மூன்றையுமே யெடுத் தாண்டிருக்கிறார்கள். அதுமாத்திரமா, முதலிய உபமானங்களையுந் தள்ளி யிருப்பதோடு அவை தமக்குடம்பாடன்றெனவுங்காட்டி யிருக்கின்றார்கள். அதற்குச் சரியாக அதே பத்திரிகையில் "கைவல்லிய பாட்டிற்போந்த "கிளிஞ்சல்வெள்ளி, கயிற்றிற்பாம்பு, தறிபுமான் என்னுமூவகைகளைத் தாயுமானவரிலெடுத்துக் காட்ட வேண்டும். இவ் வுபமானங்களே மாயாவாதத்தை (அத்வைதத்தை) நாட்டுஞ் சிறப்பு வமானங்களாம்" என்று கூறியிருக்கின்றார். ஷை உபமானங்கள் வேதமுதலிய கலைகளுக்குச் சம்மதமென்பதற்கும் 'முதலிய' என்னும் பதத்தில் அவை அடங்கி யிருக்கின்றன என்பதற்கும் பிரமாணங்களாவன: -

## சுக்கில யசுர்வேதம் நிராலம்போபதிஷத்.

(25) அஞ்ஞானம் யாது?

இரண்டாவதற்றதாயும், எங்கும் தொடர்ச்சியாயுள்ளதாயும், சகல சுவ ரூபமாயுமிருக்கிற பிரம்மத்தினிடத்திலே தேவ, மிருக, நர, ஸ்தாவர, ஸ்திரீ, புருஷ, வருணாசிரம, பந்த மோக்ஷ உபாதி (கற்பிதமான வேஷம். அல்லது கற்பிதமான தடை) யாக விருக்கிற பல தேகபேதங்களினாலே கயிற்றிற் பாம்பென்கிற பிரமைபோல் கற்பிதமாயிருக்கிற ஞானமே அஞ்ஞானம்.

## சுக்கிலயசுர்வேதம் பைங்களோபநிஷத்

முதலாவது அத்தியாயம்.

அதினிடத்தில் (பிரமத்தினிடத்தில்) மருபூமியில் (பாலைநிலத்தில்) ஜலம், கிளிஞ்சலில் வெள்ளி, கட்டையிற் புருஷன், ஸ்படிகத்தில் வர்ண முதலியவை போல் சிவப்பு, வெளுப்பு, கறுப்பு இந்தக் குணமயமானதும் ஏற்றக் குறைவன்றி ஒவ்வொன்றும் சமமாயிருக்கிற குணசுவரூபமானதும் வாக்குக் கெட்டாததுமாகிய (என்றால், மித்தையானதுமாகிய) மூலப்பிரகிருதி யிருந்தது.

## யோகசிகோபநிஷத் 4-வது அத்தியாயம்

ஓம் சைதன்னியம் ஒரே ரூபமானதினாலே பேதமானது ஒருபோதும் யுக்த மல்ல. கயிற்றித் பாம்பென்கிற தன்மைபோல் ஜீவத்துவத்தை யறியவேண்டியது. கயிறு என்கிற ஞானமில்லாததினாலே ஒரு க்ஷணத்திற்குள் கயிறு சர்ப்பமாய்க் காண்கிறது. அதுபோல் கேவலம் சித்தானது தானே பிரபஞ்சமாக விளங்குகிறது. பிரபஞ்சத்திற்கு உபாதான காரணம் பிரமத்தைத்தவிர வேறில்லை. ஆகையால் இந்தச் சகலமான பிரபஞ்சமும் பிரம்மமாகவே யிருக்கிறது; வேறே யில்லை.சகலமும் ஆத்மா என்கிற விதியினாலே பிரவேசிக்கப்படுகிறதென்பதும் பிரவேசிக்கிறதென்பதும் பொய். பரத்துவமானது இப்படி அறியப்பட்டால் பேதத்திற் கிடமேது? பரமாத்மாவாகிற பிரம்மத்தினிடத்தி லிருந்து சகல பூகங்களு முண்டா கின்றன. ஆகையினாலே இவைகளெல்லாம் பிரம்மமே யாகிறதென்று நினை. விளங்குகிறதுபோ லிருக்கிற பெயர்களும் பலவிதமான ரூபங்களும் சகலமான கருமங்களும் பிரம்மமே யென்று பாவனை செய். சுவர்ணத்தினாலுண்டான வஸ்துக்கள் சுவர்ணமே யென்ப தெப்படி நிச்சயமோ, அப்படிப் பிரம்மத்தினா லுண்டானது. பிரம்மமே யாகிறது. ஜீவாத்ம பரமாத்மாக்களுக்குள்ளே அற்பமாவது எவன் பேதத்தை நினைத்திருக்கிறானோ, அந்த மூடாத்துமாவுக்கே பயமுண்டென்று சொல்லப் படுகிறது. எதனுடைய அக்ஞானத்தினால், துவைத முண்டாகிறதோ, அப்போது ஒன்றையொன்று பார்க்கிறது. சகலமும் ஆத்மாவாகப்பார்க்கிறபோது அவ்விஷயத்தில் அணு அவ்வளவு கூட வேறில்லை. இந்த லோகமானது அனுபவிக் கப்பட்டிருந்தாலும் அது வியவகாரத்திற்கு யோக்கியமானதாக விருந்தாலும் சுவப்னமானது அடுத்த நிமிஷத்தில், நசிப்பது போல அசத்ரூபமானதே. சவப்பனத்

தில் ஜாக்கிராவஸ்தையில்லை; ஜாக்கிரத்தில் சுவப்பனமில்லை; கழுத்தியிலிரண் டுமில்லை; அவ்விரண்டிற்குஞ் சுழுத்தியில்லை. இமமூன்றும் பொய்யே யாகின் றன. (அவைகள்) முக்குணங்களினால் கற்பிக்கப்பட்டவைகள். இந்த ஞானத்தினால் இந்த ஆத்துமாவானவன் சித்தாயும், நித்தியனாயும், குணங்களுக்கு அப்புறப்பட்ட வனாயும் இருக்கிறான்.. மண்ணினிடத்தில் குடமென்கிற பிராந்தியும், கிளிஞ்சலில் வெள்ளியென்கிற இருப்பும் எப்படியோ, அப்படி பிரம்மத்தில் ஜீவத்துவம். அதை அறிந்தால் (ஜீவபாவம்) நசித்துப்போகிறது. மண்ணில் குடமென்கிற பெயரும் தங்கத்தில் குண்டலமென்கிற பெயரும் கிளிஞ்சலில் வெள்ளி யென்கிற பிரசித்தமும் எப்படியோ, அப்படிப் பரப்பிரம்மத்தில் ஜீவனென்கிற சப்தமுண்டாயிருக்கிறது. ஆகாசத்தில் நீலத்தன்மையும் பாலை நிலத்தில் ஜலத்தோற்றமும் கட்டையில் புருஷன் என்கிற பிராந்தியும் போலச் சிதாத்மா விடத்தில் பிரபஞ்சம் தோற்றுகிறது. வேதாள மென்பதும் கெந்தர்வ நகரமென்பதும் ஆகா. சத்தி லிரண்டுசந்திரனும் எப்படி யில்லையோ, அப்படிச் சத்தியமான பிர்மத்தினிடத்தில் ஜகத்தினிருப்பு. ஜலமே அலையென்றும் பொங்குத லென்றும் எப்படி விளங்குகிறதோ, மண்ணானது குடமென்கிற பெயரினால் எப்படி விளங்குகிறதோ, நூல்கள் துணியென்கிற பெயரினால் எப்படியோ அப்படி ஜகத்தென்கிற பெயரினால் சித்தே விளங்குகிறது. சசலமும் பிரம்மமாத்திரமே. மலடிமைந்தன், கானல் ஜலம், ஆகாச விருஷம் இவைகள் எப்படியில்லையோ, அப்படி ஜகத்தினிருப்புமில்லை.

## தேஜோபித்தூபநிஷத்

6-வது அத்தியாயம்.

மலடிமகன் சொல்லுகிற வார்த்தையினால் பயமடைந்தேனென்றால் ஜகத்திருக்கிறதாகச் சொல்லலாம். முயற்கொம்பினால் யானை கொல்லப்பட்ட தானால் ஜகத்திருக்கிறதாகச் சொல்லலாம். கானற்சலம் குடித்துத்தாக மடங்கிற் றென்றால் ஜகத்திருக்கிறதாகச் சொல்லலாம்.

இதனால் தாயுமானவர் அத்வைத பக்ஷத்திற் சேர்ந்தவரென்றும், இவர் வேதமுதலிய கலைகளுக்குப் பாஹியரென்று மாகின்றன. இவர் சார்பினர் எடுத்தா ளாதனவும் வேதமுதலிய கலைகட் குட்பட்டனவுமான கிளிஞ்சல் வெள்ளி, கயிற்றிற் பாம்பு, தறிபுமான், வான்மலர், முயற்கோடு ஆகிய இவ்வைந்துபமானங் களும் அத்வைதிகள் மாத்திரமன்று, வைதிக பக்ஷத்தார் யாவருமே அங்கீகரிக்கத்தக்கனவே. அங்ஙனமாக அது அத்வைதிகளுக்கு மாத்திரம் சிறப்பெனக் கூறியது பொருத்தமுடைய தாகாதென்க. முடிவாக இவர்மதஸ்தர் வான்மலர் முயற்கோடுவமானம் கூறியதாய்ப் பிரமாணமெடுத்துக்காட்டாமையினாலும், இவர் காட்டிய நூல்களிலும் இந்திரசாலம், கனவு, பேய்த்தேர் இவ்வுபமானங்கள் மாத்திரம் இருக்கின்றனவேயன்றி வான்மலர் முயற்கோடுவமானங்கள் இல்லாமையினாலும், வேதமுதலிய கலைகளில் ஷ உபமானங்கள் யாவுஞ் சொல்லி யிருக்கின்றமையா லும், அத்வைதிக ளெடுத்தாளுமுபமானத்தைத் தாயுமானரும் எடுத்தாண்டிருக்கின்ற மையாலும், “அம்மாயை யில்லாமையே யாம்” “முற்றுமில்லாமாயை” என மாயை யை வான்மலர் முயற்கோடொத்துப் பொய்யென அவர் கூறுகின்றமையாலும், இவர்

சார்பினர் மாயை பொய்யன்று, மெய்யென்றே சாதிக்கின்றமையாலும் தாயுமானா ரை மாயை அவித்தைகளால் ஏற்படும் ஜீவேச பேதங்கூறும் அவைதிக மாயாவாத துவிதியென வொருபோதும் மறந்துங் கூறொணாது.

கிளிஞ்சல்வெள்ளி, கயிற்றிற்பாம்பு, தறிபுமான் என்னு மூவகை யுபமானங்க ளைத் தாயுமானவர் கூறியிருந்தா லெடுத்துக்காட்டச் சொன்னாரன்றோ? அவை சுருதி யுக்தமான வுபமானங்களாகலின் வேதாவிரோதிகள் அங்கீகரிக்கற்பாலனவே யாம். இவர் அவை அத்வைதத்தை நாட்டுஞ் சிறப்புவமானங்களாம் என்றதனால் துவைதத்தை நாட்டச் சிறப்புவமானங்க ளல்ல வென்றாகின்றது. இதனாலேயே சுருதியுக்தமான அவ்வுபமானங்கள் அத்வைதத்தை நாட்டத்தக்கனவேயன்றி, துவைதத்தை நாட்டத்தக்கனவன்றா மென்க. தாயுமானார் அவ்வுபமானங்களை யேன் எடுத்தாளவில்லையென்னின், உலகு பொய் யென்பதற்கு வான்மலர், முயற்கோடு, கானனீர், இந்திரசாலம், கனவு இவ்வுபமானங்களைச் சொல்லிவிட்டார். இதைவிட வேறு ஏன் சொல்லவேண்டும்? சொல்லக்கூடாதென யாஞ் சொல்லவில்லை. சொல்லாவிடில் தோஷ மென்னவென்று மாத்திரம் கேட்கின்றோம். தாயுமானவர் கூறிய வுபமானங்களைக்காட்டிலும் கிளிஞ்சல் வெள்ளி, கயிற்றிற் பாம்பு, தறிப்மான் இவற்றில் என்ன விசேஷமிருக்கின்றது? வான்மலர் தோற்றல் கூட வில்லாத பொய். முயற்கோடு, கானனீர், கனவு இவை தோற்றத்தோடுங் கூடியபொய். கிளிஞ்சல் வெள்ளி, கயிற்றிற் பாம்பு, தறிபுமான் இவையுந்தோற்றத் தோடுங்கூடிய பொய்யாம். தோற்றத்தோடுங்கூடிய பொய்யு மானம் பலவற்றுள்ளும் தாயுமானவர் சிலவற்றைச் சொன்னார்; சிலவற்றைச் சொன்னாரில்லை. ஒன்று கூட விடாமல் எல்லாவற்றையுஞ் சொல்வேமெனத் தாயுமானார் பீடிகை போட்டனரில்லை. எல்லா அத்வைதிகளும் எல்லாவுபமானங் களையுஞ் சொல்லிவிட்டார்களா? எல்லாவுபமானங்களையுஞ் சொன்னவருமுண்டு, சிலவற்றை மாத்திரஞ் சொன்னவருமுண்டு. சிலவற்றைச் சொன்னவர்கள் மற்றவற்றை அங்கீகரிக்கவில்லையென எங்ஙனஞ் சொல்லத்துணியலாம்? அத்வைதிகளிற் சிலர்தாமியற்றிய நூல்களிலேனும் செய்யும் பிரசங்கத்திலேனும் சமயத்துக்குத்தக்கவாறு சிலவுபமானங்கள் எடுத்துப்புகன்றாலும் மற்ற வுபமானங் களை அங்கீகரிப்பதில்லை யென்று சொல்லப்படாது. வேதமுதலியவற்றில் சொல்லி யிருந்தாற்சரி, அவையெல்லாம் பிரமாணமாகவே அத்வைதிகள் அங்கீகரிக்கின்றார் கள். அப்படி யிவர்சார்பினர் அங்கீகரிக்கின்றன ரில்லை. இதற்குத் திருட்டாந்தமாக கானனீர், இந்திரசாலம், கனவு இவைகளை யங்கீகரிக்கின்றார்களேயன்றி, சுருதி யாதிகள் அங்கீகரிக்கும் கயிற்றரவு, கிளிஞ்சல் வெள்ளி, தறிபுமான், வான்மலர், முயற்கோடு முதலியவுபமானங்களை யிவர்சார்பினர் அங்கீகரித்திருக்கின்றார்களா? அங்கீகரித்திருந்தால் வான்மலர், முயற்கோடு உபமானங்களைத் தாயுமானவர் கூறினாரெனவும், கிளிஞ்சல் வெள்ளியாதிகள் அத்வைதத்தை நாட்டுஞ் சிறப்புவமா னங்களென்றும் சொல்வாரா? அவ்வுபமானங்களைத் தங்கள் சார்பினர் சொன்னார் களென்று ஏன் சொல்ல வில்லை?

முடிவாக எவர் சொன்னாலும் சொல்லாவிட்டாலும் வேத முதலிய கலைகளிற் சொல்லப்பட்ட எல்லா வுபமானங்களையும் வைதிகரா யுள்ளவர்கள் ஒப்புக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கின்றமையாலும், அப்படி யொப்புக்கொள்ளாதவர்

கள் அவைதிகர்களானதாலும், இவர் சார்பினர் ஷெ உபமானங்களெலலாவற்றையும் ஒப்புக்கொள்ளாமை மாத்திர மன்றிக் குறைவுபடுத்திக் கூறுகின்றமையாலும், தாயுமானவர், இவர் சார்பினர் அங்கீகரியாதனவும் அத்வைதிகளால் அங்கீகரி க்கத்தக்கனவுமான வுபமானங்களை யெடுத்துக் கூறினமையாலும் ஒரு ஜாதியுப மானங்களில் சிலவற்றைத் தாயுமானவர் சொல்லாமை காரணமாகக் குறை கூறுதல் அடாமையாலும் பூர்வபட்சியாரெடுத்த வாதம் தலையெடுக்காதென்றறிக.

"சிவசரக்ஷாத்காராநுபூதியிற் சிறந்த சிவஞானிகளுக்கு உலகக் தோன்றாதது சத்தியம். அவர்கள் உலகத்தை நாடாது சிவத்தை நாடினமையால், ஒன்றினை நாடியபோது நாடிய அதுவேயன்றி மற்றொன்று தோன்றாதென்பது யாவரு மறிந்த விஷயம். சிவத்தை நாடியபேர்க்கு உலகம் தெரியாது. உலகத்தை நாடியபேர்க்குச் சிவந் தெரியாது. உலகம் அஞ்ஞானவடிவமும் சிவம் ஞான வடிவமுமாயின மையால், அஞ்ஞானத்துக்கு உலகம் விஷயமாயிடுதலும், ஞானத்துக்குச் சிவம் விஷயமாயிடுதலும் அநுபவமாயினதறிக.. ஞானிகளிடத்தி லஞ்ஞானம் முனைத்தி டாமையால், அஞ்ஞானத்துக்கு விஷயமாகத்தக்கவுலகம் அவர்க்கில்லையென்ற தாம். உலகம் பொய்யென்று ஞானிகளிடங் கூறுவது மவரது சமாதி யவசரத்தி'லென வறிக. அவரொருகால், பகிர்முகப்படுவாராயின், அப்போது "முன்றோன்றியிராத வுலகம் தோன்றுமென்க." என்கிறார். இவர் இவ்விஷய மெழுதியது 1894௵ பிப்ரவரிமீ 5உ. இதற்கு முன் இவரே இவ்வாக்ஷேபஞ்செய்து, அதற்கு 1893௵ நவம்பர்மீ 8உ 23உ. ப்ரம்மவித்தியாக்களில் "முன்பின் விரோதம்" என்ற தலைப்பின் கீழ் நம்மாலேயே சமாதானம் பெற்றிருக்கின்றார். அது இப்புத்தகத்தின் முதற் பாகத்தில் 54-ம் பக்கமுதல் 63-வது பக்கம் வரையில் காணலாம். இவர் உண்மையாய் வாதஞ் செய்கிறவரானால் அதைப் பூர்வபக்ஷஞ்செய்து மேல் தம் நியாயத்தைச் சொல்லுவார். அங்ஙனமின்மையால் முன் பேசினதும் எம்மால் கண்டிக்கப்பட்டு ப்ரம்மவித்யாபத்திரிகையில் வெளிவந்ததுமான விஷயத்தையே பெயர்த்து மெழுதினார். அப்போது மறுத்த மறுப்புப்போக இப்போது இன்னொருமாதிரியாக மறுத்தெழுதுவாம். இவர் எத்தனைமுறை ஆக்ஷேபஞ் செய்கின்றாரோ அத்தனை முறையும் பற்பலவடிவங்களாகச் சமாதானமுண்டாய், பின்னும்பின்னும் இவரது துவிதமதத்தைத் தும்ஞ்செய்கின்றது. இவர் எவ்வளவு கபடவழியி னுழைகின்றனரோ, அவ்வளவுக்கும் இவருக்கும் இவர் மதத்திற்கும் தீங்கேயொழிய நன்மையில்லை. பூர்வபக்ஷியார் உலகம் சத்தியமாயுள்ளதென்றும், ஆனால் ஞானிகள் சமாதியில் சிவத்தைத் தரிசிக்கும்போது உலகக் தோற்றவில்லை யென்றும், அதுபற்றி உலகமில்லையென்று சொல்லப்படாதென்றும் சொல்லு கின்றார். இதைப்பற்றி இதன் முதற்பாகத்தில் 'முன்பின்விரோதம்' என்னும் விஷயத்தை மீண்டு மொருமுறை வாசித்து, பின் அடியில் வருவதையும் வாசித்துப் பார்ப்பார்களாக.. சொல்வது போலானால் இவர் சார்பினர் ஒத்துக்கொண்ட கானனீர், இந்திரசாலம், கனவு இவ்வுபமானங்களே பொருந்தமாட்டா என்பதைக் காட்டுகின் றோம். ஒரு பொருளைப் பார்க்கும்போது மற்றொரு பொருள் தோற்றாதேல், அப்பொருள் இருந்து தோற்றவில்லையா? இல்லாதிருந்து தோற்றவில்லையா? இருந்து தோற்றவில்லையென்னின் அப்பொருள் சத் (உள்ளது) தாகின்றது; இல்லாதிருந்து தோற்றவில்லையெனின் அது அசத் (இல்லது) தாகின்றது. கடத்தைப்பார்க்கும்போது படமில்லை; படத்தைப்பார்க்கும்போது கடமில்லை. இது

இரண்டும் சத்துப்பொருள். இதைப்போல் சிவத்தையும் உலகையுஞ் சொல்லலா மென்னின் இது பொருத்த முறாது. ஏனெனின் கடம் ஒரு கண்டப்பொருள்; படம் ஒரு கண்டப்பொருள். இப்படியே சிவனும் உலகுங் கண்டப்பொருளாதல் வேண்டும். கானலினிடத்து நீரும், இந்திரசால சத்தியின் கண் பொருளும், மனத்தினிடத்துச் சொப்பனவுலகும் சொல்லின் அப்போது இரண்டும் சத்தாகா. கானலும், இந்திரசாலசத்தி அல்லது இந்திரசாலக்காரனும், மனமும் சத்தாகி; நீரும், இந்திரசாலப்பொருளும், சொப்பனவுலகும் அசத்தாகின்றன. இதன்படியே சிவம் சத்தும் உலகு அசத்துமா மென்க. இதன்பேரில் "தனக்குதவாத வொருவனை, மற்றொருவன், அவனிருந்தும் செத்தவன் என்று கூறுவது போல ஞானிகளுக்கு உலகு உதவாமையால் உலகு பொய்யென்று கூறுகிறார்" என்கிறார். இதன்படி பார்த்தால் உலோகாயுதர்க்குக் கடவுளுதவாமையால் கடவுள் பொய்யாக வேண்டும். முத்தனுக்குச் சாத்தன் சினேகன்; ஆதலால் சாத்தனால் முத்தனுக்கு உதவி யுண்டு. கொற்றனென்பவனோ விரோதி; விரோதியாகலின் அவனால் சாத்தனுக்கு உதவியில்லை. ஆதலால் முத்தனுக்குக் கொற்றன செத்தவனே. இதுபோல ஞானிக்கு உலகம் உதவியில்லை; அதனால் ஞானிக்கு உலகம் பொய். அவ்வளவே யன்றி யுண்மையில் உலகு பொய்யன்று, மெய்யேயாம் என்பது பூர்வ பக்ஷியார் கக்ஷி. இதுவரையில் இவர் சொல்வதுபோல் ஒத்துக் கொண்டு ஆராய்வாம். அப்படியானால் இதற்குக் கானனீர் உபமானம் பொருந்துவதெங்ஙனம்? கொற்றனிரு ந்து பொய்யேயன்றி யில்லாதிருந்து பொய்யன்று, கானிநீரும், இந்திரசாலப் பொருளும், சொப்பனவுலகும் இருந்து பொய்யா? இல்லாதிருந்து பொய்யா? இல்லாதிருந்தே பொய்யென்று பண்டிதரும் பாமரரு மொத்துக்கொள்வார்களாகை யால் ஷை கானனீர் முதலிய வுபமானத்தைக்கொண்டே உலகு இல்லாதிருந்தே பொய்யென்று சொல்லவேண்டுமென்க. உதவியற்றவனைச் செத்தவன் என்பது போல ஞானிகளுக்கு உதவி யில்லாமை காரணமாக உலகு பொய்யென்று சொல்லப் படுகிறதே யன்றி யதார்த்தத்தில் உலகு சத்தியந்தானென வேதம் ஸ்மிருதி புராணம் இதிகாசம் சிவஞானபோதம் திருவாசகம் தேவாரம் இவற்றிலேனும் இவற்றினுக்கு மாறில்லாத வேறு எந்த நூல்களிலேனும் ஒரு செய்யுளாவது ஒரு அடியாவது ஒரு வாக்கியமாவது பிரமாணமாகக் காண்பிப்பாரானால் எந்தநியாயத்தையும்பாராது உலகு மெய்யென்று அங்கீகரிப்பாம். அங்ஙனம் ஒரு பிரமாணமு மில்லையே. இவர் சொல்வதுபோல வுதவியற்றவனைச் செத்தவனென்று சொல்வதுபோல ஞானிக ளுக்கு உதவியில்லாமை காரணமாக வுலகைப் பொய்யென்று சொல்வதில் மற்றொரு குற்றமு முண்டாகின்றது. முத்தனுக்குச் சாத்தன் சினேகிதன்; ஆதலால் அவன் உதவி செய்கிறவன். கொற்றன் பகைஞன்; ஆதலால் அவன் உதவியற்றவன். இவ்விஷயத்தில் முத்தன் ஸ்தானத்தில் உயிர், சாத்தன் ஸ்தானத்தில் சிவன், கொற் றன் ஸ்தானத்தில் உலகு. இவ்வுபமானத்தில் முத்தன், சாத்தன்,, கொற்றனாகிய மூவரும் ஏகதேச கண்ட அவ்வியாபகப்பொருள்கள். அவ்வாறே சிவன், உயிர், உலகு ஆகிய முப்பொருள்களும் ஏகதேச, கண்ட அவ்வியாபகப்பொருள்க ளாகவேண்டும். முத்தன், சாத்தன், கொற்றன் ஆகிய மூவரும் ஒருவரிடத்தில் ஒருவரில்லாமற் போகின்றனர். அதுபோலச் சிவன், உயிர், உலகு ஆகிய முப்பொருளும் ஒன்றிருந்த விடத்தில் ஒன்றில்லாமற்போகும்.

உலகு சிவனிடத்தில் காரியமன்று, மாயையினிடத்தே காரியமென்று இவர் சார்பினர் கூறுகின்றனர். இதற்குப் பன்முறை மறுப்பெழுதப்பட்டது. இங்குஞ் சில வெழுதுவாம். மாயை யென்பதோர் பொருளன்று; அஃது ஓர் சத்தி. சத்திமுதற் காரணமாகாது. பொருளே முதற்காரணமாகும். அப்பொருள் யாதெனில் சத்தியை அபின்னமாகவுடைய சிவனேயாம். இதற்குப் பிரமாணம் வருமாறு: -

## சுக்கில யசுர்வேதம் நிராலம்போபநிஷத்.

(4) பிரகிருதியாது?

பிரம்ம சந்நிதி மாத்திரத்தினாலே பல விசித்திரமானஜகந்நிர்மாண சாமர்த்திய முடைய புத்திசுவரூபமாகிய பிரமத்தினுடைய சக்தியே பிரகிருதி.

## சூதசங்கிதை விசேடசிருட்டி..

நிர்மலசிவன் றன்மாயையாற் கனாப்போ னிருமிருக்கப்பட்டன வெல்லாம், மருவு காரியங் காரணத்திற்கு வேறாகாமையின் மாயைரூபந்தான், பெருகுமாயையு மற்ற திட்டானமாகும் பிரமத்தின் வேறானதன்று. (12)

## ஸ்காந்த புராணம் சம்பவகாண்டம்
## 2-வது அத்தியாயம் தமிழ் மொழி பெயர்ப்பு வசனம்.

சகலப் பிரஜைகளுக்கும் நேரிட்ட ஓர் புத்தி மயக்கத்தினால் கேளீர்கள் பிராமணோத்தமர்களே! வேதமுதலிய எல்லா வித்தைகளும் அவைகளினருத்தங்க ளும் சரியான விதத்தில் தோன்றவில்லை. (4)

புத்தி மயக்கத்தினால் சிலர் ஜகத்துக்கு அன்னந்தான் முக்கிய காரணமென்றா ர்கள். சிலர் பிராணன்றான் காரணமென்றார்கள். சிலர் மனசு என்றார்கள் சிலர் விஞ்ஞானம், ஆநந்தம். (5)

சூரியன், வாயு, அக்கினி, பிரமா, இலட்சுமீபதியாகிய விஷ்ணு, மாயை, விராட்புருஷன் இங்ஙனமாகப் பலரைப் பலர் காரணமாகச் சொல்லினர்கள். சிலர் ஆத்துமாவினுடைய கருமமே யென்றார்கள். (6)

பௌத்த சார்வாக லாகுள முதலாகிய பலமதஸ்ர்களில் ஒவ்வொரு மதஸ்த ரும் ஒவ்வொருவரை அல்லது வொவ்வொன்றைச் சொல்லுகின்றார்கள். முனிவர்களே! வளர்த்தலை நிறுத்திச் சொல்லக்கூடியதில் இவ்வாறாய்ச் சத்தியப் பொருளாகிய மகேச்சுரன் நீங்கலாக மற்றெல்லாவற்றிலு மொவ்வொன்றையும் ஒவ்வொருவர் ஜகத்துக்குக் காரணமாகக் கொண்டாடினார்கள். (7)

அவர்கள் மதிமயக்கத்தினால் தங்களைத் (பரமசிவனை) தவிர மற்றவர்களை ஜகத்துக்குக் காரணமாகச் சொல்லுகின்றார்கள். (13)

தமிழ்க்கந்தபுராணச் செய்யுளில் மாயை முதற்காரணங்கூறுவது குற்றமென்று கூறப்படவில்லை. ஆதலால் சமஸ்கிருத புராணத்தைப் பார்த்தாற்றான் உண்மை விளங்கும். இவ்விஷயமாக ப்ரம்மவித்தியாவிலிருந்து அச்சிடப்பட்ட "துவித சைவரே மாயாவாதிகள்" என்னும் புத்தகத்தில் 1-வது பக்கமுதல் 8-வது பக்கம் வரையில் பேசியிருக்கின்றோம். அதைப்பற்றி இதுகாறும் எவரும் வாய்திறந்தன ரில்லை. உலகுக்குச் சிவன் அபின்னநிமித்தோபானகாரணர் பிரமாணங்கள் வருமாறு:-

## சூதசங்கீதை சாந்தோக்கிய உபநிடதம்.

*கற்பகமாலைதுயறடம்புயத்துக்கடவுளீர்மந்தணமான*
*பொற்புறோராதேசத்தையானுமக்குப்புகலுவல்கேண்மினொன்றான*
*வற்புறுமண்ணாதிகளினாலாக்கப்பட்டமண்பாண்டமுன்யாவும்*
*எற்பெறம்மண்ணாதிகளின்வேறன்றியெப்படியிருக்குமப்படியே.* (2)

*காரியமெல்லாங்காரணத்தோடுகரைதருமபேதமாயிருக்குங்*
*காரியசத்தைகாரணத்தைதனக்குவேறாகாமையாலே*
*காரியஞ்சத்தாய்ப்பேதமுற்றிடுவதில்லையால்கருத்துறவுணர்மின்*
*காரியல்கண்டன்றிருவடித்துணையேகண்ணியபுண்ணியவமரீர்.* (3)

*நரசிருங்காதிபோலச்சூனியமல்லாமையானவிலசத்துவத்திற்*
*பரவுறுவிசேடமிலாமையாலெடுத்துப்பகரக்காரியமசத்தாயும்*
*விரவுறுபேதப்படுவதின்றமரீர்விரித்தவித்தோடங்களிரண்டு*
*முரவினுண்டாமாதலிற்சதசத்தாயும்பேதப்படுதலின்றுணர்வீர்.* (4)

*செப்புபேதாபேதமெம்மாத்திரமும்வரமாட்டாதுணர்வீர்*
*தப்பிலாதவிப்படியேசாற்றுமெல்லாக்காரியமு*
*மொப்பிலாதகாரணத்தோடபேதமாயுற்றிருந்தாலும்*
*எய்ப்பின்மாயையாற்பேதமாகித்தோன்றுமிமையீரே.* (5)

*பேசுவிகாரமெலாம்பெயராற்பின்னமாகியிருந்தாலும்*
*மாசிலாதபரமார்த்தமாகவவிரும்பிரமத்தோ*
*டேசிலபேதமாகியேயிருக்கின்றனவண்டுழுதுழக்கி*
*வாசநறுந்தேனுண்டுவக்குமாலைத்தடந்தோளமரீரே.* (6)

*சகத்துக்கொருகாரணமாகித்தயங்குமந்தப்பிரமங்கற்*
*பகத்தண்டொடையன்முடிவேய்ந்துபாரோர்புகழப்படும்போகஞ்*
*சுகத்தின்மருவும்விண்ணவர்காள்சொல்லாநிற்கும்பின்னமுமன்*

*றுகத்தல்செய்யும்பின்னாபின்னமுமன்றொன்றாயேயிருக்கும்.* (7)

*மருவும்சேனமாயமண்ணாதிகட்குக்குலால*
*னொருவிலபேட்சையெவ்வாறுவேண்டியிருக்குமுரைத்த*
*திருகில்குலாலற்கசித்துரூபமட்சேருமபேட்சை*
*யிருநிலத்தெவ்வாறு வேண்டியிருக்கு மவ்வாறே யிமையீர்.* (8)

*நிகரிலா ஏகமாய்ச் சுத்தசைதன்னியமாய் நெடுநாளுநிலவியிருக்கின்றபடியாலும்,*
*பகர்நிமித்த வுபாதான காரணத்துவங்கள் பயில்வேதப் பிரசித்தமாயிருத்தலாலும்,*
*மிகுபிரமத்திற்கு வேறொருவத்துவபேட்சைவேண்டியதின்றப்பிரமம் பிரதீதிசித்தத்,*
*தகுகுணத்திரைய முளதன்மாயை யோடொன்றாயே சார்ந்து சிருட்டித்*
*தொழிலாதிகள் பலவுஞ்செய்யும்.* (9)

## பொய்ப்பிரதிபிம்பங்கள் ஒன்றை யொன்று தண்டித்தல்.

ஜீவன் அவித்தியாப் பிரதிபிம்பன் என்று வேதாதிகள் கூறுவதைச் சோ. நா. என்பவர் மறுத்துக்கூறிச் சமாதானம் பெற்று மௌன விரதங் கொண்டன ரன்றா? அவர்க் கபின்னதோழரான இப்பூர்வபக்ஷியார் அதற்குச் சமாதானம் ஏதுங்கூறா விடினும், அதனோடு ஈசனும் மாயாப் பிரதிபிம்பன் என வேதாதி கூறுவதையும் மறுக்க எழுந்து, "மாயாப்பிரதிபிம்பரை அவித்தியாப் பிரதிபிம்பர், தான் என்பதற்கும் அவகாசமே கிடையாது. குடத்திற் பிரதிபிம்பித்த சந்திரன் குளத்திற் பிரதிபிம்பித்த சந்திரனைத் தானென்பதும், அவைகளிலொன்றைத் தண்டிப்பதும் உண்டாயிடின ன்றோ இவரது அஞ்ஞானப் பிரசங்கம் பிரயோசனம் பெறும்" என்றார். இவர் எந்த விஷயத்தைத் தெளிந்தனரோ அந்த விஷயத்தைப்பற்றி மாத்திரம் பேசுதல் அழகாம். தெளியாத விஷயத்தைத் தெளிந்ததாகக் கொண்டு ஆக்ஷேபிக்க வருவது நன்றன்று. இவர் ஆவித்தியாப்பிரதிபிம்பனான ஜீவன் மாயாப்பிரதிபிம்பனான ஈசனைத் தானென்று சொல்வதாய்ச் சொல்லுகின்றார். இதனால் இவர் வேதாந்த நூல்கள் அறிந்திலரென் றேற்படுகின்றது. இவர் சொல்லுகிறபடி ஜீவன் ஈசனைத் தானெனச் சொல்வது கிடையாது. அப்படிச் சொல்பவருமில்லை; அப்படிச் சொல்லும் வேதாந்த நூல்களுங் கிடையா.

## கைவல்லியம் தத்துவவிளக்கம்.

*"அந்தமாஞ்சீவனீசன் அவர்களேவாச்சியார்த்தம்*
*சந்ததம்பேதமாவார் தமக்கைக்கியங்கூடாதே."* (67)

:

## ஷை சந்தேகந் தெளிதல்.

*திகழ்ந்த ஈசனார் சீருட்டியும் சீவனார் சிருட்டியும் வெவ்வேறே,*

*சகந்தனிற் பொது ஈசனார் சிருட்டிகள் சராசரப்பொருளெல்லாம்,*
*அகந்தையாம் அபிமானங்கள் கோபங்கள் ஆசைகளிவையெல்லாம்,*
*இகழ்ந்த சீவனார் சிருட்டிகளாகுங்காண் ஈசனார் செயலன்றே.* (55)

*இந்தச் சீவனால் வரும் அறுபகை யெலாம் இவன் செயலல்லாமல்,*
*அந்தத்தேவனால் வருமென்ற மூடர்கள் அதோகதியடைவார்கள்,*
*இந்தச் சீவனால் வரும் அறுபகையெலாம் இவன் செயலல்லாமல்,*
*அந்தத் தேவனாலன்றனும் விவேகிகள் அமல வீடைவாரே.* (51)

இந்த வேதாந்த நூற்பிரமாணத்தினால் ஜீவனே யீசனென்று சொல்வது கூடாதென்றும், ஜீவனும் ஈசனும் வேறென்றும் விளங்குகின்றமை காண்க.

பிரதிபிம்பங்களில் ஒன்றை யொன்று தண்டிப்பதைப்பற்றியுஞ் சிந்திப்போம். பிம்பப்பிரதிபிம்பவாதம் பூர்வபக்ஷ மெனவும், விவர்த்த வாதமே சித்தாந்தமெனவும், ஜீவேசுவரர் துரிய சிவனைப்போல் பொருளல்ல வென்பதற்கு ஒருவாறு பிம்பப் பிரதிபிம்பவாதஞ் சொல்லியிருக்கிறதெனவும் ஆறுவருஷமாக எத்தனையோ முறை கிளிப் பிள்ளைக்குச் சொல்வதுபோலச் சொல்லியும், பலமுறைசொல்லியிருப்பன வற்றை யெல்லாந் தொகுத்து அத்வைத தூஷண பரிகாரத்தில் காட்டியுமிருக்க, பின்னும் தும்பைவிட்டு வாலைப்பிடிப்பது போலவும், நெய்யரிரசத்தை விட்டுத் திப்பியைக்கொள்வது போலவும் பேசினதையே பேசுவதில் யாதுபயன்! இதிலேனும் இவர் தப்பிப்பிழைக்கின்றனரா பார்ப்போம். ஒரு பிரதிபிம்பம் மற்றொரு பிரதிபிம்பத் தைத் தண்டிக்குமென்று அத்வைதிகள் சொல்வது கூடாது தான்; ஏனென்னில் இரண்டும் பொய்யானதினா லென்க. பரமசிவனால் திருவாய் மலர்ந்தருளப்பட்ட வேதசாஸ்திரங்கள் கூறுகின்றனவே யென்னின், வேதசாஸ்திரங்கள் கூறினாலுஞ் சரி, பரமசிவனே மானிட வடிவங்கொண்டு வந்து கூறினாலுஞ்சரி, முக்கண் சடைமுடி மான் மழு சதுர்ப்புஜம் நீலகண்டம் முதலியவைகளோடு வந்து கூறினாலு ஞ்சரி, அப்படியு மொத்துக்கொள்ளாத பக்ஷத்தில் முக்கண் முதலியன வொவ்வொன் றுக்கும் ஒன்பது வீத மெடுத்துக் கொண்டுவந்து கூறினாலுஞ்சரி, இன்னும் எவ்வித வடிவத்தோடு வந்து கூறினாலுஞ்சரி ஒத்துக்கொள்ள மாட்டார். ஏனென்னில் பிரதிபிம்பங்கள் பொய்யானபோது ஒன்றையொன்று எப்படித் தண்டிக்கும்? இது சுத்த ஆக்ஷேபமாயிருப்பதால் இந்த ஆக்ஷேபகரமான கரட்டோணான் பூர்வ பக்ஷியாரு டைய உள்ளத்திற் புகுந்து வாட்டித் தொந்தரவு செய்கின்றது. இரண்டையும் பிரதிபிம்பமெனச் சொல்வதினும் ஒன்றைப் பிம்பமாகவும் மற்றொன்றைப் பிரதிபிம்ப மாகவும் அதாவது ஈசனைப் பிம்பமாகவும், ஜீவனைப் பிரதிபிம்பமாகவும் வேதாதிகள் சொல்லியிருந்தால் ஷை ஆக்ஷேபமென்னுங் கரட்டோணான் அவருடைய வுள்ளத்திற்புகுந்து வாட்டாது போலும்! அப்படியே ஈசனைப் பிம்பமாக வும், ஜீவனைப் பிரதிபிம்பமாகவும் வைத்துப் பார்க்கினும் இதுவும் ஆக்ஷேபமாகத் தான் றோன்றுகின்றது. ஏனென்னில் எப்படி யொரு பொய் மற்றொரு பொய்யைத் தண்டியாதோ, அப்படியே ஒரு மெய் ஒரு பொய்யையும் தண்டியாது. இவர் சொல்லிய திருட்டாந்தப்படி குளத்திற் றோன்றிய ஒரு பொய்ச்சந்திரன் குடத்திற் றோன்றிய மற்றொரு பொய்ச்சந்திரனை யெப்படித் தண்டியாதோ, அப்படியே மெய்யான ஒரு பிம்பமனிதன், குடத்திற் றோன்றிய பொய்யான தனது பிரதபிம்ப

மனிதனைத் தண்டிக்கமாட்டான். இங்ஙனமாயின் மெய்யாகியும் பிம்பமாயுமுள்ள கைலாய பரமசிவன்: பொய்யாயும் பிரதிபிம்பமாயுமுள்ள (கண்ணாடியிற் பிரதிபிம்பித்த) சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கும், பார்வதியின் பிரதிபிம்பங்களான கமலினி அநிந்திதைகளுக்கும் பூமியிற்பிறக்கும் வண்ணம் சாபமான தண்டனை செய்த தெங்ஙனமோ! பரமசிவன் சாபங்கொடுத்த திருக்கட்டும்; பரமசிவன் சத்தியப்பொருளா யிருக்தலால் சாபங்கொடுக்கக்கூடும். சுந்தரமூர்த்திசுவாமிகளும் கமலினி அநிந்திதைகளும் பூர்வபக்ஷியின் கொள்கைப்படி பொய்யர்களாயிற்றே, அவர்களெப்படிச் சாபமான தண்டனையைப் பெற்றார்கள்? பெற்றாலும் பெறட்டும். பொய்யான அவர்கள், மெய்யான வுலகிலுள்ள மெய்யான தாய்மார்வயிற்றில் மெய்யாகப்பிறந்து, மெய்யான சரீர இந்திரிய அந்தக்கரண ஜீவர்களோடு வளர்ந்து, மெய்யானசுவாமியால் ஆட்கொள்ளப்பட்டு, மெய்யான சிற்றின்பபோகத்தை அனுபவித்து, மெய்யான கோவில்களுக்குப்போய், மெய்யான தேவாரப்பதிகங்கள் பாடி, மெய்யான அற்புதங்கள் செய்து, மெய்யான வெள்ளையானையின் மீது ஆரோகணித்துக் கொண்டு, மெய்யான கைலைமலைக்குச்சென்று, மெய்யான பரமசிவனைக்கண்டு சேவித்து, மெய்யான பேரின்பத்தை யிப்போதும் அநுபவித்திருத்தல் கூடுமா? கண்ணாடியிற் பிரதிபிம்பித்த சுந்தரமூர்த்தி சுவாமிகளாகிய வொரு ஆண்பொய்: கண்ணாடியிற் பிரதிபிம்பித்த கமலினி அநிந்திதைகளாகிய இரண்டு பெண் பொய்களை யெப்படி மோகித்தது? அந்த இரண்டு பெண் பொய்களும் அந்தவொரு ஆண் பொய்யை யெப்படி மோகித்தன? இந்த ஆண் பெண் பொய்களுக்கு எப்படிக்கலியாணம் நடந்தது? எப்படி அவை ஒன்றோடென்று புணர்ந்தன? எப்படி இரண்டு சமைத்துப்போட வொன்று சாப்பிட்டது? இந்தப் பூர்வ பக்ஷியாரின் ஆக்ஷேபப்படி சுந்தரமூர்த்திசுவாமிகள், கமலினி, அநிந்திதை இவர்களுடைய சரித்திரங்கள் யாவும் பொய்யினும் பொய், சுத்தபொய்யல்லவா? இந்தப் பொய்கள் செய்த காரியங்களை யெல்லாம் மெய்யெனக்கொண்ட இந்த மெய்யர், அந்த ஜீவேசபொய்களை மாத்திர முண்மையென்று ஏன் கொள்ளப்படாது? சுந்தரமூர்த்தி முதலியவர்கள் மாத்திரம் என்ன புண்ணியம் செய்தார்கள்? ஜீவேசர்கள் மாத்திரம் என்ன புண்ணியஞ் செய்யவில்லை?

இதுகிற்க; ஸ்ரீகைலாயத்தில் சுப்பிரமணியக்கடவுள் அவதாரகாலத்தில் பரமசிவன் திருக்கண்களிலிருந்து ஆறு அக்கினிப்பொறிகள் வெளிப்பட்டனவாகவும், அவற்றைக்கண்டு பார்வதிதேவியார் பயந்து அந்தப்புறம் ஓடியதாகவும், அப்போது கால்களிலணிந்திருந்த பாதஸரங்களி லிழைத்திருந்த நவரத்தினங்கள் உதிர்ந்தனவாகவும், உதிர்ந்த நவரத்தினங்களில் அம்மனுடைய திருவுருவம் பிரதிபிம்பித்ததாகவும், பரமேசுவரன். அப்பிரதிபிம்பங்களை வருக வென்றழைத்ததாகவும், அப்பிரதிபிம்பங்கள் வெளிப்பட்டுப் பெண்களாய் வந்து பரமசிவனைக் கண்டுமோகித்துக் கருப்பமாய் வீரபாகு முதலிய நவவீரர்களைப் பெற்றனவாகவும், அப்பெண்களுடைய வியர்வையிலிருந்து இலக்ஷம் படைவீரர்களுண்டானதாகவும், ஷெ நவவீரர்களுக்குள் இலக்ஷம் வீரர்கள் அடங்கி இருந்ததாகவும், இவர்கள் யாவரும் சுப்பிரமணியக் கடவுளுக்குத் துணையாய் நின்று சூரபத்மன் முதலிய அசுர கோடிகளுடன் போர் செய்து அவர்களை வென்றதாகவும் ஸ்காந்த புராணம் சங்கர சங்கிதையின் சிவரகசிய கண்டம் கூறுகின்றதன்றோ? அதில் பொய்யான பிரதி பிம்பங்கள் மெய்யான பிப்பங்கள் செய்வது போல காரியங்கள் செய்தமைக்கு இவர்

யாது சமாதானம் தேடி வைத்திருக்கின்றார்? இவர்க்கு மாத்திரம் மெய்யாவதும், பிறர்க்கு மாத்திரம் பொய் பொய்யாவது மென்னோ! ஜீவன் பிரதிபிம்பம் என்னும் சுருதி வாக்கியத்தை இகழ்ந்து ஆக்ஷேபித்து அத்வைத்துஷண பரிகாரத்தில் சோமசுந்தர நாயகர் சமாதானம் பெற்று அதுவரையில் அடங்கினாரன்றா? அதுவே ஈசப்பிரதிபிம்பத்துக்கும் சமாதானமாம், அங்ஙன மிருக்கவும் இவர் ஜீவேசர்கள் இரண்டையுஞ் சேர்த்து ஆக்ஷேபித்து இப்போது சமாதானம் பெற்றார். இது ஒரு கன்னத்தைக் காண்பித்து அடிபட்டுக் கொண்டவன் அதோடு நில்லாது பின்னொரு கன்னத்தையுங் காணபித்து அடிபட்டுக்கொண்டதற் கொப்பா மென்க.

இவர் ஒரு பொய் மற்றொரு பொய்யைத் தண்டியாதென் றல்லவா ஆக்ஷேபிக்க வந்தார்? அப்படித் தண்டிக்கு மென்பதற்கு ஒரு திருட்டாந்தங் கூறுகின்றோம். அது சொப்பன வுலகில் பொய்யான ஒரு. ராஜன் பொய்யான ஒரு குற்றவாளியைத் தண்டிப்பது போலாம் என்றறிக. சொப்பனம் பொய்யா யிருந்தும் சாக்கிரத்தில் நடக்கும் விவகாரங்களைப்போல அவ்விடத்தில் நடக்கவில்லையா? ஆதலால் ஒரு பொய் மற்றொரு பொய்யைத் தண்டிக்கு மென்பது யாவர்க்கும் அனுபவமேயாம். பொய்யென்பதனாலேயே மலடிமகன் ஆகாச தாமரையைப்போல முற்றும் பொய்யென நினைக்கின்றார். இதுதான் தெரியாமை! இதைக் குறித்துப் பன்முறை முறையும் நன்கு விளக்கி இருக்கின்றா மாகலின் இவ்விடத்தில் அதிகமாய்ப் பேசாது சுருக்கி விட்டோ மென்க.

## சுக்கிலயசுர்வேதம் பைங்களோபநிஷத்.

அதில் (மூலப்பிரகிருதி) பிரதிபலித்ததெதுவோ, அது ஈசுவர சைதன்னியமா யிருக்கின்றது.

## அப்பயதீக்ஷிதரியற்றிய சிவதத்துவ விவேகம்.

(சிவ ஞான சுவாமிகள் மொழிபெயர்ப்புச் செய்யுள்)

*குணங்களைக் கடந்தோ யெனினும் மாயையினைத்*
*தோய்தலால் குணமுடையவன்போ,*
*லணங்கொருபாலுங் கறைமிடற்றழகு*
*மம்பகமூன்று மாமுருக்கொண்,*
*டிணங்குரு நாமஞ் சிவன் பவன் முதலாவியைந்*
*தயனரியரன் முன்னா,*
*முணங்கிடா வுலகை நடாத்துவோனாகி*
*யோங்கினை நீங்கரும் பொருளே.* (11)

மற்றப்பிரமாணங்களை அத்வைத தூஷண பரிகாரம் 26-வது 27-வது பக்கங்களிற் காண்க.

## பிரமம் பரிபூரண மென்பதற்குத்

## தோல்வியடைந்த வுபமானமும், ஆபாசவுபமானமும்.

பிரமம் பரிபூரண மென்பதற்கு இவரும் இவர் கண்பரும் கூறும் உபமானங்களைச் சிறிது ஆராய்வாம்.

பாநுமூர்த்தி இவரைக் கேட்ட கேள்விகள்.

(1) உலகமானது சத்துப்பொருளா யிருந்தால் சத்துப்பொருளாயும், பரிபூரணமுமாயுள்ள பிரமத்துக்கு எப்பக்கத்திலிருக்கிறது?

(2) ஒரு பக்கத்திற்றா னிருக்கவேண்டுமென்று கூறினால், பக்கமுடைய பிரமம் கண்டப்பட்டன்றோ போகும்?

(3) கண்டப்பட்டுப்போகுங் கடவுளைப் பூரணரென்று சொல்லப்படுமா?

(4) உலகத்தைச் சத்துப் பொருளென்று கூறிக் கடவுளைக் கண்டப் பொருளாக்குவதுதான் அழகோ?

இதற்குப்பூர்வ பக்ஷியாரான அரக்கோண வீரபத்திரமூர்த்தி கொடுக்கும் விடைகள்.

(1) சத்துப் பொருளாயும், பரிபூரணமாயுமுள்ள ஆகாயத்துக்கு எந்தப் பக்கத்தில் சத்துப்பொருளாகிய காற்று இருக்கிறது. இதனை யுய்த்துணர்ந்த டங்குவாராக..

(2) ஆகாயத்தினிடத்திற் காற்று ஒரு பக்கத்திலிருக்கிறதென்று எந்த நிர்மூடனும் புலம்பானாகையால், ஆகாயம் கண்டப் பொருளாயினதில்லை. இவ்வுபமானத்தாற் சாதிக்கப்படும் (உபமேய ஸ்தானத்தினின்ற) பிரமமும் யாண்டுங் கண்டப்பொருளாயின தில்லை யறிக.

(3) மேல் 1, 2 இலக்கங்களிட் டெழுதிய நியாயங்களால் பிரமங் கண்டப்பொருளாயின தில்லை யாகையால், அக்கடவுளைப் பரிபூரணரென்று சொல்ல யாதொரு தடையுமின்றென்க.

(4) காற்றுச்சத்துப் பொருளாயினது கொண்டு ஆகாயம்கண்டப் பொருளாகாதது போல், உலகம் சத்துப்பொரு ளாயினது கொண்டு பிரமங்கண்டப் பொருளாயினதில்லை யறிக.

இதிலுள்ள மோசத்தையும் அயோக்கியதையும் அற்பதனத்தையும் மாறுபாட்டையும் சற்று ஊகித்துப் பாருங்கள். இவ்விடை வெளிப்பட்டது 1894ஸ் சூன்-மீ 18-உ 25-களில். இதற்கு மறுப்பு இவரெழுதுவதற்கு நெடுநாள் முன்னரே வந்திருக்கின்றது. அதைப் பூர்வபக்ஷம் பண்ணி மேலே யெழுதாமல் மறுக்கப்பட்டதையே எழுதினார். 1892-ஸ் செப்டம்பர்-மீ 10-உ ப்ரம்மவித்தியாவில் எழுதிய "சித்தாந்திகளும் ஏகாத்துமவாதிகளே" என்னும் விஷயத்திலும், 1892-ஸ் செப்டம்பர்-மீ 18-உ ப்ரம்ம வித்தியாவில் எழுதிய "சங்கராசாரியார் அவதாரமகிமை" என்னும் விஷயத்திலும், 1894-ஸ் பிப்ரவரி-மீ 5-உ ப்ரம்மவித்தியாவில் எழுதிய "அத்வைத தூஷண பரிகாரம்" என்னும் விஷயத்திலும் முறையே ஒன்று 21-மாசங்கட்கு

முன்னும், ஒன்று 18-மாசங்கட்கு முன்னும், ஒன்று 4 மாசங்கட்கு முன்னும் எழுதப் பட்டிருக்கின்றன. அவற்றில் ஆகாயத்தில் வாயு இருப்பது போலெனச் சொல்வது அத்வைதிகளுக்குச் சாதகமும், துவிதிகளுக்குப் பாதகமுமா மெனவும், ஆகாயம் காரணமும் சத்துமாமெனவும், வாயு காரியமும் சத்துப்போலியுமா மெனவும் சுருதியுக்தி அநுபவங்கட் கொத்துப் பலபிரகாரமாகப் பேசப்பட்டிருக்கின்றன. அவற்றில் அத்வைத் தூஷண பரிகா மொன்றில்மாத்திரம் வந்த சமாதானத்தில் சிலவற்றை இங்கெடுத்துக்காட்டுவாம்:

"இனி ஆகாயத்திலிருந்து வாய்வாதிக ளுற்பத்தியாம்வகையை ஆராய்ந்து பார்த்து, அதுவும் இவருக்குச் சாதகமா? பாதகமா? என்பதை விசாரிப்பாம். ஆகாயத்தின்கண் வாயுவாதிக ளுற்பத்தியாதல், தாய் குழவியை போல் பின்னவாத மாகவா? பால்தயிரைப்போல் பரிணாமவாதமாகவா? வித்து மரம் போல் மற்றொரு பரிணாம வாதமாகவா? சூரியன் பிரதிபிம்பசூரியனைப்போல் பிம்பப் பிரதிபிம்ப வாதமாகவா? நீர் அலையாதிபோல் அம்சாம்சிக வாதமாகவா? மண் கடம்போல் காரணகாரியவாதமாகவா? கயிறு அரவுபோல் விவர்த்தவாதமாகவா? இவைக ளல்லாவிடில் வேறு எவைபோல்? தாய் மகனைப்போலென்னின் தாய் ஒரு இடமும் மகன் ஒரு இடமுமாகிக் கண்டப் படுகின்றமையின் அகண்டமாகிய ஆகாயத்திற்கு இவ்வுபமானம் பொருந்தாது. அன்றித் தாயில்லாவிடத்தில் குழவி இருப்பதுபோல் ஆகாயமில்லாவிடத்தில் வாயுவாதிக ளிருக்கவேண்டும். இது பிரத்தியக்ஷ விரோத மாமென்க. இனிப் பால் தயிராவதுபோ லென்னின் பால் தயிர்போலென்பதில் பால் கெட்டுத் தயிராவதுபோல ஆகாயங் கெட்டு வாயுவாதிகளாகவேண்டும். தயிராகும் போது பாலில்லாமற் போவது போல் வாயுவாதிகளிருக்கும் இப்போது ஆகாய மின்றெனக் கூறவேண்டிவரும். ஆதலா லிஃதும் பொருத்தமன்று; இப்போது ஆகாயமிருத்தலினாலென்க. வித்து மரம்போலென்னின் வித்துக் கெட்டு மரமாவது போல் ஆகாயங்கெட்டு வாயுவாதிகளாக வேண்டும். மரமாயிருக்கும்போது வித்தில் லாமற் போதல் போல வாயுவாதிகளா யிருக்கும் போது ஆகாய மில்லாமற் போகவேண்டும். வாயுவாதிகளாயிருக்கு மிப்போது. ஆகாயமில்லையா? இது நிற்க, வித்துத் தானில்லாவிடத்தில் மரமாகின்றது. அதுபோல் ஆகாய மில்லாவிடத்தில் வாயுவாதிக ளிருக்கவேண்டும். அன்றி வித்துடனே ஜலமுதலிய வஸ்துகள் சேர்ந்து விருக்ஷமாகின்றது. அதுபோல் ஆகாயத்துடனே இதர பொருள்கள் சேர்த்து வாயுவாதிகளாக வேண்டும். ஆதலா லிவ்வுபமானமும் பயனற்றவுபமானமாம்.

சூரியன் பிரதிபிம்ப சூரியனாவதுபோல வென்னின் சூரியன் தானில்லாவிடத் திலுள்ள நீரிற் பிரதி பலித்துப் பிரதிபலன சூரியனாதல் போல ஆகாயமும் தானில் லாவிடத்திலுள்ள ஏதோ வொருபொருளிற் பிரதிபலிக்க வேண்டும். இங்ஙனங் கூறுவதனால் ஆகாயங் கண்டப் பொருளாய் விடும். அத்துடனே பிரதிபலிக்க மற்றொரு பொருளும் வேண்டும். ஆகாயத்தைவிட வேறு பொருளின்மையின் அது பொருந்தாது. நீர் அலையாதிபோலென்னின் இதுவுங் குற்றமாம். நீர், தானில்லா விடத்தில் அலையாதிகளாய் எழக் காண்கின்றோம். அங்ஙனமே ஆகாய மில்லாவிட த்தில் வாயுவாதிகள் எழ வேண்டும். பூரணமாய் ஆகாய மிருப்பதால் அது இல்லா விடத்தில் வாயுவாதிகள் எழுகின்றனவென்பது. வெறுஞ்சொல்லாம். அன்றி நீரை யலையாக்குதற்கு வாயுவாதிகள் இன்றியமையாமைபோல ஆகாயத்தை வாயு

வாதிகளாக்க வேறு பொருள் அத்தியாவசியம். உபமேயத்தில் ஆகாயத்தையன்றி வேறுபொரு ளின்றென்பது திண்ணம். அன்றி நீர் விகாரமுற்றே அலையாதிகளா யாகின்றது. அங்ஙனம் ஆகாயம் விகாரத்தைப் பெற்றே வாயுவாதிகளாதல் வேண்டும். இவ்வாறு தத்துவ நூலோர்ந்த எந்த மதிவல்லனாயினும் விளம்புவானா? இது இப்படி யிருக்கட்டும். நீரைத் தவிர அலையாதிகளுக்குப். பொருளுண்டா? அலையாதிகள் தோற்றமேயன்றிப்பொருளின்று, அங்ஙனமே ஆகாயத்தையன்றி வாயுவாதிகளுக்குப் பொருள் அபாவமாம். இனி மண் கடம் போலென்னின் மண்ணின் கண் விகார முண்டாகாது கடமாதலின்று. மண், தானில்லா விடத்திலேயே வளைதலாதித் தொழிலைப் பெறுகின்றது. அதுபோல் ஆகாயம் விகாரப்பட்டே கடமாதல்வேண்டும். அன்றி ஆகாய மில்லாவிடத்திலேயே வாயு வாதிக ளுண்டாதல்வேண்டும். அதுதவிர மண்ணையன்றிக் கடத்துக்குப் பொருளி ல்லை; கடம் வெறுந் தோற்றமேயாம். அங்ஙனமே ஆகாயத்தையன்றி வாயு வாதிகளுக்குப் பொருளில்லாதிருக்க வேண்டும்; அத்துடனே வாயுவாதிகள் வெறுந் தோற்றமாயு மிருக்கவேண்டும். இத்துணைத் தோஷ மிருக்கின்றமையின் இவ்வாத மும் சோம. நாயக்கருக்குப் பயன்படாமற்போ மென்க. இனிக் கயிற்றரவுபோல் விவர்த்தவாதமாகக் கூறின் யாதொரு ஆட்சேபமு மில்லாமற் பொருந்தும். கயிற்றின்கண் அரவு தோற்றமே யன்றிப் பொருளில்லை. கயிற்றுக்கு நஷ்டமில்லா மலும் கயிறு விகாரப்படாமலும் அரவு தோற்றுகின்றது. அன்றிக்கயிற்றுக்கு மிஞ்சாமல் கயிறு ஸ்தானத்திலேயே தோற்றுகின்றது. இவ்வாறு ஆகாயம் நஷ்டப்படாமலும் விகாரப்படாமலும் வாயுவாதிக டோற்றுவதோடு, ஆகாயத்துக்கு மிஞ்சாமல் ஆகாயஸ்தானத்திலேயே தோற்றுகின்றன. கயிற்றைத் தவிர வரவில் லையெனத் தெளிந்தபின்னர் அரவு தோற்றவில்லை. அவ்வாறு ஆகாயத்தையன்றி வாயுவாதிக ளில்லை யெனத் தெளிந்தபின்னரும் தோற்றுகின்றதே யென்பதற்கும் வாயுவாதிகள் அநுபவப்படுகின்றனவே வென்பதற்கும் கானனீர் சொப்பன ஜகங்களைத் திருட்டாந்தமாகக் காட்டி முன்னரே கூறினாம். ஆங்குக் கண்டுகொள்க. இந்த விவர்த்தவாதமே யுண்மையானது. இதனால் ஆகாயத்தில் மற்ற வாயுவாதிக ளிருப்பது விவர்த்தமாகவன்றி யுண்மையாயல்லவெனவும், இங்ஙனமே பிரமத்தின் கண் உலகிருப்பது விவர்த்தமாகவன்றி யுண்மையாய் அல்ல வெனவும் ஏற்படு கின்றன. இது பற்றியே ஆகாய வுவமானங் கூறப்படுகின்ற தென்க. இதனை யோராது ஆகாய வுவமானந் தமக்குச் சாதகமாகவும் அத்வைதிகளுக்குப் பாதகமாகவும் இருப்பது போ லெண்ணிக் கூறி யேமாந்து மோசம்போனார்! எந்தவகையி னுழையப் பார்த்தாலும் சோம. நாய்க்கர் தப்பியோட வழியில்லை. ஒவ்வொரு வழியும் அடைக்கப்பட்டிருக்கின்றன; அதுவும் வச்சிரமலையினால் அடைக்கப்பட்டிருக்கின்றன.

இன்னும் இதன்விரிவை யுணரவேண்டுவோர் ஷை அத்வைத தூஷண பரிகாரம் 57-ம் பக்கமுதல் 65-ம் பக்கம் வரையில் பார்க்கவும். இதனால் ஆகாயம் சத்தெனவும் வாயு சத்துப்போலியெனவும் சித்தாந்தமாயினமைகாண்க. இவ்வித சமாதானம் முன்னமே வந்திருக்க அதைக்கவனியாமல் தோல்வியையே வெற்றி யாகக்காட்டி எழுத வந்தது நீதியன்றென்க. இது கல்விச்சாலையில் உபாத்தியாயர் “உயி'ரெழுத்தெத்தனை?” என்று கேட்டதற்கு முதல் மாணாக்கன் 12 என்று சொல்லியுட்கார, கடைமாணாக்கன் 13 என்று சொல்லி, “முதல் மாணாக்கன்

ஸ்தானம் எனக்குக் கிடைக்கவேண்டு" மென்று வாதாடுவது போலிருக்கின்றது. இதனால் பூர்வபக்ஷியாரது கக்ஷி முழுப்பலவீனமென நிதர்சனமாயிற்றென்றுணர்க; அன்றி யிப்படிப்பட்ட மோச வழியன்றி நியாயமான வழியிற் சென்று தம் சித்தாந்த த்தை நிறுத்திக் கொள்வதற்கு ஏலாதவரென்று முணர்க.

இவர் சிவத்துக்குச் சொல்லும் பரிபூரணவிலக்கணந்தான் வெட்டவெளி யாயிற்றே. இதன் பேரில் இவரது நண்பர் மகாதத்துவ சாஸ்திரியொருவர் வெகு வீரியத்துடன் பரிபூரண வாதஞ்செய்ய வருகின்றார். அவரது வாதத்தையும் சற்றுப் பரீக்ஷித்துப் பார்ப்போம். அவர் "திருப்பேரூர் இராமசுவாமி சிவாசாரியன்" எனக் கையொப்பமிட்டிருக்கின்றார். அவர் 1894ஆ ஜனவரிமீ 29உ பிப்ரவரிமீ 5உ நாகை நீலலோசனிப் பத்திரிகைகளில் "நம் உடலில் உயிர், நகசிகை பரியந்தம் வியாபித்துநின்று நடத்துகின்றது.. உடலோ என்பு நரம்பு முதலிய சத்த தாதுக்களா யிருப்பதோடு, அனேக உட்பிரிவுப் பொருள்களை யுடையதா யிருக்கின்றது. அங்ஙன மிருந்தும் அதில் நிறைந்து ள உயிரின் வியாபகம் தடைபட்டதில்லை" என்றெழுதி, இதைச்சிவன் உலகில் வியாபித்தமைக்கு உபமானமாக எடுத்துக் கூறுகின்றார். இதில் துவிதிகள் சிவனுக்குச் சொல்லும் பரிபூரணம் இன்னும் ஸ்பஷ்டமாய் வெளிப் பட்டுவிட்டது. இனி இதிலுள்ள ஆக்ஷேபப்பெருக்கை விவரித்தெடுத்துக் காட்டுவாம். உபமானஞ் சொல்பவர் பிரத்தியக்ஷப்பொருளில் காட்டவேண்டுமேயன்றி, அப்பிரத்தியக்ஷப்பொருளில் காட்டப்படாது. அப்பிரத்தியக்ஷப் பொருளை விளக்கத் தான் பிரத்தியக்ஷப்பொருளை யுபமானமாகச் சொல்வது. உயிரொன்றுண்டெனவும், அது உடலுக்குவேறு எனவும், அது சித்தெனவும் கொள்வது ஒருபாலார் கொள்கை. அதற்குமாறாகக் கொள்வது பிறிதொரு பாலார் கொள்கை. உயிர் வியாபகமென்பது ஒரு சாரார் சம்மதம், அதை மறுத்து அவ்வியாபகம் என்பது இன்னொரு சரார் சம்மதம். இன்னுமிவ்வாறு பலவாதிகள் பலவிதமாய்ச் சித்தாந்தஞ் செய்கின்றனர். அதை ஸ்தாபிப்பதற்கு. உலகிலுள்ள பல பிரத்தியக்ஷப்பொருள்களைத் திருட்டாந்தங் கூறுகின்றனர். உயிரினது இலக்கணம் பிரத்தியக்ஷமானால் அதில் பலர் பல விதமாய் மாறுபாடு கொள்வதற் கிடனிராது. பிரத்தியக்ஷ மல்லாமையினால் மாறுபாடு கொள்வதற் கிடனாகின்றது. பலவித மாறுபாடு கொள்வதற் கிடனாகின்ற தும், அப்பிரத்தியக்ஷமான துமான வுயிர்ப்பொருளை யுபமானமாகக் கொண்டு, சிவனுக்குப் பரிபூரணஞ்சாதிக்க எழுவது வீணேயாகும்; அன்றி யுபமான வுபமேய இலக்கணந் தெரியாமையுமாகும். அவர் உண்மையாய் உபமேயத்துக்கு உபமானஞ் சொல்லவந்தவ ரன்று. சொல்லவந்தவராயின் உயிர் உபமானஞ், சொல்லமாட்டார். உபமேயம் எவ்வளவு குழப்பமோ, அவ்வளவு குழப்பம். உபமானத்திலும் இருக்கின்றமையால் அவரது உபமானம் உபமானமன்று; உபமேயமாம். அது பற்றியே அவர்காட்டிய வுபமானத்தை விளக்க வேறு உபமானங்களைக் காட்டவேண்டியதாகின்றது.

அவர் உடலில் உயிர், நகசிகை பரியந்தம் வியாபித்து நின்று நடத்துகின்றது' என்பதில் உயிர் உடல்முற்றும் வியாபிக்கின்றதாயாகின்றது. அவருடைய மதசித்தாந்தப்பிரகாரம் பந்தத்தில் உயிர் அணுவாகின்றமையின் அவ்வணு உடலில் வியாபித்ததென்பதும் அதிலும் நகசிகை பரியந்தம் வியாபித்ததென்பதும்

தோஷமாம். பந்தத்தில் உயிர் அணுவென்பதற்குப் பிரமாணம் சிவஞானபோதம் நாலாவது சூத்திரம் இரண்டாவது அதிகரணம் "மாயாதனு" என்னும் வெண்பாவின் உரையில் "வியாபகவுயிர் அணுத்தன்மைப் படுமாறு செய்தலின் ஆணவமென்னும் பெயர்த்தாய்" என்று கூறப்பட்டிருக்கின்றது. பந்தத்தில் அணுவானவுயிர் முத்தி பெறும் வரையில் அணுவாகவிருக்க வேண்டுமேயன்றி வியாபக மாகப்படாது. அங்ஙனமாக அது வியாபித்தல் எங்ஙனங் கூடும்? அவர் மதவிரோதமாக அது வியாபித்ததென்றே கொள்வாம். அங்ஙனம் வியாபிக்கின் அணுத்தன்மை கெட்டு வியாபித்ததா? கெடாமல் வியாபித்ததா? கெட்டு வியாபித்ததெனின் அணுவே யில்லாமல் போவதோடு பந்தமுள்ளவரையில் அணுவாயிருக்குமென்று கூறும் அவர் மதக்கூற்றுக்குப் பங்கமுண்டாகின்றது. கெடாமல் வியாபித்ததெனின் அணு அணுவாகவே யிருக்குமாயின் வியாபித்தல் எங்ஙனங்கூடும்? ஒரு படி நீர், நீராவி யாகுமானால் 1700 படி நீராவி யாகும். ஒருபடிநீர் 1700 படி நீராவியாய் வியாபித்தல் போல அணுவானவுயிர் உடலில் நகசிகைபரியந்தம் வியாபிக்கு மெனின் இது ஞான விலக்கணமன்று. ஞானப்பொருள் விரிதலென்பதும் குவிதலென்பதுங் கூடாது. கூடாதேனுஞ் சொல்வாமென்னின் அப்போது அது பூரணமாகாது. இடைஇடையில் உயிர் இல்லாது வெறு வெளியுள்ளதாயேற்படும். ஒருபடிநீர் 1700 படி நீராவியா யாகிறபோது ஒருபடியில் சற்றேறக்குறைய நீர் எப்படி நிறைந்திருந்ததோ, அப்படியே 1700 படி நீராவியில் முன் போல் இடைவெளியின்றி நிறைந்திருக்குமா? இராதன் றோ? அங்ஙனமே உயிர் உடலில் வியாபிக்குமாயின் முற்றும் வியாபியாது. ஆங்காங்கு உயிரில்லாவிடம் விசேஷமா யிருக்கும். இருக்கும்போது உயிர் உடல் முற்றும் அதாவது நகசிகைபரியந்தம் வியாபித்ததாய்ச்சொல்வது கூடாது. நீர் நீராவியாய் வியாபித்தவரையிலாவது எப்படி வியாபிக்கிறதென்று பார்க்கின் அது இடையிலுள்ள பொருள்களை விட்டே வியாபிக்கின்றது. பாத்திரத்திலுள்ள நீர் உஷ்ணம் ஏறஏற நீராவியாய் மேலே எழும்போது ஆங்காங்குள்ள பொருள்களை விட்டே வியாபித்துக்கொண்டு போகின்றது. அங்ஙனமே உயிர் நீராவிபோல், உடல் முற்றும் வியாபிக்கும்போது இடை இடையிலுள்ள என்பு, நரம்பு, சீ, ரத்தம், புழு, பூச்சி முதலிய பல சடசித்துப்பொருள்களை விட்டே வியாபிக்க வேண்டும். அப்படி வியாபிக்குங்கால் முற்றும் பூரணமாய் வியாபகஞ் சொல்லப்படாது. இதுபோலச் சிவம் சடசித்து உலகில் வியாபிக்கும்போது முற்றும் வியாபித்ததாய்ச் சொல்லப் படாது. சடசித்து உலகத்தைத் தள்ளியே வியாபித்ததாய்ச் சொல்லவேண்டும். அவ்வாறு சொல்லுங்கால் சிவம் பரிபூரணமென்று சொல்லும் சுருதி ஸ்மிருதி புராண இதிகாச ஆகமங்கட்கு விரோதமாம்.

இனி விளக்கு ஒரு இடத்திருக்கினும் அதன் பிரகாசம் விளக்கில்லா விடத்தினும் வியாபிப்பதுபோன்று, உயிர் ஒரு இடத்திருக்கினும் அதன் வியாபகம் உடல் முற்று மிருக்குமென்றாலோ, இவ்வுபமானமும் தோஷமாகவே முடிகின்றது. ஏனெனின் விளக்கிலிருந்து பிரகாசம் வெளிப்படுவதால் வெளிப்பட்ட அளவு விளக்கு வடிவு குறைகின்றது. குறையக் குறைய அக்குறைவை யெண்ணெயானது சரிப்படுத்தி நிறைவுபடுத்துகின்றது. அதுபோல. வுயிரினது சிலபாகங்குறைந்து உடல் முற்றும் வியாபிக்க வேண்டும். அக்குறைவை யெண்ணெயைப்போன்ற தொன்று வந்து உயிரினது குறைந்த பாகத்தை யப்போதப்போது நிறைவுபடுத்திவரவேண்டும். அக்குறைவை. நிறைவுபடுத்துவ தின்னதென விளங்கவில்லை. விளக்கை யப்போதப்

போது, நிறைவுபடுத்துகின்ற எண்ணெயானது ஆய்விடுமானால் விளக்கேயில்லாமற் போம். அங்ஙனமே உயிருக்கு முதற்பொருளான எண்ணெயைப்போன்ற ஏதோ வொன்று ஆய்விடுமானால் உயிரே யில்லாமற்போம். இந்தவுபமானப்படி யுபமேயத் தை யாராயின் சிவம் ஒரு இடத்திலும் அதன் வியாபகம் மற்ற இடத்திலுமி ருப்பதாய் ஏற்பட்டு, உயிர் உபமானத்தில் சேர்ந்த தோஷங்களெல்லாம் சிவ வுபமேயத்திலுண்டாகி, எண்ணெயைப்போன்றதொன்று சிவத்திற்கு அத்தியாவசிய கமாய் வேண்டப்பட்டு, அது ஆய்விடுங்கால் சிவமேயில்லாமற்போய்விடுமென்க. சிவமேயில்லாமற்போகுங்கால் பூர்வபக்ஷியார் நாஸ்திகராய்ப்போகத் தடையேது மிராது.

விளக்கு, அதன் வியாபகம் ஆக விரண்டையுஞ் சொல்வதிலும் அபரி பூரண தோஷ முண்டாகின்றது. விளக்குவடிவானது அவ்வடிவம் வரையில் சற்றேறக் குறைய எவ்வளவு பூரணமாகின்றதோ அவ்வளவு பூரணம் அதன் வியாபகத்தி லில்லை. நீரும் நீராவியும் எப்படியோ அப்படியே விளக்கும் அதன் வியாபகமுமாம். ஆதலால் இதைப்பற்றித் தனியே விசேஷமாய்ச் சொல்லவேண்டிய தில்லை. நீரும் நீராவியிலுமுள்ள தோஷங்களெல்லாம் இதிலு மிருக்கின்ற தென்றுணர்க. இன்னும் சூரியன் ஒரு இடத்திலிருக்க அவனது பிரகாசம் எங்கும் வியாபித்திருப்பது போலெனச்சொல்லும் பாஞ்ச்ராத்திரிகளுடைய சித்தாந்தத்தைத் துவிதசிவாகமியான சோமசுந்தர நாயக ரென்பவர் "சித்தாந்த ரத்நாகரம்" என்னும் சஞ்சிகையில் மறுக்கின்றார். அதுவும் ஓர் மறுப்பாகும். அது வருமாறு: -

## சோமசுந்தரநாயகர் மறுத்த மறுப்பு

"இன்னும் விஷ்ணுவுக்குப் பஞ்சராத்திரிகள் கூறும் பூரணித்தைப் பரியாலோ சிக்கில், அவர் சாகார பூரணரென்பர் என்பது பரமபதமென்கிற வீட்டில் நீளாதேவி பூதேவி சமேதராய், திருமாமணி மண்டபத்தில் சங்க சக்கிரதாரியாய், நீலமேனிய ராய், நித்திய சூரிகளால் சேவ்யமானராய் எழுந்தருளி யிருப்பவரெனவும், அப்படி அவரங்கெழுந்தருளி யிருக்குங்கால், அவருடைய பிரகாசமாத்திரத் தானே சர்வ வியாபகத்வம் பெறப்படுமெனவும், அது சூரிய னோரிடத்திலிருக்கவும், அவன் பிரகாசத்தால் சர்வ வியாபியாதல் போல்வதொன்றெனவுங் கூறுவதேயாம். இது பூரண விலக்கென்பதை நிரூபிப்பாம். சூரியனோரிடத்திலிருந்து அவன் பிரகாசத்தால் வியாபிக்கையில், எங்கும் சமநிறைவு கூறுதல் கூடாது. அவனிருக்குமிடத்தி லிருந்து பூமியை நோக்குங்கால் சிறுகச்சிறுகப் பிகாசவுஷ்ணங்கள் குறைந்திருப்பது பிரத்தியக்ஷமாதலால். இன்ன தன்மையே விஷ்ணுவுக்கும் சொல்ல வருமாகை யால், அவர் பூரணராதல் அமையாதென்க. வியாபகப் பொருளாயுள்ளது எங்கும் ஒரு படித்தாத லமையும்."

இன்னுமுள்ள தோஷத்தை யாராய்வாம். 'உயிர், உடலில் நகசிகை பரியந்தம் வியாபிக்கிறது' என்று வரையறுப்பதால் அதன்மேல் வியாபியாதெனப் பொருள் படுகின்றது. அதற்குமேல் வியாபிக்கிறதென்றால் பக்கங்களிலிருக்கும் மனிதர்க ளுடைய வுடல்களிலும் வியாபித்து, அவ்வுடல்களையும் தனதாகக்கொண்டு,

அவைகளுக்குண்டாகுஞ் சுகதுக்கங்கட்கும் தான் ஆட்படவேண்டும். இது அநுபவ விரோதம்; ஆகலின் தன்னுடலுக்கு மிஞ்சி வியாபியா தென்க. இனி யுடல்வரையில் வியாபிப்பதைப் பார்ப்போம். பிள்ளை பிறக்குங்கால் ஒன்றரைசாண் நீளமிருக் கின்றது. இருபது வயது ஆய்விட்டால் எண் சாண் மனிதனாகின்றான். இவ்விரண்டு உடல்களில் எந்த உடலில், உயிர் நகசிகை பரியந்தம் வியாபிக்கிறது? ஒன்றரை சாண் உடலில் வியாபிக்கிறதானால் எண்சாணாகிறபோது அதிக விடத்தில் எப்படி வியாபிக்கும்? உயிரினது வியாபகம் உடல் வளர்ச்சிக்கும் குறைவுக்குத் தக்கபடியா? என்றும் ஒருபடித்தர்? செடி வளர்வது போல வளருமென்னின் உடல் வளர்ச்சியை யெதிர்பார்த்து அது எவ்வளவு வளருகிறதோ, அவ்வளவே யுயிர்வளருமா? அதை யெதிர்பாராது தனது கணக்குப்பிரகாரம் வளருமா? உடலை யெதிர்பார்த்து வளருமெ னின் உயிர் நாமானதினால் உடல் இவ்வளவு வளருகின்றதென்றெதிர்பார்த்து, வளருஞ் சமயமறிந்து, கூட வளருகிற அனுபவம் நமக்கிருக்கவேண்டும். அவ்வாறி ல்லை யென்பதை நாமே அறிவோம். உடலை யெதிர்பாராது தனது கணக்குப் பிரகாரமே வளருமெனின் அங்ஙனமேல் அவ்வளர்ச்சி உடலுக்குக் குறைந்தாவ திருக்கும்; அதிகப் பட்டாவதிருக்கும். குறைச்சலாகவாவது அதிகமாகவாவதிருக்கும் பக்ஷத்தில் உயிர் உடலில் நகசிகை பரியந்தமென வரையறுத்துக் கூறுவது கூடாது. அன்றி எது வளர்தல் குறைதலுடையதோ அது அழிவு பாடெய்து மென்பதற்கு உலகிலுள்ள எப்பொருளும் சாக்ஷிபகரும். உயிரினது வியாபகம் என்றும் ஒரு படித்தென்னும் பக்ஷத்தில் ஒன்றரைசாணா யிருந்தாலுஞ்சரி, எண்சாணா யிருந்தாலு ஞ் சரி, எல்லா வுடல்களையுஞ் சேர்த்து, உடலில் நகசிகை பரியந்தம் என மொத்த மாய்ச் சேர்த்து வியாபகஞ்சொல்லி விடப்படாது. அப்படி ஒருபடித்தா யிருக்கும் வியாபகம் எறும்பளவோ, ஈ அளவோ, நாயளவோ, மனித அளவோ, மாடளவோ, யானையளவோ, இன்னும் எவ்வளவோ தெரியவில்லை. இந்தப் பிராணியின் உடலெனக் குறிக்காமல் "எல்ல சட்டிலக்க ஏகலக்க" என்றபடி மொத்தமாய்ச்சேர்த்து, 'நகசிகை பரியந்த' மெனக் கூறுவது பொருந்தாது. ஒருபடித்தாயிருக்கும் வியாபகம் ஒன்றரை சாணானால் எண்சாணாய் வளரும்போது அந்த அளவுக்கு குறைகின்றமை யின் எண்சாணுடலைவைத்து, அதில் நகசிகை பரியந்தம் உயிர் வியாபித்திருக்கிற தெனச் சொல்லப்படாது. ஒரு படித்தாயிருக்கும் வியாபகம் எண்சாணானால் அந்த எண்சாண் வியாபகம் ஒன்றரை சாண் உடலில் எப்படி அடங்கும்? சிறியது பெரியதில் அடங்குமே யன்றி பெரியது சிறியதில் அடங்குமா? அடங்காதே. எறும்பு உடல் யானை யுடல்களில் இந்த ஆக்ஷேபம் இன்னும் அதிகப்பட்டு மென்பதிலைய மின்றென்க.

பின்னும் அவர் வாக்கியமொன்றை யூன்றிப் பார்ப்போம். "அவ்வுடலிலுள்ள ஒவ்வொரு தாதுக்களிலும் எத்தனையோ புழுப்பூச்சிகளாகிய ஜீவராசிகள் கணந்தோறும் பிறந்திருந்து இறந்து காரியப்படுகின்றன. நம் வயிற்றுள் அவை யங்ஙனம் படும் அவத்தைகள் நமக்கு (ஆன் மாவுக்கு) சம்பந்தமில்லை" என்கிறார். இது சடசித்துலகில் சிவன் பரிபூரணன் என்பதற்கு நெடுநாளாய் வருந்தித் தவம் புரித்து தேடிக்கொணர்ந்த வுபமானம். இந்த வுபமானத்தை வெகு ஆதரவாய் நம்பி "இதுபோலவே உலகுயிர்களை உடைமையாகவும் அடிமையாகவும் கொண்டு ஒன்றாய் வேறாய் உடனாய் நின்று நடத்தும் இறைவன் நின்மல சூக்கும் சித்தாதலின் அவத்தையிற் றொடக்குண்ணாது நிர்விகாரியாய் விளங்குகின்றான்."

என வுபமேயத்தையுஞ் சொல்லிவிட்டார். விசாரணையற்றுச் சொன்னதெல்லாஞ் சரியென்றங்கீகரிக்கும் (மூக்கையரிந்து கொண்டால் சுவாமியை நேரே காணலாம் என்கிற நம்பிக்கை கொண்டு மூக்கை யரிந்து கொள்ளுபவரைப்போன்ற) புத்திமான் கட்கு இப்படிபட்ட யுக்தி வெகு அற்புதமாயிருந்தாலும் சுருதிக்கிணங்க யுக்தி யனுபவங்கட்கொத்து விசாரணை செய்யும் அதிமேதாவிகளான முமூட்சுகளுக்கு அது அருவருப்புடன் வெறுக்கத்தக்கதாமென்க. அவர் உயிருக்கு வியாபகத்தைத் தாபித்த பிறகன்னா, உயிர் உடலில் வியாபித்த வுபமானத்தைச் சொல்லவேண்டும்? இதுகாறும் அவர் சொல்லிய வியாபகம் மறுக்கப்பட்டுப் போனமையின் அவரது உபமானமும் மறுக்கப்பட்டுப் போயிற்றென்க.

அவர்சொல்லுகிறபடி உயிர் உடல் முற்றும் வியாபித்ததாய்ச் சொல்லின் மற்றொரு சங்கை யுண்டாகின்றது. உயிர் உடல் முற்றும் வியாபகமா? ஏதேனுங் குறைவாய் வியாபகமா? முற்றூம் வியாபகமென்னின் உடலுக்குள் பல்லாயிரம் புழுப்பூச்சிகள் உயிருடன் இருக்கின்றமையின் அப்பல்லாயிரம் புழுப்பூச்சிகளுடைய பல்லாயிரம் உயிர்களும் அவ்வவ்வுடல்களில் வியாபித்திருப்பதால் அப்பல்லாயிரம் வியாபகத்துள் இவ்வொரு மனித உயிர் வியாபகமெங்னோ தலைகாட்டும்? புழுவுக்கானாலுஞ்சரி, மனிதனுக்கானாலுஞ்சரி, யானைக்கானாலுஞ் சரி, இன்னும் எந்தப் பிராணிகளுக்கானாலுஞ் சரி, உயிரினது இலக்கணம் ஒன்றேயாகலினானும், மனிதவுயிர் எவ்வளவு வியாபகமோ அவ்வளவு வியாபகம் புழுப்பூச்சிகளுக்கு முண்டாகலினானும், ஒருமனித வுயிர் வியாபகத்தினும் பல்லாயிரம் புழுப்பூச்சி களுடைய வியாபகம் எத்தனையோ பங்கு அதிகமாகலினானும், பல்லாயிரம் புழுப்பூச்சிகளது பல்லாயிரம் உயிர் வியாபகங்களின் முன் ஒருமனிதவுயிர் வியாபகம் வெகு அற்பமாகலினானும், பல்லாயிரம் உயிர்வியாபகங்க ளிருக்கு மிடத்தில் ஒருமனிதவுயிர் இருக்கவே யிடமில்லாதபோது ஒரு மனிதவுயிர் வியாபகத்தில் பல்லாயிரம் புழுப் பூச்சிகளுடைய வுயிர் வியாபகங்கள் அடங்கியி ருக்குமென் றுரைப்பது வெற்றுரையாகலினானும், இவ்வா றின்னும் பற்பல தோஷங்கள் நிகழ்கின்ற மையானும் நகசிகை பரியந்தம் வியாபித்திருக்குமென்கை அவசித்தாந்தமா மென்க.

இது எவ்வளவு அவசித்தாந்தமோ சிவன் உலகில் வியாபித்ததென்பதும் அவ்வளவு அவசித்தாந்தமாயினமை காண்க. இவ்வுபமானத்தை யத்வைதிகள் கண்டித்துவிடுவார்களென்று பூர்வபக்ஷியார்க்குத் தெரியும். தெரிந்து தான். "இதை நன்குவிளக்கச் சரியான வுவமையில்லையாயினும் ஏகதேசவுவமையில் வைத்து ஒருவாறு விளக்கிக்காட்டுதும்" என்றார். சிவத்தையுஞ் சத்தாகவைத்து, அதனோடு வேதாகமசாஸ்திரவிரோதமாகச் சேதனாசேதனவுலகையும் சத்தாகவைத்து, உவமா னஞ் சொல்லப் புறப்பட்டால் சரியானவுவமான மெங்கிருந்துவரும்? சுருதியா திகளை அவமானப்படுத்தி அவற்றை நிந்தித்து, அவைதமக்கு விரோதமாகக் கற்பனா துவித சித்தாந்தத்தைச் சிருட்டித்துக்கொண்டு, அதற்குவமானந் தேடப் புறப்பட்டால் அகப்படுமா? நூல்களில் சாதாரண சனங்களுக்கு ஸ்தூலமாகவும் மிகமேதாவிகட்குச் சூட்சுமமாகவும் வியாபகவுவமானஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. நுட்ப ஆராய்ச்சி செய்யும் அதிமேதாவிகட்கு ஸ்தூலவுபமானம் பொருந்தாது. திருட்டாந்தமாக எள்ளில் நெய், பாலில் நெய், கட்டையில் நெருப்பு முதலிய வுவமானங்கள்

ஸ்தூலம்; கயிற்றரவு, கானனீர், தறிபுமான், இந்திரசாலப்பொருள், மனம் சொப்பனவுலகு முதலிய வுபமானங்கள் சூட்சுமம். ஸ்தூல வுவமானத்தோடு திருத்தியடைபவர்க்கு ஸ்தூலவுவமானமே சொல்லித் திருத்தி செய்ய வேண்டும்; ஸ்தூலவுவமானத்திற் றோஷங்கூறிச் சங்கை செய்பவர்க்குச் சூட்சும வுவமானங் கூறியே திருத்தி செய்யவேண்டும். அதைவிட்டுச் சூட்சுமவுவமானஞ்சொல்லி வாதிப்பவரோடு, ஸ்தூலவாதிகள் எதிர்த்து வாதப் போர் செய்வது தகுதியன்று. துவிதமதம் ஸ்தூலமதமானதால் துவிதிகள் ஏகதேசமான ஸ்தூல வுவமானத்தையே மெய்யெனக் கொள்ளுகின்றார்கள். அத்துவிதம் சூட்சும மதமானதால் அத்துவிதிகள் ஸ்தூல உவமானத்தை ஏகதேச வுபமானமென்றும், அது அந்திகாரிகளுக்கு உபகாரமென்றுங் கழித்து, சூட்சும உவமானமே தங்களுக் குரியதெனக் கொள்ளுகின் றார்கள். இந்த ரகசியத்தை ஸ்தூலபுத்தியுள்ள துவிதிகள் உணராது ஏகதேச வுவமா னமே யுண்மையென மயங்கிக் கெடுவதுமன்றி, சம்பூரணமான சூட்சும உவமானத் தைக்கொண்டு வாதஞ்செய்யும் அத்வைதிகளிடத்தில் விதண்டா வாதம் பேசி, வேதாகமசாஸ்திர பாஹியராயும், நாஸ்திகராயும் நின்று, அடிக்கடித் தோல்வி யடைந்து அவமானப்படுகின்றார்கள். இனியேனும் ஸ்தூல வாதிகளாகிய துவிதிகள், அத்துவிதிகளிடத்தில் வாதஞ்செய்யப் போகாமல் தங்கள் வரையிலும் தங்கள். அநுஷ்டானத்தைச் சரியாய் அனுஷ்டித்து, காலக்கிரமத்தில் சூட்சுமமும் சுருதி சம்மதமும் யுக்தி அநுபவப்பொருத்தமுமுள்ள அத்துவித சித்தாந்தத்தை அனுசரித்து உய்தி பெறுவார்களாக. துவிதிகள் தங்கள் மதபல மிவ்வளவென்றும் அத்துவித மதபல மிவ்வளவென்றும் அறிந்திலராகலின் வீண் வாதம் பேசி விழலராகின்றார் கள்.

“நம் வயிற்றுள் அவையங்ஙனம் படுமவத்தைகள் நமக்கு (ஆன்மாவுக்கு) சம்பந்தமில்லை" என்கிறார். அவர் மதப்பிரகாரமும் யுக்தி அனுபவங்கட்குப் பொருந்துமாறும் அவருடைய ஆன்மாவும் புழுப்பூச்சிகளது ஆன்மாக்களும் தனித்தனி அணுக்களா யிருக்கின்றமையின் ஒரு ஆன்மா படும் சுகதுக்கங்கட்கு இன்னொரு ஆன்மா எங்ஙனம் சம்பந்தமுள்ளதாகும்? இதனால் அவருடைய வவமானப்படி மனித ஆன்மாவும், புழுப்பூச்சிகளுடைய ஆன்மாக்களும் மனித வுடலில் வேறு வேறாயிருக்கின்றன வெனவும் இந்த வுவமானப் பிரகாரமே சிவமும் சேதனா சேதன வுலகும் வேறுவேறா யிருக்கின்றனவெனவுந் தீர்மானிக்கப் படுகின்றமையான் அவரது நியாயப்பிரகாரம் அவரது கடவுள் அவ்வியாபக ஏகதேச கண்டப்பொருளாகின்றார். “இதுபோலவே உலகுயிர்களை யுடைமையாகவும் அடிமையாகவும் கொண்டு ஒன்றாய் வேறாய் உடனாய் நின்று நடத்தும் இறைவன்" என்பதிலுள்ள ஆபாசத்தையுமெடுத்து விகசிதப்படுத்துவாம். அவரது கடவுள் அபரிபூரணராயும், கண்டராயும், அவ்வியாபகராயுமிருப்பதால் அவருக்குப் பின்னமாக வுயிரணுக்களை உடைமையாகவும், அடிமையாகவுங் கொள்வது முறைமையே. இத்துடனே யொன்றாய் என்று சொல்வது பொருத்தமுறாது, சிவமும் உயிரும் வேறு வேறெனச் சொல்வது அவரது சித்தாந்தமாகலின் அதற்கு மாறுபட்டு ஒன்றா யென்பது பொருந்தாது. ஒன்றாயென்று சொன்னதோடு வேறாயென்றுஞ் சொல்வது பெரும் பிழையாம். ஒன்றும் வேறும். உடம்பா டெதிர்மறைகள். ஒன்றுக்கு மற்றொன்று உடம்பாடாகவேனும் எதிர்மறையாக வேனும் இருக்க வேண்டுமே யன்றி இரண்டுமாயிராது. இது உலகாநுபவ விரோதம். படமும் கடமும் வேறு;

படமும் அதன் வெண்மையும ஒன்று. படமுங் கடமும் ஒன்றாகா; படமும் அதன் வெண்மையும் வேறாகா. இந்த நியாயப்பிரகாரம் சிவமும் உயிரும் ஒன்றா? வேறா? ஒன்றாயின் வேறென்று சொல்லப்படாது. வேறாயின் ஒன்றென்று சொல்லப்படாது. இங்ஙனமாக ஒன்றும் வேறு மென்று சொல்வது இருளும் ஒளியுமுள்ள சூரியன் என்று சொல்வதற்கொப்பாகும்.

'இறைவன் சூக்குமசித்தாகலின் அவத்தையிற் றொடக்குண்ணாது நிர்விகாரி யாய் விளங்குகின்றான்' என்பதும் ஆபாசமேயாம். 'இறைவனுக்கு உயிரை வேறாக வைத்து அவத்தையிற்றொடக்குண்ணாது என்கின்றாரா? ஒன்றாய் வைத்து அவத்தையிற் றொடக்குண்ணாதென்கின்றாறா? வேறாய் வைத்து என்னின் அப்போது இறைவன் அபரிபூரணமாகின்றார். ஒன்றாய் வைத்து என்னின் பரமான்மாவும் ஜீவான்மாவும் ஒன்றாகும் போது ஜீவனுக்குவரும் துன்பங்க ளெல்லாம் இறைவனுக்கும் வருமாகலின் அப்போது இறைவன் தொடக்குண்ணா னென்பது வெற்றுரையாகமுடியும்.

## சுக்கிரன் அத்துவிதஞானத்தையும் சிவபத்தியையும் உபதேசித்தது.

இனி அர்க்கோணவீரபத்திர மூர்த்தியைப்பற்றிப் பேசுவாம்.

“ஆயின் மாயை அவித்தைகளின் பிரதிபிம்பஞானப் பிரசங்கம் சூதசங்கிதை யிற் கேட்கப்பட்டவாறு என்னையெனின், கீழிட்ட அதிகாரிகளுக்குப் பிரயோசனப் படவேண்டி யென்றறிக. இதற்கு நிதர்சனம் சூரபதுமன் முதலினோர்க்குச் சுக்கிர பகவான் இந்த ஞானத்தையே தேவர்களைக் கொல்லுவித்தற்பொருட் டுபதேசித்ததாய் ஸ்காந்தங் கூறுவது கொண்ட றியலாமென்க" என்கிறார். இது இவர் வாய்ச் சொல்லா? இதற்கேதேனும் பிரமாணமுண்டா? சாக்ஷாத் துரிய பரசிவப் பிரமம் மாயை அவித்தைகளில் பிரதிபிம்பிக்கிறதென்பது கீழிட்ட அதிகாரிகளுக் கென்பதற்கும், கொலை செய்வதற்கேதுவென்பதற்கும் வேதமுதலிய பதினான்கு வித்தைகளிற் பிரமாணம் வேண்டும். வாதிப்பிரதிவாதிகள் பிரமாணங்கட்குக் கட்டுப்பட வேண்டியவர்கள் பிரமாணத்துக்கு மீறித் தமதிஷ்டம் போல் பேசுவது கூடாது. அப்படிப் பேசுவார்களேயானால் அவர்கள் வேதபாஹியராவார்கள். சங்கராசாரியார், நீலகண்டசிவாசாரியார், இராமாநுஜாசாரியார், மத்துவாசாரியார் முதலியவர்கள் பதினான்கு வித்தைக்குங் கட்டுப்பட்டுப் பேசினார்களே யன்றித்தான் றோன்றித் தம்பிரானாய்ப் பேசினார்களில்லை. மாயை அவித்தைகளில் பிரதிபிமபிப் பது கீழிட்ட அதிகாரிகளுக்கானால் அப்படிப் பிரதி பிம்பிக்காதது மேலிட்ட அதிகாரி களுக்காகவேண்டும். வேத முதலிய எந்த நூல்களிலும் இந்தப்பேதங் கூறவே யில்லை. உலக சிருட்டி கூறும் நூல்களில் மாயையில் ஈசன் பிரதி பிம்பமென்றும் அவித்தையில் ஜீவன் பிரதி பிம்பமென்றும் கூறுகின்றனவேயன்றி, பூர்வ பக்ஷியார் கூறுகிறபடி அதை யிருவகைப்படுத்திக் கூறவில்லை. இந்த விஷயத்தில் அதிகாரி தாரதம்மியமிருக்கவேண்டிய ஆவசியகமுமில்லை. இது வீண் பொய்ம்மொழியே யன்றி இதில் விஷயமொன்றுமில்லை. மாயை அவித்தைகளை விட்டு ஜீவேசர்க ளில்லையென்பதே வேதசாஸ்திர நிச்சயம். உலக சிருட்டி அத்துவிதிகளுக்கு ஒரு

மாதிரியும், துவிதிகளுக்கு ஒரு மாதிரியுமா? இது எந்தவுலக சாஸ்திரமோ அறியோம். இவர், தம்மை வேதசாஸ்திர பாகியரென்பதற்குப் பதிலாக, அப்படிச் சொல்பவரைக்கீழிட்ட அதிகாரியென்கிறார். இது தான் இவருடைய வாக்கியத்தின் பொருள். வேதாதிகட்குக் கட்டுப்பட்டு ஈசன் மாயாப் பிரதிபிம்பரென்றும் ஜீவன் அவித்தியாப் பிரதிபிம்பனென்றும் சொல்பவர் கீழிட்ட அதிகாரிகளானால், கட்டுப் படாது தான்றோன்றித் தம்பிரானாய் வாயில் வந்தபடி பேசுகிறவர் எவ்வித அதிகாரி யாவர்? மாயை அவித்தைகளின் பிரதி பிம்பஞானப் பிரசங்கத்தைச் சூரபதுமன் முதலினோர்க்குச் சுக்கிரன் உபதேசித்துத் தேவர்களைக் கொல்வித்ததாய் ஸ்காந்தங் கூறுகின்றதென்கிறா ரன்றோ? இதில் இவருடைய அறியாமை மிகுதி விளங்குகின்ற தேயன்றி மற்றப்படி அந்நூலில் ஏதுந் தோஷங் காணப்படவில்லை.

மகாஸ்காந்தம் சங்கிரசங்கிதை ஆசுரகாண்டம் 3-வது அத்தியாயத்தில் சுக்கிரன் சூரபத்துமனை யழைத்துச் சொல்வதாவது: -

## சம்ஸ்கிருதமொழிபெயர்ப்பு.

கேளீர் ராஜனே! ஸ்ரீபரமேசுவரனோவென்றால் கேவலம் மாயையைக் கொண்டே வானமுதலியவற்றைப் படைத்தனர்.

அதேவிதமாகக் கேவலம் லீலையை மட்டில் பிரயோசனமாகக் கொண்டவராகித் தமது பரமாத்துமாவினுடைய அமிசத்தைப் பிரிவினைசெய்து சரீரத்தோடும் இந்திரியங்களோடுங் கூடியவராக அவரே ஜீவாத்துமாக்களாக விளங்கி வருகிறார். (36)

குடத்துக்குள்ளிருக்கும் ஆகாயமானது அக்குடமுடைந்தவுடனே ஒரே பேராகா யத்தோடு சேர்ந்துவிடுவதுபோல் ஒருவருடைய தேகத்துக்கு லயம் நேரிட்டவுடன் அத்தேகத்தைப் பற்றியிருந்த ஜீவாத்துமாவானது ஒரே பரமாத்துமாவாகிய ஸ்ரீமகேச்சுரனோடு சேர்ந்து விடுவதாகும். (37)

ஆகையால் புண்ணியமென்பதும் பாவமென்பதும் வெறும் பொய்யே. மோக்ஷ மென்பதும் இவ்வாறுதான், ஆகையால் நீர் செய்யத்தக்கது யாதென்றால் உம்முடைய ஆத்துமாவைச் சாக்ஷாத் பரப்ரம்ம சொருபமாகவே. (38)

நினைத்து மனச்சோகத்தைவிட்டு அதன்மேல் விஷ்ணு பிரமன் முதலிய தேவர்களை முற்றும் விலக்கித் தகராகாச மத்தியில் விளங்கிய ஸ்ரீபரமசிவனை மனதில் தியானித்து. (39)

இந்திரன் முதலிய தேவர்களை மிகுந்த பயத்தினால் கதிகலங்க நடுங்க அடித்து அவர்களுடைய பதவியில் மகா பராக்கிரம சாலிகளான அசுரர்களை ஸ்தாபிக்கலாவீர். (40)

மேலும் சத்துருக்களிடத்துக் கொலை, காதல், புரட்டு, திருட்டு, பகை இவை முதலியவற்றைச் செய்யலாவீர். (41)

இவை நேரே சமஸ்கிருத மொழிபெயர்ப்பு. தமிழ்க் கந்தபுராணச் செய்யுளில் சமஸ்கிருதத்திலில்லாத அனேக பாடல்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அவை மூலத்தில் இல்லாத அப்பிரமாணமாதலால் சமஸ்கிருதத்தி லுள்ளதைக்கொண்டே பேசுவாம். ஷெ வாக்கியங்கள் மற்றச்சுருதியாதிகளுக்கு விரோதமில்லாமையால் பிரமாணமேயாம். அவ்வாறு விரோதமில்லாமையைக் காட்டுகின்றோம்.

35-வது சுலோகத்தில் கூறியது போல இதரப்பிரமாணமுங் கூறுகின்றது.

## சூதசங்கிதை விசேடசிருட்டி.

*கருத்தாவாய பரசிவன்றன்மாயையொடுவேற்றக்கலப்புற்*
*றிருப்பானெனினும்பூருவகற்பத்தினியைவாசனையானுங்*
*கருச்சாய்த்துயர்ந்தீர்செறிகாலகருமவனுகுணமதாயுந்*
*தருக்காநின்றமாயைக்குந்தனக்கும்பேதங்கற்பிப்பான்.* (2)

*அறையாநிற்குங்கற்பிதமானதுவாத்துவமல்லாமையாற்*
*குறைதீர்ந்தீர்கற்பிதபேதங்கூறபேதம்பாதியாதியா*
*திறைபின்பூருவேட்சணவாசனையாலீட்சிதாவுமாய்*
*மறைதன்மாயையொடுகூடிமாயாகுணபேதங்களால்.* (3)

*திரிமூர்த்திகளைப்படைத்தவர்க்குந்திகழந்தரியாமியாயிருப்பான்*
*றுரிசிலவரும்பரதத்துவவபேதத்தான்முத்தொழில்செய்வார்*
*உரியவிசேடரூபத்தொவ்வொருவரொவ்வோர்காரியத்தைப்*
*பிரியமருவச்செய்வார்கள்பேணியுணர்மின்மாதவத்தீர்.* (4)

## சுக்கிலயசுர்வேதம் நிராலம்போபநிஷத்

2. ஈசுவரன்யார்? அவருடைய இலக்ஷணம்யாது? பிரமமேதன்னுடைய சக்தியாகிற பிரகிருதியினாலே (ஈசுவரன் என்கிற) பெயரைவகித்து உலகங்களைச் சிருஷ்டித்து (அதிலே) அந்தர்யாமியாய்ப் பிரவேசித்துப் பிரம்மா முதலானவர் களுடைய புத்தி இந்திரியங்களுக்கு நியாமகனா யிருப்பதினாலே ஈசுவரனாகிறான்.

மாயையின்றி யுலகைப் படைக்கமுடியாதலாலும் மாயையைக் கொண்டே யுல்கைச்சிருட்டித்ததாய்ச் சுருதியாதிகள் கூறுவதாலும் அதிற் குற்ற மேதுமில்லை. இது பூர்வபக்ஷிக்கு முடம்பாடேயாம். உடம்பாடாயினும் அத்வைதிகளுக்கு மாயை அநிர்வசனீயமும், பூர்வபக்ஷிகளான துவிதிகளுக்குச் சத்தியமுமாம். அநிர்வசனீய மென்று பலமுறை சுருதி யுக்தி அநுபவங்களைக்கொண்டு முன்னர்த் தாபித்தமை

யால் இப்போது இவ்விடத்தில் அதுவிஷயமாய்ப் பேசவேண்டிய ஆவசியகமின் றென்க.

36-வது சுலோகப்படி லீலையை மட்டில் பிரயோசனமாகக் கொண்ட துண்மையே லீலையென்பதன் பொருள் தனக்குப் பற்றில்லை யென்பதே. பரமசிவன் மதுரையில் அறுபத்துநான்கு திருவிளையாடல் செய்ததும் அங்ஙனமேயாம். பரமசிவன் லீலை செய்வதற்கு இதரப் பிரமாணங்கள்.

## பிரமகீதைகைவல்லியோபநிஷத்

*ஆதலால் அறிவாநந்தமாயுள்ள அமலனே அவைபுசிக்கின்றான்*
*ஈதெலாம்விளையாட்டேவிளையாடுமிடங்களேயிப்புரமூன்றும்.* (14)

## ஈசுரகீதை.

*எந்தப்பிராணிகளும்பசுக்களென்னப்படுமிங்கதிபதியான்*
*பந்தப்படுக்குமென் மாயாபாசமதனாற்பசுபதியாய்த்*
*தொந்திப்பதுவாமித்தொழிலென்விளையாட்டெனையன்றி*
*யிந்தப்பசுக்கள் கட்டுனர்களில்லையவிழ்ப்பார்களுமிலதால்.* (12)

தனது அமிசமே ஜீவாத்துமாவென்பதற்கு அடியில்வரும் இதர பிரமாணங் களும் சாக்ஷி கூறும்.

## இலிங்கபுராணம் பதிபசுபாசம்.

பதியாகியுறைபவனே மாயையெனும் பாசத்தாற் பசுக்களாகி. (5)

## சூதசங்கிதை பிரபஞ்ச ஆரோபம்.

*பரமான்மாவின்றனகண்ட சொரூபத்தினதன்சத்தியாலே*
*சுத்தசேதனஅசேதனவிபாகந்தொகுமாறுகற்பிக்கப் பட்டதாலோ.* (3)

அமிசமென்பது பொருளாகவன்று, தோற்றமாக, அதாவது அநிர்வசனீயமாக.

37-வது சுலோகத்தில் விதேகமுத்தியில் பிராரத்துவதேகம் நீங்கினவுடனே. ஏகமாய் விளங்குகின்ற விஷயத்தைப்பற்றிக் கூறுகின்றது. இதைப்பற்றி இப்புத்தகம் 2-வது பாகத்தில் 103-வது பக்கத்தில் "மகாவாக்கியம்" என்னும் விஷயத்தில் பேசப்பட்டிருக்கின்றமையான் ஆண்டுக் கண்டுகொள்க.

38-வது சுலோகப்படியே துவிதபேதமின்றி அத்துவிதமாய் விளங்கும் ஜீவன் முத்தர்க்குப் பாவ புண்ணிய மில்லையென்ப துண்மையே. பாவ புண்ணியங்கள் இருப்புவிலங்கு போன் விலங் கானதாலும் அவையுள்ளவரையில் பிரமஞான

முண்டாகாதாதலாலும் பிரமஞானிகளான ஜீவன் முத்தர்களுக்குப் பாவ புண்ணியங்கள் பொய்யும் பயனின்மையு மாம். இந்நிலைமையை அநுசரித்தே சீவான்மாவைச் சிவசொரூபமாக வுபதேசித்தனரென்க. ஜீவான்மா பரமான்மாவாய் விளங்கும் அத்வைத முத்தியில் திரிபுடியே யில்லாமையால் அவ்விடத்தில் பாவபுண்ணியங்க வில்லை. எங்கே திரிபுடியுண்டோ அங்கே சங்கற்பவிகற்ப முள்ளன எங்கே சங்கற்பவிகற்பங்க ளுளவோ அங்கே பாவபுண்ணியங்க ளுள்ளன. எங்கே பாவபுண்ணியங்க ளுளவோ அங்கே பந்த முண்டு. எங்கே பந்தமுண்டோ அங்கே பாவபுண்ணியங்க ளுள்ளனவால், பந்த மற்றும் சங்கற்ப விகற்ப மற்றும் திரிபுடி யற்றும் விளங்கும் துரியாதீத அத்வைக்ஞான நிலையில் பாவந்தானேது? புண்ணியந்தா னேது? இனி மோக்ஷவிஷயத்தைப்பற்றி, இப் புத்தகம் 2-வது பாகம் 118-வது 119-வது, 1.20-வது பக்கங்களிலுள்ள பந்த முத்தியென்னும் விஷயத்தில் காணலாம்.

39-வது சுலோகத்தில் பரமசிவனைத் தகராகாசமாகிய இருதய புண்டரீகத்தில் தியானிக்கச் சொல்லுகின்றார். முன் சுலோகத்தையும் இச்சுலோகத்தையும் அநுசரித்தால் ஜீவான்மா பரமான்மாவைத் தியானித்துப் பரமான்மாவாக விளங்கும் நிலையைச் சொல்லுகிறதாயாகிறது.

## பிரமகீதை சாந்தோக்கியம் ஏழாவது.

*புகலநின்றிடுபிரமபுரமெனும்பதியதனில்*
*தகரபுண்டரிகமெனுமகமிலங்கியதகர*
*ககனமுண்டதுமறைகள்கருதநின்றுளபிரம*
*மிகவிரும்புவர்பிறவிவிடவிரைந்துளவிமலர்.* (2)

*விதம்படுமுளந்தொறும்விசேடவறிவாயுற்*
*றிதம்படுதலாலிதயமென்பரிறைதன்னைத்*
*திதம்படவிவன்றிறமறிந்தவர்கள் சேரும்*
*பதம்பிரமமல்லதுபகர்ந்திடுதலுண்டோ.* (10)

*சுழுத்தியதனிற்றுயர்துவக்குமுடறன்னின்*
*றெழுப்பியுளதன்வடிவினாலிறையையெய்துற்*
*றழுத்தமுறயாவனதுவாகுமவனெங்கும்*
*முழுத்தியுளதற்பரமமாகிமுடிவுற்றான்.* (11)

இதற்குப்பின் 40-வது சுலோகங்களில் தேவர்களை யடிக்கவும், அவர்களது பதவியில் அசுரர்களை ஸ்தாபிக்கவும், சத்துருக்களிடத்தில் கொலை, காதல், பாட்டு, திருட்டு, பகை இவைதம்மைச் செய்யவுஞ் சொல்லுகின்றார். பகைவரிடத்தில் கொலை முதலியன செய்ய வேண்டுவது ஆவசியகமே. ஞானவான்களாயிருந்த விதுரர், வீஷ்மர், அசுவத்தாமா முதலிய அனேக ராஜாக்களும் அந்தணர்களும் பகைவர்களோடு யுத்தஞ் செய்ததாய்ப் புராணேதிகாசங்களில் சொல்லப்பட்டிருக்

கின்றது. யுத்தத்தில் கொலை முதலியன வின்றி யமையாமையெனல் கற்றுபலவர் அங்கீகரித்ததே. யுத்தத்தில் முதுகு காட்டாமலும், முன்வைத்த காலைப் பின் வாங்காமலும் யுத்தஞ்செய்து பகைவரைக் கொல்லுதல் குற்றமல்லவென்பது நூற்பிரமாணமே யாம். சுக்கிரன் வேதவேதாந்த சம்மதமான ஜீவான்ம பரமான்ம நிலையைப் பற்றிக்கூறும் தத்துவஞானத்தையும், அதற்குச் சாதகமாகப் பரசிவத் தியானத்தையும் போதித்து, பகைவர்களைக் கொலையாதி செய்யச் சொல்வதால், உலகபந்தத்தை யொழித்து, சிவசொரூபமாய் நின்று, பகைவரிடத்தில் கொலையாதி செய்யச் சொல்வதாய் ஏற்படுகின்றது. தத்துவஞானத்தையும் சிவத்தியானத்தையும் கைக்கொண்டு, பகைவரிடத்தில் யுத்தம்புரிந்து கொலையாதிகள் செய்தால் பாவம் அணுகாது. தத்துவஞானிகளும் பத்திமான்களும் செய்யுங் கொலையாதிகள் அவர்களைச்சாராவென்பதற்குத் திருத்தொண்டர் புராணமுதலியவைகளே சான்றாம். தத்துவஞானமும் சிவபத்தியுமில்லாமல் பகைவரைக்கொல்லவிருக்கும் சூரபத்மனைத் தத்துவஞானியாகவும், பத்தனாகவுஞ்செய்து கொலையாதிகள் செய்யச்சொல்வது நன்றேயாம். சுக்கிரனுக்கு நடந்ததும், நடக்கப்போகிறதும், சூரபத்மனுக்குப் பரமசிவன் வரங்கொடுத்ததும், வரத்தினால் அனேக காரியங்கள் நடக்கப்போகிறதும், சுப்பிரமணியக்கடவுளால் சூரபத்மன் ஜயிக்கப்பட்டு வலியிழந்து அக்கடவுளுக்கு மயில்வாகனமாகவும் கோழிக்கொடியாகவும் ஆகும் பாக்கியத்தைப் பெறப்போகிறதும், பிறகு தேவர்கள் சுகமாய் வாழப்போகிறதும், நந்திதேவர்கொடுத்த சாபப்பிரகாரம் சூரபத்துமனால் தேவர்கள் துன்பப்படப்போகிறதும் நன்றாய்த்தெரியு மானதினால் எது எது எப்படி எப்படி நடக்கவேண்டுமோ அது அதை அப்படி அப்படியே யுபதேசித்தார்.

சுக்கிரன் சுருதியுக்தமான தத்துவஞானமும், சிவத்தியானமும் உபதேசித்தமை காரணமாகச் சூரபத்மன் பகைவர்களைக் கொலை செய்தானென்றால் தத்துவஞானமும், சிவபத்தியும் கொலைக் கேதுவென்று சொல்லவேண்டும். அன்றிப் பூர்வபக்ஷியார் வாக்குப்படி அவை கீழிட்ட அதிகாரிகளுக் குரிமையாகும். உரிமையாகும் போது அவை மேலிட்ட அதிகாரிகளுக் குரிமையன்றாம்.

கொலையின் பொருட்டே தத்துவஞானமும் சிவபத்தியும், உபதேசிக்கப் பட்டனவென்று சொல்லின் அது பின்னும் பொருந்தாது; ஜீவகாருண்ணியம், பாசவைராக்கியம், ஈசுரபத்தி, பிரமஞானம் இவை முறையே யொன்றற்கொன்று மேலாகலினானும், எவர் கொலையினரோ அவர்க்கு ஜீவகாருண்ணியமே இராதாதலினானும், பிரமஞானத்துக்குச் சாதனமான விரதங்களில் கொல்லாமை சிறந்தகுணமா அருளுடைமை முதற்குணமாதலினானு மென்க. இவர் கூறுவது போலத் தத்துவஞானமும் சிவத்தியானமும் கொலை நூலாயினு மாகுக. கொலை நூல் கீழிட்ட அதிகாரிக்கு எங்ஙன முரியதாகும்? மனத் தூய்மையாம் பொருட்டு ஏற்பட்ட விரதங்களு ளொன்றான கொல்லாமை முதலிய பேரறத்தைப் பெற்ற புருஷன், முத்தியடைதற்கேற்ற சாதகநிலையி லிருப்பானேயன்றி, கொலை செய்யும் புருஷன் கீழிட்ட அதிகாரியாவனோ? இதில் முன்பின் முரணும், சாஸ்திர ஆராய்ச்சிக் குறைவு மிருப்பதால் பூர்வபக்ஷியாரின் வாக்கியம் அபண்டித வாக்கியமேயா மென்க.

தத்வஞானமும் சிவத்தியானமும் கீழிட்ட அதிகாரிகளுக் குரியன வென்பதற் குப் பிரமாணமென்னை? முத்திக்குச்சாதனம் தத்துவ ஞானமும் சிவத்தியானமுமா மெனவும், அவைதம்முள் தத்துவ ஞானம் நேர்சாதனமும் சிவத்தியானம் அதையடுத்த சாதனமுமா மெனவும் வேதாகமசாஸ்திரங்களெல்லாம் கோஷிக் கின்றனவேயன்றி, அவை கொலையெனவும், கீழிட்ட அதிகாரிகளுக் குரியனவென வும் சொல்ல வில்லையே. முத்தியில் துவிதமாய் விளங்குவது சாத்திய மெனவும், ஏகத்துவமாய் விளங்குவது சாதகமெனவுங்கொண்டு, சுக்கிரன். ஏகமான நிலைமையை யுபதேசித்தமையால் அதனைக் கீழிட்ட அதிகாரிகளுக்கெனச் சொல்லுகின்றாமெனின் இதுவும் பொருந்தாது. ஏனெனில் சுக்கிரன் அவ்வாறு சொல்லவில்லை; அன்றிச் சுருதியாதிகளும் அங்ஙனங் கூறவில்லை. இவர் மாயை அவித்தைகளின் பிரதி பிம்பஞானப்பிரசங்கங் கீழிட்ட அதிகாரிகளுக்கென்ச் சூதசங்கிதை கூறினதாய்க் கூறினதும் மற்றொருவிதமாக வுண்மைதான். எங்கே. மாயை அவித்தை பேதஞ் சொல்லுகிறதோ அங்கே ஈச ஜீவ பேத முண்டு. எங்கே ஈசஜீவபேதமுண்டோ அங்கே துவிதமுண்டு.

## சூதசங்கிதை பரமவிஞ்ஞானம்.

*முன்னுமவித்தையாற்பசுபேதமும்மொய்வலியமாயையால்*
*பன்னுபரதத்துவபேதமுங்கற்பிக்கப்பட்டது.* (6)

இந்தச் செய்யுளினால் ஈசஜீவபேதம் மாயை அவித்தையால் கற்பிக்கப்பட்ட மை காண்க. இந்தத்துவிதம் பூர்வபக்ஷமெனவும் அத்துவிதமே சித்தாந்தமெனவும் சுருதிமுடி வெனவும் ஷை சூதசங்கிதை வேதாவிரோத அத்தியாயத்தில் அடியில்வருஞ் செய்யுள்கள் விளக்கமாய்ச் சொல்லுகின்றன.

## சூதசங்கிதை வேதாவிரோதம்.

*அறையாரணஞ்சத்தியமானஅத்துவிதநற்பரமென்றும்*
*பறையாநின்றகற்பிக்கப்பட்டதுவிதபரமென்றுந்*
*துறையாரிரண்டாந்துவிதபிரபஞ்சங்காணப்படலானுங்*
*குறையாப்பரத்தாரோபிதமாய்க்குலவலானுங்கற்பிதமே.* (2)

*அத்துவிதக்குவேறோரதிட்டானமானவத்துவித*
*வத்துவில்லாமையினாலுமயக்கின்வருகற்பித்துவித*
*வத்துவிடத்தத்துவிதத்திற்காரோபிதம்வந்துளதாமென்*
*றொத்துமொழியக்கூடாமையாலுமுண்மையத்துவிதம்.* (3)

*அத்துவிதந்தான்சூனியத்திலாரோபிதமாயினதென்னி*
*லொத்தவச்சூனியந்தானிவ்விதசொரூபமுள்ளதென்று*
*சித்தமுறச்செப்பிடக்கூடாமையினாற்செப்புசூனியந்தான்*
*வைத்தவதிட்டானமதாகாததனாற்றகாதவ்வாறுரைத்தல்.* (4)

*ஆதலினாற்சத்தியவத்துவிதபரமாகியவாரணத்தினுக்குங்*
*காதலிற்கற்பித்துவிதபரமானமறையினுக்குங்காணுங்காலை*
*யோதுபிரதீதியினால்விரோதமேயுளதாகத்தோன்றினாலு*
*மேதகுநற்பரமார்த்தத்தவிரோதமென்றுணர்வீர்மேன்மைமீக்கீர்.* (5)

*அத்துவிதக்காட்சிமுனைம்பிரமாணக்ககோசரமாதலினானுமந்த*
*வத்துவிதஞானமுக்கியப்பிரயோசனமாதலானுமந்த*
*வத்துவிதவத்துவிடம்பிரமாணம்பலவுளுமுத்தமமாம்வேத*
*மத்துவிதப்பெரியீர்முக்கியப்பிரமாணமதாகியமருமாலோ.* (6)

*துவிதமறையளவையிச்சியாதுதொகுகாட்சிமுதலளவைகட்குத்*
*தவிர்தலில்கோசரமாய்முக்கியப்பயனிலாததாய்த்தங்கலாலே*
*யவிர்மறைமுக்கியவளவையன்றுதுவிதத்திற்காயினுமவ்வேதங்*
*துவிதத்தையனுவாதமுன்புசெய்தத்துவிதமேசொல்லுமீற்றில்.* (7)

*மிருதிபுராணஞ்சைவாகமந்தருக்கம்பாரதமுன்விளம்புநூல்கள்*
*கருதுறுமத்துவிதபரமேயுரைக்கும்சிலசுருதிகடியஞ்ஞானப்*
*பெருநிவிர்த்திமூலமாகவும்பேசுசிலசுருதிபிறங்காநிற்கு*
*மொருவில்விதிமூலமாகவுமத்துவிதப்பொருளையுரைக்குமாலோ.* (8)

ஷை செய்யுள்களினால் துவிதங் கற்பிதமென்றும், அது கீழிட்ட அதிகாரிகளுக் கென்றும், அத்துவிதம் உண்மையென்றும், அது மேலிட்ட அதிகாரிகளுக்கென்றும் இருகக்ஷியாரும் பொதுவாய் அங்கீகரிக்கக் கடமைப்பட்டிருக்கும் வேதமுதலிய பதினான்கு வித்தைகளி லொன்றான மகா புராணங்களுக்குட்பட்ட மகாஸ்காந்தத்தி லொரு கூறென்று சொல்லப்படும் சூதசங்கிதை தெளிவாய்க் கூறுகின்றது. இதை யனுசரித்தே மற்றொரு சங்கிதையான சங்கர சங்கிதையிலும் சுக்கிரன் சூரபத்தும னுக்கு உபதேசித்தார். இங்ஙனமாக அதைக் கொலை நூலென விகழ்வதென்கொண் டோ!

சங்கரசங்கிதை கொலை நூலானால் திருத்தொண்டர்புராணமும் மற்ற மகாபுராண இதிகாசங்களும் கொலை நூல்களாகத் தடையென்ன? இயற்பகை நாயனார் சுற்றத்தாரை வெட்டிக்கொன்றார்; எறிபத்தராயனார் யானையின் துதிக்கையை அறுத்து ஐந்து பாகராதியரைக்கொன்றார்; சண்டேசர் பிதாவின் காலை வெட்டினார்; புகழ்ச்சோழனார் திறைகொணராத அதிகனது சேனையைக்கொன்றார்; செருத்துணை நாயனார் கழற்சிங்கரது மனைவியின் மூக்கையரிந்தார்; கோட்புலி நாயனார் பகைவரைக் கொன்றதுமல்லாமல் தாய்தந்தையுடன் பிறந்தார் மனைவி பணிவிடைக்காரர் குழந்தை இவர்களைக்கொன்றார்; சிறுத்தொண்டர் தம் பிள்ளை யைக் கொன்றார்; அதிபத்தர் தினந்தோறும் அனேகமீன்களைக் கொன்றார்; கண்ணப்பர் மிருகங்களைக்கொன்றார்.

பூர்வபக்ஷியார் கொள்கைப்படி திருத்தொண்டர் புராணம் கொலைப்புராணமும், ஜீவகாருணியத்தைத் தவிர்க்கும் புராணமுமாக வேண்டும். இதுமாத்திரமா?

பரமசிவன் பிரமதேவனது சிரத்தைக் கொய்ததும், காமனையெரித்ததும், கூற்றுவ னைக்கொன்றதும், திரிபுரரை யெரித்ததும், யானையைக்கொன்று அதன்றோலைப் போர்த்ததும், புலியைக்கொன்று அதன்றோலைத் தரித்ததும், கைலைமலையில் இராவணனை அழுத்தியதும், சூரியன் பல்லையுடைத்ததும், சுப்பிரமணியர் சூரபத்துமனது அசுரகோடிகளைக் கொன்றதும், இன்னும் விநாயகர், பார்வதி, விஷ்ணு, பலரிஷிகள், பத்தர்கள் முதலாயினோர் அப்போதப்போது பலரைக் கொன்றதும், சாபங்கொடுத்ததும் கொலையும் இமிசையு மல்லவா? அவைகளைப் பற்றிச் சொல்லும் புராணம் இதிகாச முதலியவைகளெல்லாம் கொலை நூல்க ளல்லவா? அவ்வாறு கொலை செய்த பரமசிவன் முதலியவர்களைக் கொலையாளி களென்றும் ஜீவகாருணிய மில்லாதவர்களென் றுந்தானே சொல்லவேண்டும். இது மிக ஆக்ஷேபமாயிருப்பதால் இதற்குச் சமாதானஞ் சொல்லும்படி யெவரோ இவரைக் கேட்டிருக்க வேண்டும். அதற்குச் சமாதானஞ் சொல்லத் தெரியாமல் குரங்கெறிவிளாங்காய்க் கதையாய் அத்வைதிகளைக் கேட்கிறார். அதை நேரே கேட்டால் திருத்தொண்டர் புராணத்தையும் மற்றப் புராணேதிகாசங்களையும் இயற்பகைநாயனார் முதலிய பத்தர்களையும், மகாரிஷிகளையும், பரமசிவன், பார்வதி, சுப்பிரமணியர், விநாயகர், விஷ்ணு, பிரமன் முதலானவர்களையும் தூஷி த்ததாய் முடியுமெனத் தந்திரமாய்ச் சுக்கிரன் சூரபத்துமனுக் குபதேசித்த கதையின் மேல்வைத்துக் குற்றங்கூறி ஆக்ஷேபிக்கின்றார். இதனால் வேதபுராணாதிகளின் பேரிலும் பரமசிவனாதியோர் பேரிலும் ரிஷிகள் பத்தர்கள் பேரிலும் வைத்திருக்கும் நம்பிக்கையும் பத்தியும் சிரத்தையும் நன்கு வெளியாயின.

சூரபத்மன் தேவர்களைத் துன்பஞ் செய்தமைக்குக் காரணம் சூரபத்ம னன்று. சூரபத்மன் துணைக்காரணமா யிருந்தவனேயாம். ஏனெனின் பிரமதேவனது யாகத்தில் நந்திதேவர் அவ்வாறு சாபங் கொடுத்திருக்கிறார்.

## சங்கரசங்கிதை சிவரகசியகண்டம் தக்ஷகாண்டம் 9-ம் அத்தியாயம்.

*உன்றனருகில் எந்தத் துராத்மாக்கள் (தேவர்கள்) இருக்கின்றார்களோ* (52)

*அவர்களது தலைகளெல்லாம்உன்றன்யாகத்தில்வெட்டுப்படலாகிஅத்துஷ்டர் களெல்லாம்சூரபத்துமனால்எப்போதுந்துன்பமளிக்கப்படக்கடவார்கள்.* (53)

இந்தச்சாபத்தைச் சூரபத்மன் நிறைவேற்ற வந்தவனேயன்றி மற்றப்படி யல்ல. சூரபத்துமன் கொலைக்கேதுவாகத் தத்துவஞானமும் சிவத்தியானமும் உபதேசிக்கப் பெற்ற துண்மையாயின், அவன் கொலையாளியே யாகவேண்டும். அப்படிப்பட்ட கொலையாளிக்குத்தானா மயில்வாகனமும் கோழிக்கொடியுமான பெரும்பாக்கியத் தைச் சுப்பிரமணியக்கடவுள் கடாக்ஷித்தது? அப்படிப்பட்ட கொலையாளியைத் தானா சுப்பிரமணியசுவாமியின் சந்நிதானத்துக்கெதிரில் மயிலாக் வைத்திருக்கின்றார்கள்? அப்படிப்பட்ட கொலையாளியைத்தானா சுப்பிரமணியக்கட்வுளுக்கு மயில்வாகன மாக ரூபா ஐயாயிரம் பதினாயிரஞ் செலவழித்துச் செய்துவைப்பது? அப்படிப்பட்ட

கொலையாளியைத்தானா மயில் விருத்தமென அருணகிரிநாதர் பாடித் துதி செய்தது? அப்படிப்பட்ட கொலையாளியைத்தானா புத்தகங்களிலும் பத்திரிகைக ளிலும் மிகுபத்தியோடு மயில் உருவமாகப் பதிப்பிப்பது? அப்படிப்பட்ட கொலை யாளியைத்தானா சுப்பிரமணியக்கடவுள் வாகனமாகக் கொள்ள வேண்டும்? கொலை செய்யாத வுத்தம புருஷர் யாரும் சுப்பிரமணியக்கடவுளுக்கு அகப்படவில்லையா? அப்படிப்பட்ட கொலையாளியான மயில்தானா பத்தர்களுடைய தொழுதலுக்கும் துதித்தலுக்கும் செய்யுட்களுக்கும் இரங்கி அருள் செய்வது? இதனாலேயெல்லாம் பூர்வபக்ஷியாரது கல்வியும் கேள்வியும் விவேகமும் நன்கு விளங்கினவன்றா? இனியேனும் இப்படிப்பட்ட துராக்ஷேபஞ்செய்தலையொழித்து, சுக்கிரனுபதேசித்த தத்துவஞானம் சிவபத்தி இவற்றின் காரணமாகவே சூரபத்மன், சுப்பிரமணியக் கடவுளுக்கு மயில் வாகனமாகவும் கோழிக் கொடியாகவு மிருக்கத்தக்க பேற்றைப் பெற்றானெனறும் அதனோடு தன்னை வணங்கும் பத்தர்களுக்கு அநுக்கிரகம் செய்யும் வல்லமையையும் பெற்றானென்றும் அறிந்து, இதுவரையில் சாஸ்திர விரோதமாய்க் கூறிய குற்றங்களையெல்லாம் பொறுத்து ரக்ஷிக்கும்படி, சுப்பிரமணி யக்கடவுளையும் சூரபத்மனான மயிலையும் வேண்டிக்கொண்டு நன்னெறியி லொழு குவாராக.

## கீதைகளெல்லாம் உபநிஷத்தின் பொருள்.

இதன்பேரில் "இந்தத் தாமஸ ஞானத்தினாலேயே அர்ஜுனன் தனது பந்துக் களையெல்லாம் கொன்று இறந்தானென்க" என்றனர். இவ்விடத்தில் பகவத்கீதை யைக் குற்றங்கூறி அதைத் தாமஸஞான மென்றும் கொலை நூலென்றுங் கூறின வரானார். இதனுண்மை பூர்வ பக்ஷியார்க்குப் புலப்படவில்லை. அதுபற்றியே அவருக்கு விபரீதபுத்தி யுண்டாயிற்றென்க. தன் பந்துக்களைப்பந்து வென்று பாராமல் கொன்றதினாலேயே அர்ச்சுனன் பாசவைராக்கியம் பெற்றவனானான். பாச வைராக்கியம் முமூட்சுகளுக் குண்டாகும் அரியகுணமாதலாலும், அது சத்துவ குணமாதலாலும் இவருடைய வாக்கியம் அசாஸ்திரீயமாய்க் கழிக்கப்பட்ட தென்க. பத்துக்களைக் கொல்வதினாலேயே அது தாமசகுண மாகாது. அதனுட்பத்தை யுணர்ந்தால் அவ்வாறு பேச விடந்தராது. இயற்பகைநாயனார் கோட்புலிநாயனார் இவர்கள் சுற்றத்தாரைக் கொன்றதும், சிறுத்தொண்டர் பிள்ளையைக் கொன்றதும் தாமஸகுணமாமா? அன்றிக் கொலையுமாமா? கொலைசெய்யப்பட்டவர்கள் பிறகு உயிர் பெற்றெழுந்தார்களென்னின் ஷை தொண்டர் சுற்றத்தாரையும் பிள்ளையையுங் கொல்லும்போது பின் உயிர்பெற்றெழுவார்களென்றா கொன்றார்கள்? அப்படியாவது கண்ணப்பரும் அதிபத்தரும் கொன்ற மிருகங்களும் மச்சங்களு முயிர் பெற்றெழுத னவா? இல்லையே. யுத்தத்திற் செய்யுங் கொலை, கொலையல்லவென்பது நூற்பிரமாணம். இயற்பகையார் முதலானோர் சுற்றத்தாரைக் கொன்றதோ யுத்தத்தி லன்று. கொல்லப்பட்டவர்கள் யுத்தசன்னத்தராய் இயற்பகையார் முதலானோர் முன்னர் வந்து நின்றார்களில்லை. இங்ஙனமாகவும் அவர்களைக் கொன்றார்கள். பகைவராய்நின்று ஆயுதங்களைக் கையிற் கொண்டு எதிர்க்காத சுற்றத்தாரையும் பால் மணம் மாறாக்குழந்தையையும் கொன்ற கொலையே கொலையாகாமற் போன போது, யுத்தத்திற்கே யாயத்தமாய்க் கைகளில் பற்பல ஆயுதங்களைக்கொண்டு

யுத்தகளத்தில் வந்துநின்ற பகைவரை அவர்கள் சம்மதத்தின்பேரில் யுத்தஞ்செய்து கொல்வதா கொலையாகப் போகிறது? யுத்தத்தில் பகைவரைக் கொல்லுவது அதருமமல்ல வென்றும், தருமந்தானெவும், வீரசொர்க்கமெனவும், பகைவரைக் கொல்லாது முதுகுகாட்டியோடுவது அதருமமெனவும், நரகமெனவும் நூல்கள் பேசுகின்றமையால் யுத்தத்தில்பகைவரைக்கொல்வது நியாயமும் தருமமும் நூலுடன் பாடும் வீரசொர்க்கமுமாமென்க. திரியோதனாதியர் பாண்டவர்க்குச் செய்த அக்கிரமங்கள் இவ்வளவென்று சொல்ல ஆகாதென்பது யாவரும் அறிந்த விஷயமே. அப்படிப்பட்ட பாபிகளோடு யுத்தஞ்செய்வதும் யுத்தத்தில் அவர்களைக் கொல்வதும் குற்றமாகா. மேலும் அச்சமயத்தில் பூ பாரங் கழிய வேண்டியது. அத்தியாவசியகம். அதனிமித்தமே கிருஷ்ணனும் அர்ச்சுனனும். அவதரித்தார்களென மகாபாரதமே கூறுகின்றது. பாரத யுத்தத்தின் முன்பின் தெரியாமலும் அந்த யுத்தத்தினானேர்ந்த பயனை யறியாமலும் வாயில் வந்தபடி பேசுவது குணமாகாது. கொலையெல்லாங் குற்ற மன்று. கொலையில் குணமு முண்டு; குற்றமுமுண்டு. இராசன் குற்றவாளியைக் கொல்வது குற்றமாகாது; குணமேயாம். மற்றவரில் ஒருவனைப் பிறிதொருவன் கொல்வது குணமாகாது; குற்றமே யாம்.

பகைவரோடு போர்புரிந்து அவர்களைக் கொல்வதற்கே தநுர்வேதமுதலிய யுத்த நூல்க ளேற்பட்டிருக்கின்றன. அதன்படி அரசர்கள் செய்வதில் குற்றமில்லை. பகைமேற் செல்லும் அரசர்க்குக் கொலை, காதல், புரட்டு, தந்திரம், சூது முதலியவைகள் அத்தியாவசியகமென்பதற்குப் பிரமாணம்.

## மனுதர்மசாத்திரம் 7-ம் அத்தியாயம் அரசன் செய்கை.

அவர்களுக்குள்ளே உயர்ந்தவனாயும் பண்டிதனாயு மிருக்கிற பிராமண மந்திரியோடு சத்துருவைச் சமாதானப்படுத்துவது, எதிர்ப்பது, சண்டைக்குப்போவது, சமயம் பார்ப்பது சமயம்பார்ப்பது, எதிரியின் சேனையைக்கலைப்பது, ஒருவனைத் தான் சரணமாக அடைவது இவ்வாறையும் யோசிக்கவேண்டியது. (58)

அந்தத் தூதன் சத்தருவினிடத்திற்குத் தான் மறைந்து கொண்டு போய், அவனபிப்பிராயம், செய்கை, அவன் சேனையினபிப்பிராயம், பலம், இச்சை இவை களையறியவேண்டியது. (67)

## ஷை ஷை யுத்ததருமம்.

யுத்தத்தில் ஒருவரை யொருவர் கொல்ல வேண்டுமென்று நினைத்துப் போர் செய்யும் போது புறங்கொடுக்காமல் சண்டை செய்து இறக்கிற அரசர்கள் சுவர்க்கத்தை யடைகிறார்கள். (89)

சத்துரு வதை செய்கிற அரசனுக்குப் பாபம் நேரிடாது. (98)

தன் வேவுகாரர்களால் சத்துரு சூதுமார்க்கங்களை யறியவேண்டியது. (104)

சத்துரு, தன்சூதையறியக்கூடாது. அவன் சூதைத் தான் அறியவேண்டியது. ஆமையானது சமயத்துக்குத் தக்கபடி தன் அவயவங்களை யடக்கிக் கொள்வது போல் அரசன் சதுரங்க சேனைகளையும் தனக்குள் அடக்கிக்கொண்டு தன்னபிப் பிராயத்தை வெளிவிடாம லிருக்கவேண்டியது. (105)

ஓட்டத்தைச் சுபாவமாகவுடைய தண்ணீரிலிருக்கிற மீன்களைக் கொக்குக ளானவை அதுவே ஞாபகமாயிருந்து பிடிக்கிறதுபோல, சத்துருஜய முதலான காரிய ங்களை யோசிக்கவேண்டியது., சிங்கமானது தன் வீரியத்தினால் பெரிதான தேக பலமுள்ள யானைகளைக் கொல்வதுபோல், பலமுள்ள சத்துருக்களையும் ஜயிக்க வேண்டும். இடையர்களால் காக்கப்பட்ட பசுக்களைச் செந்நாய் சமயம் பார்த்துப் பிடிக்கிறது போல், கோட்டைக்குளிருக்கிற சத்துருக்களையுங் கொல்லவேண்டும். காட்டில் வேடர்களினாற் சூழப்பட்ட முயலானது எழும்பியோடுகிறது போல் சத்துருக்களாற் சூழப்பட்ட தேசத்தினின்று அவர்களுக்குத் தெரியாமல் தான் வேறிட த்திற்குப் போய்விடவேண்டியது. (106)

## ஷை ஷை உபாயவிதி.

இந்தப்படி சத்துருஜயம் செய்கிறவனுக்கு யார் விரோதஞ் செய்வார்களோ, அவர்களைச் சாம தான பேத தண்ட வுபாயங்களினால் தனக்குச் சுவாதீனப் படுத்த வேண்டியது. (107)

## ஷை ஷை சந்திமுதலியவைகள்.

சண்டைக்குப் போதல் சத்துருவின் விசனகாலத்திற் றான் தனியாகச் சென்று எதிர்ப்பதென்றும், அவனுக்குப் பலமுள்ள போது தன்றோழனோடு சேர்ந்தெதிர்ப் பதென்றும் இரண்டுவிதமாம். (165)

சண்டைக்குவந்த சத்துருவை மறுபடி யோடவொட்டாமல் தகைய வேண்டியது. அவன்றேசத்து ஜனங்களைப் பீடிக்கவேண்டியது. புல், விறகு, தண்ணீர், சோறு முதலியவற்றையும் அவர்களுக்குதவாமற் கெடுக்க வேண்டியது. (165)

## குறள், காலமறிதல்.

*பகல்வெல்லுங்கூகையைக்காக்கையிகல்வெல்லும்*
*வேந்தர்க்குவேண்டும்பொழுது.* (1)

*பொள்ளெனஆங்கேபுறம்வேரார்காலம்பார்த்*
*துள்வேர்ப்பர்ஒள்ளியவர்.* (7)

*செறுநரைக்காணின்சுமக்கஇறுவரைக்*
*காணின்கிழக்காந்தலை.* (8)

*கொக்கொக்ககூம்பும்பருவத்துமற்றதன்*
*குத்தொக்கசீர்த்தவிடத்து.* (10)

## ஷை ஒற்றாடல்.

*துறந்தார் படிவத்தராகியிறந்தாராய்ந்*
*தென்செயினுஞ்சோர்வில் தொற்று.* (6)

## ஷை அமைச்சு.

*பிரித்தலும்பேணிக்கொளலும்பிரிந்தார்ப்*
*பொருத்தலும்வல்லதமைச்சு.* (3)

## ஷை பகைத்திறந்தெரிதல்.

*தன்றுணையின்றால்பகையிரண்டாற்றானொருவ*
*னின் றுணையாக் கொள்கவற்றினொன்று.* (5)

## ஷை படைச்செருக்கு.

*பேராண்மையென்பதறுகணொன்றுற்றக்கால்*
*ஊராண்மை மற்றதனெஃகு.* (3)

*விழுப்புண்படாதநாளெல்லாம்வழுக்கினுள்*
*வைக்குந்தன்னாளையெடுத்து.* (4)

*இழைத்ததிகவாமைசாவாரையாரே*
*பிழைத்ததொறுக்கிற்பவர்.* (9)

அரசர்கள் இப்படிப்பட்ட கொலையாதிகளைத் தங்களிடத்தில் அமைத்துக் கொள்ளாவிடில் தேசத்தில் கொலை, களவு, விபசாரம், பிறர்பொருள் வௌவல், உட்கலகம், அந்நிய அரசர்களது போராட்டம், கொள்ளை முதலிய தீமைகள் விருத்தியாகும். அப்போது தஷ்டர்கள் அபிவிருத்தியாய்ப் போவார்கள். துஷ்டர்களால் சிஷ்டர்களுக்குத் தீமையுண்டாம். அதனால் இலவுகிகவிருத்தியும், வைதிக விருத்தியும் குன்றிப்போம். அதனால் இகபரசுக மில்லாமற்போம்.

பகவத்கீதையானது உபநிஷத் சம்பந்தமான ஞானபாகமே யன்றிப் பிறிதன்று. அதன் பிரபாவம் பலரிஷிகளால் சொல்லப்பட்டிருக்கிறது. சாக்ஷாத் பரமசிவனே

பார்வதிக்கு ஷை பகவத்கீதையின் மான்மியத்தைச் சொல்லியிருக்கின்றார். அதனுண்மை பத்ம புராணம் பகவற்கீதா மான்மியத்தில் பதினெட்டு அத்தியாயமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. தவிரப் பரசிவன் றிருவாய் மலர்ந்த ஈசுரகீதையையே கிருஷ்ணன் அர்ச்சுனனுக் குபதேசித்தாரென்று,

## ஈசுரகீதை யோக அத்தியாயம்.

*நந்தகோபனன்மனையினில்மதலையாய் நடித்த நாரணன்குந்தி*
*மைந்தனாகியபார்த்தலுக்கருளினான்வழங்கினன்மான்றேர்மேல்.* (80)

இவ்விதமாய்க் கூறியிருக்கிறது. சிவபுராணமான வராக புராணத்தில் பகவத்கீதாமான்மியம் தொண்ணூறு சுலோகங்களால் சொல்லப்பட்டிருக்கின்றது. புராணங்களிலும் இதிகாசங்களிலுமுள்ள நூற்றுக்கணக்கான கீதைகளெல்லாம் அத்வைதத்தையே சொல்லுகின்றன. பிரமதேவன் தேவர்களுக்கு அத்வைதோப தேசஞ்செய்யும் போது பரமசிவன் எழுந்தருளிவந்து, இதுவே வேதார்த்தமெனச் சொன்னாரென்ற சங்கதி பிரம கீதை சாந்தோக்கிய உபநிஷத்தில் 124 வது செய்யுளில்,

*நானேமுழுதுமெனையொழியநாடிற்சிறிதும்வேறில்லை*
*யானபொருளையருமறைதானறையும்படியானதனாலும்*
*யானுமிசைத்தபடியாலுமிதுவேதிடமாயுளபொருடான்*
*ஊனமின்றிநான்முகத்தோனுரைத்ததுங்கட்குண்மையிதே.* (124)

என்று காணலாம். இவ்வளவு பெருமையுள்ள கீதையை அவ்வாறிகழ்ந்து பேசுவதற்குக் காரண மின்னதென யாம் கூறாமலே யறிஞர் அறிந்து கொள்வார்கள்.

“இவரிவ்வரிய ஞானத்தைக் கொண்டாடிய கீதைகளெல்லா மிதனைப் பிரதிபாதிக்கிறதென்று மெச்சினார். அஞ்சாமல் கொலைசெய்ய வுறுதி யு.தேசஞ் செய்யு ஞானமு மொருஞானமா? இந்த ஞானங் கொலையாளிகளுக்கே கொண்டாட்டத்தைப் பயந்து சாதுக்களுக்குக் குலைகடுங்கப்பண்ணு ஞானமாயின தறிக. இதனைத் தெளிந்த விவேகிகள் இந்த அவலக்ஷண ஞானம் சூதசங்கிதையிற் பெறப்பட்டது கொண்டே இதனை மதித்துத் துதியாரென்க” என்றனர். இவரே இதற்கு முன் “தாயுமானவரோ சூகசங்கிதையைத்தூஷிக்கமாட்டார். அவர் திருவடியை யாசிரயிக்கும் யாமும் சூகசங்கிதையைத் தூஷிக்கமாட்டோம்" என்று கூறினாரென இதன் முதற்பாகத்தில் 42-வது 43-வது பக்கங்களில் காட்டியிருக்கின்றோம். அப்படி அவ்விடத்தில் சொல்வி, இவ்விடத்தில் கிறிஸ்தவரைப்போ லிகழ்கின்றார். அவ்விட த்தில் வேதசாஸ்திர் பாஹியரென்றிகழ்ந்து தள்ளிவிடப்போகின்றார்களெனப் பயந்து, அவ்வாறு பேசினார். இவ்விடத்தில் வேதசாஸ்திரபாஹியராய்விடுவதே தமது வினையெனத்துணிந்து தூஷித்துவிட்டார். இப்படிப்பட்ட பாஹியரிடத்தில் நாம் என்ன பேசப்போகின்றோம்!

மகாஸ்காந்தம் சங்கரசங்கிதை சிவரகசியகண்டம் சம்பவகாண்டம் 2-வது அத்தியாயம் மொழிபெயர்ப்பு.

அப்போது மகாப்பிரபுவாகிய பரமசிவன், கெம்பீரவாக்கினால் சொன்னதாவது: - "வாரீர் விஷ்ணுப்பிரமர்களே! நீங்களிருவரும் உலகில் துவாபரயுகந்தோறும் வியாசராகவும் மனுவாகவும் அவதரித்து வேதசாஸ்திரங்களிரண்டையும் கலியுகத் தின்கண் அறிவீனர்களாயுள்ள மானிடர்கள் எளிதாய்க் கற்றறியும்படி பலவாறா யிருக்கிற அவைகளைச் சுருக்கமாய்ச் செய்து விடுவீர்கள். (வியாச ர்செய்தது புராணங்களும், வேதாந்த சூத்திரமும்; மனுசெய்தது மனுஸ்மிருதியாம்.) (18, 19)

பிராமணர்களுக்குத் தகுதியுள்ளவை சைவபுராணங்களேயாகும். ஆகிலும் ஸ்காந்தபுராணம் கேளீர் முனிவர்களே! சுகத்தைக்கொடுப்பதும் மேன்மையுள்ளதுமா யிருக்கிறது. சகல வேதாந்த ஸாரங்களையும் நன்கு விளக்கியது. (53, 54)

## சூதசங்கிதை புராணவரலாறு.

*ஆரணமுழுதுணர்ந்தவேதியனேயாயினும்சிவபுராணத்தின்*
*ஏரணிபொருளையுணர்ந்திலானாயினிலங்குமவ்வேதமற்றவனைத்*
*தாரணியிடத்துநம்மைலஞ்சிப்போன்றானிவனெனநனியஞ்சும்*
*பூரணமுறவாதலின்மறைப்பொருளைப்புராணத்தாற்றெரிதரல்வேண்டும்.*

*அறையுமெந்நூற்கும்மறைபிரதானமாகியபெரும்பிர்மாணம்*
*பொறைதருமிருதிபுராணங்களுப்புராணமற்றுள்ளசாத்திரங்க*
*ணிறைதருமறைக்குவிரோதமாகாதுநிகழ்த்திடுமனுகுணமாகி*
*யுறைதருமறைக்குவிரோதமாநூல்களொருவர்க்கும்பயன்படாதனவே.*

## கூர்மபுராணம் திருக்கலியாணம்.

*வேதநூல்களவற்றின்வழிவிராட்டாஞ்சுவாயம்பூமனுமன்*
*னோதுநூல்கள்வியாதமுனியுரைத்தநூல்களவற்றின்வழி*
*தீதிலருமாமறைக்கிழவர்செப்புநூல்களனைத்துமே*
*நீதிநூல்களிவற்றின்வழிநின்றோர்நெறிநின்றோரே.* (42)

இவ்வாறு எத்தனையோ சத்பிரமாணங்கள் முறையிடுகின்றன. ஆன்மாக்களு க்ஜீவிக்கும் பொருட்டுப் பரமசிவனா வருளப்பட்டபடி வியாசராலியற்றப்பட்டதும், சிவபுராணமாயுள்ளதும், பாசிவனது, மகிமையைச் சொல்லப்பட்டதும், வேதாந்த சாரமாயுள்ளதும், வேதப் பொருளை யுணர்த்தற்குக் கருவியாயுள்ளதும், வாதிப்பிரதிவாதிகள் கட்டுப்பட்டு அத்தியாவசியகமாய் ஒத்திக்கொள்ள வேண்டியதும், பதினான்குவித்தைகளு ளொன்றென்று சொல்லப்பட்டுடமான புராண னத்தை யிகழ்ந்த பிறகு இவராரியாதலெங்ஙனமோ? அத்வைதத்தை யுபதேசிப்பது சூதசங்கிதையொன்றுதானா? சகல வேதங்களும், சகல புராணங்களும், சகல கீதைகளும், சகல சாஸ்திரங்களுந்தான் உபதேசிக்கின்றன. கீதையில்லாத புராண

மொன் றுளதோ? கீதையை நிந்திக்கிறபோது சகல புராணங்களையும் நிந்தித்த வராகாரா? கீதைக்ளெல்லாம் வேதசாரப்பொருளை விளக்குவதாகையால் வேதத்தையே நிந்தித்தவரென்பதற் கியாது மைய மின்றென்க. வேதம் பசுநூல், மயக்கநூல், விபசாரநூல், உலக நூலெனப் பகிரங்கமாய் எழுதியும் பேசியும் பிரசங்கித்தும் வருவது இவர் சார்பினருக்கு இயற்கைக் குணமாதலாலும், அது ஜகத்பிரசித்தி யாதலாலும் இப்படிப்பட்ட வேத தூஷகரான வேதபாஹியரை அநாரிய ரென்று சொல்வது நியாய மேயாம்.

பாஞ்சராத்திரிகள் விஷ்ணுவுக்கு உத்கிருஷ்டஞ் சொல்லாமை காரணமாகச் சிவபுராணங்களைத் தாமஸபுராணங்களென இகழ்கின்றார்கள். துவித சிவாகமிகளோ துவிதத்திற்கு அநுகூலமில்லையெனவும் அத்வைதசாரமா யிருக்கின்றனவெனவுங் கொண்டு அவைகளை யகழ்கின்றார்கள். சிவபுராணங்களை யிகழ்வதில் பாஞ்சராத்தி ரிகளும் துவித்சிவாகமிகளும் ஒருதன்மையரா ருக்க, துவதசிவாகமிகள், தாங்களென்னமோ முறை கடவாதவர்கள் போலெண்ணி பாஞ்சராத்திரிகளைப் போய் இகழப்போகின்றார்கள். இது மாத்திரமா, இச்சிவாகமிகள், பாஞ்சராத்திரி களோடு பரத்துவவாதஞ்செய்யப்போம் போது இவர்கள் வேதத்தை வெகு கவுரவஞ் செய்வது போலவும் சிறந்த பிரமாணமாகக் கொள்ளுவது போலவுங்காட்டி, வேதத்தில் சிவன்தான் பரத்துவமெனப் பேசுகின்றார்கள். அத்வைதிகளிடத்தில் வாதஞ் செய்ய வரும்போதோ வேதம் பசு நூல், மயக்க நூல், உலக நூல், விபசரிக் கும் நூல், பலதெய்வங்களைப் பரத்துவமாய்ச் சொல்லும் நூல் என இகழ்கின்றார்கள். ஆதலால் இத்துவிதசிவாகமிகள் விலாங்கு மீனுக்கு ஒப்பாயிருப் பதோடு வேதபுராண பாகியர்களென்பதிலும் யாதும் ஐயமின்று. வேதபுராண பாகியர் அவற்றினை இகழ்வது சகஜமாகலின் அவ்விகழ்ச்சியை நாம் ஒரு பொருளாகக் கொள்ளா திருப்பதே யுக்தமாமென்க.

## சேதனா சேதனங்கள் சிவனுக்கு எப்படித் தநுவாகும்?

அரக்கோண வீரபத்திரமூர்த்தியார் "சேதனா சேதனங்கள் யாவும் சிவனாரது தநுவாதனோக்கிய வேதம் யாவும் பிரஹமமென்று கூறியதுணர்ந்தவர்கள் அவ்வேதம் அஹம் ப்ரஹமாஸ்மியென்று கூறியதை மதித்து எங்ஙனோ மாயாவர்த்தைச் சாதிக்க முந்துவார்கள்" என்கிறார். இதிலுமிவரது தெரியாமை யைக் காட்டுகின்றார். சிவனுக்குச் சேதனாசேதனம் தநுவானால், தநு பிரமமென்று சொல்லவேண்டுங்கொல்லோ? உயிராகிய நமக்கு அசேதன தநு இருக்கிறது. அதனால் தநுவை யுயிரென்று சொல்லவேண்டுமோ? இப்படிச் சொல்வதினால் இவர் உலோகாயுத நாஸ்திகராகின்றார். எங்ஙனென்னின் கூறுதும். உலோகாயுதநாஸ்திகர் உடலையே ஆத்துமாவென்கிறார்கள். இவரும் உடலை யுயிரென்று சொல்வதாய் ஏற்படுகின்றமையின் இவரும் உடலையே ஆத்துமாவென்று சொல்லுகின்றவரா கின்றார். நம்மாலியற்றப்பட்ட யானையின் உடலில் ஒருமனிதன் புகுந்து கொள்வா னேயாயின் அவ்யானையை மனிதனெனச் சொல்லலாமோ? மனிதனும் யானை யுடலும் வேறுவேறு பின்னப்பொருள்கள். அங்ஙனமே யுயிரும் உடலும் வேறுவேறு பின்னப்பொருள்கள். உடலைவிட்டு உயிர் வேறுபிரிந்து போவதோடு பிறிதோருட

லினுள்ளுஞ் செல்லுகின்றது. செல்லுவதனால் உடல் உயிராகாது. சிவனுக்குச் சேதனா சேதனங்கள் தநுவென்று சொல்லும் உபமேயத்துக்கு உயிரும் உடலும் உபமானம். உபமானத்தில் உயிருடலாவதில்லை; உடலுயிராவதில்லை. இந்தவுப மானப்படி சேதனாசேதனங்களான தது, சிவனாவதில்லை; சிவன், சேதனாசேதன வுடலாவதில்லை. அங்ஙனமாகச் சேதனாசேதனவுலகைப் பிரமமென் றெங்ஙனம் சொல்லலாம்? திருட்டாந்தத்தில் உயிர் ஒரு சத்துப்பொருள்; உடல் ஒரு சத்துப் பொருள். இரண்டும் சத்தாயிருப்பதால் ஒன்றிருந்தவிடத்தில் மற்றொன்றிரா. இவ்வாறே யானையுடலும் அதனுட்புகுந்த மனிதனுமாம். இந்தத் திருட்டாந்தங் களின்படி நோக்கினால் சிவனும் சேதனாசேதனவுடலும் சத்துப்பொருள்களாய்ச் சிவன் அபரிபூரணப் பொருளாகின்றனர். சேதனாசேதனவுலகு சத்தென்பதும், சிவன் அபரிபூரணரென்பதும் வேதசாஸ்திர விரோதமெனப் பன்முறை பிரமாணங்கள் காட்டப்பட்டிருக்கின்றன. இது தவிரச் சேதனாசேதனவுலகு சிவனிடத்தினின்றும் தோன்றி இருந்து இலயமாகின்றதெனவும் இப்புத்தகம் 125-வது 126-வது பக்கங்களில் சுருதியாதிப் பிரமாணங்கள் காட்டப்பட்டிருக்கின்றன. அதனோடு அநேகமுறை யுக்தி அநுபவங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. இதனால் சிவன். காரணமும், சேதனா சேதனவுலகு காரியமுமாமென்பது துணிபு. காரணத்தையுன்றிக் காரியத்துக்குப் பொருளில்லையென்றபடி சிவனையன்றி யுலகிற்குப் பொருளில்லை. இது விஷயமாக முன் 109 முதல் 115-வது பக்கம் வரையில் பிரமாணங்களோடு எழுதப்பட்டிருக்கின்றமையின் ஆண்டுத் தெளிந்திடுக. இதன்படியே உயிரையன்றி யுடலுக்குப் பொருளில்லையென்று சொல்லவேண்டும். ஆதலால் இவர் கூறியவாறு உபமானம் பொருந்தாது. சேதனாசேதன வுலகைச் சிவனுக்குத் தநுவாகச்சொல்லி. யிருக்கிறதேயெனின், இது ஏகதேச திருட்டாந்தம். உலகைச் சத்துப்போலியாக வைத்துச்சொன்னால் யாதொரு. ஆக்ஷேபமு மில்லை. இப்படிச் சொல்வதால் சிவனுக்குப் பூரணத்துவமுஞ் சித்திக்கிறது; உலகுக்கு ஒருவிதமாய் அதாவது அநிர்வசனீயமா யிருப்பும் ஏற்படுகின்றது. யாவும் பிரமமென்று சொல்வதற்கும் பொருத்தமாயிருக்கிறது. எங்ஙனெனில் மண்ணிலிருந்துண்டான கடம் சத்தன்று; சத் துப்போலி அநிர்வசனீயம்.. மண்ணிலிருந்துண்டான. கடமுதலியவற்றை நோக்கி, யிவையாவும் மண்ணேயென்று சொல்லின் குற்றமென்னை? அது போல் சிவனிடத்தினின்று முண்டான சேதனாசேதனவுலகப் பொருள்களை நோக்கி, இவையாவும் பிரமமேயென்று சொன்னால் குற்றமென்னை? சுருத யுக்தி அநுபவ முள்ள இவ்விரகசியத்தை யுணராமல் வாயில் வந்தபடியெல்லாஞ் சொல்லிவிட்டுக் கற்றவர் அவையில் அவமானப்பட்டு வேதபாஹியராகின்றார். இவர் சிவனுக்குச் சேதனாசேதனம் தநு எனச் சொல்லும் ஒரு பக்கத்தைப் பார்த்தாரேயன்றி, சிவன் பரிபூரணரென்றும், சேதனாசேதனவுலகு அசத்து அல்லது சத்துப்போலியென்றும் சொல்லும் பல பக்கங்களைப் பார்த்தாரில்லை. இவருக்கு முழுநேத்திரமில்லை, வீசம் அரைக்கால் நேத்திரந்தானிருக்கிறது. அதுபற்றியே உள்ள நேத்திரத்துக்குத் தக்கபடி புலப்படுகின்றது போலும், நிற்க; இவர்க்கபின்ன தோழரான சோமசுந்தர நாயகரும் சித்தாந்தரத்நாகரம் 5 வது பக்கத்தில் “உலகுயிர்களைச் சிவனுக்குத் திருமேனியென்றது ஔபசாரிகமேயாம்" என்றனர். ஆதலால் இவரது வாதம் உண்மையல்லாது. போகின்றதென்பதறிக.

## துவிதசைவமே புன்சுருட்டு வேதாந்தம்.

இதன்பேரில் "இவரது புன்சுருட்டுவேதாந்தமதத்தைப்பிரசந்ந பௌத்தமென்று பழித்த நூல் பாத்மோத்ரமென் றறிந்தடங்குவாராக" என்றார். உண்மையாய்ப் பாத்மோத்ரம் அவ்வாறு சொல்லின் அது இவர்மதத்தையே சொல்லியிருத்தல் வேண்டும். எங்ஙனென்னில் விளக்குவாம். புன்சுருட்டு வேதாந்தமென்பதனால் சரியான வேதாந்தமல்லவென் றாகின்றது. இப்பிரமவித்தையில் வந்து வாதிக்கும் அத்வைதிகள் சரியான வேதாந்தத்தை வாதிக்கின்றமையானும், ஒவ்வொன்றுக்கும் சுருதிப்பிரமாணங்கள் காட்டுகின்றமையானும் சுருதிப்படியே புராண இதிகாச ஆகமங்களும் வேதப்பொருள்களை விள் க்கும். தேவார - திருவாசகாதிகளும் காட்டுகின்றமையானும் எழுது வேதாந்தம் ஒருபோதும். புன்சுருட்டு வேதாந்தமா காது : பின்னைப் புன்சுருட்டுவேதாந்தம் யாருக்குச் சொந்தமெனின் இவருக்கேயாம். எவ்வாறெனின் இப்பூர்வபக்ஷியார் வேதம் பசுநூல், மோகநூல், உலகநூல், மோசடித்தைத் தராதநூல், விபசரிக்கும் நூல் எனப் பலவாறு சதாதூஷிப்பதாலும் வேதம். தமக்கு வேண்டாமென வெறுத்துக் கூறியிருப்பதாலும் இன்னும் இப்படிப்பட்ட பல காரணங்களால் வேதப் புறமதஸ்தராயினும் கிறிஸ்தவர் துலுக்கர் முதலானோரைப் போல தம்மை யொதுக்கிவிடப் போகிறார்களென்றஞ்சி, ஆகமத் தோடு, வேகத்தையுஞ் சேர்த்து வேதாகமம்.:, வேதாகமமென்று வேண்டா வெறுப்பாய்ச் சொல்லுவதாலும், வைணவரிடத்திற் பேசும்போது வேதத்தை வெகு பிரமாணத்தோடு, அங்கீகரிப்பது போல் புன்.சுருட்டுத்தனமாய்ப் பேசுவதரலும் இவாது வேதாந்தமே புன் புருட்டு வேதாந்தமென்பதற்கு யாது மையமின்றென்க.

## துவிதசைவமே பிரச்ந்ந பௌத்தம்.

பிரசந்ந பௌத்தமும் இவரது மதமேயாம். பிரசஙபௌத்தம் என்பதற்குப் பொருள் மறைவான பௌத்தமாம். இவரதுமதம் எப்படி மறைவான பௌத்தமெனின் பௌத்தர்க்குக் கடவுளில்லாமையால் அம்மதம் நாஸ்திகமதமாம். இவரதுமதமும் அங்ஙனமிருந்தும் ஆஸ்திகமதஸ்தர்போல் வேடம் பூண்டு பகடித்தனஞ் செய்வதால், இவரதுமதம் மறைவான நாஸ்திகமாம். அதனால் இவரதுமதம் பிரசந்நபௌத்த மென்பதற்கு யாது மையமின் றென்க. இவரது மதம் எங்ஙனம் நாஸ்திகமெனின் விளக்குதும்.

(1) "சங்கராசாரியர் அவதாரமகிமை" யில் 7-வது 8-வது பக்கங்களில் பேசிய காரணகாரியவாதத்தில் இவரது கடவுள் சடமாயும், அசத்தாயு முடிவதால் இவரது மதம் நாஸ்திகமதமாம்.

(2) "அத்வைத்துஷண பரிகார" த்தில் 20-வது பக்கத்தில் மறுத்த மறுப்பின்படி நீர்ஸ்தானத்தில் உயிரையும், நிழல்ஸ்தானத்தில் சிவனையும் இவரது சிவஞான சுவாமியார் சொல்வதால் சிவன் பொய்யாய் அதுகாரணமாக இவரதுமதம் நாஸ்திகமத்காம்.

(3) ஷை புத்தகம் 24-வது பக்கத்தில் மறுத்தபடி இவரது மத்த்தில் உயிர் பரிபூரணமாகலின் சிவனிருக்க விடமில்லாமற்போய், அது காரணமாகக் கடவு ளில்லை யென்று சொல்வதற்கிடமாய், இவரதுமதம் நாஸ்திகமதமாம்.

(4) ஷை புத்தகம் 50, 51, 52-வது பக்கம் வரையில் மறுத்தபடி ஒன்று பலவானால் ஒன்று கேட்டே பலவாக வேண்டுமெனச் சோமசுந்தரநாயகர் சொன்ன போது அங்ஙனமாயின் திருவிளையாடற்புபாணத்திற் கூறியவாறு, சிவன் பன்றியாங்கால் சிவன் கெட்டுத்தானே பன்றியாகவேண்டுமெனவும், பன்றி காரியமானதாலும் காரியம் அழிதல்மாலையதாதலாலும் பன்றி அன்றே யில்லாமற் போயிற்றாதலாலும், காரியமான பன்றி யில்லாமற் போயிற்றெனவும் சொல்லி, அது காரணமாகக் கடவுளில்லையென்று தீர்மானித்திருப்பதால் அதுகாரணமாகவும் இவரது மதம் நாஸ்திகதமாம்.

(5) ஷை புத்தகம் 82 வது முதல் 86 வது வரையில் கண்டித்தவண்ணம் நீர்ஸ்தானத்தில் உயிரையும் கடல்ஸ்தான்த்தில் சிவனையுஞ் சொல்வதால் நீரையின்றிக் கடலென்னுஞ்சொற்குப் பொருளில்லாமைபோல வுயிரையின்றிக் கடலென்னும் சொற்குப் பொருள் இல்லாமற்போகின்றது. அது காரணமாகவும் இவரதுமதம் நாஸ்திக்மசமரம்.

(6) பதிபசுபாசவாதத்தில் 34ம் பக்கத்தில் பழத்திற் சுவை வியாபித்த வுப்மானப்படியும் இவரதுமதம் நாஸ்திக்மதமாம்.

(7) ஷை புத்தகம் 37 ம் 33 ம் பக்கத்தில் பாலில் நெய்வியாபித்த வுபமானத்தில் மறுத்தவாறும் இவரதுமதம் நாஸ்திகமதமாம்.

(8) ஷை புத்தகம் 44, 45, 46 ம் பக்கங்களில் சூரியன், ஒளியில் வியாபித்த வுபமமானத்தில் கண்டித்தபடியும். இவரதுமதம் நாஸ்திகமதமாம்

'(9) சபாநிதிநாவலர் சிவம் அளவைகளான் அறியப்படல் வேண்டுமெனக் கூறியதை வேதாந்த சங்கை நிவாரணம் 42 முதல் 50வது பக்கவரையில் கண்டித்தபடி எது அளவைகளான அறியப்படுமோ அது சடமாயும் அசத்தாயும் போமாகலின், அது பற்றியும் அவரதுமதம் நாஸ்திகமதமாய் அவரைத் சார்ந்த இவரும் நாஸ்திகராய் அது காரணமாக இவரது மதமும் நாஸ்திகமதமாம்.

(10) இவர் பதி பசு பாசங்கள் தனித்தனிச் சத்துப்பொருள் எனக் கூறுகின்றமை யின் அதுபற்றி யிவரதுபதி, மூன்றிலொருபங்கு இடத்தைப் பெற்று அது கராணமாக இவரதுமதம் மூன்றிலொருபங்கு ஆஸ்திகமும், இரண்டுபங்கு நாஸ்திகமுமாய் முடிகின்றமையின் அது பற்றியும் இவரது மதம் நாஸ்திகமதமா மென்க (இவ்விஷயம் வேதாந்தசங்கை நிவாரணத்தின் கடைசியில் "ஆஸ்திக நாஸ்திகம்" என்னும் விஷயத்தில் தெளிவாய் விளக்கப்பட்டிருக்கின்றது.)

இவ்வாறு இன்னும் அனேக வகைகளில் இவரது மதம் நாஸ்திகமாகின்ற தாயினும், தாம் நாஸ்திகரென வுண்மையைச் சொல்லாமல் மறைந்துநின்று,

ஆஸ்திகர்போல வெளிகாட்டிக்கொண்டு வருகின்றமையின் இவாதுமதம் பிரசந்ந பௌத்தமும் அதை யனுசரிப்பதால் இவர் பிரசந்த பௌத்தருமாம். இப்படிப்பட்ட நாஸ்திகம் அணுவளவு கூடவில்லானமயால் அத்வைதிகள் பகிரங்க ஆஸ்திகராம்.

நிற்க; நமக்குப் பிரதிவாதியாய் நிற்கும் அரக்கோணவாசியாகிய வீரபத்திரமூர்த்தி, யாரென்று பார்க்கின் விஜயஹு கார்த்திகைமீ 18உ யிற் பிரசுரமான் காரைக்கால் திராவிடமந்திரி பத்திரிகை 187 வது இலக்கத்தின் முதற்காலத்தில் கோயமுத்தூர்ப் புளியோரைகண்டர் கூறியவாறு. சூளை. சோமசுந்தரநாய்கரெனத் தெரிகின்றது. இந்தச் சோமசுந்தரநாயகர், ஷை பாத்மோத்ரம் பொய்யென்றும், வைணவர்களால் கற்பித்தெழுதப்பட்டதென்றும் 1881ஹு மார்ச்சுமீ 31உ அச்சிடப்பட்ட "சித்தாந்தரத்தாகரம், சிவபாரம்யப்பிரதரிசிநி" யின் 72 வது 73-வது பக்கங்களில் எழுதியிருக்கின்றார். அதில் சமஸ்கிருத் பாத்மோத்தரமும், தமிழ்ப் பாத்மோத்தரமும் பொய்யென்று சொன்னதோடு, அதற்கு மறுப்பாகப் "பாத்மோத்தரரசாபாச தர்ப்பணம்" என்னும் நூலொன்றும் அப்போதே வெளிப்பட்ட தாகவுங்கூறுகின்றார். அதை யிதனடியில் எடுத்துக்காண்பிக்கின்றோம். ஆனால் அதில் சமஸ்கிருதத்திலிருந்து தமிழில் மொழிபெயர்த்த இராமாநுஜநாவலரை யேகவசனமாக விகழ்ந்து தூஷிக்கின்றார். அதை யவ்வாறே யெடுத்துப் பிரசுரிப்பதில் அந்தத் தூஷணையு மப்படியே யிருக்கும். அதற்காக எவரும் எமது பேரில் மனஸ்தாபப்படாதிருக்கக் கேட்டுக்கொள்ளுகின்றோம்.

## சித்தாந்தரத்நாகரம், சிவபாரம்யப்பிரதரிசிநி.

"எப்படிப் பாகவதம் அப்பிரமாணமென வேர்ப்பட்டதோ, அப்படியே விஷ்ணு பாத்மோத்தரமும் அப்பிரமாணமென்றதைக் காட்டுவாம். சில தினங்களுக்கு முன்னர்ப் புதுச்சேரியானொருத்தன் பாத்மோத்தரபுராணம் என்றொரு சுவடியைத் தமிழில் பத்தியரூபமாக வெளியிட்டனன். அவன் புத்தகத்துக்குப் போரிட்ட புதுமையே அவன் புத்திவிசாலத்தைக் காட்டும். அவ்வவலட்சணத்திரட்டு மூலகிரந்தத்தின் மொழிபெயர்ப்பென வவன் கூறிய பிரமையால் சிலர் மயங்கினு மவன் கொட்டிய வவ்வளவு ஆபாசங்க ளம் மூலவழுத்திரட்டினும் பெறப்பட்ட தில்லை. அவ்வபண்டித சிரோமணிக்கு அப்போதே பிராயச்சித்தமாகப் (பாத்மோத்தரரசாபாச தர்ப்பணம்) என்னு நூலொன்று வெளிப்படுத்திச் சில முதியோர் சபேடிகை செய்ததே போதும். அவனுக்கு மூலமாயிருந்த கீர்வாண பாத்மோத்தரமுங் கல்பனாமாத்திர மென்பதைக் காட்டுவாம். பாத்மபுராணம் பூர்வம், உத்தரம் என்னு மிரண்டு பகுதியில் பாத்மபூர்வத்தில் முழுதும் சிவோத்கர்ஷ மஹிமாவர்நனமன்றி வேறில்லை. முக்கியாம்சங்கள் இராமனுக்கு விரஜாதீக்ஷை செய்வித்தலும், கீதாவுபதேசஞ் செய்தலுமாகியவைகளேயாம். இவைகளுக்கு நேர் விரோதமாய் உத்தரபாகத்தில் சிவநிந்தையே விஷயமாக வெப்படிப் பிரதிபாதிக்கும்? அனேகருக்கு அவ்விஷயத்தில் மயக்கமுண்டாகி, ஒருபாகம். சிவோத்கர்ஷமும், மற்றொருபாகம் சிவாபகாஷங் கூறுதல் யாண்டமையுமென்னும் பரியாலோசனையி லிருக்கையிலே தானே, அஷ்டாதபுராணங்களையு மிப்போதிச் சென்னையிலச்சிட்டு வரும் பண்டிதர் சிலர்க்கு மிதில் சமிசயம் நேரிட்டுப் பாத்மோத்ரம் யாம்

அச்சிடுவதற்கு வெளிதேசத்திலுள்ள பலருந் தங்கள் தங்கள் வசத்திலுள்ள பிரதி களை யெமக்குபகரிக்க வேண்டுமென்று அறிக்கை செய்தனர். அப்படியே பல விவேகிகள் அனுப்பிய பிரதிகளைப்பார்த்துழிச் சில விஷ்ணு சம்பந்தமுடைய னவாகிப் புளியோரை மாந்மியம், சூட்டுக்கோல் மாந்மிய முதலியவைகளைப் பிரதிபாதிப்பனவும், சில பிரதிகள் பூர்வ பாகத்துக்கு விரோதமில்லாமல் பாசிவமகிமைகளையே பிரதிபாதிப்பனவுமாகக் காணப்பட்டன. இதனால், பாத்ம புராணம் அடங்கலும் சிவபாரம்யமுடைய நூலெனவே துணியப்பட்டுப் பிரகிருதத் தில் பாஞ்சராத்திரிகள் கையாண்டு வரும் விஷ்ணுபாதமோத்தரம் அவாந்திரமாய்க் கற்பிக்கப்பட்டதொன்றா மென்பது நிச்சயிக்கப்படுகையால், அவ்வசங்கதாலங்கார பிர்க்ஷிப்தமாகிய பாத்மோத்தரத்தால் சிவன் விஷ்ணுபதியைத் தரித்தரரென்று கூறியது அநாதரணியமென்றே தவிர்க்கப்பட்டது."

கற்பிதபாத்மோத்ரம் அத்வைதிகளுக்கும் விரோதம்; இவருக்கும் விரோதம். இவர் வைணவரோடு வாதஞ்செய்யும்போது கற்பிதத்தைக் கற்பிதமென்று சொல்லுகிறார். அத்வைதிகளுடன் வாதஞ். செய்யும்போது அவர்களுக்கு விரோதமான பாகத்தைப் பிரமாண மெனக் காட்டி அதை மெய்யென்று சொல்லுகின்றார்.

இவரோடு சேர்ந்த ஸ்ரீ ஸத்யோஜாத சிவாசாரியார் என்பவர் 1894ஸூ ஆகஸ்டுமீ 5உ விவேகதிவாகரன் என்னும் பத்திரிகயில்

"பாத்மபுராணத்தில் பார்வதீமகாதேவ ஸம்வாதத்தில் "மாயாவாத மஸ்ச் சாஸ்திரம், ப்ரசன்னம் பௌத்தமேவச, மயைவகதிதந்தேவீ, லௌப்ராம்ஹண ரூபினா, அபார்த்தம் சுருதிவாக்கியானாம் கர்வ்யயம்லோக கர்ஹிதம், கர்ம ஸ்ய ரூபத்யாஜ்யத்வம், திரச்சபிரதிபாத்தியதே, ஸர்வகர்மபரிபிர்ம, சான்னைஷ்கர்மம் தரச்சோச்யதே, பராத்ம ஜீவயோனாக்கியம், மயாத்திர பிரதிபாத்தியதே, பிரமஹணோஸ்யபாம்ரூபம், கிற்குணத்தர் சிதம்மயா, ஸர்வஸ்யஜகதோப்யஸ்ய, நாசநார்த்தங்கலௌயுகே, வேதாந்தவன் மகாசாஸ்திரம், மாயாவாயத்தால் எது மறைவாய்ப் பௌத்தமதமே யாகின்றதோ அந்த மாயாவாத பிரச்சின்னபௌத்த மென்னுஞ் சாஸ்திரத்தை ஹேதேவீ! கலியுகத்தில் பிராமணரூபத்தால் நானே சொன்னேன். சுருதிவாக்கியங்களுடைய லோசநிந்தைக்குரிய பொய்யான அருத்தங்களை இந்த சாஸ்திரங்களில் காண்பித்துக் கருமங்களை விடும்படி இதில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. மேலும் எல்லாக் கர்மங்களின் நழுவுதலால் நைஷ்கர்மம் சோம்பல் சொல்லப்பட்டிருக்கிறது. பரமாத்மாஜீவாத்மாக்களின் ஏகிபாவத்தை நான் இதிற் சொல்லியிருக்கின்றேன். மேலும் இந்தப் பிரமத்தின் சிறந்த ரூபத்தை நான் நிற்குணமாகக் காட்டியிருக்கிறேன். கலியுகத்தில் எல்லாவுலகங்களும் நாசத்தின் பொருட்டு உண்மையில் அவைதீகமான மாயாவாத மென்கிற பெரிய சாஸ்திரத்தை வேதார்த்தம் போலஹே? தேவி ஜகத்தின் நாசத்தின் பொருட்டு நானே செய்தேன் என்பதாய்க் காணப்படுவதால்" என்று கூறுகின்றார். மேலெழுதிய சுலோகங்களும் வாக்கியங்களும் ஷை பத்திரிகையிலுள்ளவாறே பிரசுரித்தோம்.

பாத்மோத்தரமென்று சொன்னால் பாத்மோத்தரம் பொய்யென்று சித்தாந்தரத்நாகரத்தில் சொல்லிய சங்கதி வெளிப்பட்டுப்போமெனக் கருதி, இப்போது வாளா "பாத்மபுராணத்தில்' என்றார். உண்மையில் ஷை சுலோகமிருப்பது சோமசுந்தரநாயகர் சொல்லியபடி கற்பித பாத்மோத்தரத்திற்றான். அது தமிழ் மொழி பெயர்ப்பிலு மிருக்கிறது.

## தமிழ்ப்பாத்மோத்தரம்
## 17-வது முக்குணவிவரணபடலம்.

*மன்னுதாமதமதியினால்வியாதசூத்திரக்குப்*
*பன்னுமாயைவாதமெனும்பாடியமதனை*
*உன்னுதீக்கலியுகமறையவனெனப்பட்ட*
*என்னுளாக்கினன்யாவருமறைப்பொருளென்ன.* (6)

*அன்னநூலினுளகண்டநாரணபரத்துவமும்*
*சின்னமாகியசீவனுமொன்றெனச்செப்பிப்*
*பின்னுநிர்க்குணம்பெற்றதென்றறிவழிந்தன்னோ*
*என்னகன்மமோவன்னதும்பிழையெனவிசைத்தேன்.* (7)

ஷை சமஸ்கிருத பாத்மோத்தரமும் தமிழ்ப் பாத்மோத்தரமும் பொய்யெனப் பூர்வபக்ஷியே சொல்லுகின்றமையாலும், அதைமறுத்துப் "பாத்மோத்தர ரசாபாச தர்ப்பணம்" என முன்னரே வெளிப்பட்டிருப்பதாய் இப்பூர்வபக்ஷியே கூறுகின்றமை யாலும் அதன் பேரில் நாம் பேசவேண்டியது அநாவசியகமாம். நாம் மீண்டும் அது விஷயமாகப் பேசுவது செத்தபாம்பைத் தடிகொண்டடிப்பதற்குச் சமானமாம். ஷை பாத்மோத்தரத்தை மெய்ப்புராணமெனவே கொள்வோம். அப்படிக் கொள்ளுங்கால் அத்வைத விரோதமாயிருக்கும் பாகமாத்திரம் பிராமணமா? முற்றும் பிரமாணமா? முற்றும் பிரமாணமென்றே அங்கீகரிக்கவேண்டும். அப்படி யங்கீகரிக்குங்கால்,

## ஷை பாத்மோத்தரம் 16-வது பாஷாண்ட படலம்,
## (பரமசிவன் பார்வதிக்குபதேசித்தது.)

*வேதியரென்றேயுதித்தும்விண்டுவடிவேண்டாது*
*பூதியக்கமென்பொடுபூணுகின்றபுல்லர்களும்*
*காதியத்தீக்கண்ணில்வைக்கும்காலனைக்கண்ணாலளித்த*
*சோதியத்தனைப்பணியச்சொல்லாதசூதர்களும்.* (1)

*என்னைநான்முகத்தோனையீன்றதனிமுதலவன்றன்*
*இன்னருளாலுரைத்ததுமீரிருமறையாற்புகழ்ந்ததுமோர்*
*பின்னமறுமுனிவராற்பேணுவதுமாயநலம்*
*துன்னுபஞ்சராத்திரநூற்றூநெறிசெல்லாதவரும்.* (10)

*பாடாண்டரென்றுசொல்லப்பட்டார்களென்றுபசுங்*
*காடாண்டநன்கயிலைக்கண்ணுதலுங்கட்டுரைக்கப்*
*பீடாண்டவறுமுகனைப்பெற்றமலைப்பெண்கேகேட்டுத்*
*தோடாண்டகாதுடையதோன்றலைவினாவுகின்றாள்.* (11)

*பன்னகத்தைப் பொற்பூணாப்பகட்டதளைப்பூண்டோய் நீ*
*சொன்னவக்கம்பூதியென்பு தொட்டவரேபாடாண்டர்*
*என்னவெற்குரைத்திடுமிவ்வேதமுளவென்றிகழும்*
*அன்னவைகணின் மேனியண்ணியவாசொற்றியென்றாள்.* (12)

*வேகமுறுதானவருநாமிறையெனாவுறுதிமேவியதனான்*
*மாகமுறுவோரிலவர்மாளவரிதாயவயமல்கினரரோ*
*மோகமுறநீபரனென்றோதிமறநூல்கடமைமுன்னிமுதலில்*
*ஆகமமுரைத்தணிதியத்தியதள்பூதிசிரமக்கமுடனே.* (22)

*என்னையுறவத்துவலன்வத்துவலனென்றுசிலவிட்டிமுனிகள்*
*பன்னிவரவன்னிவரபாடம்வரவேபுரிதிபாசமிலனாய்*
*நின்னையிறையாகவுரைதாமதபுராணவகைநின்றுநிலவப்*
*பன்னுதிபாடண்டபலவேடமுடனேயினிதுபக்கமுடனே.* (23)

இப்படிப்பட்ட செய்யுள்களெல்லாம் இவர்க்குப் பிரமாணம்தானா? அத்வைதி களை வெல்லும் பொருட்டு அத்வைத விரோதமான செய்யுள்களை இவர் பக்ஷத்தார் காண்பித்தால், இவர் பக்ஷத்தார்க்கு விரோதமான செய்யுள்களை மற்றவர் இவர்க்கெடுத்துக் காண்பிக்க மாட்டார்களா? வைணவர்கள் அத்வைதிகளுக்கும் மாயாவாத இத்துவிதிகளுக்கும் குழிவெட்டி வைத்திருக்கிறார்கள். அங்ஙனமாக இத்துவிதிகள் தங்களுக்கு வெட்டிவைத்திருக்கும் குழியை மறைத்து, அத்துவிதி களுக்கு வைத்திருக்கும் குழியை மாத்திரம் காட்டி அவர்களை அதில் தள்ளப் பார்க்கிறார்கள். இதனால் நியாயமான நேர்வழியிற்சென்று உண்மையான சுருதி ஸ்மிருதி புராணாதிகளைப் பிரமாணமாகக் கொண்டு வாதஞ்செய்ய இவர்களா லாகாதென்றும், திருட்டு வழியிற் புகுந்து (முன்பு தம்மால் கண்டிக்கப்பட்ட) பொய்ப் பிரமாணங்களைக்கொண்டு வாதஞ்செய்வதிலிவர்கள் வெகுசூரர்களென்றும் ஏற்படு கின்றன. அத்வைத விரோதமாகப் பத்மபுராணங் கூறாதென்பதற்குச் சாக்ஷி, அதே பத்மபாணத்தில் பரமசிவன் இராமபிரானுக்குபதேசித்த அத்வைத சிவகீதையேயாம். ஷை சிவகீதை (1) பத்தியோகம் (சூகரிஷிசம்வாதம்,) (2) சாங்கியயோகம், (3) விரஜா தீக்ஷை யோகம், (4) சிவப்பிராதுர்பாவம், (5) இராமசாஸ்திரப் பிராப்தி, (6) விபூதி விஸ்தரயோகம், (7) விசுவரூப சந்தர்சனயோகம், (8) வைராக்கிய யோகம், (9) தேகசொரூப தகனம், (10) ஜீவசொரூபதகனம், (11) உபாசனா மகாத்மியம், (12) உபாசனாவிதி (13) மோக்ஷயோகம், (14) பஞ்சகோசவபாசனை (15) பத்தியோகம் (சிவராகவசம்வாதம்), (16) மோக்ஷயோகம் (சிவராகவசம்வாதம்) ஆகிய பதினாறு அத்தியாயங்களை யுடையது. இது சுத்த அத்வைதமென யாவருமறிவார்கள். கீதைகள் யாவும் அத்வைதமென இவரே கூறியிருப்பதாய் முன்னர்க் காட்டியுள்

ளேம். பத்மபுராணத்துள்ள சிவகீதை அத்வைதம் என்பதற்குச் சில சுலோகங்கள் காட்டுகின்றோம்.

## சிவகீதை 13 - வது மோக்ஷயோகம்.

எவன் சாந்திமுதலியவைகளோடு கூடினவனாய், என்னை (பரமசிவனை) ஆத்துமத்தினாலே பார்க்கிறானோ, அவன், பரஞ்சோதியாயும் அத்வைதமாயு யிருக்கிற ப்ரம்மந்தான். (8)

### ஷ 10 - வது ஜீவசொருப நிருபணம்.

சொப்பனத்தில் மூவுலகமும் எப்படிக் காணப்படுகின்றனவோ, அப்படியே யென்னிடத்தில் (பரமசிவனிடத்தில்) எல்லாவுலகமும் காணப்படுகின்றன; இலய மடைகின்றன. (14)

நானாவித அவித்தையோடு கூடி ஜீவபாவத்தில் வசிக்கிறேன். (15)

ஞானமயமாயிராநின்ற சைதன்னியப் பிரதிபிம்பனே வியாவகாரிக ஜீவனும் க்ஷேத்திரக்கிய புருஷனுமாம். (17)

இந்தச் சுலோகங்களினால் அத்வைதசித்தாந்தம் நிலைத்துப் பூர்வபக்ஷியார் காட்டிய பொய்ச் சுலோகங்கள் பொய்த்துப்போயின. பாத்ம புராணத்தில் சிவகீதை வாயிலாக இராமபிரானுக்குப் பரமசிவன் அத்வைதோபதேசஞ் செய்திருக்கவும், இதுவரையில் யாமும் மற்றவரும் பிரமாணமாகக் காட்டியபடி சுருதி ஸ்மிருதி புராண இதிகாச ஆகம முதலிய யாவும் அத்வைதமே சொல்லவும், அதனோடு யுக்தி அநுபவங்களு மொத்துப்போகவும் இவ்வளவுக்கும் விரோதமாக நான் குதப்புச்சுலோ கங்களை யெடுத்துக் காண்பித்தால் செல்லுமா? அத்வைதம் நிரம்பியுள்ள பத்மபுராணத்திலும் அத்வைத விரோதமாகச் சுலோகமிருக்குமா? பத்மபுராணத்தில் அத்வைத விரோதமாகச் சுலோகமுள்ளதெனச் சொல்வது தேவார திருவாசகங்களில் ஏசுக்கிறிஸ்து கடவுளெனச் சொல்லுவது போலாம். பரமசிவன் அத்வைதம் பொய் யெனவும், துவைதமே மெய்யெனவும் நானே அதைக் கலியுகத்திற் சொன்னே னெனவும் சொல்வது நிஜமானால் கலியுகத்திற்கு முன் அத்வைத மில்லையென்று சொல்லவேண்டும். அங்ஙனமாயின் துவாபரயுகத்தில் வியாசராற் சொல்லப்பட்ட பத்மபுராணத்தில் திரேதா யுகத்தில் இராமருக்குப் பரமசிவனுபதேசித்த அத்வைத சிவகீதை யெப்படியிருக்கக்கூடும்? மற்றப் புராணங்களிலும் நூற்றுக்கணக்கான அத்வைத கீதைகள் இருப்பதற்குக் காரணமென்ன? அநாதியான வேதவேதாங்க ளெல்லாம் அத்வைதமயமாயும் துவிதநாசமாயு மிருப்பானேன்?

புராணங்கள் வேதார்த்தங்களை விளக்கியிருந்தாலும், வேதப் பொருளைப் புராணங்களா லுணரவேண்டுமெனப் பிரமாணமிருந்தாலும் வேத விரோதிகளாயு ள்ளார், தமக்குச் சாதகமாகப் புராணங்களையும் சுலோகங்களையும் கள்ளத்தன

மாய்ச் சிருட்டித்து நுழைக்கக் கூடுமென்று கருதியே, வேத விரோதங் காணுமிடத்து, புராணம் பிரமாணமல்லவென ஆன்றோர் கூறியிருக்கின்றனர். அங்ஙனமே வேத விரோதத்தோடு ஸ்மிருதி, மற்றப் புராணங்கள் முதலிய சத்பிரமாணங்களான பதினான்கு வித்தைகட்கும் விரோதமாயிருப்பதால் ஷை பாத்மோத்தரம் அப்பிரமாண மேயமென்க.

## காரியவுருத்திரமூர்த்தி.

அரக்கோண விரபத்திரமூர்த்தியார் நாகை நீலலோசனியை விட்டு, விவேகதி வாகரன் என்னும் நவீன பத்திரிகையொன்றிற் புகுந்து பேசத்தொடங்கி, "ஈசாநஸ்ஸர்வவித்யானாம்" என்கிற சுருதி சர்வ வித்தைகளாலும் வேத்யராயுள்ள வர் ஈசானர் என்று தெரிவிக்கின்றது. இவ்வீசானநாமம், காரியப்பிரமத்துக் குரியதெ ன்பவர் இவர் முன்னோர். காரியப்பிரமமோ இவரது மதத்தில் கற்பிதமாம். கற்பிதப்பிரமத்தை வேதம் பிரதிபாதித்தல் கூடாதாகையாலும், அவ்வீசான நாமம் சிவபரஞ்சுடருக் குரியதென்பதும், அது எந்த வுபாதியையு மாசிரயியாத பரதத்வ வாசகமென்பதும், அதுவே 'த்யாயீதேசாநம்' என்கிற சுருதியால் முமூட்சுக்கள் சேவிக்கத்தக்க அமிர்தஸ்வரூபமா யுள்ளதென்பதுமாகிய வுணர்ச்சியுடையராய்ச் சைவ சித்தாந்திகளே பிரவர்த்திக்கின்றமையாலும், நமது பூர்வபட்சியார் இனித் தம்முடையவெனக் கையாள வந்த பதினாலு வித்தைகளையு மொதுக்கிவாழ்வதே மரபாம்." என்று வரைகிறார்.

வெகு பிரயாசைப்பட்டுச் சுருதிவாக்கியத்தைக் காண்பித்தும், அதில் காரியஞ் சத்தெனச் சொல்லியிருப்பதாய்க் காட்டவில்லையே. இதுவரையில் பதினான்கு வித்தைகளுளவென்றும், அவைகட்குக் கட்டுப்பட்டுப் பேசவேண்டுமென்றும் கூறினா ரில்லை. அப்படிக் கூறாவிடில் வேதபாஹிய அநாரியத்தன்மை யுண்டாமெனப் பயந்து அங்ஙனம் கூறினார்போலும். நாம் காரியஞ்சத்தன்று, சத்துப்போலியெனச் சங்கராசாரியார் அவதாரமகிமை தத்துவவாதம் முதலிய நூல்களில் சுருதி யுக்தி அநுபவங்களுடன் காட்ட, அதற்கேதும் பதில் கூறாது, காரியஞ் சத்தெனக் கூறாத வாக்கியமொன்றைக் கூறுவதில் பயன் யாது? ஈசான நாமத்தைக் காரியப்பிரமமென அத்வைதிகள் கொள்வதாய்க் கூறுகின்றனர். அஃதுன்மைதான். ஆனால் அவர்கள் தாங்களாகக் கூறவில்லை. சுருதிமுதலிய பிரமாணங்களிருந்தே கூறுகின்றனர். அது மாத்திரமா? சத்தல்லவென்றுங் கூறுகின்றனர். இதற்குப் பிரமாணங்களாவன: -

## நாரதபரிவிராஜ கோபநிஷத்

சத்துவகுணத்தினால் விஷ்ணுவாயும், ரஜோகுணத்தினால் பிரமாவாயும், தமோகுணத்தினால் உருத்திரராயும் உபாதிகளுடன் கூடியவர்களாயிருக்கிற அவர்கள், அவஸ்தாபேதத்தை யடைந்து பரமாத்தும் காரியமாகிய சிருட்டி முதலியவை செய்தாலும் சத்துவமுதலிய வுபாதியற்ற பூரணாநந்த அத்துவதீய பிர்ம்ம சுவரூபமாயறியப் படுகிறதில்லை.

## மைத்திராயண்ணியுபநிஷத்.

இந்த ஆத்துமா (பிரமம்) வினுடைய தாமசாமிசம் ருத்திரன்.

## மகாநாராயணோபநிஷத்

காரியகாரண (மாயை அவித்தை) உபாதியினாலே ஜீவேசுவரபேதம் காணப் படுகிறது. காரணோபாதியுடையவன் ஈசுவரன்; காரியோபாதியுடையவன் ஜீவன்.

## அத்துவயதாரகோபநிஷத்.

ஜீவேசுரர்கள் மாயா சொரூபிக ளென்றறிந்து சகல விசேஷத்தையும் ஈதல்ல ஈதல்ல வென விலக்கி, எது மிஞ்சுகிறதோ அது அத்துவயப்பிரமம்.

## ருத்திர இருதய உபநிஷத்

ஆகாசத்திலே கடாகாசம் மடாகாசம் என எப்படிப் பேதங்கள் கற்பிக்கப் பட்டிருக்கிறனவோ அப்படியே பரப்பிரமத்தினிடத்தில் ஜீவேசுரர்கள் கற்பிக்கப்பட்டி ருக்கிறார்கள்.

## சூதசங்கிதை பரசிவசொருப விசாரம்.

மறைமுதல் தனக்கு நாமரூபங்கள் மருவுதலில்லையே யெனினும், கறை யறவிளங்கு மாயையினாலே கற்பிக்கப்பட்டனவாகும், முறையச் சிவன் மாதேவன் முற்பெயர்களுருத்திரனாமங்களாகு, மறைபரம்பிரம முதற்பெயர் பரதத்துவ அவிர்வாசகமாமால்.

## ஷை பரமவிஞ்ஞானம்.

முன்னுமவித்தையால் பசுபேதமு மொய்வலிய மாயையால், பன்னுபர தத்துவபேதமுங் கற்பிக்கப்பட்டது. (6)

கற்பிதத்தை வேதம் பிரதிபாதிப்பது கூடாதென்கிறார். கற்பிதத்தைக் கற்பித மென வேதம்கூறாவிடில் பின்னை யெது கூறுமோ? கற்பிதத்தைக் கற்பிதமெனக் கூறாவிடில் யதார்த்தம் விளங்குவதெங்ஙனம்? மற்றமதஸ்தர்களுடைய மதப்புத்த கம் கற்பிதத்தை யதார்த்தமெனக் கூறுவது. வேதமோ தயை தாக்ஷணியமின்றி எது கற்பிதமோ அதைக்கற்பிதமென்றும், எது யதார்த்தமோ அதை யதார்த்தமென்றுங் கூறுவது. அதுபற்றியே வேதத்துக்கு மகிமை அதிகமாமென்க.

மீண்டும் இவரே "உருத்திரமூர்த்தியே பரமாத்மா என்று போதித்தசுருதி மீண்டும் பரமாத்மாவாகான் என்று போதிக்கின்றது. முதற்போந்த வுருத்திரர்

துரியமூர்த்தியும், பின்னர்ப்போந்த வுருத்திரர் குணமூர்த்தியுமாக அறியும் வைதிக சீலர்களோடு பழகாதவராகையால், இவ்வாபாசகர் வீணாசங்கையை யெழுப்பினா ரென்க" என்கிறார். இதனாலேயே காம் கூறிய வுண்மை யினிது விளங்குகின்ற தென்க. ருத்திரமூர்த்தி ஒருபோதும் துரியசிவனாவதில்லை. உருத்திரமூர்த்தி மூன்றாவது மூர்த்தியும் காரியப்பிரமமுமாம்; துரியசிவமூர்த்தி நாலாவது மூர்த்தியும் காரணப் பிரமமுமாம். சிலவிடங்களில் காரியப்பிரம உருத்திரமூர்த்தி யை அதிஷ்டான துரியமூர்த்தியோடு ஒற்றுமைப்படுத்திச்சொல்லும். அதனுளவு தெரியாமல் மருள்கின்றார். காரியப்பிரமமும், மூன்றாவதுமான வுருத்திரமூர்த்தி யைக் குணமூர்த்தியென்று சொல்வதால நாலாவதான துரியசிவத்தை நிர்க்குண மூர்த்தியென வொப்புக்கொள்கின்றவ ராகின்றார். இவ்விரண்டில் இரண்டு முண்மையா? ஒன்று உண்மையும் ஒன்று பொய்யுமா? இது விஷயமாகப் 'பதி பசு பாச வாத' த்தில் 55 முதல் 63-வது பக்கம் "சகுணநிர்க்குணவாதம்," "அரூபநிர்க்குணம் சரூபசகுணம்" என்னும் மகுடங்களில் விரிவாய்ப்பேசி இவரது பொய்ச்சித்தாந்தத்தை மறுத்திருக்கின்றமையால் இவ்விடத்தில் வீணாகப்பேச வேண்டிய ஆவசியகமின் றென்க.

## தாயுமானவர் அத்வைதியேயெனப் பின்னும் ஸ்தாபித்தல்.

தாயுமானார் இவரது மாயாவாத துவிதசித்தாந்தியெனப் பின்னும் சிறிது பேசலுற்றார். அதுவு மாபாசமென விளக்குவாம்.

"தாயுமானவர் மடத்தில் வேதாந்த சாஸ்திரம் படிக்கிறார்களென்றும், திருவாவடுதுறை மடத்தில் தாயுமானவர் நூலைப்படிக்கிறதில்லை யென்றும், அதனால் தாயுமானவர் வேதாந்தியேயன்றிச் சைவராயின தில்லையென்றும் ஒருமுடிவுகண்டு கூறினார். இவரினி நமது தேசத்தார் அல்லா பண்டிகையைக் கொண்டாடுகிறார்களென்றும், சைவர்கள் தேவாரபாராயணஞ் செய்வதில்லை யென்றுஞ் சாட்சி காட்டி வெளி வருவார் போலும். காலகதியால் இப்போது சற்சமய வளங்குறைந்து மடங்கள் தடுமாறியிருப்பதை யறியாதார் யாவர்? திருவாவடுதுறை மடத்தில் கைவல்யம்படித்த தம்பிரான் சுவாமிகளிருந்ததிவரறியார். ஷை மடாலயத்துக்கு ஸ்ரீபண்டாரச் சந்நிதிகள் ஓதுவார் மூர்த்திகள் தாளந்தட்டிக்கொண்டு திருவாய்மொழி, பின்னே யோதிக்கொண்டு வரப் பெருமாள்கோவில்களுக்குப் போய்ச் சிரசில் சடகோபந்தாங்கி வரும் சம்பிரதாயமு மிவருக்குத் தெரியாது. இவ்வசம்பிரதாயங்களை யெல்லாம் ஓராதாவாகக்கொண்டு திருவாவடுதுறை மடாலயத்தை வேதாந்தமடம் வைஷ்ணவமடம் என்று யாவரோ சாதிக்கவல்லார் கள்?" என்றார். இதனால் தாயுமானவர் மடத்தில் வேதாந்த நூல் வாசிக்கின்றார் களென்பதையும், திருவாவடுதுறைமடத்தார் தாயுமாமானவர் நூலை வாசிக்கின்ற தில்லை யென்பதையும் இவரே யொத்துக் கொள்ளுகின்றவராகிறார். ஆனால் இதற்குக் காரணம் 'காலகசியால் இப்போது சற்சமயவளங்குறைந்து மடங்கள் தடுமாறி யிருக்கின்ற' தென்கிறார். இவர் சொல்வதுபோல் வைத்துக்கொண்டு காலகதியால் சற்சமய வளங்குன்றினால் இல்லாதசங்கதியைச் சொல்ல வேண்டு மோ? இக்காலத்தில் சற்சமய வளங்குன்றினால் முற்காலத்திலு மிக்காலத்திலும்

தாயுமானவர் மடத்தில் வேதாந்த நூல் வாசித்துக்கொண்டிருப்பதை மாற்றி, முற்கா லத்தில் வாசிப்பதில்லை, இக்காலத்தில் மாத்திரம் வாசிக்கிறார்களென்றும், திருவா வடுதுறை மடத்தார் தாயுமானவர் நூலை எப்போதும் வாசியாதிருக்க அதை மாற்றி முற்காலத்தில் மாத்திரம் வாசித்தார்கள், இக்காலத்தில் வாசிப்பதில்லையென்றுஞ் சொல்லவேண்டுமா? அப்படியானால் தாயுமானவர் மடத்தார் இப்போது சித்தாந்த நூல்கள் வாசிக்கிறார்களென்று சொல்லும் பக்ஷத்தில் முற்காலத்தில் வாசிக்க வில்லையென்று சொல்ல நேரிடுமே. அப்படிச் சொல்லும்பக்ஷத்திலும் தாயுமானவர் துவிதசித்தாந்தி யல்லாமற் போவாரே. திருவாவடுதுறை மடத்தில் இப்போது கிறிஸ்தவரது பைபில் படிப்பதில்லை. இதனால் முற்காலத்தில் படித்தார்களென்று சொல்லவேண்டுமே. இக்காலத்தில் சற்சமய வளங்குன்றி யிருப்பதால் மனதுக்குத் தோன்றியபடியும் தம் சித்தாந்தத்தை ஸ்தாபிக்க வேண்டியும் இல்லதை யுள்ளதாக வும் உள்ளதை யில்லதாகவும் மாற்றிச் சொல்லவேண்டுமோ? உலகில் ஒருவிதத் தில் மாறுத லுண்டானால் அதைக்கொண்டு நமக்குச் சாதகமாக, வேண்டியவற்றை மாற்றிக்கொள்ளலாமோ? இதனால் தாயுமானவர் மட்டத்தில் முற்காலத்திலும் இக்காலத்திலும் வேதாந்த நூல்கள் வாசிக்கின்றார்களென்றும், திருவாவடுதுறை மடத்தார் முன்னும் இப்போதும் தாயுமானவர் நூலை வாசிக்கின்றதில்லையென்றும் தீர்மானமாகின்றன.

கைவல்லியத் தம்பிரான் மடத்துக்குள் பிரவேசியாதபோது கைவல்லியத்தை யுருப்போட்டிருக்கின்றார். அதுகாரணமாக அவரைப் பரிகாசமாக அப்பெயரால் கூப்பிடுவார்கள். அவர், மடத்திற் சென்று மடத்தின் விதிப்படி கைவல்லியம் வாசித்ததில்லை. மடத்தாரும் அவருக்கு அப்பெயர் கொடுக்கவில்லை. அந்தத் தம்பிரான் கைவல்லியத்தை யிப்போது இகழ்கின்றாரேயன்றிப் புகழ்வதில்லை. அந்தத் தம்பிரான் முற்காலத்திலிருந்தவான்று. இப்போதிருப்பவரே யாம். இப்போது சற்சமய வளங்குன்றியதால் நன்மையெல்லாம் தீமையாகவேண்டும். அப்படியா னால் கைவல்லியத்தை முன்பு படித்து இப்போது அதை அவர் வெறுப்பதால் கைவல்லியம் நல்லதென்றும், அதை வெறுப்பது தீமையென்றும் சொல்லவேண்டும். இது போலவே. ஓதுவாமூர்த்திகள் தாளந்தட்டிக்கொண்டு விஷ்ணுவே பரத்துவமென்றும், வைகுந்தமே மோக்ஷஸ்தானமென்றும், விஷ்ணு புராண பாஞ்சராத்திரங்களே மோக்ஷ நூல்களென்றும், வேதத்தின்படி விஷ்ணுவே கடவுளெ ன்றும் சொல்வதோடு, விஷ்ணுவையும் அவரடியாரையும் வணங்கினாற்றான் மோக்ஷங் கிடைக்குமென்றும், சிவன் பசுவேயன்றிக் கடவுளல்லவென்றும், கைலாயம் மோக்ஷஸ்தானமல்லவென்றும், அஷ்டாக்ஷர மந்திரமே ஜபிக்க வேண்டு மென்றும் இன்னும் இவைபோலப் பலசொல்லும் திருவாய்மொழியைப் பின்னே யோதிக்கொண்டுவர பண்டாரசந்நிதிகள், விஷ்ணுகோவிலில் சென்று, ஷை திருவாய்மொழியின் கருத்துப்படி விஷ்ணுவே பரத்துவம், சிவன் அபரத்துவமெனக் கொண்டு விஷ்ணுவை வணங்கியது நன்மையும், அதைவிட்டு அதற்குமாறான சித்தாந்தத்தை இப்போத நுசரித்துச் சிவன் கோவிலுக்குப்போய் விஷ்ணு அபரத்துவம், சிவனே பரத்துவமெனச் சொல்லும் தேவார திருவாசகங்களைப் பின்னே யோதிவரச் சிவனை வணங்குவது தீமையுமாம். சற்சமயம் வளம்பெற்ற காலத்தில் திருவாவடுதுறை மடத்தார் வைணவராயிருந்து, வளங்குன்றிய காலத்தில் சைவரானார்கள் போலும். இவ்வளவு பேசியும் தருமபுர மடத்தாரும்

திருவண்ணாமலை மடத்தாரும் தாயுமானவர் நூலைவாசிக் நூலைவாசிக்கின்றார் களென்று சொன்னாரில்லை.

இதன்பேரில் இன்னொருவிசேஷங் கொண்டுவந்திருக்கிறார். அது "அவரது (தாயுமானவரது) மாணாக்கர் (அருளையர்) செய்த அருள் (1) சைவஞ் சிவனுடன் சம்பந்தமென்பது மெய்வளர் ஞானம் விளக்குமென்றிசைத்தோன், (2) கதிர்விழியொளியுறக் கலத்தல் சித்தாந்த, விதிமுறையாமென விளக்கிய மேலோன், (3) முடிவினி லாகம முறைமையி னுண்மையை, யடியரைக்குறித்துரைத் தருளியவண்ணல்" என்று கூறியிருக்குஞ் சைவசித்தாந்த நுட்பமுணர்ந்தவர்கள், இப்பாநுமூர்த்தியினது புலம்பலை யெள்ளளவேனும் மதிப்பார்களா?" என்பதாம். அருளையரது வாக்கியத்தை மூன்று இலக்கமிட்டுக் காட்டினோம். அதை அனுசரித்தே அதற்குப் பதிலுங் கூறுவாம். ஷை வாக்கியங்களில் (2) இவரது கொள்கை யொன் றனை வாளா கூறியிருப்பதனாலேயே தாயுமானாரைத் துவிதசித் தாந்தியாக்கப் பார்க்கின்றார். (1) இந்த வாக்கியத்தில் பொதுவாய்ச் சொல்லியிருக்கிறார். (2) இந்தவாக்கியத்தில் (மற்றொரு இடத்தில் "அது நானெனவே அரற்றிடு மனுபவஞ் சதுர்வேதாந்தத்தன்மை யென்றுரைத்தோன்" என அத்வைத சித்தாந்தஞ்சொன்னதுபோல) இவருடைய கொள்கையையுஞ் சொல்லியிருக்கின் றார். அவ்வளவே யன்றி அதுதான் தமது சித்தாந்தமெனச் சொன்னாரில்லை. (3) இந்த வாக்கியத்தினால் ஆகமத்தி னுண்மை வேறிருக்கிறதாய் ஏற்படுகின்றது. இரண்டாவது வாக்கியம் தமது கொள்கை யல்லாது போயினும் அது உண்மையா யிருக்கும்பக்ஷத்தில் மூன்றாவது வாக்கியத்தில் முடிவினில் ஆகம வுண்மை அடியரைக்குறித்து அருளியதாகச் சொல்லவேண்டுவதில்லை. இதனால் இரண்டா வது வாக்கியம் பூர்வபக்ஷமெனத் துலங்குகின்றது. ஆகமமுடிவான. சிவஞானபோத உண்மையானவுரை அத்வைதமாய் நேரேவிளங்க, அதற்குத் துவிதபக்ஷமாகப் பொய்யுரைசெய்து துவிதிகள் பேசுவதால் அதை மறுக்கும் பொருட்டே இரண்டாவது வாக்கியத்தை முன்னரெடுத்துக்கூறி, மூன்றாவது வாக்கியத்தால் உண்மையை விளக்கினார். இதனால் முதல்வாக்கியமும் மூன்றாவதுவாக்கியமும் உபக்கிரம உபசங்காரமாய் இடைநின்ற வாக்கியம் பூர்வபக்ஷமாய்க் கழிகின்றதென்க. கதிர்விழி யொளியுறக் கலத்தலாகிய துவிதசித்தாந்தமே தமது சித்தாந்தமாகச் சொல்லா விடினும் இடையில் அப்படிப்பட்ட வாக்கியம் ஒன்று சொல்லிவிட்டதினாலேயே அவரைச் துவிதயெனச் சொல்லும் பக்ஷத்தில் 'அது நானெனவே யரற்றிடுமனுபவஞ் சதுர்வேதாந்தத்தன்மையென்றுரைத்தோன்' என வேதாந்தமான அத்வைதத்தைச் சொல்லவேண்டிய ஆவசியகமில்லையே. அப்படி அத்வைதத்தைச் சொல்லி யிருப்பதனாலும், கதிர் விழியொளியென்னும் வாக்கியத்திற்குப் பின் ஆகம முடிவுரையென வேறே கூறியிருப்பதனாலும் அருளையர் இவரது சித்தாந்தம் பூர்வபக்ஷமாய்க் கழிய அடையரைக்குறித்துக் கூறிய ஆகம் ((முடிவுரையி னுண்மையே சித்தாந்தமாயிற்று. இந்தச் சித்தாந்தமும் வேதாந்தமும் ஒன்றேயாய் ஒரு பொருள் கொண்டு அதாவது அத்வைதப் பொருள் கொண்டு முடவதாமென்க.

## நனைத்தவஸ்திர திருஷ்டாந்தம்.

இதுவரையில் பிரம பரிபூரணத்துக்காகச் சொல்லிய திருட்டாந்தங்கள் யாவும் பயனற்றுப்போயினவன்றா? அதற்குமேல் வெகு பிரயாசைப்பட்டு ஒரு திருட்டாந்தங் கண்டுபிடித்தார். அது வெகு அருமையான திருட்டாந்தம். இதுவரையில் உலகக் தோன்றியது முதல் எவருங் கண்டு பிடிக்காதது. அஃது யாதெனின் "ஒரு வஸ்திரத்தை நீரில் நனைத்து வஸ்திரமிருந்த விடத்தில் நீரும், நீரிருந்தவிடத்தில் வஸ்திரமு மிருக்கிறதாவென்று இவர் யோசிக்கட்டும்." என்பதே. இதை யெழுதிய வுடனே இதுவரையில் இவரது பூர்வீகரும் கண்டு பிடிக்காத திருட்டாந்தத்தைக் கண்டுபிடித்தோமெனப் பூர்வபக்ஷி யார் வெகு குதூகலகப்பட்டு ஒருபுஜம் இருபுஜங் கொண்டிருப்பார். ஆனால் இவ்வளவு சந்தோஷமும் இவ்வளவு துக்கமாய் முடியுமே, இயற்கையாயுள்ள ஒரு புஜமும் அரைபுஜமாய்விடுமே என வருந்துகின்றோம். இவரெடுத்துக்காட்டிய திருட்டாந்தத்தால் இவர் சுத்த நாட்டுப்புரத்தாரெனத் தெரிகிறது. கல்விச்சாலையிற் படிக்கும் சிறுவர்க்கிருக்கும் பதார்த்த சோதனைகூட இவர்க் கில்லையென்று தெரிகிறது. வஸ்திரம் ஒருபொருள், நீர் ஒருபொருள். வஸ்திரம் பல அணுக்கூட்டப்பொருள்; நீரும் அங்ஙனமேயாம். இவ்விருவித அணுக்கூட்டங்களும் ஒன்றாய்க் கூடுங்கால் பின்னமாகக் கூடுமேயன்றி அபின்ன மாகக் கூடா. அணு, முன்பின் இடைமுதலிய வுறுப்புகளை யுடையது. அப்படிப்பட்ட பல அணுக்கள் ஒன்றோடொன்று கூடுங்கால் ஒரு பக்கங்கூடி மற்றப் பக்கங்கூடா. இரண்டு அணு ஒன்று கூடுமாயின் ஒன்று மற்றொன்றுக்கு மேல்கீழாகவாயினும் பக்கமாகவாயினும் கூடுமேயன்றி ஒரு அணு இருக்கிறவிடத்தில் மற்றொரு அணு இரா. வஸ்திர அணுக்கூட்டத்தில் நீர் அணுக்கூட்டம் வந்து சேருமாயின் இரண்டும் வேறுவேறு இடத்தி லிருக்குமேயன்றி ஒரு இடத்தி லிரா. அளத்தல் கருவியான வொருபடியில் வஸ்திரத்தைச் சந்தின்றி நிறைய அடைத்து விட்டு அதில் ஒருபடி நீரைவார்த்தால் கொள்ளுமா? இவர் சொல்லுகிறபடியானால் கொள்ளவேண்டுமே. அப்படிக் கொள்ளாமைக்குக் காரணமென்ன? ஒரு இடத்தி லிருபொரு ளிராவென்னும் நியாயப்பிரமாணமல்லவா? ஷை படியில் பாதிநீரும், பாதிவஸ்திரமுமானால் சரிப்பட்டுப் போகின்றதே. இதற்குக் காரணம் என்ன? இரு இடத்தில் இருபொரு ளிருக்கலாமென்னும் நியாயப் பிரமாண மன்றா? இவர் சொல்லிய திருட்டாந்தத்தில் வஸ்திரத்தில் நீர் அடங்கியிருப்பதற்கு யாது காரணமெனின் வஸ்திரத்தின் நூலானது சந்தான இடத்தை அதிகமாய்க் கொண்டிருப்பதால் அந்தவிடத்தில் நீர் பின்னமாய்ப் போய்த் தங்குகின்றது. பொன் குண்டை நீரில் தோய்த்தால் அவ்வாறு நீர் போய்த் தங்காது. இதற்குக் காரணம் நூல்போல் பொன் குண்டு சந்தைக் கொண்டி ருக்கவில்லை. ஒரு பொருளில் இடமிருந்தால் அதில் மற்றொரு பொருள் போய்த் தங்கலாம். ஒரு பொருளிலிடமிருந்து அதில் மற்றொரு பொருள் சென்று தங்கினால் அல்லது கூடினால் அப்போது ஒரு இடத்தில் இருபொருள் இருப்பதாய்க் கூறவொ ண்ணாது.. இதன்படியே ஸ்திரத்தில் நீர் இருத்தல் ஒரு இடத்திருபொருளிருத் தலன்று; இரு இடத்தி லிருபொருளிருத்தலேயாம். பீச்சாங்குழலில் நீர் நிறைய வார்த்து, அதன் தள்ளுதல் கருவியால் பாதிவரையில் நீர் வெளியில் போகும்படி தள்ளி, பின்பு அடியிலுள்ள சிறுதுவாரத்தை யடைத்து விட்டு, பிறகு தள்ளுதல் கருவியால் எவ்வளவு தள்ளினாலும் (அக்கருவி வலிவுள்ள இரும்பாயினும்) ஒரு

மயிரிழை கூடப் பாதிக்கு மேல் தள்ள முடியாது. நீருள்ள இடத்தில் காற்றிருக்கு மானால் பின்னுங் காற்பங்கு அதிகமாய்த் தள்ளக்கூடும். அப்போது வாயு காற்பங்கும், தள்ளுதல் கருவி முக்காற்பங்குமாகும். காற்று அரைப்பங்கில் விரிந்திருக்கும்; கால்பங்கில் நெருங்கியிருக்கும். நீரும் காற்றும் எவ்வளவு லேசாயிருந்தாலும் இரும்பு எவ்வளவு கடினமாயிருந்தாலும் ஒருபொருளின திடத்தை மற்றொரு பொருள் அபகரிக்கமாட்டாது. ஒரு பொருளில் இருக்கும் சந்தில் மற்றொரு பொருள் இருத்தலையே யுவமானமாகக்கொண்டு, பிரமத்தையும் உலகையும் உவமேயப்படுத்தினால் பிரமத்தில் பல சந்துகளிருப்பனவாயும் அவற் றில் சேதனாசேதனவுலகு இருப்பதாயுமுடிந்து, பிரமம் பலசந்துகளை யுடைய அபரிபூரணப்பொருளென்று சொல்லவரும்.

## இரும்புத்துண்டும் நெருப்புமான திருஷ்டாந்தம்.

மற்றொரு உவமானம் தொடுக்கின்றார். அது “ஒரு இரும்புத் துண்டை நெருப்பிற் பழுக்கக் காய்ச்சி இரும்பு இழுந்தவிடத்தில் நெருப்பும், நெருப்பு இருந்த விடத்தில் இரும்பு மிருக்கிறதாவென்று இவர் கூர்ந்து பார்க்கட்டும்" என்பது. இதன் மறுப்புப் ‘பதி பசு பாச. வாத’ த்தின் 36-வது பக்கத்தில் "கட்டையில் நெருப்பு வியாபித்த வுபமாஸ” த்தை வாசித்துப்பார்த்துச் சமாதானப்படுவாராக. தற்கால ஜடசாஸ்திரப் (Science) பிரகாரமாயின் “நெருப்போ ஒருபொருளே யன்று, அது பொருள் மாறுபடுகையில் பெறுகின்ற ஒருவகை நிலையாம்” என்ற சித்தாந்தத்தை யுணர்ந்து, இரும்புத்துண்டிலுள்ள நெருப்புப் பொருளன்று, அஃதோர்குணமாமென் றறியக்கடவர். குணமாமேல் இவரெடுத்த வுவமானம் அவலமாய்ப் போமென்க.

## பிரமம் உருவம் அருவமாதல்.

இவர் தூத்துக்குடி சைவப் பிரகாச சமாஜத்தார்க் கெழுதிக் கொடுத்த சிறுபத்திர த்தில் உருவமற்ற பிரமம் பிரதிபலித்தல் எங்ஙனங் கூடுமெனக் கேட்டதற்குச் சமாதானஞ் சொன்னதோடு, உருவ மற்ற பிரமம் பன்றியாய் வந்ததும் தக்ஷிணா மூர்த்தி முதலிய வுருங்களைப் பெற்றதும் யாங்ஙனமெனக் கேட்டிருக்கின்றோம். இம்மாதிரிக் கேள்வி பானுமூர்த்தியாருங் கேட்டாராம். அதற்காக இவர் கொடுக்கும் விடையிது: - “பிரமம் உருவமாக வருதல் கூடாதோ வெனின், எம்முடைய சைவ சித்தாந்தத்தில் பிரமத்துக்கு ‘குதித்த தொன்றாக மாட்டாக்குறைவிலனாதலானும்' என்று லட்சணங் கூறப்பட்டிருத்தலால், எம்ம சித்தாந்தப்படிக் கூடும். யாம் பிரமம் அருவமேயென்றுங் கூறுகிறோம். அல்லது உருவமே யென்றுங் கூறுகிறோம். அருவமாயும், உருவமாயும், உபயமாயும் அடியார்களை ரட்சித் தற்பொருட்டுத் தனது சத்தியிற்றிருமேனி கொள்வது சிவம் என்று வேதாகமங்கள் கூறும். இவ்வாறன்றிப் பானுமூர்த்தி கூறும் அரூபவாதம் பயன் செய்யாதென்க.” என்பது. அருவ முருவமாவது மாத்திரங்கூடும்போது அருவம் பிரதிபலித்தல் மாத்திர மேன் கூடாது? பிரதி பலித்தலுக்குச் சுருதி புராண இதிகாசங்களை ஷை அத்வைத துஷண பரிகாரத்தில் காட்டி யிருக்கின்றோம். அப்படியும் பிரதி பிம்பத்தைச் சித்தாந்தமாக வொப்புக்கொள்வதில்லை யென்றும் அது ஒரு அவசர பேதமென்றும் விவர்த்த

வாதமே சித்தாந்தமென்றுங் காட்டி யிருக்கின்றோம். அதைக் கவனியாமல் பூர்வ பக்ஷத்தைச் சித்தாந்தமெனக் கொண்டு பின்னும் பின்னும் வீண் வழக்காடுகின்றார். இது விஷயத்தைப்பற்றி 'அத்வைத தூஷணபரிகாரம்' 26-வது பக்கம் 27-வது பக்கங்களில் பார்த்தால் இவரது கவனியாமையும் மாறுபாடும் விளங்கும். இவர் பிரமம் அருவமேயென்றுங் கூறுகின்றாராம்; உருவமேயென்றுங் கூறுகின்றாராம். அப்படி மாறிடினும் பிரமத்துக்குக் குறைவு மில்லையாம். இவ்வாறு உபமானமாகப் பொருளில் வைத்துக் காண்பிப்பாரானால் இவரது துவித மாயா சித்தாந்தம் பறந்து, அத்வைத சித்தாந்தம் ஸ்தாபனையாய்விடும். எங்ஙன மெனின் காட்டுதும், அருவத்துக்கு உருவம் எதிர் மறைக்குணம். அங்ஙனமாக அருவம் உருவமாதலும் உருவம் அருவமாதலுங் கூடுமா? அருவம் பிரமம்; உருவம் அதிலிருந்து தோன்றியது. அருவத்தினின்றும் உருவந் தோன்றுகிறதானால் அருவங்கெட்டு உருவந் தோன்றுகிறதா? அருவங்கெடாது தோன்றுகிறதா? ஒன்றிலிருந்து மற்றொன்று தோன்றுவது தாயினிடத்துக் குழவிபோலா? பாலினிடத்துத் தயிர் போலா? மண்ணினிடத்துக் குடம் போலா? வித்தினிடத்து மரம்போலா? சூரியனிலிருந்து பிரதிபிம்ப சூரியன் போலா? நீரினின்றும் அலைபோலா? கயிற்றிலிருந்து அரவுபோலா? கானலிலிருந்து நீர்போலா? அறிவினின்றுஞ் சொப்பன வுலகுபோலா? என இப்படிப்பட்ட ஆக்ஷேபங்கள் பல செய்து சங்கராசாரியார் அவதார மகிமை, அத்வைத தூஷண பரிகாரம் முதலிய நூல்களில் பேசி, காரணங்கெடாமல் காரியந் தோன்றுவது விவர்த்தவாதத்திலன்றி இவரது சற்காரிய வாதத்தி லாகாதென இவரது துவிதமதத்தைச் சுருதி முதலிய சற்பிரமாணங்களைக் கொண்டும், யுக்தி அநுபவங்களைக் கொண்டும் மறுத்து அத்வைத மதத்தைத் தாபித்திருக்க, இவ்விடத்தில் ஒரு நியாயமுங் காட்டாமல் அத்வைதத்திலிருந்து களவாடி அவர்கள் சொல்லுகிறது போல் பிரமங்கெடாது அருவாயும் உருவாயும் அருவுருவாயுமாகுமெனச் சொல்லித் துவிதக்கொடி போடப்பார்ப்பது செல்லுமா? அடியார்களை ரட்சித்தற்பொருட்டுத் தனது சத்தியிற் றிருமேனி கொள்வது சிவம்' என்கிறார். தனது சத்தியென்றால் தாதான்மிய சிற்சத்தியா பரிக்கிரக சடசத்தியா?? இவர் “சிவ பாரம்யப்பிரதரிசிநி” 60-வது பக்கத்தில் "சத்தியென்'பது சூரியனில் வேறாகாத ஒளியைப்போல் பரமசிவனில் வேறாகாத தாதான்மிய சம்பந்தமுடைய தொன்றாம். மாயையென்பது சிற்சொரூபனாகிய சிவனில் வேறுபட்ட அசித்தாயிருப்பதொருபொருளாம். ஆகவே, அசித்தாகிய மாயையில் சிவனுக்குத் திருமேனி கூறுதல் அடாது" என்றும், ஷை 15-வது பக்கத்தில் "சிவபெருமான் தமது சிற்சத்தியிற் றிருமேனிகொள்ளுந் தன்மை யுண்மையால்" என்றுங் கூறியிருப்பதால் தாதான்மிய சத்தியான சிற்சத்தியே பிரமத்துக்கு உருவமெனக் கூறுகின்றவரானார். சிவன் மாணிக்கவாசகர்க்கு மானிட வுருவங்கொண்டு வந்து ஞானோபதேசஞ் செய்தார்; பன்றிக்குட்டிகட்குப்பால் கொடுக்கப் பன்றியுருவெடுத்தார். ஷை இரண்டு உருவமும் மாமிசாதி விகாரங்கொண்ட மாயா ஜடவுருக்களாகும்; சிவனது தாதான்மிய சத்தியோ ஜடமன்று, சித்தாகும். சித்து, ஜட வுருவங்கொண்டு வரும்போது பால் கெட்டுத் தயிராவதுபோல் ஞானங்கெட்டு அஞ்ஞானமாகத்தானே வேண்டும். ஷை மனிதவுருவமும், பன்றியுருவமும் காரியமாதலின் (காரியம் அழிவுபாடுடைய தென்றபடி) அன்றே அழிந்து போயிற்று. சித்து, சடமாகிறபோது சித்துக்கபின்னமான சிவனும் சடமாய்ப்போவார். சடம் அசத்தாவதால் சிவனும் அசத்தாய்ப்போவார். அசத்தென்பது இல்லையெனப் பொருள் படுதலால் சிவனே யில்லாமற்போய் அது

காரணமாக இவர் நாஸ்திகராய்ப் போவார். பிரமமே தடித்து அதாவது பிரமத்தின் சிற்சத்தியே தடித்து வருமென்பதில் இவ்வளவு சங்கை யிருக்கிறபடியாலும் இது சுருதிமுதலிய பிரமாணங்களுக்கு விரோதப்படுகின்றமையாலும் தாதான்மிய சிற்சத்தி சொல்வதை விட்டு, பின்ன சடசத்தியான சுத்த சத்துவ மாயாசரீரத்தோடு ங்கூடிய ஈசுவரனாக அல்லது ஈசுவரபேதமாக வருவாரென்றே சொல்லவேண்டும். இப்படிச் சொல்வதால் நிர்ச்சல நிர்விகார நிஷ்களை நிர்க்குண நிஷ்கிரிய பரிபூரண துரிய சிவப்பிரமம் இருந்தபடியே யிருக்கவுங் கூடும்; ஷை ஈசுவரன் சுத்தசத்துவ மாயாசட உருவுடன் தோன்றிப் பத்தர்க் கருள் செய்தல் முதலிய காரியங்கள் செய்யவுங் கூடும். இவர் சொல்வதுபோல் சொன்னால் மேற்சொல்லியவாறு சகல தோஷங்களும் உண்டாய்ப் பிரமத்துக்கே தாம்பூலம் பிடிக்கிறதாயாகும்.

## மாயை யுருவமாதல் யாங்ஙனம்?

அருவமான பிரமம் பிரதிபலித்தல் கூடாதென்றதற்கு அருவமான மாயையிலிருந்து உருவமான வுலகு உண்டாதல் யாங்ஙன மெனப் பாநுமூர்த்தி கேட்டதாகச் சொல்லி, அதற்கு விடையாக மாயை அருவ மென்பதின் பொருள் தேய்ந்த வுருவமேயன்றி உருவமற்ற அருவ மன்றெனக் கூறுகின்றார்; அதோடு அதிசூக்கும வுருவமென்றும் அதிரிசிய வுருவமென்றுங் கூறுகின்றார். அருவமான மாயையிலிருந்து உருவமான பிரபஞ்ச மெப்படியுண்டாமென்னுங் கேள்விக்கு விடையிறுக்கப் பயந்து இப்படிச் சொல்வதாய்த் தெரிகிறது. காரணத்தின்றன்மை காரியத்திலிருக்கவேண்டுமென்கிற நியாயத்தை வைத்துக்கொண்டு, இதன்படி “காரணமான மாயை அருவமானால் காரியமான வுலகும் அருவமாகவேண்டுமே, உலகு உருவமாயிருக்கிறதே” என யோசித்து, மாயையை யுருவமென்று சாதிக்கின்றார். இப்படிச் சொன்னால் இன்னொரு இக்கட்டில் அகப்பட்டுக் கொள்ளுவாரே. உருவமான மாயையிலிருந்து அருவமான ஆகாயம் எப்படி யுண்டாயிற்று? இவரே அதே பத்திரிகையில் “ஆகாசமும் வாயுவும் அரூபம்" என் றெழுதியிருக்கின்றார். அவ்வரூப ஆகாயத்திலிருந்து உருவமான பிருதிவியாதிகள் எங்ஙனமுண்டாயின? உருவமான மாயையிலிருந்து அருவமான ஆகாயமும், அருவமான ஆகாயத்திலிருந்து உருவமான பிருவியாதிகளு முண்டான விஷயத்தில் காரணத்தின் றன்மையைக் காரியத்திற் காட்டுவாரா? மாயை யுருவமாயிருந்தால் அவயவமும், கண்டமும், ஏகதேசமும், அளவும், பலவும், பொருளுமா யிருத்தல் வேண்டும். அங்ஙன மின்றென்ப தியாவர்க்கும் அநுபவம். அன்றி இதற்குமாறாக இவரது சிவஞான சித்தியாரே "நித்தமாய் அருவாய் ஏகநிலையதாய் எங்கும் வியாபியாய் விமலனுக்கோர் சத்தியாய்" என்று கூறுகின்றது. 'விமலனுக்கோர் சத்தியாய்' என்றபோது சத்தி உருவாயும் உருவாயும் பொருளாயு மிருத்தல் யாங்ஙனம்? மாயையினிலக்கணத்தைத் “துவிதசைவரே மாயாவாதிகள்" என்னும் நூலில் "சோமசுந்தரநாயகரும் மாயாவாதமும்" என்னும் விஷயத்தில் மிகவிரிவாய் இரண்டு வருஷத்திற்கு முன்பே இவருக்காகவே யெழுதியிருக்கின்றோம். அதைக் கவனித்துப் பார்த்தால் இப்படிப்பட்ட விபரீதபுத்தி இவருக்குண்டாகாது. இதற்குமேல் பேயானது உருவமும் அருவமுடையதென்று கூறி, அதை மாயைக்குபமானமாகக் கூறுகின்றார். இவ்வுபமானப்படி மாயை உருவம் அருவம் ஆக இரண்டு குணங்களை

யும் பெற்றதாகிறது. உபமேயத்தில் மாயைக்கு அருவ மொப்பாமல் உருவங் கூறுகின்றார். உபமானத்திலோ பேய்க்கு உருவம் அருவம் இரண்டையு மொப்புகிறார். இதனா லிவ்வுபமானம் இவருக்கே விரோதமாகிறது; இதனோடு நில்லாமல் அத்வைதிகளுக்கு முற்றுஞ் சாதகமு மாகிறது. அருவமுள்ள பேய்க்கு ஒவ்வொரு சமயம் உருவத்தோற்றம் உண்டாகின்றது. அது உருவெளித் தோற்றம் போன்றது. அதுபோல் அருவமுள்ள மாயையிலிருந்து உலகமாகிய வுருவெளித் தோற்ற முண்டாகின்றது. அது பற்றியே பட்டினத்தடிகளும் “மையாடுகண்ணியும் மைந்தரும் வாழ்வும் மனையும் செந்தீ, யையா நின்மாயை யுருவெளித்தோற்றம் அகிலத்துள்ளே, மெய்யாயிருந்தது நாட்செல நாட்செல் வெட்ட வெறும், பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெல்லப்போனதுவே” என்று கூறியிருக்கின்றார். இதனால் பேயின் அருவம் உண்மையும், உருவம் பொய்யுமாகின்றன. இதன்படி மாயையின் அருவம் உண்மையும் அதன் காரியமான வுலகினது உருவம் பொய்ம் மையுமாகின்றன. இவ்வாறு எந்த விஷயத்தைப்பற்றிப் பேசினாலும் எவ்வித வுபமானத்தைக் காட்டினாலும் இவரது துவிதத்திற்குத் தோல்வியும் அத்துவிதத் திற்கு வெற்றியுமாய் முடிந்து, இவர்க்கு அவமானத்தையே யுண்டாக்குகின்றது. இன்னும் இவ்வாறு எவ்வளவு ஆக்ஷேபம் வேண்டுமானாலுஞ் செய்யட்டும். அதனால் அத்வைதத்தின்மேல் பிறர் தூற்றும் தூசுகளெல்லாம் ஒழிந்து சுத்தப்படுமே யன்றி மற்றப்படி ஒரு தோஷமுமுண்டாகமாட்டாது. இதற்குச் சாக்ஷி இதுவரையில் வந்த ஆக்ஷேபங்களெல்லாம் ஒழிந்தமையேயாம்.

இதுவரையில் மகாவிகடதூதனிலும், நாகை நீலலோசனியிலும், விவேக திவாகரனிலும் பூர்வபக்ஷியார் செய்து வந்த ஆக்ஷேபங்கட்கெல்லாம் சமாதான முண்டாய் அதனோடு பூர்வபக்ஷியாரது துவித மத தோஷங்களும் வெளிப்பட்டன. அன்றி இவருடையவாதம் சுருதி யுக்தி அனுபவ சம்மதமில்லாத் துர்வாதமெனவும் வெளியாயிற்று. இதன் காரணமாக அத்வைதத்தின் மேன்மையும், அதற்குள்ள சுருதி பலமும், யுக்தி அனுபவ பலமும் கண்ணாடி போலத் துலங்கின. பூர்வ பக்ஷியார் இவ்வளவு ஆக்ஷேபஞ் செய்யாவிடில் அத்வைதத்தின் சமாதானம் வெளிப்படாமல் மறைந்தே நிற்கும். இச்சமாதானம் வெளிப்படுவதற்குச் சோமசுந்தரநாயகரே காரண மாயிருந்தமையால் அவர் செய்த நன்றியை மறவாமல் அவரை என்றும் வாழ்த்து தல் செய்வோமாக.

பூர்வபக்ஷியாரான அரக்கோணவாசியாகிய வீரபத்திரமூர்த்தி யாரைவிடச் சோமசுந்தரநாயகர் வேறுபோல் பலவிடங்களில் ஆரம்பத்தில் பேசியிருந்தாலும் அவருக்குச் சார்பாய் நின்று பேசித்தோல்வியடைந்து போன கோயமுத்தூர்ப் புளி யோரைக்கண்டர் என்பவர், அவரே யிவரென்று சொல்லுகிறபடியால் நாமும் அப்படியே முடிவில் கொள்ளவேண்டியதாயிற்று.